# AAMUKTA MAALYADA
# ஆமுக்த மால்யத

(சூடிக்கொடுத்தவள்)


General Editor

**Dr. C. R. Sarma**

Tamil Translation

**Sri M. G. Jagannatharaja**

Tamil Transliteration

**Dr. G. Gunasekhar**





INTERNATIONAL TELUGU CENTRE

**Telugu University**

TELUGU BHAVANAM

HYDERABAD-500 007 - ANDHRA PRADESH

**1988**

Sri Krishna Devaraya's

AAMUKTA MAALYADA (Telugu Epic)

Tamil Translation By

Srl. M. G JAGANNATHARAJA

First Edition : 1988

Copies : 1000

© : TELUGU UNIVERSITY

Title Design : Amudhon, Madras

Publishers : International Telugu Centre
TELUGU UNIVERSITY
Hyderabad-500 007

For Copies : TELUGU UNIVERSITY
Kala Bhavan
Saifabad
Hyderabad-500 004

Printed at : Moovendhar Achagam
Royapettah
Madras-600 014.
Telephone : 867189

ஸ்ரீ கிருஷ்ண தேவராயரின்

# ஆமுக்த மால்யதா

(சூடிக்கொடுத்தவள்)

தமிழாக்கம் :

பன்மொழிப் புலவர்

மு. கு. ஜகந்நாதராஜா



வில்லிபுத்தூர் கோபுரமும் தேரும்



ஸ்ரீ ஆண்டாள்—ஸ்ரீ ரங்கமன்னார்
திருமணக் கோலம்

# பொருளடக்கம்

# ஆமுக்த மால்யத மூலத்தில் பயன்படுத்திய ஒலிபெயர்ப்பு

## Translitration

| | | | | |
|---|---|---|---|---|
| Ka | — | க | | |
| Kha | — | க$^{1}$ | | |
| Ga | — | க$^{2}$ | | |
| Gha | — | க$^{3}$ | | |
| Ca | — | ச | | |
| Cha | — | ச$^{1}$ | | |
| Ja | — | ஜ | | |
| Jha | — | ஜ$^{1}$ | | |
| **Ta** | — | ட | — | த |
| Tha | — | ட$^{1}$ | — | த$^{1}$ |
| Da | — | ட$^{2}$ | — | த$^{2}$ |
| Dha | — | ட$^{3}$ | — | த$^{3}$ |
| **Pa** | — | ப | | |
| Pha | — | ப$^{1}$ | | |
| Ba | — | ப$^{2}$ | | |
| Bha | — | ப$^{3}$ | | |
| Ṣa | — | ச$^{2}$ | — | ஷ |

# PUBLISHER'S NOTE

The Telugu speaking people have a hoary past and developed glorious traditions of rich literature starting from the 11th Century. During the past nine centuries and over, many an eminent poet have cultivated several trends and forms and left behind a large treasure of literature.

Nannayya, the first known poet who began by adapting the Mahaabhaarata laid foundations for an epic style, which a junior contemporary of his NannecooDa initiatep a native Prabandha style. The great Poet and minister of the 13th Century, Tikkana who continued the unfinished work of Nannayya and Errana who completed it attempted to synthesise the two styles.

By th 16th century, Prabandha settled down as a distinct type of literary form. Its subject matter

is a skeleton of romantic episode but the poet through his imaginative creation embellishes it with an ornamental style and descriptive talent. This distinctive school of poetry came to a peak during the reign of Krishnadevaraaya, the mighty emperor of Vijayanagar, who was a connoisseure and Patron of arts and letters. Among his court-poets were Peddana who created the exquisite beautiful poem Manucharitram and Timmana, the author of PaarijataapaharaNamu.

Krishnadeva Raaya was himself a poet of high order. He wrote in Sanskrit as well as in Telugu. His Aamuktamaalyada is a unique work of art. He was a staunch Vaishnavite and he introduced the tenets of his faith through this work. Aamuktamaalyada celebrates mainly the story of Goda devi or CuuDi Koduttha, an incarnation of Goddess Aadilakshmi. The Lord of Srirangam weds her. Raya also narrates stories of a few more devotees and in the process propounds the faith.

Vaishnavite faith and practices had brought together the Telugu and Tamil speaking regions and Raya's Aamuktamaalyada is a fine flower of the integration.

We have long felt that classics of each Indian language should be translated and into the other languages so as to forge and strengthen the pan-Indjan cultural identity. As a contribution towards the fulfillment of such desire, which we share with many others across our vast land, we set out to publish a Tamil translation of Raya's Aamuktamaalyada. We hope and trust this effort will be appreciated.

Hyderabad—500004,
Date : 20-11-1988

Publishers,
TELUGU UNIVERSITY,
Hyderabad.

# ACKNOWLEDGEMENTS

Our land, India as a confluence of many languages, faiths and cultural streams The multiplicity has lent the Pan-Indian life and culture, a unique charm and depth. The cultural identity of india is reflected in the literatures of its regional languages. There is a necessity of introducing the master pieces of the various languages to the speakers of the other languages Although some efforts have been made in this direction, there is much more that remains to be done. It is with this feeling that the erstwhile International Telugu institute came out with a plan to get some outstanding literary works in Telugu translated into other Indian languages. After commissioning translation of 'Aamukta Maalyada' into Tamil, the Government of Andhra pradesh established the Telugu University to co-ordinate the literary, cultural and artistic pursudes until then carried out by different Acadamies and Institutions in order to strengthen the activities Those Acadamies and Institutions were merged with the Telugu University. Thus the scheme of translating Telugu classics into other Indian languages passed on to the Telugu University.

The erstwhile International Telugu Institute commissioned not only this translation but also the translation of Tenaali Ramakrishna's 'PaanDuranga Maahaatmyamu' into Hindi. The language cell in

the Department of Education of the Ministry of Human Resources Development, Government of India generously endorsed the proposal of the former International Telugu Institute and sanctioned a grant of Rs. 1.24 lakhs for this project.

Sri. Mudunuri Jagannatha Raju (M. G. Jagannatha Raja) a noted scholar in Telugu and Tamil translated this work at our request. Dr.G. GuNasekhar, Lecturer in Telugu, Government Degree College, Kalahasti had transliterated this work. Professor Manikkam, Department of Tamil, Osmania University and prof. C. Radhakrishna Sarma, Department of Telugu in Madurai Kamaraj University, had vetted the work. Prof. C. R. Sarma also prefaced this publication. We thank all of them for their ready and willing cooperation. We take this opportunity to thank the offcials of the Language Cell in the Depart -ment of Education, Government of India, specially Dr. S. D. Dixit, Director and Srj. Sundara Rajan, Officer of the Cell for their good offices. We also thank the proprietor and staff of Moovendar Achagam, Madras for their timely and neat work of printing.

Hyderabad—500 004,
Date : 20-11-1988.

**Dr. N. Sivarama Murthy,**
**Registrar,**
Telugu University,
Hyderabad— 5000 004.

தே$^{2}$ஸபா$^{2}$ஷலந்து தெலுகு$^{2}$ லெஸ்ஸ

—ஸ்ரீ கிருஷ்ணதேவராய

# மொழிபெயர்ப்பாளர் முகவுரை

**பன்மொழிப்புலவர் மு.கு. ஜகந்நாதராஜா**
தலைவர். மணிமேகலை மன்றம்
இராஜபாளையம்.

தென்னக வரலாற்றில் மகத்தான இடத்தைப் பெற்றுள்ள ஸ்ரீ கிருஷ்ணதேவராயர் மாமன்னராக மட்டுமின்றி மாபெரும் கவிஞராகவும் திகழ்ந்துள்ளார். அவர் வடமொழியில் இயற்றிய காவியங்கள் இன்று கிடைக்கவில்லை. தெலுங்கு மொழியில் அவரியற்றிய பெருங் காப்பியமான ஆமுக்த மால்யத ஒரு தனிச் சிறப்புடைய காவியமாகும்.

தேசிய ஒருமைப்பாட்டின் சின்னமாகத் திகழும் இக் காவியம் தமிழக வரலாற்றோடு தொடர்புடையது. ஆழ்வார்களில் ஒருவராகிய பெரியாழ்வார். சூடிக் கொடுத்த சுடர்கொடியாகிய ஆண்டாள் ஆகிய இருவரது வரலாற்றையும் கூறும் இக்காவியம், கற்பனைக் களஞ்சியமாகவும் கருத்துச் சுரங்கமாகவும் அற்புதமாக அமைந்துள்ளது.

இந்நூலில் வரும் பருவகால வருணனைகள், மக்கள் வாழ்நெறி பற்றிய வருணனைகள், தத்துவ ஞானக் கருத்துக்கள் மிகச் சிறந்த முறையில் அமைந்துள்ளன. ஒரு மாமன்னர் எப்படி இத்தகைய நயமிக்க காவியத்தைப் படைக்க முடிந்தது? என்று வியப்புறும் வண்ணம் அமைந்துள்ளது.

இவ்வரிய காவியத்துக்கு 'ஆமுக்த மால்யத' என்றும் ''விஷ்ணு சித்தீயம்'' என்றும் இரு பெயர்கள் உண்டு. 'ஆமுக்த மால்யத' என்று வடசொற்கு ''சூடிக் களைந்த பூமாலையைத் தந்தவள்'' என்று பொருள் படும்: விஷ்ணு சித்தீயம் என்பது பெரியாழ்வார் பெயர் 'விஷ்ணு சித்தன்' என்ற சொல்லிலிருந்து உருவாகிய

தாகும். தமிழில் சூடிக்கொடுத்தவள் என்று பெயரிட்டுள்ளோம்.

இக்காப்பியம் ஆறு ஆஸ்வாசம் எனப்படும். அத்தியாயங்களை உடையது. வேதம் வெங்கடராயசாஸ்திரி அவர்கள் உரை நூலில் ஏழு அத்தியாயங்களாகக் கொண்டுள்ளார். ஏழுமலையானுக்குச் சமர்ப்பித்த நூல் ஆதலின் ஏழே பொருத்தம் என்பது அவரது கருத்தாகும்.

இவ்வரிய காவியத்தை தெலுங்கிலிருந்து தமிழாக்கம் செய்யும் பேற்றினை தெலுங்கு பல்கலைக் கழகத்தைச் சார்ந்த உலகத் தெலுங்கு நிறுவனத்தினர் எனக்கு அளித்தனர். கோதை பிறந்த ஊரினைச் சார்ந்தவன் என்பது மட்டுமன்றி கோதை பிறந்த நாளினன் (ஆடிப்பூரம்) ஆதலினாலும் இப்பெரும்பேறு கிடைத்ததாக அகமகிழ்ந்தேன். ஏற்கனவே எனது நண்பர் கவிஞர் கொ.மா. கோதண்டமும் அருட்கவி. அரங்க சீனிவாசனும் இக்காவியத்தைத் தமிழ்ப்படுத்துமாறு தூண்டி வந்தனர்.

ஆமுக்தமால்யதாவின் நடை மிகவும் கடினமானது. வடமொழித்தொகை (சமாசங்)கள் நிறைந்துள்ள நடையுடையது. சிறந்த உரையாசிரியர்களாகிய புகழ்மிகு வேதம் வெங்கடராயசாஸ்திரி, வாவிள்ள ராமஸ்வாமி சாஸ்திரி ஆகியோரின் உரைகள் இன்றி விளங்கிக் கொள்ள முடியாது. அப்பெரியோர்களின் தொண்டு அளப்பரியது. அவர்களது தாய்மொழி தமிழே எனினும் தெலுங்கு நாட்டில் குடியேறிய தெலுங்கராகி மிகச் சிறந்த நூல்களைப் படைத்தும் பதிப்பித்தும் உதவியவர்கள், அவர்களது மேதைமையின் துணையால்தான் தமிழாக்கம் செய்ய முடிந்தது. அவர்கட்கே இந்நூல் சமர்ப்பணம் செய்துள்ளேன்.

மூலநூலினை, செய்யுட்களில் செய்வதா? உரைநடையிற் செய்வதா? என்று ஆய்ந்த வல்லுனர் குழு, கவிதைப் பாங்கான உரைநடையில் (POETICVERSE) செய்ய வேண்டுமெனப் பணித்தனர். ஆதலின் மூலநூலின் கம்பீரமும் நடையும், கருத்தாழமும் தோன்றுமாறும், உரைநடையில் மொழிபெயர்த்துள்ளேன். கருத்து விளக்கம் பெறுவதற்கான என் உரைகள் அடைப்புக் குறிகளில் அமைந்துள்ளன. கவிஞனின்

கருத்தை உணர்ந்து சுவைத்தற்கு எனது குறிப்புரைகளும் தந்துள்ளேன்.

மூலத் தெலுங்குப் பாடல்களையும் தமிழ் எழுத்தில் ஒலி பெயர்ப்புடன் இந்நூலில் தரப்பட்டுள்ளது. ஒலி பெயர்ப்பினை நண்பர் குணசேகரன் அவர்கள் செய்துள்ளார்கள். இந்நூலின் பொறுப்பாசிரியராக நண்பரும் தமிழ்—தெலுங்கு இலக்கியப் பாலமாகத் திகழும் அறிஞரும், மதுரை காமராசர் பல்கலைக் கழகத் தெலுங்குத் துறைத் தலைவரும், சாஹித்ய அகாடமி முன்னாள் பிராந்தியச்செயலருமாகிய டாக்டர் சி.ஆர். சர்மா அவர்கள் இந்நூலுக்கு பொறுப்பாசிரியராக அமைந்து சிறப்பாக நூல் வெளி வரத் துணைபுரிந்தார்கள். இவர்கட்கு எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்நூலைத் தமிழாக்கும் பணியை எனக்களித்துச் சிறப்பித்த ஆராய்ச்சி அறிஞரான, தெலுங்குப் பல்கலைக் கழகத் துணை வேந்தர் டாக்டர் தூமாட்டி தொணப்ப அவர்கட்கும் தெலுங்கு பல்கலைக் கழக பதிவாளர் டாக்டர் என். சிவராமமூர்த்தி அவர்கட்கும் அழகுற இந்நூலை அச்சிட்ட மூவேந்தர் அச்சக உரிமையாளர் திரு. ஜி.டி. முத்து அவர்கட்கும் எனது மனமார்ந்த நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

—மு. கு. ஜகந்நாதராஜா

# சமர்ப்பணம்

தாய்மொழி தமிழாயினும் தெலுங்கிலக்கியத்திற்கு
வளமிகு தொண்டாற்றிய மாமேதைகளும்
ஆமுக்த மால்யத உரையாசிரியர்களுமாகிய

**வேதம் வேங்கடராய சாஸ்திரி**

**வாவிள்ள ராமசாமி சாஸ்திரி**

ஆகியவர்கட்கு
இத் தமிழாக்க நூல்
சமர்ப்பணம்

மு. கு. ஜகந்நாதராஜா

# முன்னுரை

தென்னகம் முழுதும் செங்கோலோச்சிய மாமன்னர் ஸ்ரீ கிருஷ்ணதேவராயர் போர்க்களத்திலும் புலமைக் களத்திலும் புவியரசாகவும் கவியரசாகவும் திகழ்ந்தவர். அவர், 'சாஹித்ய சமராங்கனா சார்வ பௌமர்' என்னும் விருதினைப் பெற்றுப் புகழ்க்கொடி யுயர்த்திய சக்கரவர்த்தியாவார். தமது தாய் மொழி கன்னடமாயினும், ஸ்ரீ கிருஷ்ணதேவராயர் தெலுங்கு மொழியிலும் புலமை பெற்றுத் தமிழ் நாட்டின் வரலாற்றில் காணும் சூடிக் கொடுத்த சுடர்க்கொடியாகிய ஆண்டாளின் கதையைத் தேர்ந்து கொண்டு "ஆமுக்த மால்யத" என்னும் காவியத்தைத் தந்து தேசிய ஒருமைப்பாட்டுக்கு வழிகோலியவர் களுள் முன்னோடியாகத் திகழ்வாராயினார்.

இக்காவியத்தின் முக்கியக் கதைகளாக விளங்குபவை தமிழகத்தின் பக்தி இயக்க முன்னோடிகளான பெரியாழ்வார், அவரது வளர்ப்பு மகள் ஆண்டாள் ஆகியோரின் வரலாறு களாகும். இராமானுசரின் குருவான ஆளவந்தாரின்* கதையும், விஷ்ணு புராணத்திலுள்ள காண்டிக்ய கேசித்துவஜன் கதையும், வராக புராணத்தில் உள்ள சண்டாள பிரம்ம ராக்ஷஸன் கதையும் 'ஆமுக்த மால்யத'வில் துணைக் கதைகளாக இணைக்கப் பட்டுள்ளன.

---

*ஆளவந்தார் ஆண்டாளுக்குப் பின் தோன்றியவர்.

காவியப் பாங்கில், வசந்தம், கோடை, மழை, இளவேனில் காலங்களின் எழிலார்ந்த கற்பனை நயமிக்க வருணனைகளுடனும் விசிட்டாத்துவித சித்தாந்தத்தை விளக்கும் தத்துவ ஞானக் கருத்துரைகளோடும் மிளிரும் இக்காவியம் தெலுங்கு மொழியில் ஐம்பெருங் காவியங்களுள் ஒன்றெனத் திகழ்கின்றது.

வடமொழியில், ரகுவமிசம், குமாரசம்பவம் எனும் காளிதாசனின் காவியங்களும், பாரவியின் கிராதார்ஜுனீயம், மாகனின் சிசுபாலவதம், ஸ்ரீ ஹர்ஷரின் நைஷதம் ஆகியவையும் பஞ்ச காவியங்களாம்.

தமிழில் இளங்கோவடிகளின் சிலப்பதிகாரம், சீத்தலைச் சாத்தனாரின் மணிமேகலை, திருத்தக்க தேவரின் சீவக சிந்தாமணி, குண்டலகேசி, வளையாபதி ஆகியவை ஐம்பெரும் காப்பியங்களாம். தமிழில் சூளாமணி, யசோதர காவியம், நாக குமார காவியம் முதலிய ஐஞ்சிறு காப்பியங்கள் எனும் வழக்காறும் உண்டு.

தெலுங்கு மொழியில், கிருஷ்ணதேவராயரின் அவைத் தலைமைப் புலவராகிய அல்லசானி பெத்தன்னாவின் மனு சரித்திரம், பட்டுமூர்த்தி எனப்படும் ராமராஜபூஷணரின், 'வசு சரித்திரம்', கிருஷ்ணதேவராயரின் 'ஆமுக்த மால்யத', நந்தி திம்மனாவின் 'பாரிஜாதாபஹரணம்', ஸ்ரீநாதரின் 'சிருங்கார நைஷதம்' என்பவை பஞ்சகாவியங்களாகும்.

ஐம்பெருங்காவியங்களைப் பாராட்டிப் புகழும் மரபு இம் மொழிகட்கு மட்டுமே உண்டு. எனினும், கன்னடத்தில் பம்ப பாரதம், ஆதிபுராணம், சாந்திபுராணம், ரன்னனின் கதாயுத்தம், கர்நாடக காதம்பரி ஆகியவற்றைப் பஞ்ச காவியங்களாகக் கூறும் வழக்கு பிற்காலத்தியதாகும்.

தெலுங்கு மொழியில் காணும் காவியங்கள் பலப்பல. அவை பல்லாற்றானும் சிறப்புற்றிலங்குகின்றன. இக்காவியங்களுள் ஸ்ரீகிருஷ்ண தேவராயரின் 'ஆமுக்த மால்யத' ஒரு தனித்தன்மை வாய்ந்த சிறப்புடைய இலக்கியமாகும்.

## விஜயநகர சாம்ராஜ்யம்

இந்திய வரலாற்றில் மிகச் சிறந்த இடத்தை வகிக்கும் சக்கர வர்த்திகளுள் ஸ்ரீ கிருஷ்ணதேவராயரும் ஒருவர். தம் காலத்தைப் பொற்காலம் ஆக்கிய புகழ்மிக்க மன்னர் அவர். தென்னகத்தை முகம்மதியர்கள் ஆள முற்பட்டபோது அதைத் தடுத்து இந்தியப் பண்பாட்டை நிலைநிறுத்திய இணையற்ற வீரர் அவர்.

கி.பி. 15-ஆம் நூற்றாண்டின் முற்பகுதியில் தென்னாட்டில் மகம்மதியர்களின் படையெடுப்புகள் மிகுந்திருந்தன. கிருஷ்ணா நதிக்குத் தெற்கே மைசூர் பீடபூமியில் ஹரிஹரர் விஜயநகர சாம்ராஜ்யத்தைத் தோற்றுவித்தார். பீஜப்பூர், கோல் கொண்டா, அஹமத் நகர், பீதர், பீரார் என்னும் ஐந்து பகுதி களில் பாமினி சுல்தான்கள் ஆட்சி புரிந்து வந்தனர். அவர்கள் விஜயநகர சாம்ராஜ்யத்தை அழித்தொழிக்க முயன்றவண்ண மிருந்தனர்.

சிருங்கேரி மடத்தை ஆதிசங்கரர் கி. பி. ஏழாம் நூற்றாண் டில் நிறுவினார். இந்தப் பீடத்தில் மாதவ வித்யாரண்யர் எனும் ஆசாரியார் பதினான்காம் நூற்றாண்டில் வாழ்ந்தார். மாதவாச் சாரியார் பரத்வாஜ கோத்திரம் போதாயன சூத்திரம் யஜுஸ் சாகையைச் சேர்ந்த பிராமணர். இவரது தந்தை மாயணர், தாய் ஸ்ரீமதி. இவருடன் பிறந்தோர் சாயனர், போகநாதர் என்போர். சாயனர் வேதங்கட்கு உரை எழுதிய வித்தகர்.

T 4697

மாதவர், வித்யாதீர்த்தர், பாரதிதீர்த்தர், ஸ்ரீகண்டர் எனும் மூன்று ஆசிரியர்களிடம் கற்றுணர்ந்தவர் ஆவார். மாதவர், பஞ்சதசி சர்வதர்சன சாரசங்கிரகம் முதலிய வேதாந்த தத்துவ நூல்களை வடமொழியில் இயற்றியவர்; வேதங்கட்கு உரை வகுத்தவர். இவருக்கு வித்யாரண்யர் என்னும் துறவுப் பட்டப் பெயரும் உண்டு. மாதவ வித்யாரண்யரின் ஆசியுடன் கி.பி. 1378-இல் ஹரிஹரர் புக்கர் இருவரும் துங்கபத்திரை நதிக்கரை யில் 'விஜயநகரம்' எனும் நகரை உருவாக்கினர். விஜயநகர சாம்ராஜ்யம் உருவாகியது. மாதவர் எண்பத்தைந்து ஆண்டுகள் வாழ்ந்தார் (1302—1387) என்று வரலாற்றாசிரியர்கள் கூறுவர்.

விஜயநகர சாம்ராஜ்யத்தைச் சங்கம, சாளுவ, துளுவ, ஆரவீடு வமிசத்தினர் ஆண்டு வந்தனர். சங்கம வமிசத்தினராய முதல் ஹரிஹரர் (1336—1355) சங்கமரின் புதல்வர். சங்கமருக்கு ஹரியண்ண, கம்பண்ண, புக்கண்ண, மாரப்ப, மூத்தப்ப என ஐந்து மக்கள். மூத்தவரான ஹரிஹரரின் மறைவுக்குப் பின் அவரது சகோதரர் புக்கராயர் (1355—1377) அரசோச்சினார். புக்கராயருக்கு ஏழு புதல்வர்கள். அவர்களில் ஒருவரான குமார கம்பராயர் மிகச் சிறந்த வீரர். இவரது மனைவியாகிய கங்கா தேவி வடமொழியில் 'மதுரா விஜயம்' என்னும் காவியத்தினைத் தந்தார். 'மதுரா விஜயத்தில்' குமார கம்பராயரின் தென்னக வெற்றிகள் விளக்கமாகக் கூறப்பட்டுள்ளன.

புக்கராயரின் மூத்த குமாரர் இரண்டாம் ஹரிஹரர் (1377—1404) ஆட்சிக்கு வந்தார். இவரையடுத்து முதல் தேவராயர் (1406—1422) பட்டத்துக்கு வந்தார். இவரது ஆட்சிக் காலத்தில் இத்தாலி நாட்டிலிருந்து வந்த நிகோலோ கேண்டியன் (1420) எனும் யாத்ரிகர் விஜயநகரத்தைப் பற்றி எழுதியுள்ளார்;

"விஜய நகரம் எனும் பெரிய நகரம் மலைகளுக்கருகே அமைந்துள்ளது. இதன் சுற்றளவு இருபது மைல் ஆகும். தொண்ணூறு ஆயிரம் வீரர்கள் நகரத்தைப் பாதுகாக்கும் பணியில் ஈடுபடுத்தப்பட்டுள்ளனர்'' என்று நிகோலோ கேண்டியன் வருணிக்கிறார்.

தேவராயருக்கு ஹரிஹரன், விஜயன், மல்லண்ண என்னும் மூன்று குமாரர்கள் இருந்தனர். இவருள் விஜயனே இளவரசனாக இருந்தான். தேவராயர் மறைவுக்குப் பின் விஜயபுக்கராயர் (1422—1423) ஆட்சிக்கு வந்தார். இவருக்குத் தேவராயர், பர்வதராயர் எனும் புதல்வர்களும் ஹரிஹராம்பா எனும் புதல்வியும் இருந்தனர். விஜய புக்கராயருக்குப் பின் அவரது மூத்த குமாரர் தேவராயர் பட்டத்துக்கு வந்தார். இவரைப் பிரவுட தேவராயர் (1424—1446) என்றும் இம்மடி தேவராயர் என்றும் வழங்குவர். இவரது ஆட்சிக் காலத்தில் பாரசீக நாட்டுத் தூதுவனாகிய அப்துல்ரஜாக் என்னும் அறிஞன் வந்தான். அவன் எழுதிய குறிப்புக்கள் இந்திய வரலாற்றுக்குதவும் சிறந்த சான்றுகளாக அமைந்தன. பிரவுட தேவராயர் கவிஞர்களை ஆதரித்தார்; சமண சமயத்தை ஆதரித்தார்.

இவரால் ஆதரிக்கப்பட்டவருள் ஸ்ரீநாதர் என்னும் தெலுங்குக் கவிஞர் முக்கியமானவர். இவர் காலத்தில்தான் அருணகிரி நாதரும் வாழ்ந்தார். இம் மன்னனின் அவைக்கு அருணகிரி நாதர் விஜயம் செய்தார் என்பதற்கு அகச்சான்றுகள் உள. 1446-இல் மறைந்த பிரவுட தேவராயரின் ஆட்சி மாட்சியுடைய தாக விளங்கியது. இவருக்குப் பொன்னவ தேவி மூலம் மல்லிகார்ஜுனராயரும், சிங்களதேவி மூலம் விருபாட்சராயரும் பிறந்தனர்.

மல்லிகார்ஜுனராயர் (1447—1465) அரசு கட்டில் ஏறியதும் பாமினி சுல்தான்கள் விஜய நகரத்தின்மீது படையெடுத்தனர். விஜயநகரம் சிறிது நலிவுறும் நிலையை அடைந்தது. மல்லிகார் ஜுனராயருக்கு ராஜசேகரன், விரூபாட்சன் என இரண்டு புதல்வர்கள் இருந்தனர்.

மல்லிகார்ஜுனர் மறைந்ததும் அவரது சகோதரர் ஆகிய விருபாட்சராயர் (1465—1485) தமது அண்ணன் மக்களைப் பட்டத்துக்கு வர இயலாமல் செய்துவிட்டுத் தாமே அரசு கட்டிலேறினார். இவர் போக விலாசங்களில் ஈடுபட்டு, அரசியற் கடமைகளைப் புறக்கணித்ததால் இவரது எதிரிகள் இவரை எதிர்த்துப் போரிட்டனர். இவரது குமாரர்களும் இவரை எதிர்த்தனர். இவர் தமது பெரிய மகனால் கொல்லப்பட்டார். அவனை அவனது தம்பியே கொன்றான். இவ்வாறாகச் சங்கம ஆட்சி முடிவுற்றது.

இதற்குப்பின் சாளுவ வம்ச ஆட்சி தொடங்கியது. இரண்டாம் தேவராயரின் மகளை மணந்த திப்பராஜு என்பவர் சாளுவ மரபினர் ஆவார். இவர் சாளுவ மங்கிராஜுவின் புதல்வரான கௌட ராஜுவின் புதல்வர். கௌடராஜுவின்மற்றொரு புதல்வர் குண்டராஜு. குண்டராஜுவின் புதல்வர் நரசிம்ம ராஜு. இவர் சாளுவ ஆட்சியின் முதல் மன்னர். இவர் விஜய நகர ஆட்சியைக் கைப்பற்றினார்.

சாளுவ நரசிம்மராயர் (1486-1493) கலிங்க கஜபதிகள், மற்றும் முகம்மதிய மன்னர்களின் எதிர்ப்புகளை முறியடித்து

மீண்டும் விஜயநகர ஆட்சி மேன்மையுற்றுத் திகழுமாறு செய்தார். இவருக்குத் துணைபுரிந்த படைத்தலைவர் ஈஸ்வர நரசிம்ம ராயலு என்பவர். இவர் கிருஷ்ணதேவராயரின் தாத்தா ஆவார்.

சாளுவ நரசிம்மரின் மறைவுக்குப் பின் அவர் குமாரர் இம்மடி நரசிம்மராயலு (1493-1505) ஆட்சிக்கு வந்தார். இவரது படைத் தலைவராகத் துளுவ வமிசத்தைச் சேர்ந்த நரசிம்மராயலு இருந் தார். ஈஸ்வர நரசிம்மரின் புதல்வர் இம்மடி நரசிம்மராயலுவின் மறைவுக்குப் பின்னர் துளுவ நரசிம்மராயரின் மூத்த புதல்வர் வீரநரசிம்மராயலு (1505-1509) ஆட்சியைக் கைப்பற்றினார். துளுவ வமிசம் ஆட்சிக்கு வந்தது. இவ்வமிசம் கன்னட நாட்டி லுள்ள துளுமொழி பேசிய அல்லது துளு நாட்டைச் சார்ந்த மர பாக இருக்கக்கூடும். இவ்வமிசத்தில்பிரசித்தமானவர் திம்மராஜு இவர் மனைவி தேவகி. இவரது குமாரரே முற்கூறப்பட்ட ஈஸ்வர நரசிம்மராயர். இவருடைய புதல்வர் நரசாநாயகர். இவரே சாளுவ மரபில் இறுதியாக ஆண்ட மன்னரான விருபாட்சராய ரின் குமாரர்களில் மூத்தவர். விருபாட்சராயரின் புதல்வர்கள் தம்மிடையே ஒற்றுமையின்றிச் சண்டையிட்டுக் கொண்டனர். மூத்தவன் இளையவனைக் கொன்றான். படைத்தலைவராக இருந்த நரசிம்ம நாயகர் ஆட்சிப் பொறுப்பினை ஏற்றார். அப்போது பீஜப்பூர் சுல்தான் யூசப் ஆதில்கான் படையெடுத்து வந்தான். ஆரவீடு ராமராஜு விஜயநகர மன்னருக்கு உதவி யாக நின்றார்.

நரசாநாயகரின் மனைவியர் மூவர். அவருள் திப்பாம்பா நர சிம்மராயரையும், நாகாம்பா கிருஷ்ணதேவராயரையும் ஓபாம்பா ஸ்ரீரங்கராயர் அச்சுதராயர் என்னும் இருவரையும் பெற்றெடுத்த தாயாராவர்.

வீர நரசிம்மராயர் (1505-1509) ஆட்சியில் நடைபெற்ற போர்கள் பலவாகும். நாட்டைச் சுற்றிலும் இருந்த பகைவர் விஜயநகரத்தை வீழ்த்த முயன்று வந்தனர். திம்மரசு என்னும் அமைச்சரின் மதியூகமே ஆட்சியை ஒருவாறு காப்பாற்றி வந்தது.

திம்மரசுவின் முயற்சியினாலும் ஆசியாலும் ஸ்ரீகிருஷ்ணதேவ ராயர் (1509-1530) ஆட்சிக்கு வந்தார். வீரநரசிம்மராயரின்

மரணத்திற்குப்பின் ஆட்சிபீடமேறிய கிருஷ்ணதேவராயரின் ஆட்சி சிறப்பாக நடைபெற்றது. இவரது ஆட்சிக்காலம் தெலுங்கிலக்கியத்தின் பொற்காலமாகவும் இந்தியப் பண்பாட்டின் மறுமலர்ச்சிக் காலமாகவும் விளங்கியது. இவருக்குப் பின்னர் விஜயநகர சாம்ராஜ்யம் வீழ்ச்சியுறத் தொடங்கியது.

கிருஷ்ணதேவராயர் மறைந்ததும் அவரது தம்பி அச்சுததேவராயர் (1530-1542) ஆட்சி செய்தார். கிருஷ்ணதேவராயரின் மகளான திருமலாம்பாவின் கணவர் அளியராமராஜு ஆட்சியைக் கைப்பற்றுவதற்காகச் செய்த முயற்சிகள் காரணமாக நாட்டில் கலகங்களும் குழப்பமும் ஏற்பட்டன. பின்னர் நாட்டை ஆண்ட வெங்கடபதிதேவ மகாராயர் (1542-43) சதாசிவராயர் (1543-76) காலங்களில் முகம்மதியர்கள் படையெடுப்புகளால் ஆட்சி சீர்குலைவுற்றது ஆரவீடு மரபினராகிய அளியராமராஜு ஆட்சிப் பொறுப்பில் இருந்தபோது முகம்மதிய மன்னர்களுடன் நெருங்கிய உறவு கொண்டும், போரிட்டும் தம் ஆட்சிப் பரப்பை விரிவு செய்ய முயன்றார். 1565இல் நடைபெற்ற ரக்ஷஸி தங்கடி (தள்ளிக்கோட்டை) யுத்தத்தில் தோற்றார். இவரது தலையைக் கொய்து போர்க்களத்தில் காட்சியாக வைத்தனர். வீரமிக்க விஜயநகர சாம்ராஜ்யம் வீழ்ச்சியுற்றது. முகம்மதிய மன்னர்கள் விஜயநகரத்தை அழித்துச் சின்னாபின்னப்படுத்தினர்.

கர்நாடக மாநிலத்தில் ஹோஸ்பேட் நகருக்கு அருகில் ஹம்பி என்று அழைக்கப்படும் இடத்தில் உள்ள இடிபாடுகளைக் கண்டாலே அதன் முன்னைய பெருமையை உணர்ந்து வியப்பும் அதன் இன்றைய தாழ்நிலையை எண்ணி இரக்கமும் கொள்ளாமல் இருக்கவியலாது.

தள்ளிக்கோட்டை யுத்தத்திற்குப் பிறகு திருமலதேவராயரும் சதாசிவராயரும் பெனுகொண்டாவிற்குச் சென்றனர். பின்னர், திருமலதேவராயரின் குமாரர் ஸ்ரீரங்கராயரும் (1572-1585); வெங்கடபதியாரும் (1586-1614) திருப்பதிக்கருகிலுள்ள சந்திரகிரியைத் தலைநகராகக் கொண்டு ஆட்சி புரிந்து வந்தனர். இவர்கட்குப் பின்னர் விஜயநகர சாம்ராஜ்யம் முடிவுற்றது.

## கிருஷ்ணதேவராயர்

ஸ்ரீகிருஷ்ணதேவராயர் 1487இல் பிறந்தார். தமது தமையனார் வீரசிம்மராயருக்குப் பின்னர் 1510-இல் பட்டத்திற்கு வந்தார். திருமலாதேவி, சின்னாதேவி, அன்னபூர்ணாதேவி என்போர் இவருடைய பட்டத்தரசியர். திருமலாம்பா, மோகனாங்கி என்போர் ஸ்ரீகிருஷ்ணதேவராயரின் புதல்விகள். இளவயதிலேயே மரணமுற்ற திருமலராயர் ஸ்ரீகிருஷ்ணதேவராயரின் புதல்வர் ஆவார். இவரைப் பட்டத்தரசனாக்கிய அப்பாஜி எனும் திம்மரசு சிறந்த மதியூகம் படைத்த மந்திரி எனினும் திருமலராயரின் மறைவுக்கு இவரும் காரணம் எனக் கருதிய ஸ்ரீகிருஷ்ணதேவராயர், திம்மரசுவை சிறையிலிட்டார் என்றொரு வரலாறு கூறுகிறது. பின்னர் உண்மையறிந்து அரசர் பெரிதும் வருத்தமுற்றார் என்றும் கூறப்படுகிறது.

ஸ்ரீகிருஷ்ணதேவராயர் சிறந்த போர்வீரர்; உயர்ந்த ராஜதந்திரி; பரந்த கல்விஞானமுடையவர்; இவர் கலைகளைப் போற்றிய வள்ளல்; தெய்வ பக்தி சான்றவர். ஸ்ரீவைணவத்தில் ஆழ்ந்த பற்றுடையவராகிய ஸ்ரீகிருஷ்ணதேவராயர் திருப்பதி ஸ்ரீவெங்கடேசுவரிடத்து அளவற்ற பக்தி கொண்டவர்.

இவர், 1513-இல் கட்டாக் (ஒரிசா) கஜபதி மன்னரைப் போரில் வென்றார்; கஜபதி மன்னரின் மகளை மணந்து கொண்டார். இவர், கர்நாடகத்தைச் சேர்ந்த ராயச்சித்திரத்தையும், தமிழகம், சிங்களம், கேரளம் ஆகிய நாடுகளையும் தம் வசமாக்கினார். பீஜப்பூர் சுல்தானை வென்று கர்நாடகம் முழுவதையும் தம்மடிக்கீழ்க் கொணர்ந்தார். பத்தாண்டுகளுக்குள் (1520-இல்) தென்னகம் முழுவதற்கும் அவர் ஏக சக்கராதிபதியாக உயர்ந்தார்.

இவரது தினசரி வாழ்க்கையையும் வரலாற்றையும் "ராயவாசகமு" எனும் தெலுங்கில் எழுதப்பட்ட குறிப்புகள் வாயிலாகத் தெளிவாக அறிய முடிகிறது. தென்னகக் கோயில்கட்கு அவர் அளித்த நன்கொடையின் வரலாறு ஆங்காங்குள்ள சாசனங்களால் வெளிப்படுகிறது.

சிறந்த கவிஞராகிய ஸ்ரீ கிருஷ்ணதேவராயர் கலைமனம் கொண்டவர். இவர், வடமொழி, தெலுங்கு, கன்னடம், தமிழ் ஆகிய மொழிக் கவிஞர்கள் பலரையும் ஆதரித்தவர். இவரது அரசவையாகிய 'புவன விஜயம்' எப்போதும் கவிஞர்கள், புலவர்கள், தத்துவ ஞானிகள், இசைமேதைகள், கலைஞர்கள் முதலியோரால் நிறைந்து பொலிவுடன் திகழும். அல்லசானி பெத்தன்ன எனும் தெலுங்குக் கவிஞர் கிருஷ்ண தேவராயரிடம் மிகுந்த நட்புடன் திகழ்ந்தார். தெலுங்கு ஐம்பெருங்காவியங் களுள் ஒன்றாகிய 'மனுசரித்ரம்' என்னும் நூலைத் தந்தவர் அல்லசானி பெத்தன்ன. இவரது புலமையை மெச்சி கிருஷ்ண தேவராயர் ''கண்டபெண்டேரம்'' என்னும் கழலினைத் தாமே இவரது காலிற் சூட்டினார். மனுசரித்ரத்தை அல்லசானி பெத்தன்ன ஸ்ரீ கிருஷ்ண தேவராயருக்கே காணிக்கையாக் கினார். அந்த நூலின் வெளியீட்டு விழாவில் கவிஞரைப் பல்லக்கில் வைத்து அரசரே சுமந்து நடந்தார். யானைமீதமர்ந்து செல்லும்போது கவிஞர் எதிர்ப்பட்டால் அவரையும் அரசர் தம்முடன் ஏற்றிச் செல்வார்.

நந்தி திம்மன்ன என்ற புலவரும் 'பாரிஜாதா பஹரணம்' என்னும் தம் நூலை ஸ்ரீ கிருஷ்ண தேவராயருக்கே காணிக்கை யாக்கினார். அல்லசானி பெத்தன்ன, நந்திதிம்மன்ன, அய்யல ராஜு, ராமபத்ருடு, தூர்ஜடி, மாதயகாரி மல்லன, தெனாலி ராமகிருஷ்ண, பிங்களி சூரன்ன, ராமராஜபூஷன என்னுமிவ் எட்டுப் புலவர்கள் இவ்வரசரின் அவையில் ''அஷ்ட திக் கஜங்கள்'' என்னும் பெருமையுடன் வீற்றிருந்தனர். இவர்கள் அனைவரும் தெலுங்குக் கவிஞர்களே.

தாதாசாரியர் என்பவர் கிருஷ்ணதேவராயரின் வைணவக் குருவாவார். சூடாமணி நிகண்டு இயற்றிய மண்டலபுருடர், இருசமய விளக்கம் இயற்றிய அரிதாசர், திருவாரூர்த் தத்துவப் பிரகாசர் முதலிய தமிழ்ப் புலவர்களையும் இவ்வரசர் புரந்து வந்தார்.

'தைவக்ஞ விலாசம்' இயற்றிய லட்சுமீதரகவி, 'பாரத மித்ர காவியம்' படைத்த திவாகர கவி, 'வால்மீகி ராமாயண உரை'

எழுதிய ஈஸ்வர தீட்சிதர் முதலிய வடமொழிப் புலவர்கள் கிருஷ்ண தேவராயரின் ஆதரவைப் பெற்றவராவர்.

திம்மன்ன எனும் கன்னடக் கவிஞர், கன்னட பாரத சாந்தி பருவத்தினை இயற்றி அதனைக் கிருஷ்ணதேவராயருக்கே காணிக்கையாக்கினார்.

தத்துவ ஞானிகளாகிய வல்லப தேவர், சமணத் துறவி வித்யானந்தர், சைதன்யர், வியாசராயர் முதலியவர்களை கிருஷ்ணதேவராயர் கௌரவித்ததற்கான சான்றுகள் உள்ளன. கிருஷ்ணதேவராயர், நாடகம், சித்திரம், சிற்பம், சங்கீதம் முதலிய பிற கலைகளையும் வளர்த்தார். தென்னகக் கோயில் களைப் புனருத்தாரணம் செய்து மானியங்கள் அளித்தார். கலைகளுக்கு உறைவிடமாகவும் திருமகள் நடமிடும் தெய்வீக அழகுடனும் திகழ்ந்த விஜய நகர சாம்ராஜ்ய வைபவங்களைப் பற்றி மேனாட்டறிஞர்கள் புகழ்ந்துபாராட்டினர். சரித்திரத்தில் பொன்னெழுத்துக்களால் பொறிக்கத்தக்க ஸ்ரீ கிருஷ்ண தேவராயரின் ஆட்சியின் மாட்சியை வருணிக்க இவ்விடம் போதாது. சரித்திர நூல்களில் காண்க.

ஸ்ரீ கிருஷ்ண தேவராயர் 'மதாலச சரித்ர' 'சத்யாவதூ பரிணயம்' 'சகலகதா சாரசங்கிரகம்' 'ஞானசிந்தாமணி' 'ரசமஞ்சரி' முதலிய சமஸ்கிருத நூல்களை இயற்றியுள்ளதாக 'ஆமுக்த மால்யத'வில் குறிப்பிட்டுள்ளார். எனினும் இந்நூல்கள் இன்று கிடைக்கவில்லை. பாழாகிவிட்ட விஜயநகர இடிபாடுகளுக்குள் புதைந்து விட்டன போலும். எனினும் சகல கதா சார சங்கிரகத்தின் பீடிகையைச் சேர்ந்த ஏழு சுலோகங்கள் மட்டும் வேடூரி பிரபாகர சாஸ்திரி அவர்களால் கண்டெடுக்கப் பட்டு 1919ல் 'பாரதி' பத்திரிகையில் வெளியிடப்பட்டன. திரு. எம். கிருஷ்ணமாச்சாரியர் தமது வடமொழி இலக்கிய வரலாற்று நூலில் கிருஷ்ண தேவராயர் "உஷா பரிணயம்" என்னும் வடமொழி நாடகத்தை இயற்றினார் என்றும் அதன் பிரதி ஆந்திராவிலுள்ள வனபர்த்தி சமஸ்தான ஏட்டுச் சுவடி களில் உள்ளதாகவும் குறிப்பிட்டுள்ளார். ஆனால், இந்நூல் இன்றுவரை கிடைக்கவில்லை.

ஸ்ரீ கிருஷ்ண தேவராயர் இயற்றிய "ஜாம்பவதிபரிணயம்" என்னும் நாடகம் தற்போது கிடைத்துள்ளது. இந்த நாடகத்தின் பிரதிகள் சென்னை, கீழ்த்திசை ஏட்டுச் சுவடிகள் நூலகத்திலும் தஞ்சை, சரசுவதி மகால் நூலகத்திலும் காகிநாடா ஆந்திர சாஹித்ய பரிஷத்திலும் கிடைக்கின்றன. இவற்றைப் பரிசோதித்து டாக்டர். பிருது ராமராஜு அவர்கள் ஆந்திர பிரதேச சாஹித்ய அகாடமி மூலம் 1969ல் வெளியிட்டார்.

இந்த நாடகம் ஸ்ரீ கிருஷ்ணன் ஜாம்பவதியைத் திருமணம் செய்து கொண்ட வரலாற்றினைக் கூறுவதாகும். "ஜாம்பவதி பரிணயம்' ஐந்து அங்கங்கள் கொண்ட நாடகமாகும்.

'ஆந்திரபோஜன்' 'சகலகலா போஜன்' 'சாஹித்ய சமராங்கானசார்வ பௌமன்' 'மூருராயர கண்டன்' 'ராஜாதிராஜன்' என்றெல்லாம் விருதுகள் கொண்ட ஸ்ரீ கிருஷ்ணதேவராயரின் பெருமைக்குச் சான்றாக, விளங்குவது அவர் இயற்றிய 'ஆமுக்த மால்யத' எனும் காவியமே.

ஸ்ரீ கிருஷ்ணதேவராயர் 1515-16ம் ஆண்டில் விஜயவாடா விற்கு அருகிலுள்ள ஸ்ரீகாகுளம் ஆந்திர விஷ்ணு தேவாலயத் திற்குச் சென்று 'ஆமுக்த மால்யத' காவியத்தை இயற்றத் தொடங்கி 1520இல் அதனை முடித்திருப்பார் என்றுகரு தப் படுகிறது.

ஸ்ரீகிருஷ்ண தேவராயரின் குமாரர் திருமலராயர், இளவரசர் பட்டம் பூண்ட சில ஆண்டுகளுக்குள்ளேயே நோய்வாய்ப்பட்டு மரணமுற்றார். இந்நிகழ்ச்சி கிருஷ்ணதேவராயருக்கு நெஞ்சில் இடி விழுந்தாற்போலாயிற்று. பட்டத்திற்குரிய மகன் வேறு யாருமில்லை. மகளாகிய திருமலாம்பாவின் கணவர் அளிய ராம ராஜருக்குப் பட்டம் கொடுக்கப்படவில்லை. சந்திரகிரியில் சிறையி லிருந்த தம்பி அச்சுதராயரை விடுவித்து ஸ்ரீ கிருஷ்ணதேவராயர் பட்டம் சூட்டினார். மந்திரியாகிய திம்மரசுவே தம் மகன் திருமலராயன் நோய்வாய்ப்பட்டு இறந்ததற்குக் காரணம் என ஐயம் கொண்ட பேரரசர், அமைச்சரை அவருடைய தம்பி, மகன் ஆகியோருடன் சிறையிலிட்டார். பின்னர், திம்மரசுவை விடுதலை செய்து அச்சுதராயருக்குத் துணையாக இருக்கும்படிச்

செய்தார். பேரரசர் அவரது இறுதிநாட்களில் மகன் மரணம், மந்திரிகள் மீது ஐயம், முகம்மதிய மன்னன் ஆதில்கான் படையெடுப்பு முதலியவற்றால் நிம்மதியை இழந்திருந்தார். அமைதியின்மை, முதுமை ஆகியவை காரணமாக நோய்வாய்ப்பட்ட ஸ்ரீ கிருஷ்ணதேவராயர் 1529, அக்டோபர் 27ம் நாள் மரணமுற்றார்.

ஸ்ரீ கிருஷ்ணதேவராயர் ஸ்ரீ ஹர்ஷரைப் போன்று சிறப்பான ஆட்சி புரிந்த மன்னராகவும், கவிஞராகவும் விளங்கினார். போஜராஜனைப்போல கவிஞர்களை ஆதரித்தார். அசோகனைப் போல அருளாட்சி புரிந்து தம் மதத்தின்பால் பற்றும் பிற மதங்களின்பால் மதிப்பும் கொண்டிருந்தார். விக்கிரமாதித்தனைப் போன்று வீரமும் தியாகமும் உடையவராக விளங்கினார். இந்தியாவில் இணையற்ற பேரரசராகத் திகழ்ந்த ஸ்ரீ கிருஷ்ண தேவராயரின் புகழ் உலகுள்ளளவும் நிலைத்திருக்கும் என்பதில் ஐயமில்லை.

## 'ஆமுக்த மால்யத'வை இயற்றியது யார்?

'ஆமுக்த மால்யத' என்னும் காவியத்தை இயற்றியவர் ஸ்ரீகிருஷ்ணதேவராயரே என்பதில் எட்டுணையும் ஐயமில்லை. எனினும், இந்நூலை இயற்றிய ஆசிரியரைக் குறித்து ஐம்பதாண்டுகளுக்கு முன்னர் தெலுங்கு நாட்டறிஞருள் சிலருக்கிடையே வாதப் பிரதிவாதங்கள் நடைபெற்றன.

'ஆமுக்த மால்யத'வை இயற்றியவர் ஸ்ரீ கிருஷ்ணதேவராயரின் அவைக்களப் புலவர் அல்லசானி பெத்தனரே என்றும், ஸ்ரீகிருஷ்ணதேவராயரே என்றும், இருவரும் அல்லர் வேறொருவர் என்றும் கருத்துப் பரிமாற்றங்கள் நிகழ்ந்தன.

'மனுசரித்ரம்' எனும் சிறந்த காவியத்தை இயற்றியவரும் ஸ்ரீ கிருஷ்ணதேவராயரின் நட்புக்குகந்தவரும், அவைக்கள முதன்மைப் புலவருமாகிய அல்லசானி பெத்தனவே 'ஆமுக்த

மால்யத'வினை இயற்றினார் என்போரால் கூறப்பட்ட வாதங்கள் பின்வருமாறு:

1. ஸ்ரீ கிருஷ்ண தேவராயரின் சமகாலத்தவரும், அரசவைப் புலவரும் விகடகவியுமான தெனாலி ராம கிருஷ்ணர் பெயரில் வழங்கும் தனிப்பாடல்கள் இக்கருத்துக்கு ஆதாரங்களாகக் கொள்ளப்படுகின்றன.

''கிருஷ்ணராயல பேரிடி நீவு ரசியின் சிதிவி
தொல்த விஷ்ணு சித்தீயமு''

என்று கிருஷ்ண தேவராயரின் பெயரினை வைத்து முதன் முதலில் விஷ்ணுசித்தீயம் எனும் நூலை இயற்றினார். அதன் பொருள், 'நடை முதலியன கடினமாக இருந்ததால் சாதாரணமானவர் கட்கும் புரியும் வகையில் பின்னர் 'மனுசரித்ர'த்திலை எழுதி இராமலிங்கம் முதலிய கவிஞர்கள் வெட்கமுறும்படியாகச் செய்த உனக்கு அவர்கள் இணையாவார்களா? ஆந்திர கவிதா பிதா மகனாரே! அல்லசானி பெத்தன!' என்று பெத்தனவைப் பாராட்டும் வகையில் பாடல் அமைந்துள்ளது. இராமலிங்கம் என்று இங்குக் குறிப்பிடப்படுபவர் தெனாலிராம கிருஷ்ணரே. இவர் முதலில் சைவராக இருந்து பின்னர் வைணவராகியவர். எனவே, இவர் சைவராக இருந்தபோது இராமலிங்கம் என்றும் வைணவராக மாறிய பின்னர் ராமகிருஷ்ணர் என்றும் பெயர் கொண்டார்.

இந்தத் தெனாலி ராமகிருஷ்ணரின் மற்றொரு தனிப் பாடலின் கருத்து வருமாறு:

''கடினமான நடையினால் ஸ்ரீநாத கவி நைடதம் எழுதிக் கொடுத்தார். அதற்கு அப்பனாக அல்லசானி பெத்தன முதுமை யால் அறிவு மழுங்கி 'ஆமுக்த மால்யத'வை இயற்றினார். புரிந்து கொள்ள முடியாத வகையில் மயக்கத்தைத் தரும்வண்ணம் (பிங்களி) சூரன்னர் ''களாபூரணோதயம்'' இயற்றினார். சிலேடையுடன் கூடிய சொற்சிலம்பாட்டத்தில் மூர்த்திகவி (ராமராஜ பூஷணர்) வசுசரித்திரம் எழுதினார். இப்படிப்பட்ட கவிகளின் வாயையடைக்கும்வண்ணம் எனது புதுமையான

முறையில் "பாண்டுரங்க விஜயம்" எனும் நூலை வைணவ சமயத்தினனான ராமகிருஷ்ண கவியாகிய நான் இயற்றினேன்."

பெத்தனாவைப் பாராட்டும் முகத்தான் அமைந்த முதற் பாட்டு யாருடையது என்று தெரியவில்லை. இது தனிப்பாடல், (சாடுவு) எனவே இது மிகவும் பிற்காலத்தது என்று தெரிகிறது. 'ஆமுக்த மால்யத' என்னும் பெயர் இதில் குறிப்பிடப்படவில்லை. ஆமுக்க மால்யதவில் முற்பகுதிக்கதை விஷ்ணுசித்தரின் (பெரியாழ்வார்) கதையாதலின் இந்நூலுக்கு 'விஷ்ணுசித்தீயம்' என்னும் பெயருமுண்டு. இந்நூல் முற்பகுதியைப் படைத்தவர் பெத்தன என்னும் ஐயம் தோன்றலாம். ஆனால், நடை, கற்பனைத்திறன், மொழி ஆகியவற்றால் பெத்தனாவின் மனு சரித்திரமும் ராயரின் ஆமுக்த மால்யதவும் மிகவும் வேறுபட்டன என்று கூறவேண்டும். 'ஆமுத்த மால்யத' நாரிகேள பாகம் (தேங்காய் போல முயற்சி எடுத்துச் சுவைக்கத்தக்கது) மனுசரித்ரமோ கதளீபாகம் (வாழைப் பழம்போல எளிதில் சுவைக்க இயல்வது). இவ்விரு காவிய நடைகட்குமிடையே உள்ள முரண்பாடே இவற்றை இயற்றியவர்கள் இருவேறு ஆசிரியர்கள் என்பதைத் தெளிவுபடுத்துவதால் பிற்காலத்தனவாய தனிப் பாடல்களை நம்புதற்கு இயலவில்லை.

இரண்டாவது பாட்டில் தெனாலி ராமகிருஷ்ணர் முன்னைய கவிஞர்களின் நூல்களை விமர்சித்தும் தம்முடைய காவியத்தைப் பாராட்டியும் கருத்துத் தெரிவித்துள்ளார். பிற கவிஞர்கள் இயற்றிய நூல்களைப் பற்றிய விமரிசனம் பொருத்தமாகத் தோன்றினாலும் அந்தப் பாடலை இயற்றியவர் ராமகிருஷ்ணர் என்று கூறவியலாது. 'பாண்டுரங்க விஜயம்' என்னும் நூலை ராமகிருஷ்ணர் இயற்றினார் என்று பாடலில் குறிப்பிடப்பட்டுள்ளது. அப்படி ஒரு நூல் இல்லை. ராமகிருஷ்ணகவி இயற்றிய 'பாண்டுரங்க மகாத்மியம்' என்னும் நூலின் பெயரையே பிற்காலத்தவர் பெயர்மாற்றிக் கூறியுள்ளார் என்பது தெளிவு. ராமகிருஷ்ணர், பெத்தனவை மிக உயர்ந்த கவியாக மதித்தவர். அவரைப் பற்றிக் குறிப்பிடும்போது இராமகிருஷ்ணர் 'முதுமையில் அறிவுமழுங்கி' (முதுமதி தப்பி) என்னும் அடையுடன் கூற மாட்டார்.

பாட்டில் குறிப்பிடப்படும் புலவர்கள் சமகாலத்தவர் அல்லர் என்று கந்துகூரி வீரேசலிங்கம் பந்துலு தமது 'ஆந்திர கவுல

சரித்ர' என்னும் தெலுங்குக் கவிஞர்கள் பற்றிய வரலாற்று நூலில் நிறுவியுள்ளார். பிங்களி சூரணர் ராமகிருஷ்ணருக்குப் பின்னர் வாழ்ந்தவர். எனவே, இப்பாடல் பிரமாணமுடைய தன்று; பிற்காலத்தவர் யாரோ ஒருவரால் எழுதப்பட்டு ராமகிருஷ்ணர் பெயரில் இட்டுக் கட்டப்பட்டது என்று கொள்ளத் தக்கதாகக் காண்கின்றது.

2. இலக்கண நூல் எழுதிய காகனூரி அப்பகவி தமது 'அப்ப கவீயமு' எனும் நூலுள் ஆந்திர கவிதா பிதாமகர் பிரயோகமாக விஷ்ணுசித்தீயத்திலுள்ள மேற்கோள் பாடல் ஒன்றைக் காட்டியுள்ளார் என்பர். அப்பகவி பதினேழாம் நூற்றாண்டைச் சேர்ந்தவர்; மிக பிற்காலத்தவர்; இவர் தம் மேற் கோள் பாடல் பலவற்றிலும் இப்படியே பிழைபடக் கூறியுள்ளார்; பிற்காலக் கவிஞர்களின் பிரயோகங்களை முற்காலக் கவிஞர்கள் பெயரில் எழுதியுள்ளார். ஆதலின் இவர் கூற்று ஏற்புடைத் தன்று.

பதினெட்டு பத்தொன்பதாம் நூற்றாண்டுகளில் எழுதப் பட்ட கைபீயதுக்களுள் கோகடம் கைபீதுவில் அல்லசானி பெத்தன, 'விஷ்ணுசித்தியம்', 'மனுசரித்ர' என்னும் இரண்டு நூல்களை இயற்றி ஸ்ரீகிருஷ்ணதேவராயருக்குச் சமர்ப்பணம் செய்ததாகவும், அதனால் மகிழ்ச்சியுற்ற மன்னர், கோகட அக்கிரகாரத்தினை மானியமாகப் பெத்தனாவுக்குத் தந்ததாக வும் கூறப்பட்டுள்ளது.

இந்தக் கைபீதுகளில் காண்பவை செவிவழிச் செய்திகளே, சரித்திர ஆராய்ச்சியுடன் எழுதப்பட்டவை அல்ல. எனவே இவற்றை உறுதியான சான்றுகளாகக் கொள்ளவியலாது. இந்தக் கோகட கிராமத்துக்குப் பெத்தன தம் குருவாகிய அகோபில மடம் நிறுவிய முதல் ஜீயரான ஆதிவன் சடகோபரின் நினைவாக "சடகோபபுரம்" என்று பெயர் வைத்தார். பெத்தன தமது மனுசரித்ர நூலுள் சடகோபரைத் துதித்திருக்கிறார்.

பெத்தனவை விடக் கிருஷ்ணதேவராயர் இளைஞராக இருந்திருப்பார். பெத்தனவிடம் பெருமதிப்புக் கொண்டிருந்த

ராயர் கோகட அக்கிரகாரத்தினை அவருக்கு மானியமாகத் தந்தாரென்பது உண்மையே. எனினும், 'ஆமுக்த மால்யத'வைப் பெத்தன இயற்றினார் என்பது சரியன்று.

3. 'ஆமுக்த மால்யத'வில் காணும் கிருஷ்ணதேவராயரைப் பற்றிய வருணனைகள், பெத்தனவின் 'மனுசரித்ர'விலும் காணப் படுகின்றன. ஆமுக்த மால்யத காப்பியத்தின் முதல் அத்தியாயத் தில் 19லிருந்து 43 வரையுமுள்ள பாடல்கள் 'மனுசரித்ர'த்திலும் காணப்படுகின்றன. பெத்தனவே 'ஆமுக்த மால்யத' காப்பியத் தினையும் இயற்றியிருப்பார் என்பதற்கு இவையும் சான்றுகள் என்று சிலர் கூறுவர்.

ஆந்திர மகாவிஷ்ணு கிருஷ்ணதேவராயரின் கனவில் தோன்றித் தமது வரலாற்றினைக் காவியமாகச் செய்யும்படிக் கட்டளையிட்டார். கிருஷ்ணதேவராயர் தாம் கண்ட கனவினைப் பற்றி அறிஞர்களும் புலவர்களும் கூடியிருந்த தம் அரசவையில் எடுத்துக் கூறினார். அதனைக் கேட்ட புலவர்கள் கூறியனவாக மேற்சொன்ன பாடல்கள் 'ஆமுக்த மால்யத'வில்அமைந்துள்ளன. அந்தப் பாடல்களை இயற்றியவர் அல்லசானி பெத்தனவாகவும் இருக்கலாம். பெத்தன தனது மனுசரித்ரத்தில் சேர்த்து வெளி யிட்ட அந்தப் பாடல்களையே கிருஷ்ணதேவராயர், தமது ஆமுக்த மால்யதவில் சேர்த்துக் கொண்டார் என்று கூறுவதே பொருத்தமாகும். பெத்தனாவே ஆமுக்தமால்யத முழுவதை யும் இயற்றினார் என்பது பொருத்தமாகாது.

4. கிருஷ்ணதேவராயரால் இயற்றப்பட்டதாக 'ஆமுக்த மால்யத'வில் குறிக்கப்பட்டுள்ள சமஸ்கிருத காவியங்கள் ஒன்றும் கிடைக்கவில்லை. 'சத்யாவதூபரிணயம்' 'ரசமஞ்சரி' என்னும் நூல்களைச் சேர்ந்த சில பாடல்கள் கிடைக்கின்றன. அவையும் விசாகப்பட்டினம் ஜில்லாவில் கிடைத்த "பிரபஞ்சதர்ப்பணம்" எனும் நூலில் பெத்தன இயற்றியனவாகவே குறிப்பிடப்பட் டுள்ளன என்று கூறுவர். இந்நூல் பிற்காலத்துத் தொகை நூலாகும். எனவே, பிழைபட வாய்ப்புண்டு.

5. கிருஷ்ணதேவராயர் கன்னடம் அல்லது துளு மொழி யினைத் தாய்மொழியாகக் கொண்டவர். எனவே, தெலுங்கு

மொழியில் ஆமுக்த மால்யத போன்ற மிகச் சிறந்த காவியத்தை அவரால் எழுதியிருக்க வியலாது என்று சிலர் கூறுவர். இதுவும் தவறு. இலக்கிய வரலாற்றில் தாய்மொழி அல்லாத பிற மொழியில் பெரும் புலமை பெற்றவர்கள் நூற்றுக்கணக்கில் காணப்படுகின்றனர். வேதம் வேங்கட ராய சாஸ்திரியின் தாய் மொழி தமிழ். தெலுங்கில் அவர் மிகப் பெரும் புலவர். கவியோகி சுத்தானந்த பாரதியின் தாய் மொழி தெலுங்கு. அவர் தமிழில் மிகப்பெரும் கவிஞர். ஆதலின் இந்த வாதமும் சரியன்று.

6. குடிபாடி வெங்கட கவி என்பவர் ஆமுக்தமால்யதவுக்கு உரை எழுதியவர். அவர், தம் உரையில் ஆமுக்தமால்யதவை பெத்தனா இயற்றியதாகக் குறிப்பிட்டுள்ளார். அவர் காலம் பதினெட்டாம் நூற்றாண்டின் இறுதியாகும். மிகவும் பிற்காலத்ததான இவர் உரையையும் சான்றாகக் கொள்ளுதல் பொருத்தமாகாது.

7. கிருஷ்ணதேவராயரைப் புகழ்ந்து கூறுவனவாகிய 'ராயவாசகம்', 'கிருஷ்ண விஜயம்', 'மனு சரித்ர', 'பாரிஜாதா பஹரணம்' என்னும் நூல்களில் 'ஆமுக்தமால்யதவைக் கிருஷ்ண தேவராயர் எழுதியதாகக் குறிப்பிடப்படவில்லை என்பர். அதே நூல்களில், 'ஆமுக்த மால்யத'வை இயற்றியவர் பெத்தன என்றும் குறிப்பிடவில்லை. பெத்தன, திம்மன அவர்கள் தங்கள் நூல்களை எழுதி முடித்த பின்னரே ஆமுக்த மால்யதவைக் கிருஷ்ண தேவராயர் இயற்றியிருக்கலாம். எனவே, இந்த வாதமும் பொருந்துவதன்று.

ஆமுக்த மால்யத வீரவைணவத் தத்துவ நூல். சிவனையும் விஷ்ணுவையும் கிருஷ்ணதேவராயர் போற்றினார். எல்லாக் கோயில்களுக்கும் மானியமளித்தார். சமரச நோக்குடைய கிருஷ்ணதேவராயர் வைணவத்தையே சிறந்ததென நிலை நாட்டுவதைக் கூறும் 'ஆமுக்த மால்யத'வை இயற்றியிருக்க மாட்டார் என்பர். இக் கூற்றும் பொருந்துவதன்று. கிருஷ்ண தேவராயர் மிகுந்த வைணவப் பற்றுடையவர் என்பதற்கு அவரது நூல் மட்டுமேயன்றித் திருப்பதி வெங்கடேசுவரர் சன்னதியில் அவரால் நிறுவப்பட்ட அவர்தம் செப்பு விக்கிரகமும் அவருடைய பட்டத்தரசியரான திருமலாதேவி, சின்னாதேவி

ஆகியோரின் செப்பு விக்கிரகங்களும் சான்று பகர்வனவாய் அமைந்துள்ளன. எல்லாக் கோயில்களையும் சமமாக மதித்துப் போற்றி வந்த பேரரசர் அரியும் சிவனும் ஒன்றே என்னும் நமது பண்பாட்டுக்குரிய பெருந்தன்மையைப் பெற்றிருந்தார். சமணர் களையும் மாத்வர்களையும் போற்றியவர் கிருஷ்ணதேவராயர். தமது நூலால் 'விசிஷ்டாத்வைதி'யாக விளங்கும் பேரரசர் வைணவப் பற்றாளராகவும், சர்வ மத சமரச ஞானியாகவும் திகழ்ந்தார் என்பதே பொருந்துவதாகும்.

9. இந்நூலில் காணும் பிரம்மசூத்திரம் போன்ற கடினமான தத்துவ ஞான நுட்பங்கள் அரசரான கிருஷ்ணதேவராயரால் விளக்கப்பட்டிருக்க முடியாது என்றும், அரசியலில் மூழ்கியுள்ள வருக்குக் காவியம் இயற்றுதற்கு நேரம் கிடைக்காதென்றும், மக்களின் வாழ்க்கைபற்றிய வருணனைகளை மாமன்னர் இயற்றி யிருக்க வியலாதென்றும் கூறுவர்.

இவை தவறான கருத்துக்கள். ஹர்ஷர், சூத்ரகர் முதலிய மாமன்னர்கள் காவியங்களையும் நாடகங்களையும் படைத் துள்ளனர். பிற்காலத்தில் தஞ்சை நாயக்க மன்னர்களுள் ரகுநாத நாயக்கர் போன்றோர் பல காவியங்களை இயற்றி யளித்துள்ளனர். தெலுங்கு முதற்காவியங்களுள் ஒன்றான 'குமாரசம்பவம்' எனும் காவியத்தைத் தமிழகத்துச் சோழ மன்னர் மரபில் வந்தவனும், உறையூர் அதிபதியுமாகிய நந்நெ சோடன் எனும் அரசன் இயற்றியளித்தான். தமிழிலும் பல மன்னர்கள் பாடல்கள் பாடியுள்ளனர். சங்க இலக்கியங்களில் அரசர்களால் பாடப்பட்ட பாடல்களைக் காணலாம். வரதுங்க ராம பாண்டியன், அதிவீரராம பாண்டியன் முதலிய மன்னர்கள் சிறந்த தமிழ்ப் புலவர்களாகத் திகழ்ந்தனர். ஹாலன், பிராகிருத மொழியில் பாடல்களை இயற்றினான். ஸ்ரீகிருஷ்ணதேவராயர் பேரரசராக இருந்தமையால் காவியத்தினை இயற்றியிருக்க இயலாது என்று கூறுவது சரியன்று. 'ரவி எறுகனிதி கவி எறு குனு' 'சூரியன் அறியாததையும் கவிஞன் அறிவான்' என்று ஒரு பழமொழி தெலுங்கில் உள்ளது. கவிஞர்கள் தம் கற்பனை யாற்றலாலும், அனுபவத்தாலும் பிறருடைய அனுபவங்களை யும் பிறர் மனப்போக்குகளையும் நுட்பமாக அறியும் ஆற்றல் படைத்தவர்கள். அவர்கள் காட்டும் பாத்திரங்களும், நிகழ்ச்சி வருணனைகளும் அவர்தம் சொந்த அனுபவத்தில் விளைந்தன

வாய் இருக்கவேண்டும் என்பதில்லை; பிறருடைய அனுபவங்களையும் யூகித்தறியும் ஆற்றலால் விளைவனவாய் இருக்கலாம்.

குடிகாரனின் மனநிலை, அவன் பேச்சு ஆகியவற்றை வெளிப்படுத்தும் கவிஞன் குடிகாரனாக இருக்கவேண்டுவதில்லை; பக்தனை வருணிக்கும் கவிஞன் பக்தனாக இருக்கவேண்டும் என்பதுமில்லை. ஆதலினால், ஆமுக்த மால்யதவில் காணும் வருணனைகளைக் கொண்டு அரசருக்குச் சாதாரண மக்களின் மனஇயல்புகள் தெரியாது என்று கூறுவது சிறிதும் பொருந்தாது.

ஸ்ரீ கிருஷ்ணதேவராயரின் தினசரி வாழ்க்கையைப் பற்றிய குறிப்பு 'ராய வாசகத்தில்' வருகிறது. அதில், அவர் தினந்தோறும் சிறிதுநேரம் தத்தவ ஞான விசாரணையில் ஈடுபட்டார்; சிறிது நேரம் கவிதையுலகில் திளைத்திருந்தார்; சிறிது நேரம் சங்கீதம், நாட்டியம் முதலிய கலைகளில் ஈடுபட்டிருந்தார் என்றெல்லாம் குறிப்பிடப்பட்டுள்ளது. ஆதலின் பேரரசருக்குச் சகல துறைகளிலும் அற்புதமான ஈடுபாடும் பாண்டித்தியமும் இருந்தன என்பதும் 'ஆமுக்த மால்யத'வில் காணும் தத்துவச் சிந்தனைகள் அவருடையனவே என்பதும் பெறப்படும். ஒரு கலையில் ஈடுபட்டவர்கட்கு நேரமில்லாமல் போகாது. முயற்சியுடையவன் நேரமில்லை என்று ஒரு செயலைச் செய்யாமல் இருக்கமாட்டான். ஒரு காவியம் படைக்க நேரமில்லாமலா ஒரு மாமன்னன் இருப்பான்? எத்தனை பிரச்சனைகள் இருப்பினும் அவற்றை மறந்து கலையில் ஈடுபடுவதே கலைஞனின் சிறப்பாகும். அரசியலில் உன்னத பதவிகள் வகித்த பலர் எத்தனையோ பெரிய பெரிய நூல்களைப் படைத்திருப்பதை நாம் இன்றும் கண்கூடாகக் காண்கின்றோம். ஆதலின் இந்தப் போலி மறுப்புரைகள் பொருந்துவனவல்ல.

10. "ஆமுக்த மால்யத"வின் முன்னுரையில், தம் கனவில் தோன்றி ஆந்திர மகாவிஷ்ணு கட்டளையிட்டவண்ணம் தாம் காவியத்தை இயற்றியதாக ஸ்ரீ கிருஷ்ணதேவராயரே கூறுவதாலும் நூலுள் ஒவ்வொரு அத்தியாயத்தின் முடிவிலும் "ஸ்ரீ கிருஷ்ணதேவராயராகிய நான் படைத்த ஆமுக்தமால்யத" என்று தெள்ளத் தெளிவாகக் கூறுவதாலும், நூலுல் ராஜநீதி, மன்னர் வாழ்க்கை முறைகள் ஆகியவை பற்றிய கருத்துக்களை அனுபவ ரீதியாகக் கூறுவதாலும் 'ஆமுக்த மால்யத வினை இயற்றியவன்

ஸ்ரீகிருஷ்ணதேவராயரே என்று உறுதியாக உரைக்க முடிகின்றது.

11. பெத்தனவே தம் மனுசரித்திரத்தில் கிருஷ்ண தேவராயரை,

''கவிதாஸ்த்ரீ போஜுனகுன்'' 1—48
''வித்யா கேலன போஜ 2—1
எனப் பாடுவதாலும்,

நந்தி திம்மன தமது பாரிஜாதாபஹரண'த்தில்

''வேதார்த்தஸ்தாபன ப்ரவீணுனகு 1—29
''சரஸ களா தோரணிகி 2—33
''கவிதாப் ராவீணி பணிச 4—1

என்றெல்லாம் இசைப்பதாலும்,

விஜயநகரம் விருபாட்ச சுவாமி கோயில் கல்வெட்டில் "போஜேனபரேன காவ்ய நாடகாலங்கார மர்மக்ஞ்ஜேன தர்மக்ஞ்ஜேன" என்று கூறப்பட்டிருப்பதாலும்,

சமஸ்கிருத நூலாகிய 'ஜாம்பவதி பரிணயத்தில் ''சகல கலா போஜராஜ விபம் மூருராயரு கண்ட ஸ்ரீகிருஷ்ணதேவராய விரசிதம் ஜாம்பவதி கல்யாண நாடகம் என்று குறிப்பிடப் பட்டிருப்பதாலும்,

''ஆமுக்த மால்யத்'வில்
''சாஹித்ய சமராங்கண சார்வபௌமன்''

என்று கூறப்பட்டிருப்பதாலும்,

ஸ்ரீகிருஷ்ணதேவராயர் பல கலைகளையும் கற்றறிந்த புலவர் என்று தெளிவாகும்.

மேலும், சிறந்த விமரிசர்களாகிய சிலுகூரி வீரபத்திரராவ், டாக்டர் கட்டமன்சி ராமலிங்கா ரெட்டி, வேதம் வெங்கட்ட ராய சாஸ்திரி, வாவிள்ள வெங்கடேசுவர சாஸ்திரி போன்ற

தெலுங்கு மொழிப் பேரறிஞர்கள் நன்கு ஆராய்ந்து 'ஆமுக்த மால்யத'வினை இயற்றியவர் ஸ்ரீகிருஷ்ணதேவராயரே என்பதில் எட்டுணையும் ஐயமில்லை என்று நிறுவியுள்ளனர். இன்றைய தெலுங்கு அறிஞர் பெருமக்கள் அனைவராலும் இக்கருத்து ஏற்றுக் கொள்ளப்பட்டுள்ளது.

## 'ஆமுக்த மால்யத'—கதைச் சுருக்கம்

திருவளர் தமிழகத்தின் தென் பகுதியில், பாண்டிய நாட்டில் ஸ்ரீவில்லிபுத்தூர் எனும் அழகிய நகரில் அந்தணர் குலத்துதித்த வைணவ பக்தராகிய விஷ்ணுசித்தர் எனும் பெரியாழ்வார் வாழ்ந்து வந்தார். அவர் வடபத்திரசாயி எனும் ஆலிலையில் அமர்ந்துறங்கும் அண்ணலாகிய திருமாலை வழிபட்டு வந்தார். வடபெருங்கோயுலுடையான்பால் பக்திமிக்க இவர் பூந்தோட்டம் அமைத்து நாள் தோறும் இறைவனுக்குப் பூமாலை சாற்றி வணங்கி வந்தார்.

அந்நாளில் பாண்டிய நாட்டை மீனக்கொடியோன் (மத்ஸயத்வஜன்) ஆண்டு வந்தான். அம்மன்னன் ஒருநாள் வேனிற் காலத்திரவில் வெண்ணிலவில் தன் காதல் கிழத்தியை நாடிச் சென்று கொண்டிருக்கும் போது ஒரு வீட்டுத் திண்ணையில் படுத்திருந்த அந்தணன் ஒருவன் வடமொழிச் சுலோகம் ஒன்றை உரக்கக் கூறினான்.

மழைக் காலத்துக் கானவற்றை மற்றைய எட்டு மாதங்களிலும் சேமிக்கவேண்டும் இரவுக்கு வேண்டியதைப் பகலிலேயே சேமிக்க வேண்டும்; முதுமைக்கு வேண்டியவற்றை இளமையிலேயே சேமிக்க வேண்டும்; பரத்துக்கு வேண்டியவற்றை இகத்திலேயே சேமிக்க வேண்டும் எனக் கூறும் பொன்மொழியின் கருத்தை உணர்த்த கேட்ட அம்மன்னன், மனம் துணுக்குற்று, மயக்கத்திலிருந்து விடுபட்டுத் தன் அரண்மனையை அடைந்தான்.

மறுநாள் தன் அரண்மனையில் ஒரு பொற்கிழியைக் கட்டினான்; அவைப் புலவர்களைக் கூட்டினான்; ''மெய்ப் பொருளை நிறுவும் வித்தகர் இப்பொற்கிழியை அறுக்கக் கடவது'' என்று கூறினான். புலவர்கள், தத்தம் மதத்தையே உயர்ந்தது எனக் கூறி வாதிட்டனர்.

வடபெருங்கோயிலுடையான், பெரியாழ்வாரை மதுரைக்குச் சென்று, மன்னன் அவையில் வாதம் புரிந்து, வைணவத்தின் உயர்ச்சியை நிலை நாட்டிப் பொற்கிழியை அறுத்து வருமாறு கட்டளையிட்டான். தமது ஆற்றலின்மைக்கு அஞ்சி அடக்கத் தோடிருந்த பெரியாழ்வாரை இறைவன், ''நாம் இருக்க பயமேன்'' என்று கூறித் தூண்டி ஊக்குவித்து மதுரைக்கு அனுப்பிவைத்தார்.

மதுரைக்குச் சென்ற பெரியாழ்வார் மன்னன் அவைபோந்து வாதாடி வைணவத்தின் உயர்வை நிறுவினார். அவர்தம் உரையில் காண்டிக்கியன், கேசித்துவஜன் என்பவர்களின் கதை களையும் விரித்துரைத்தார். பெரியாழ்வார் வாதத்தில் வென்று பொற்கிழியைப் பெற்று மகிழ்ந்தார். அவரைப் பல்லக்கில் வைத்து ஊர்வலமாக எடுத்துச் சென்று பாராட்டினர். திருமால், பெரியாழ்வாரின் இல்லத்தில் சகல வைபவங்களும் நிறையுமாறு அருள் பாலித்தார்.

ஒரு நாள் பெரியாழ்வார் பூமாலையை இறைவனுக்கு சமர்ப்பித்தபோது இறைவன், திருமகளை நோக்கி, ''இவரும் ஆளவந்தார் எனும் யமுனாச்சாரியருமே நம் தரிசனத்தைக் காத்த சான்றோர்கள்'' என்று கூறி யமுனாசாரியரின் கதையையும் கூறினார்.

பின்னொரு நாள், துளசி வனத்தைச் செம்மைப்படுத்தும் பொழுது பெரியாழ்வார், ஆங்கொரு பெண்குழந்தை இருக்கக் கண்டார். குழந்தைப் பேறு பெறாத ஆழ்வார், அதனை அள்ளி அணைத்து எடுத்துச் சென்று தம் மனைவியிடம் தந்தார். கற்பு மிக்க இல்லறச் செல்வியாகிய அவர்தம் மனைவியும் பேரன்புடன் அக்குழந்தையைப் பேணி வளர்த்தார். 'கோதை' என்றும். 'ஆண்டாள்' என்றும், 'நாச்சியார்' என்றும் அழைக்கப்பட்ட

அச்சிறுமி தன் தந்தையாரிடம் கல்வி கற்றுக் கவிபுனையும் ஆற்றலும் பெற்றுத் திருமாலிடம் தீராத ஆர்வமுடன் பக்தி செலுத்தி வந்தாள். பேதைப் பருவம் கடந்த கோதை, நல்லிளங் கன்னிப் பருவத்தில் திருமாலையே காதலித்து அவனையே மணப்பேன் என்று சூளுரைத்து நின்றாள். தந்தையார் திருமாலுக்குச் சூட்டும் பூமாலையை அவரறியாமல் தானே அணிந்து கிணற்றுத் தண்ணீரில் தன் நிழலின் அழகு கண்டு பின்னர் அவரது பூக்குடலையில் வைத்து விடுவாள். காதல் விரகம் மிகக் கோதை நிலவையும் மன்மதனையும் காதலனையும் பழித்துப் பேசுவதாகப் பாசுரங்கள் பாடினாள். அவளது தோழியர் அவளைச் 'சத்யபாமை' என்று அழைத்தனர். ஆண்டாள் அணியரங்கன்மீது மையல் கொண்டாள். ஒருநாள், சூடிக்கொடுக்கப்பட்ட பூமாலையில் ஒரு மயிர்க்கற்றை இருக்கக் கண்ட பெரியாழ்வார், 'தூயதன்று' எனக்கருதி வேறு ஒரு மாலையைத் தொடுத்துத் திருமாலுக்குச் சாற்றினார். திருமாலோ அதனை மறுத்துச் சூடிக் களைந்த பூமாலை தமக்கு விருப்பமானது என்று தெரிவித்தார். ஆண்டாளின் மேன்மையையுணர்ந்த பெரியாழ்வார், மகளின் மயக்கம் கண்டு செய்வதறியாது திகைத்து வடபெருங்கோயிலுடையானை உசாவ திருமால், அணியரங்கத்துக்கு அவளை அழைத்துச் சென்று அரங்கர்க்குத் திருமணம் செய்து வைக்குமாறு கூறியருளினார். அவரே, மாலதாசரியின் கதையையும் எடுத்துச் சொன்னார். அவ்வண்ணமே, பெரியாழ்வார் திருவரங்கம் சென்று தமது மகளை அரங்கரிக்குக் காட்டிப் பாசுரங்கள் பாடிப் பரவினார். திருவரங்கன் தன் மாயையால் அவளைத் தன் அந்தப் புரத்தில் சேர்த்து மாய கன்னிகையை அவ்விடத்தில் வைத்தான். பெரியாழ்வார், அம்மாய கன்னிகையைப் பல்லக்கில் ஏற்றிக்கொண்டு தம் இல்லத்திற்குச் சென்றார். மாய கன்னிகை மறைந்து விட்டாள். "அரங்கன் செய்த அநியாயம் என்னே? ஏழைப் பிராமணனை இப்படி மோசம் செய்யலாமா" என்று பெரியாழ்வார் சான்றோர்களிடம் முறையிட்டார். அரங்கன் அவர் முன் தோன்றி "உன் மகள் உன் இல்லத்தில் இருக்கிறாள். நன்றாகப் பார்" என்று கூறினார். அரங்கன் கூறியவண்ணமே ஆண்டாள் தம் இல்லத்தில் இருப்பதைப் பெரியாழ்வார் கண்டு மகிழ்ந்தார். பின்னர், பிரம்மன் முதலியோர் பெரியாழ்வாரிடம் பெண்கேட்டு வரவும், ஆழ்வார், தம் நகரிலேயே திருமணம் நடைபெற வேண்டும் என்று அவர்கட்குக் கூறினார். அவ்வண்ணமே, திருவரங்கன் திருவில்லிபுத்தூரில் ஆண்டாளைத் திருமணம் செய்து கொண்டு திருவரங்கத்திற்கு அழைத்துச் சென்று தன்னோடிணைத்துக் கொண்டான்.

## துணைக் கதைகள்:

'ஆமுக்த மால்யத'வில் ஆண்டாளின் சரித்திரத்துடன் மூன்று துணைக் கதைகள் இணைக்கப்பட்டுள்ளன. முதலாவது, விஷ்ணு புராணத்திலுள்ள காண்டிக்கிய கேசித்துவஜன் கதை யாகும். அக்கதை வருமாறு,

காண்டிக்கியலும் கேசித்துவஜனும் ஒன்றுவிட்ட சகோதரர்கள். காண்டிக்கியன் கருமயோகத்திலும் கேசித்து வஜன் ஞானயோகத்திலும் சிறந்தவர்கள். இருவரும் அரசியல் காரணமாகப் போரிட்டுக் கொண்டனர். காண்டிக்கியன் தோற் றோடிக் காட்டில் வாழ்ந்து வந்தான். கேஸித்துவஜன் ஒரு வேள்வி செய்தான். வேள்விப் பசுவைப் புலி கொன்றுவிட்டது. அதனால் வேள்வி தடைப்பட்டுவிட்டத. அதற்குரிய பிராயச் சித்தம் என்ன என்று கேட்டான். முனிவர் முதலாயினோர் பிராயச்சித்தத்தைப் பற்றித் தெரிந்தவன் காண்டிக்கியனே என்று கூறினர். கேசித்துவஜனும் பகைமை எண்ணாது, பிராயச்சித்த விதிகளைக் கேட்டறிய காட்டிற்குத் தனியாக வந்தான். அதுகண்ட காண்டிக்கியனின் அமைச்சர்கள், "நம் நாட்டை அபகரித்த பகைவனான கேசித்துவஜன் தனியே வந்துள்ளான். இதுவே தக்க தருணம். இவனைச் சிறை செய்து நம் நாட்டை மீண்டும் பெறுவோம்" என்று கூறினார்கள். காண்டிக்கியனோ அவன் பகைவனேயாயினும் வேதவேள்வி குறித்த ஐயப்பாட்டினை அறிய வந்தவன் ஆதலின் அவனைக் கௌரவித்துத் தகுந்த பிராயச்சித்தத்தைப் பற்றிக் கூறுவதே முறை என்று கூறி அவ்வாறே பிராயச்சித்தத்தை எடுத்துக் கூறினான்.

பிராயச்சித்தத்தைக் காண்டிக்கியன் கூறியதும், கேசித்து வஜன், "குருதட்சிணையான என்னிடம் வேண்டுவதென்ன" என்று கேட்டான். காண்டிக்கியன் தான் இழந்த நாட்டைத் தரும்படியாகக் கேட்காமல், (அவன் ஆன்மீக ஞானத்திலு யர்ந்தவன் ஆதலாலே) ஆன்மீக ஞானமும் யோகமும் கூறுக" என்று கேட்டான். காண்டிக்கியனது பெருந்தன்மையையும், பற்றற்ற தன்மையையும் உணர்ந்த கேசித்துவஜன், அவனுக்கு ஆன்மீக ஞானத்தை உபதேசித்ததோடு தான் வெற்றி கொண்ட

அவனது நாட்டையும் அவனுக்கே திருப்பித் தந்தான். காண்டிக்கியன் அந்நாட்டிற்குத் தன் மகனை அரசனாக்கித்தான் துறவறம் பூண்டான்.

இரண்டாவது துணைக்கதை குருபரம்பரா பிரபாவத்தில் கூறப்பட்டுள்ள ஆளவந்தார்கதையாகும். யமுனைத்துறைவர் எனும் ஆளவந்தார் ஸ்ரீராமானுஜரின் ஆசாரியராவார். சோழ நாட்டில் வீரநாராயணபுரத்தில் ஈசுவர முனியின் புதல்வராகப் பிறந்தவர். சோழமன்னனின் புரோகிதனாகிய 'ஆக்கியாழ் வான்', கல்விச் செருக்குற்றுத் திரிந்தான். ஆளவந்தார் அவனோடு வாதம் புரிந்து வென்றார். ஆளவந்தாரே வெல்வார் என்று அரசி அரசனிடம் பந்தயம் கூறினாள். அரசனும், ஆளவந்தார் வெண்றால் தன் அரசில் பாதியைத் தருவதாகப், பந்தயம் கட்டினான். அதன்படியே அரசன் யமுனைத் துறை வருக்குத் தன் அரசில் பாதியைத் தந்தான். அப்போது அரசியார் அவரைப் பார்த்து, 'என்னை ஆளவந்தீரோ' என்று பாராட்டி யமையால் யமுனைத்துறைவர், ஆளவந்தார் என்ற பெயரைப் பெற்றார். அரசபோகங்களில் திளைத்து வந்த ஆளவந்தார் வைணவ தரிசன நிர்வாகத்தை மறந்தார். மணக்கால் நம்பி அவரை தரிசனத்தில் ஈடுபடச் செய்ய விழைந்து அவரை அழைக்கச் சென்றார். மன்னராகிய ஆளவந்தாரை அருகணைந்து காண இயலவில்லை, ஆளவந்தார் பிரியமாகச் சாப்பிடும் கீரையைத் தினந்தோறும் மணக்கால் நம்பி கொண்டு வந்து கொடுத்துக் கொண்டிருந்தார். ஆறுமாதங்கள் இவ்வாறு கீரையைக் கொடுத்து வந்தும் ஆளவந்தார், தம்மை அறிந்து கொள்ளவில்லையே என்று வருந்திய மணக்கால் நம்பி, கீரை யைக் கொண்டுபோய்த் தருவதை நிறுத்திவிட்டார். நான் கைந்து நாட்கள் சென்றன. ஆளவந்தார், தமது சமையற் காரனிடம் கீரைபடைக்கப் படாததற்குரிய காரணத்தைக் கேட்டார். சமையற்காரன், "கீரையைக் கொடுத்து வந்த பிராமணர் நான்கைந்து நாட்களாக வரவில்லை" என்று கூறினான். அவர் மீண்டும் வந்தால் அவரைத் தம்மிடம் அழைத்து வரும்படியாக ஆளவந்தார் சமையற்காரனுக்குக் கட்டளையிட்டார். அப்படியே சமையற்காரனும் ஐந்தாம் நாளில் அரண்மனைக்கு வந்த மணக்கால் நம்பியை மன்னர் அழைத்ததாகக் கூறி ஆளவந்தாரிடம் அழைத்துச் சென்றார். மணக்கால் நம்பியைப் பார்த்ததும் ஆளவந்தார் "உமக்கு என்ன வேண்டும்" என்று கேட்டார். அதற்கு நம்பி,

"எனக்கு ஒன்றும் வேண்டாம். உங்கள் தாத்தாவைத்துச் சென்ற புதையல் ஒன்று உள்ளது. அதனைக் காட்டவே வந்தேன்'' என்று கூறினார். பின்னர், திருவரங்கநாதனின் திருவடிகளைக் காட்டி, "உமது தாத்தா நாத முனிகள் தேடி வைத்த புதையல் இதோ" என்று கூறினார். திருமால் திருவடி களைக் கண்ட ஆளவந்தார் அவற்றின் அழகில் ஈடுபட்டுத் தம்மை இழந்தார்: தம் மகனை அரசு கட்டிலில் ஏற்றி விட்டுத் தாம் வைணவ தரிசன நிர்வாகம் செய்து பாகவதரானார்.

இந்தக் குருபரம்பரைக் கதையே 'ஆமுக்த மால்யத'வில் சிறிது மாற்றத்துடன் காணப்படுகிறது. சைவமதத்தினனாகிய பாண்டியனை வைணவனாக்குதல், அவன் சகோதரியை மணத்தல், போர்புரிய திக்விஜயம் செய்தல் போன்ற மாற்றங்களுடன் இக்கதை அமைக்கப்பட்டுள்ளது.

மூன்றாவது துணைக்கதை மாலதாசரி கதையாகும். இக்கதை வராக புராணத்தில் உள்ளது. சிறிது மாற்றிக் கூறப் பட்டுள்ளது. பறைச் சேரியைச் சேர்ந்த விஷ்ணு பக்தன் (தாசரி) ஒருவன் திருக்குறுங்குடிக் கோயிலுக்குச் சென்று தினந்தோறும் கைசிகிப் பண்ணிற் பாடிப் பரவி வந்தான். அவன் ஒருநாள் மாலைப்போது குறுங்குடி செல்லும் வழியினின்று தவறி விலகிச் சென்றான். அவ்வழியில் ஒரு பிரம்மராட்சசன் இருந்தான். அவன் தாசரியைக் கண்டு தனக்கு நல்ல இரை கிடைத்ததாக மகிழ்ந்து பிடித்துக் கொண்டான். பிடிபட்ட தாசரி, "என் உடலை உனக்கே தருகிறேன். ஆனால் இன்றிரவு மட்டும் குறுங் குடிக் கோயிலுக்குச் செல்ல என்னை அனுமதிப்பாயாக. கோயிலுக்குச் சென்று பண்ணிசை பாடிவிட்டு விடியுமுன் வருவேன்'' என்று மன்றாடிக் கேட்டுக்கொண்டான். இராக்கதன் மறுத்தான். "திருமாலைப் பிற தெய்வங்களுடன் இணையாகக் கருதுபவன் அடையக்கூடிய பாவத்தை நான் பெறு வேனாக" என்று சூளுரை செய்யவே அவனை இராக்கதன். அனுப்பி வைத்தான்.

தாசரி, குறுங்குடி நம்பியைப் பாடிப்பரவி விட்டு விடியுமுன் மீண்டும் பிரம்ம ராட்சசனிடம் வந்து, 'நான் வந்து விட்டேன்!' 'என்னைக் கொன்று உண்பாயாக!' என்று கூறினான். அவனுடைய ஒழுக்கத்தையும் நேர்மையையும் உணர்ந்த பிரம்ம

ராட்சசன் அவனைக் கொல்லாமல், ''நீ சென்று பாடிய பண்ணிசையில் கிடைத்த புண்ணியத்தினை எனக்குக் கொடு. உன்னை விட்டு விடுகிறேன்'' என்றான். தாசரி மறுத்தான். ''அன்றிரவில் ஒரு நாழிகையளவு பாடிய புண்ணியத்தையாகிலும் கொடு'' என்று இராக்கதன் கேட்டான். தாசரி மறுத்தான். அந்தப் புண்ணியத்தில் பாதியையாவது கொடுக்கும்படியாக இராக்கதன் கேட்டதற்கும் தாசரி மறுத்தான். பிரம்மராட்சசன், அந்தப் பண்ணில் அமைந்த ஒரு பாடலின் ஓர் அடியின் புண்ணியத்தினையாவது தருக என்று கெஞ்சிக் கேட்டதோடன்றி, இராமானுஜர் உலகுய்ய உபதேசம் செய்த கதையையும் நினைவூட்டினான். இறுதியில், தாசரி இசைந்து சிறிது புண்ணியத்தைத் தர ஒப்புதல் தந்தான். உடனே, பிரம்மராட்சசன் தன் அரக்க வடிவம் நீங்கி அந்தண வடிவம் பெற்றான்.

## ஆய்வுக் கருத்துக்கள்:

'ஆமுக்த மால்யத'வில் மதுரையை ஆண்ட பாண்டிய மன்னன், "தத்புரம் பேலு பாண்ட்ய மத்ஸ்யத் வஜுண்டு'' என்று குறிப்பிடப் பட்டுள்ளான். பொதுவாகப் பாண்டிய மன்னர் அனைவருமே மீன் கொடியைக் கொண்டவர்கள் என்பது தமிழ் இலக்கிய வரலாற்றால் அறியப்படும் உண்மையாகும். புறநானூறு, சிலப்பதிகாரம் போன்ற இலக்கியங்களில் பாண்டியன் மீனக் கொடியோனாகக் குறிப்பிடப்படுவதைக் காணலாம். 'மத்ஸ்யத்வஜன்' என்னும் வடமொழித் தொடருக்கு 'மீனக்கொடியோன்' என்பதே பொருளாகும்.

T. 4647

சின்னமனூர், வேள்விக்குடிச் செப்புப் பட்டயங்கள் வாயிலாக அறியவரும் பாண்டிய மன்னர்தம் மரபுகளை வரலாற்றாசிரியர்கள் எடுத்துக் காட்டியுள்ளனர். மு. ராகவையங்காரின் ''ஆழ்வார்களின் கால நிலை" ஆழ்வார்களின் வரலாற்றாராய்ச்சி ஆகும். சதாசிவ பண்டாரத்தார் பாண்டிய மன்னர்களின் வரலாற்றினை ஆராய்ந்தெழுதியுள்ளார். பெரியாழ்வார் காலத்திலிருந்த பாண்டியன் ஸ்ரீவல்லபதேவன் ஆவான். சின்னமனூர் சாசனத்தில் ''ஸ்ரீ மாற ஸ்ரீ வல்லப பரசக்ர கோலாகலன்'' என்றும், வேள்விக்குடி சாசனத்தில் ''ஸ்ரீ மாற ஸ்ரீ வல்லபன்''

என்றும் குறிப்பிடப்பட்டுள்ள பாண்டியன் இவனேயாகலாம். இவன் ஒன்பதாம் நூற்றாண்டைச் சேர்ந்தவன். பெரியாழ்வார் காலத்தை எட்டாம் நூற்றாண்டு என்றும் கூறுவர்.

ஸ்ரீ கிருஷ்ண தேவராயர், பெரியாழ்வாருக்கு மிகப் பிற் காலத்தில் வாழ்ந்த ஆளவந்தார், ஆளவந்தாரின் சீடராகிய இராமானுசர், இவரது சீடமரபில் வந்த வேதாந்த தேசிகர் ஆகியோரையும் இணைத்திருக்கிறார். இது வரலாற்றுணர்வுக்குப் பொருத்தமன்று. கவிநயத்தாலும், கவிஞனுக்குரிய சுதந்திரத்தாலும், இக்காலப் பொருத்தமின்மையைக் காவியங்களில் முற்காலக் கவிஞர்களும் பயன்படுத்திமையாலும் இதனை ஒரு காவிய உத்தியாகவே கொள்ள வேண்டும்.

'ஆமுக்த மால்யத'வில் ஸ்ரீகிருஷ்ணதேவராயர் மதக்கருத்துக் களைச் சுருக்கமாகக் கூறி மறுத்து, தமது வைணவக் கருத்துக் களைச் சிறப்பித்துப் பேசுகிறார். சித், அசித், ஈஸ்வரன் எனும் முப்பொருள் உண்மையை விசிட்டாத்துவிதம் கூறும். சைவ சித்தாந்தமும் இவ்விதமே பதி, பசு, பாசம் எனும் முப்பொருள் உண்மையைக் கூறும். எனினும், விசிட்டாத்துவிதம் உபநிடதங் களையே பிரமாணமாகக் கொண்டுள்ளது. இறைவனுடன் உயிர் ஒன்றி ஒரு சிறப்புறு நிலையில் இரண்டறக் கலக்கும் என்பது விசிட்டாத்துவிதம் ஆகும். மேலும், யோகம், சாங்கியம், விசிட்டாத்துவித தத்துவக் கருத்துக்களைப் பிள்ளை லோகா சாரியரின் அஷ்டாதசரஹஸ்ய கிரந்தங்களிலும், வேதாந்த தேசிகர், மணவாள மாமுனிகள் போன்றோர் நூல்களிலும் சிறப்பாகக் காணலாம்.

ஆமுக்த மால்யதவில் ஸ்ரீ கிருஷ்ணதேவராயர், பாத்திரங் களைப் படைப்பதிலும் பாத்திரங்களின் குணநலன்களைத் தெளி வுற எடுத்துக் காட்டுவதிலும் சிறப்புற்று விளங்குகிறார். உவமை, தன்மை நவிற்சி, தற்குறிப்பேற்றம் முதலிய அணி நயங்கள் மிளிர, எழில்மிக்க வடமொழியும் தெலுங்கும் கலந்த மணிப் பிரவாள நடையில் கம்பீரமான பாங்கில் ஸ்ரீ கிருஷ்ணதேவராயர் தமது காவியத்தைப் படைத்துள்ளார்.

## உரைகள் :

'ஆமுக்த மால்யத' வினை உரையின் துணையின்றிப் புரிந்து கொள்வது எளிதன்று. கி. பி 1800-இல் கட்டுபல்லி ஸ்ரீனிவாச கவி எழுதிய 'மகாடீக' என்னும் உரையே முதல் உரை என்பர். அதன்பின் ஏறத்தாழ முப்பது உரைகள் எழுதப்பட்டன. வாவிள்ள ராமஸ்வாமி சாஸ்த்ருலு இயற்றிய 'ருசி' வியக்கியான மாகிய உரை 1869இல் வந்தது. மாபெரும் புலவர் வேதம் வேங்கடராய சாஸ்திரி அவர்களின் 'சஞ்சீவினி' உரை 1927இல் வந்தது. இவ்விரண்டும் மிகச்சிறந்த உரைவளமிக்க விரிவுரைகள். 'ஆமுக்த மால்யத'வின் ஏட்டுப் பிரதிகளைச் செப்பனிட்டு முதன் முதலில் பதிப்பித்தவர் தெலுங்கிலக்கியத்திற்கு மகோபகாரம் புரிந்தவராகிய சி. பி. பிரௌன் என்னும் ஆங்கிலேயர் ஆவார். இவருக்குத் துணை நின்றவர் ஜூலூரி அப்பய்ய பந்துலு ஆவார். இவர்களே மனுசரித்திரம், வசு சரித்திரம் முதலிய காவியங்களை யும் முதன் முதலில் பதிப்பித்தனர். இன்று 'ஆமுக்த மால்யத' வினைக் குறித்து எத்தனையோ ஆய்வு நூல்கள் வந்துள்ளன. அவற்றுள் டாக்டர். டி. கோடீஸ்வரராவின் ''ஆமுக்த மால்யதா ஸௌந்தர்யமு'' என்னும் தெலுங்கு ஆய்வு நூல் குறிப்பிடத்தக்க தாகும். இந்நூல் 1971-இல் வெளியிடப்பட்டுள்ளது.

## மொழிபெயர்ப்பு :

''ஆமுக்த மால்யத''வின் முழுமையான தமிழ் மொழி பெயர்ப்பு முதன் முதலாக வெளிவருகின்றது. இதனைத் திரு. மு. கு. ஜகந்நாதராஜா அவர்கள் செய்திருக்கின்றார். 'ஆமுக்த மால்யத' வின் பகுதிகளுள் சில ஆங்கிலம், தமிழ் முதலிய மொழி களில் பெயர்த்தெழுதப்பட்டு அவ்வப்போது வெளிவந்துள்ளன. இராஜபாளயத்தைச சேர்ந்த மாவட்ட நீதிபதி காலஞ்சென்ற ஏ. கே. டி. வெங்கட்டராஜு அவர்கள் 1945ல் 'பக்தன்' என்ற மாத இதழில் 'ஆமுக்த மால்யத'விலிருந்து சிறந்த சில பகுதி களைத் தமிழாக்கம் செய்து வெளியிட்டிருந்தார்கள்.

''ஆமுக்த மால்யத'' முழுக்க முழுக்க தமிழகத்தைச் சேர்ந்த கதை. தமிழ்பெருங்கவிஞர்களாகிய பெரியாழ்வார், ஆண்டாள் ஆகிய இருவரின் வரலாறுகளைக் கொண்டது. இதில் காணும்

ஆளவந்தார் (யமுனாச்சாரியார்) வரலாறும் தமிழ்வைணவ ஆசாரியாருடையதேயாகும். மாலதாசரி கதையும் தமிழகத்துத் திருக்குறுங்குடி என்னும் திருத்தலத்துடன் தொடர்புடையதே. காண்டிக்கிய கேஸித்துவஜன் கதை மட்டுமே வடமொழிப் புராணத்தோடு தொடர்புடைய கதையாகும். இவ்வாறு தமிழ் மணம் கமழும் இக்காவியம் தமிழாக்கப்படுவது சிறப்புக்குரியது மட்டுமன்று; இலக்கிய உலகின் இன்றியமையாத தேவையுமாகும்.

இந்நூலை அழகிய தமிழில் மொழிபெயர்த்துத் தந்துதவிய பன்மொழிப் புலவர் மு. கு. ஜகந்நாதராஜா அவர்கள் தமிழிலும் தெலுங்கிலும் நற்புலமை மிக்க கவிஞராவார். பல அரிய நூல்களைப் படைத்தளித்துள்ள ராஜா அவர்கள், 'தமிழக, ஆந்திர வைணவத் தொடர்புகள்' எனும் ஆய்வு நூலைத் தமிழ்ப் பல்கலைக் கழகத்திற்குப் படைத்துத் தந்துள்ளார். இவர், தெலுங்கு மொழியில் சிறப்பான நாடகமாகப் போற்றப்படும் 'கன்யா சுல்கம்', சிறந்த நாவலான "மால பள்ளி" முதலியவற்றையும் தமிழாக்கிய சிறப்பினைக் கொண்டவர்; தமிழ் இலக்கிய நூல்கள் சிலவற்றையும் தெலுங்கில் மொழிப்பெயர்த்துள்ளார்.

மொழிபெயர்ப்பு மூலநூலின் கம்பீர நடையையும் கருத்தாழத்தையும் கொண்டு தெளிந்த நடையில் அமைந்துள்ளது.

தெலுங்கு பல்கலைக் கழகத்தார் தமிழ் 'ஆமுக்த மால்யத' வினைத் தெலுங்கு மூலத்துடன் வெளியிடத் தீர்மானித்தனர். அதற்கேற்ப திருக்காளத்தியில் எஸ். வி. ஏ. அரசினர் கல்லூரியில் விரிவுரையாளராகப் பணியாற்றும் டாக்டர் ஜி. குணசேகர் அவர்கள் தெலுங்கு மூலத்தைச் சிறப்பாக எழுத்தாக்கம் செய்தளித்துள்ளார்.

டாக்டர். குணசேகர் தமிழிலும் தெலுங்கிலும் நற்புலமை பெற்றவர். தமிழில் வல்லின எழுத்துக்களான 'க, ச, ட, த, ப, ற' என்பவை இடத்திற்கேற்ப ஒலிக்கப்படுவனவாம். தெலுங்கு மொழியில் (Ka), (Ga), (Ha) எனும் ஒலிகளுக்குத் தனித் தனியே எழுத்துக்கள் உண்டு. தமிழில் 'க' என்ற எழுத்தே இடத்திற்கேற்ப அம்மூன்று ஒலிகளையும் பெறும். குட்டு, பங்கு, பாகு என்ற சொற்களின் வாயிலாக 'கு' என்ற எழுத்தின் உச்சரிப்பில்

உள்ள வேறுபாடுகளை அறியலாம். ஆதலினால் தமிழில் இல்லாத ஒலிகட்கும் தமிழ் எழுத்தினையே பயன்படுத்த வேண்டிய கடப்பாடு உண்டு. இது சிறிது சிரமமானதேயாகும். 'க' வர்க்கத்தில் தெலுங்கு மொழியிலும் பிற இந்திய மொழிகளி லும் நான்கு எழுத்துக்கள் உண்டு. தமிழில் 'க' என்ற ஒரெழுத்தே உண்டு. ஆதலின் தெலுங்கு மொழியிசைப் பாடல் களான தியாகராச கீர்த்தனைகள், வேமன பத்தியங்கள் முத லானவற்றைத் தமிழில் எழுதும்போது சில குறியீடுகளையிட்டுச் சரி செய்து கொள்வர். சிலர் க[1] க[2] க[3] க[4] என்று எண் வைத்து உச்சரிப்பை உணர்த்துவர். "ஆமுக்த மால்யத"வின் தமிழ் எழுத் தாக்கத்தில் இம்முறையே கையாளப்பட்டுள்ளது. 'க' என்பது (Ka) என்றும் க[1] என்பது (Kha) என்றும் க[2] என்பது (Ga) என்றும் க[3] என்பது (gha) என்றும் உச்சரிக்கப்படவேண்டும். இதுபோன்றே ச, ட, த, ப என்னும் எழுத்துக்களும் எண்களையொட்டி உச்சரிக்கப்பட வேண்டும். 'ற்ற' என வருமிடங்களில் 'ர்ர' என்றே ஒலி அமையும். தெலுங்கில் 'ற','ர' என்னும் ஒலிகளுக்கிடையே இப்போது வேறுபாடு இல்லை. 'ஶ்ரீ' எனும் கிரந்த எழுத்துக் கிணையான சகரம் ச[2] என்று குறிப்பிடப்பட்டுள்ளது. 'ஸ' என்ற ஒலிக்குச் சமம். ஒலிக்க வேண்டிய முறை பற்றிய பட்டியல் தரப்பட்டுள்ளது. அதனைக் கருத்தில் கொண்டு அதில் குறித்த வண்ணம் ஒலிகளை உச்சரிக்க வேண்டும்.

இவ்வரிய 'ஆமுக்த மால்யத' காப்பியத் தமிழாக்கத் தொண் டிற்கு என்னைப் பொறுப்பாசிரியராக நியமித்து முன்னுரை எழுதும் வாய்ப்பினை அளித்த தெலுங்குப் பல்கலைக் கழகத் துணைவேந்தரும் என் அருமை நண்பருமாகிய டாக்டர். டி. தொணப்பா அவர்கட்கும், டாக்டர். யஸ். சிவராமமூர்த்தி அவர்கட்கும் என்னோடிணைந்து விரைவில் தமிழாக்கம் செய்தளித்த இராஜபாளையம் பன்மொழிப்புலவர் மு. கு. ஜகந்நாதராஜா அவர்கட்கும் எழுத்தாக்கம் செய்துதவிய டாக்டர் ஜி. குணசேகர் அவர்கட்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

**சி. ஆர். சர்மா**
(சல்லா இராதாகிருஷ்ண சர்மா)
தெலுங்குத்துறைத் தலைவர்
மதுரைக் காமராசர் பல்கலைக் கழகம்
மதுரை

அன்ன வயற்புதுவை ஆண்டாள் அரங்கற்குப்
பன்னு திருப்பாவைப் பல்பதியம்—இன்னிசையால்
பாடிக்கொடுத்தாள் நற்பாமாலை பூமாலை
சூடிக் கொடுத்தாளைச் சொல்லு.

சூடிக் கொடுத்த சுடர்க் கொடியே தொல்பாவை
பாடி யருளவல்ல பல்வளையாய்—நாடிநீ
வேங்கடவற் கென்னை விதியென்ற இம்மாற்றம்
நாங்கடவா வண்ணமே நல்கு.

# ஆமுக்த மால்ய த2

## ப்ரத1மாஸ் வா2சமு

### இஷ்ட தே2வதா ச்2துத்யா2திகமு

உ. ஸ்ரீ கமனீய ஹாரமணி சென்னுக2 தானுனு கௌச்2து ப3ம்பு2னங்
தா2 கமலா வதூ3டியு உதா2ரத தோப பரச்2பராத்மலங்
தா2 கலிதம்பு2 லைன தம யாக்ருது லச்ச1த பைகி தோசி யச்2
தோகத னந்து2 தோசெனன ஸோபி3லு வேங்கடப3ர்த
கொல்செத2ன் I—1

ம. சி2ரினொக்கப்புடு2 கன்மொறங்கி2, ஹரிதன் சேரன்
ப்ரஹர்ஷிஞ்சு உர்
வரகுன் வஞ்சன கூட2கா2 கலுகு2 பா3ச்2வச்சந்த்2ரஸாலா பரம்
பரலய்யென் பறபைன யெவ்வனி ப1ணாபங்க்துல்
ப3ஜிந்துன் நிரந்
தரமுன் தா2ந்துனி அய்யனந்துனி அதீத ப்2ரம்ஹ
கல்பாந்துனின் I—2

சீ2. க1னடத்பயோ ப்2தி3 வீக்ஷய ரசா2 தலான்யோன்ய
பிண்டீ2க்ருதாங்க2 பீ3தாண்ட2 ஜமுலு,
த்3ருத குலாயார்த1 க1ண்டி2த ச2மில்லவரூப
சரணாந்திக ப்3ரத த்தருவரமுலு,
க3ன கு2ஹா க3டித ஜா1ங்கரண லோகைகத்2வி
து2ந்து2பீ3க்ருத மேரு மந்த2ரமுலு,
சடுல ஜ1ம்பா தர ச்ச்2வநக2ரீ விபரீத
பாதிதா ஸாகோண பரிப்2ருடமு3லு.

தே. ப்ரப2ல தர பா2ட2பீ3க்ருத தேரம்மத2முலு,
பா3ச்2வ ரேரம்ம2தீக்ருத பா2ட2ப2முலு,
பதக2 ச2ம்ராட் பதத்ர ப்ரப3ஞ்ஜனமுலு,
வ்ருஜின தூலௌக3முல தூல விச2ருகா2த I—3

# ஆமுக்த மால்யத

## முதல் அத்தியாயம்

### பீடிகை

#### துதி

திருமகளின் அழகிய மார்பணியான மணிஹாரத்தில் தானும் தனது கௌஸ்துப மணியில் அத்திருமகளும் பிரதி பிம்பமாகத் தோன்ற, பரஸ்பரம் தத்தம் மனங்களில் காதல் மீதூர நிலைத்து இலங்கும் அவர்களது உருவங்கள் உடலின் தூய்மையாலே வெளியே தோன்றுகின்றனவோ என்று கருதும் படியாக உள்ள, திருவேங்கடவனை வணங்குகிறேன். I—1

திருமகளை வஞ்சித்து அவளுக்குத் தெரியாமல் நிலமகளைப் புணர்தற்கு யாருடைய படமுடிகள் விசாலமான சந்திர சாலைகளாக (நிலாமுற்றங்களாகத்) திகழ்ந்தனவோ அந்த ஆதிசேடனை, புலனடக்கமிக்க புனிதனை என்றும் வணங்குகிறேன். I—2

கடல்நீர் வானில் நடமிடப்பாதாளம் காணப்பட்டும், ஒன்றோடொன்று பிணைந்து மொத்தையாகிப் பயந்த அரவங்களைக் காணத்தக்கதாக்கியும், கூடுகட்டக் கொண்டு செல்லும் கட்டைகளோ எனுமாறு பெருமரங்கள் பின்தொடருமாறு காற்றடித்தும்,

இறக்கைகளின் பேரொலியால் எதிர்முழக்கமிடும் மேருமந்தர கிரிகளின் குகைகள் துந்துபிகளாக அமையச் செய்தும்,

சூறாவளிக் காற்றால் எறியப்பட்டு தத்தம் நகர்கள் மாற்றமடைந்த திக்பாலகர்களை வெருவச் செய்தும், மின்னலுடன் கூடிய மழை முகில்களை கடலில் வீழ்த்தியும், கடலிலுள்ள வடவைத் தீயை வானில் வீசியும், மாபெரும் ஆற்றலைக்காட்டும் கருடனுடைய இறக்கைகளிலிருந்து எழுந்த பெருங்காற்று எமது பாவங்கள் என்றும் பஞ்சுக்குவையை வீசியெறியுமாக! I—3

விஷ்வக்சே2னுனி பெ2த்தமுனகு வந்த2னமு ச2லுபுட

உ. பூனி முகுந்து2னாஜ்ஞு கனுபொ2ம்மனெ காஞ்சி யஜாண்ட2
பா3ண்ட2முல்
வானனுமீத2 போவநடு3வன் கொனெ தன்னன அக்2ரநிஸ்சலத்
வானசலத்நிஷ்ட1லெ ச2மச்2த ஜக2ம்பு2ல ஜாட்2ய சேதனல்
கா2நுதிகெக்கு சைன்யபதி காஞ்சனவேத்ரமு
ஆஸ்ரயிஞ்செத2ன் I—4

பாஞ்சஜன்ய வர்ணனமு

ம. ஹரிபூரிம்ப ததா2ச்2ய மாருத சு2க2ந்தா2க்ருஷ்டமை நா3பிபங்
கருஹ க்ரோட2 மிளிந்த2 ப்2ருந்த2 மெது ரெக்கன்
து2ஷ்க்ரியா பங்க ச2ங்
கர தை2த்யானு பரம்பரன் க2முசு ரேக1ன் பொல்சு ராகா நிஸா
கர கௌ2ர த்2யுதி பாஞ்சஜன்ய மொச2குன் கல்யாண
சா2கல்யமுன் I—5

நந்த2க வர்ணனமு

ம. ப்ரததோர்த்3வார பா3க2பீட1யுக2ளீ பா3ச்2வத்த்
ச2ருச்2தம்ப3 ச2ம்
ச்2தி1தி தீண்ட்2ரிஞ்செடு2 ஜாளுவா மொச2லிவா
தீ ப்தார்சிகா2 கஜ்ஜலான்
வித தூ3மா2சித ரேக1பை யலுகு கா விஜ்ஞ2ன தீ பாங்குரா
க்ருதி னந்த2ம்ப2கு நந்த கம்ப க3லதா ஸ்ரேணிச்சி1த2ன்
சேயுதன் I—6

முகுந்தனின் கட்டளைகளை புருவ அசைப்பிற் கண்டு பிரம்மாண்ட பிரபஞ்சங்களை உருவாக்கவும் அழிக்கவும் வல்ல தனது பொற்பிரம்பின் அசைவும் அசைவின்மையும் ஜடசேதனங் களாகத் திகழச் செய்யும் விசுவக்சேனரின் பொற்பிரம்பினை வணங்குகின்றேன். I—4

திருமால் (சங்கை) ஊதவும், அவன் வாய்மணம் விழைந்து கவரப்பட்ட உந்திக் கமலத்துள்ளிருக்கும் வண்டுகள் எதிர் சூழவும், அது, அசுரர்களின் பாவம் நிறைந்த உயிர்களைக் கவர்வது போலத் தோன்றும், முழுநிலவொத்த பாஞ்சசன்னியம் எனும் சங்கம் எல்லா நலன்களும ஈவதாக.

(அசுரர் உயிர்கள் கருவண்டுகளாக உவமிக்கப்பட்டது) I—5

பரந்துள்ள கீழ் மேல்பாகங்கள் (பிடியின் இருபக்கமும்) விளக்குத்தூண் போலவும், அதன்மேல் ஒளிரும் முதலைவாய் எனும் பொன்தகடு. விளக்குச் சுடராகவும் அதன் மேல்திகழும் வாள் சுடர்க் கொடி (கரும்புகை) யாகவும்விளங்கி ஞானதீபமாகத் திகழும் அழகிய நந்தகமென்னும் வாள் பாவக்கொடிகளை அறுத்தெறியுமாக. I—6

## கௌமோத²கீ வர்ணனமு

உ. யாத²வ சா²ர்வபௌ³ம ப³யதா²யத பா²ஹு நியுக்தி சேசி யெந்
தே² த²னுஜேந்த²ர சா²ள்வபுர ஹேமமணீவரணம்பு² ச²ஸ்க²தம்
பை²தீ²வி ஆத்ம கங்கணமுலந் தொ கெ கங்கணமய்யெ
னட்டிகௌ
மோத²கி மோத²கீலித ச²முஜ்ஜ்வல கல்பகமால்ய
கொல்செத²ன்‌ I—7

## ஸார்ங்க² வர்ணனமு

ச. பிடி²கெடு² கௌனு கொப்பு கனி ப்ரேம த்ரிவக்ர ச²மாங்கி²
சேசி²தே
பிடி²கெடு² கௌனு கொப்புயயி பெச்சு கு²ணம்பு²னு
கண்டினஞ்சு, ஏர்
பட²க² நிஜத்ரிவக்ரதயு பாபக²ம்ரொக்கெடு²னா சு²மாலியை
ஜடி²கொன அம்முலீனு ஹரிஸார்ங்க² த²னுர்லத காசு
கா²வுதன் I—8

## சு²த²ர்ஸன வர்ணனமு

ச. அட²ருகளாச்²ரதா³ரலு மஹாமுக¹வாந்த சு²தா³ம்பு² தா³ரலுன்
பொட²வகு² வஹ்னி கீலமுலு பொங்கு²னுகா²
பெறதை²த்ய கோடிகின்
பெ²டி²த²பு கின்கதோ எச²ரு பெட்டின பெத்த² பனண்டி
போலெ எக்
குடு²வெச² ராஹு மச்²தகமு கொன்ன சு²த²ர்ஸன தே²வு
கொல்செத²ன் I—9

யாதவகுல மாமன்னன் (கண்ணன்) உடையதோள்களால் ஏவப்பட்டு சாளுவன் எனும் அசுரனுடைய பொன்னாலான மணிகள் உடைய கோட்டையை தனது (கதையினுடைய) வளையணிகளில் ஒன்றாக அமைத்த காமோதகி எனும் கதையை, மகிழ்ச்சி தரும் கற்பகப் பூமாலைகளுடன் திகழ்வதாகிய அதனை வணங்குகிறேன்.

(சாள்வன் பொற்கோட்டையும் ஒரு வலயமாக அணிவிக்கப் பட்ட கதை வெற்றி மிக்கது என்பது கருத்து. இக்கதை புராணக் கதைகளில் காண்க) I—7

பிடியிலடங்கும் இடையும் மூன்று வளைவுமுடைய கூனியை நிமிர்த்தி நல்லெழில் நங்கையாக்கியதுபோல பிடியிலடங்கி, வளைவுடன் நற்குணமும் உடைய என்னையும் நேராக்கி ஏற்றுக் கொள்க என்று வணங்கும் சார்ங்கம் எனும்விற்கொடி நம்மைக் காக்குமாக.

(சுமாலி எனும் அசுரனைப் போரில் வென்றபோது மழை போல அம்புகள் பொழிந்த வில் சார்ங்கம் ஆகும்.) I—8

கழுத்திலிருந்து ஒழுகும் குருதி தீச்சுவாலையாகவும், தலை— உலைவைத்த பெரும்பானையாகவும், வாய்கக்கிய அமுததாரை, நுரைபொங்குவதாகவும் தோன்றுமாறு ராகுவின் தலையைக் கொய்த சுதர்சன சக்கரத்தை வணங்குகிறேன். I—9

## பன்னித்த²று சூ²ருலன் தலஞ்சுட

ம. அல பன்னித்த²று சூ²ரு லந்து²னு ச²முத்²யல்லீல காபுன்னவெ
க்க²லபுன் தாபமு பா²பனா நிஜமன: கஞ்ஜாத சஞ்ஜாத புஷ்
கலமாத்³வீக ஜ¹ரின் முராரி சொ²கி²யங்கா சொக்கி
த³ன்யாத்முலெள
இல பன்னித்த²று சூ²ருலன் தலது மோக்ஷேச்சா¹ மதின்
தி²வ்யுலன் I—10

வ. அனி யிஷ்ட தே²வதா வந்த²னம்பு² சே²சி முன்னே களிங்க²
தே²ஸ விஜிகீ²ஷா மனீஷன் ²தண்டெ²த்தி போயி விஜயவாடின்
கொன்னி வாச²ரம்பு² லுண்டி² ஸ்ரீகாகுள நிகேதனுண்ட²கு²
ஆந்த்³ர மது³மத¹னு சே²விம்பன் போயி ஹரிவாச²
ரோபவாச²ம் பச்சட காவிம்ப அப்புண்யராத்ர சதுர்த¹
யாமம்பு²ன I—11

## கலலோ ப்ரத்யக்ஷமைன
## தெனுகு² வல்லப³ராயனி வர்ணன

சீ. நீலமேக³ முடா²லு டி³லுசேயக² ஜாலு
மெறுகு² சாமன சாய மேனிதோட²
அரவிந்த² முலகச்சு லட²கி³ஞ்சு ஜிகி ஹெச்சு
ஆயதம்ப²கு² கண்ணுதோ²யி தோட²
புலுகு²ராயனி சட்டுபல வன்னெனொரவெட்டு
ஹொம்ப²ட்டு ஜிலுகு² ரெண்டெம்பு² தோட²
உத²யார்க பி²ம்ப²ம்பு² ஒறபு விட²ம்ப²ம்பு²
தொ²ரலங்க²னாடு² கௌச்² துப³முதோட²

தே. தம்மிகேலுண்ட² பெறகேல த²ண்ட² யிச்சு
லேமுலுடி² பெடு² லேஜஓபு லேம தோட²
தொலகுத²ய தெல்பு சிறுநவ்வு தோட² கல த
த²ன்த்³ர ஜலஜாக்ஷு டி²ட்லனி யானதிச்செ I—12

பிரசித்தமான பன்னிரண்டு சூரியர்கள் (துவாதசா தித்தியர்கள்) நடுவில் வசித்ததால் ஏற்பட்ட வெம்மையைப் போக்குவதற்காக, தமது மனத்தாமரை மலரில் பிறந்த தேனாற்றில்திளைத்துஇன்புறுமாறு திருமாலை வழிபட்டுப் பயன் பெற்ற பன்னிரு ஆழ்வார்களையும் (திவ்ய சூரிகள்) மோட் சத்தை விழைந்து வணங்குகிறேன். I—10

என்று தெய்வ வணக்கம் செய்து, முன்பு கலிங்க நாட்டை வெற்றி கொள்ள நினைந்து படையெடுத்துச் செல்லும்போது விஜயவாடாவில் சின்னாள் இருந்து ஸ்ரீகாகுளத்தில் உறையும் ஆந்திரமது மதனனை (திருமாலை)ச் சேவிக்கச் சென்று ஏகாதசி விரதம் இருந்து அங்கு அப்புண்ணிய இரவில் நான்காவது யாமத்தில். I—11

கருமுகிலை வென்ற மின்னும்மாமை நிறத்தோடு கூடிய வனும், தாமரைமலர்களை வென்ற ஒளிமிக்க நீண்ட கண்ணிணை யுடையவனும், புள்ளரசனின் (கருடனின்) இறக்கைகளைவென்ற பொன் வண்ணப்பட்டாடையுடனும், காலை இளம்பரிதி எழிலை வென்ற கௌஸ்துப மணியுடனும், தாமரைக்கையிருக்க, மற்றொரு கையால் கைலாகு தருகின்ற வறுமையைப் போக்கும் இளம் பார்வையுடைய நங்கையோடு (திருமகளோடு) கூடியவ னாக இருந்து, அருள் ஒழுகும் புன்முறுவலோடு ஆந்திர விஷ்ணு இவ்விதம் ஆணையிட்டருளினான் I—12

ப$^{3}$க$^{2}$வ$^{2}$த்வாக்யமு

சீ$^{2}$. பலிகிதுத்ப்ரே க்ஷோபமலு ஜாதி பெம்பெக்க
ரசி$^{2}$குலெளனன மதா$^{2}$லச சரித்ர,
பா$^{3}$வத்$^{3}$வனி வ்யங்க்$^{2}$ய சே$^{2}$வதி$^{3}$காக$^{2}$ செ
ப்பிதிவி ச$^{2}$த்யாவதூ$^{3}$ ப்ரீணநம்பு,$^{2}$
ஸ்ருதி புராணோப ச$^{2}$ம்ஹத லேர்சி கூர்சிதி
ச$^{2}$கலகதா$^{1}$ சா$^{2}$ர ச$^{2}$ங்க்$^{2}$ர ஹம்பு$^{2}$,
ஸ்ரோத்ரக$^{3}$ச்ச$^{3}$டலு விச்சுக$^{2}$ ரசிஞ்சிதி சூக்தி
நைபுணி ஜ்ஞான சிந்தாமணி க்ருதி,

தே. மறியு ரச$^{2}$மஞ்ஜரீமுக்$^{1}$ய மது$^{3}$ர காவ்ய
ரசன மெப்பிஞ்சு கொண்டி கீர்$^{2}$வாண பாஷ
அந்த்$^{3}$ரபா$^{3}$ஷ யசா$^{2}$த்$^{3}$யம்பெ$^{2}$ யந்து$^{2}$ ஒக்க
க்ருதி விநிர்மிம்பு மிக மாகு ப்ரியமுகாக$^{2}$ I—13

உ. என்னினு கூர்துனன்ன, வினு, மேமுனு தால்சின மால்ய மிச்சு அ
ப்பின்னதி$^{2}$ ரங்க$^{2}$மந்த$^{2}$யின பெண்டி$^{2}$லி செப்புமு; முன்னு கொண்டி நே
வன்னனத$^{2}$ண்ட$^{2}$ யொக்கமக$^{2}$வாடி$^{2}$ட$^{2}$, நேனு தெலுங்கு$^{2}$ ராயட$^{2}$ன்
கன்னட$^{2}$ராய, அக்கொது$^{2}$வ கப்பு ப்ரியாபரிபு$^{3}$ க்தபா$^{3}$க்கத$^{1}$ன் I—14

ஆ. தெலுகதே$^{2}$லயன்ன, தே$^{2}$ஸம்பு$^{2}$ தெலுகே$^{2}$னு
தெலுகு$^{2}$ வல்லபு$^{3}$ண்ட$^{2}$ தெலுகொ$^{2}$ கண்ட$^{2}$
எல்ல ந்ருபுலு கொலுவ எறுக$^{2}$வே பா$^{2}$சா$^{2}$டி$^{2}$
தே$^{2}$ஸ பா$^{3}$ஷலந்து$^{2}$ தெலுகு$^{2}$ லெச்ச$^{2}$ I—15

உவமை உருவகங்களின் சிறப்பு மிளிர, ரசிகர்கள் மனங்களிப்ப மதாலசசரித்திரம் சொன்னாய், தொனி, கருத்து எழில்மிகுமாறு "சத்ய பாமா பரிணயம்'' எனும் காவியம் செய்தாய், வேத புராணங்களிலிருந்து தேர்ந்து தொகுத்து "சகல கதாசார சங்கிரகம்'' படைத்தாய்! கேட்பவர் பாவங்கள் போமாறு சொற் சாதுரியத்தோடு ''ஞானசிந்தாமணி'' நூல் இயற்றினாய் மேலும் 'ரசமஞ்சரி' முதலிய இனிய காவியங்கள் வடமொழியில் படைத்துச் சிறப்பெய்தினாய்! அத்தகைய உனக்கு தெலுங்கில் படைப்பது அரிதன்று; அதில் ஒரு காவியம் எமது விருப்பத்தின் பொருட்டு இயற்றுவாயாக. I—13

எனது அவதாரங்களில் எதைப் படைப்பது? என்பாயாயின் கேள்! நான். தானே குடிக்கொடுத்த பாமாலையைத் தந்த அச்சிறுமியை (பேதையை) திருவரங்கத்தில் திருமணம் புரிந்த கதையைக் கூறுவாயாக! முன்பு (கிருஷ்ணாவதாரத்தில்) ஒரு ஆண்மகன் (சுதாமன்) தர விருப்பின்றிமலர்மாலைகள் புனைந்து கொண்டேன். நானோ தெலுங்குராயன். (தெலுங்கு மன்னன்- நீயோ கன்னடராயன் (கர்ணாடக அரசன்) அக்குறையைத் தீர்க்குமாறு காதலி சூடித்தந்த கதையைக் கூறுவாயாக. I—14

தெலுங்கில் எதற்கென்று கேட்டால் நான் இருக்கும் நாடு தெலுங்கு நாடாகும். நான் தெலுங்கு வல்லபன். தெலுங்கு மட்டுமா? எல்லா மன்னர்களும் கொலுவிருக்கும்போது (பல்வேறு மொழிகளில்) பேசியறிய மாட்டாயா? தேச பாஷைகளில் (நாட்டு மொழிகளில்) தெலுங்கே அழகானது. இனிமை மிக்கது I—15

## 12

### க்ருதிபதி ப்ரஸம்ச2

க. அங்கிதமோயன, நீ கல
வேங்கடபதி யிஷ்டமைன வேல்பகு2ட ததீ2
யாங்கிதமு சேயு மொக்கொக
சங்2கேதமுகா2கதட2 ரச2ன்நேகா2னே I—16

தே. பொத்தமிடு சேய நீகுத்த ரோத்தராபி3
வ்ருத்தி3 யனிபோவ மேல்கொனி வெறகு2தோடி2
ப3க்தி தத்2க்ருஹ கோ2புர ப்ரணதி சேசி2
வேகுடயு கல்யகரணிய விது3லு தீர்சி I—17

வ. நீண்டோ2 லக2ம்பு2ண்டி2 த2ண்ட2நாத2 சா2மந்தச2 ந்தோஹம்பு2ல பிலிபிஞ்சி பெந்த2ல கட2ன மந்திர2ம்பு2ல கனிபி விவித2 வேதா2க2ம விது2லகு2 வித்2வஜ்ஜனம்பு2ல கானிபிஞ்சு கொனி நமச்2கரிஞ்சி ஆசு2ப3 ச்2வப்னம்பு வினிபிஞ்சின ஹர்ஷிஞ்சி வாருனு ச2விச்2மயச்2 வாந்துலை தே2வா தே2வ தே2வுண்டு2 விஜயம்பு2 சேசி2ன ஆச்2வப்னம்2பனேக ஸோப3ன பரம்பரலன் தெலுபு சுன்னயதி எட்லனின ப்ரத்மமப்பத்2 மேக்ஷணு ச்வ2ப்ன ' சாக்ஷாத் காரம்பு இதோதி3கப3க்தியு' அதண்டு2 ப்ரப2ந்த3 நிப2ந்த2னம்பு2 காவிம்பு மனுட இதோதி3 காகா2தா1 சா2ரச்வ2 தோத்2 போத3ம்பு2னு அதனி தே2வீச2மாக2 மம்பு2 இதோதி3 காத்2தீயசி2த ச1த்ர தயு, அதண்டு அஸேஷ ந்ருப சே2வன் தத்தத்2பா3 ஷலு எறுங்க2வெ யனுட இதோதி3க ச2மச்2த சா2மந்த ச2மாஜ ச2மாகர்ஷணம்பு2னு, ப்ரியோப போ3க2 பரிணாஷ்ட போ3க2ம்பு இம்பனுட இதோதி3க ப2ஹப்ரேயசீ2 ப்ராப்தியு க்ருதிசெப்பன்2 உத்தரோத்தராபி3 வ்ருத்தி3 யகு2ளனுட இதோதி3கா2பத்ய பரமாயுரவாப்தியுனகு, அக1ர்வமஹி மாதிதூ3ர்வஹ2ட2கு2 துர்வசு2வம்ஸம்பு2ன, புட்டினட்டி நீகிட்டி ஸோப3ன பரம்பரலு ஏமத்2பு3தம்பு2லு அவத3ரிம்புமு I—18

உனக்கு இஷ்டதெய்வம் வெங்கடேசுவரன் ஆதலினாலே அவன் பெயரில் சமர்ப்பணமாக்கி இயற்றுக. ஒவ்வோரிடத்தும் வேறு வேறு குறியீடுகளுடன் (பெயர் வேறுபடினும்) இருப்பது நான்தான் அல்லவா? I—16

நூல் இதனைச் செய்யின் உனக்கு மேன்மேலும் நலன்கள் கிட்டும் என்று கூறிச் செல்லவும். (துயிலிலிருந்து) விழித்தெழுந்து வியப்புற்று பக்தியுடன் கோயில் கோபுரத்தை வணங்கி விடிந்ததும் காலைக் கடன்கள் முடித்துவிட்டு I—17

கொலுவிருந்து, சேனாதிபதி, சிற்றரசர்கள் குழுவை அழைத்து விடியற்காலையிலேயே வீட்டிற்கனுப்பி வைத்து, பல்வேறு வேதாகம வித்தகர்களாகிய பண்டிதர்களைக் கண்டு வணங்கி அவ்வினிய கனவைப் பற்றிக் கூறவும், மகிழ்ந்து அவர்களும் வியப்புற்ற மனத்தினர்களாய் "தேவா தேவதேவன் (திருமால்) விஜயம் செய்த அக்கனவு பல நலன்களும் எய்துவதைக் குறிக்கும், எப்படி எனின், முதலில் தாமரைக் கண்ணன் கனவில் காட்சி தந்தது முன்னைவிட அதிக பக்தியும், அவன் பிரபந்தம் (காவியம்) படைக்குமாறு பணித்தது முன்னினும் அதிக ஆழமான இலக்கியப் பேரறிவும், அவன் தேவியின் வருகை முன்னினும் மிக்கச் செல்வச் செழிப்பும் அவனது தேவியின் கையிலிருந்த நூற்றிதழ் வெண்டாமரை இன்னும் மிக்க வெண் கொற்றக் குடைகளையும், அவன் பல்வேறு மன்னர்களோடு அவரவர் மொழிகளில் பேசியறியமாட்டாயா? என்றது இன்னும் மிக்க மன்னர்களை வென்றுயர்வாய் என்பதையும், காதலி சூடித்தந்த தின்பம் மிக்கதென்றதால் இன்னும் மிக்க பல காதலியர் எய்தியின்புறுவதையும், எடுத்துக்காட்டுகிறது! மிகுதிறன்மிக்க துருவசு மரபில் பிறந்த உனக்கு இத்தகுநலன்கள் எய்துவதில் வியப்பென்ன இருக்கிறது கேட்பாயாக! I—18

சீ2. கலஸ பாதோ1ராஸி க2ர்ப3 வீசிமதல்லி
கடு2பார எவ்வானி கன்ன தல்லி,
அனலாக்ஷு க3னஜடா வனவாடிகெவ்வாடு
வன்னெட்டு அநார்தவம்பு புவ்வு,
சக2ல தை2வத பு3பு3க்ஷா பூர்திகெவ்வாடு
புட்டுகாமனி லேனி மெட்டபண்ட,
கடிகிசீகடி திண்டி2 கரமுல கிலி2கி2ந்த
எவ்வாடு3 தொக3கன்னே நவ்வசேயு,

தே. அதடு3 வொக2டொ2ந்து மது3கைடபா3ரி மறதி2
களல நெலவகு2வாடு2 சுக்கலகு றேடு2
மிசி2மிசி2பரசீ2ம வலராஜு மேனமாம,
வேவெலுங்குல2 தொர2 ஜோடு2 ரேவெலுங்கு2 I—19

தே. ஆசு2தா3தா3மு விப3வ மஹாம்பு2ராசி2
குப்பு2 மீறங்க2 நந்த2னுடு2த2ய மய்யெ
வேத2வேதா2ங்க2 ஸாச்2த்ரார்த1 விஸத2வாச2
னாத்த தி3ஷணா து3ரந்த3ருண்டை2ன புது3டு2 I—20

க. வானிகி புரூரவுடு2 ப்ர
ஜ்னா நிதி3 ஜனியிஞ்செ சிம்ஹச2 த்ருஸ2டு2 தத்2பூ3
ஜானிகி ஆயுவு தனயுண்
டா2 ந்ருபதிகி தனயுடை2 யயாதி ஜனிஞ்சென் I—21

எவனைக் கடல்தாய் வயிறாரப் பெற்றெடுத்தாளோ, சிவனுடைய சடை முடிக்காட்டில் யார் வாடாத பூவாக, என்றும் பொலிவுற்றிலங்குவரோ, எல்லா தேவர்கட்கும் பசிநீக்கும், வித்தி விளைவிக்காத வான்பயிராகத் திகழ்வது எதுவோ, இருளைத் தின்று, குமுத மலரைத் தன் கரத்தால் தீண்டிய நகையுறுத்துபவர் யாரோ, அந்தப் புகழ்மிகுந்த திருமாலின் மைத்துனனும், கலைகட் குறைவிட மானவனும், விண்மீன்களுக்கு அரசனும், ஒளியின் எல்லையாகத் திகழும், மன்மதனின் தாய் மாமன் ஆகிய பகலொளிக்கிணையான இரவொளியாகிய சந்திரன் சிறப்புற்று, இலங்கினான். I—19

அந்த அழகு கிரணனுடைய செல்வமரபெனும் கடலில் எழுந்த மகனான, வேத வேதாங்க சாஸ்திரக் கலைகள் முற்று முணர்ந்த அறிவுச்சுமை தாங்கிய புதன் உதயமானான்.

I—20

அவனுக்கு புரூரவன், சிங்கம் போலப் பேரறிவுடன் பிறந்தான். அம் மன்னனுக்கு ஆயுவு பிறந்தான். அவ்வரசனுக்கு யயாதி பிறந்தான். I—21

க. அதனிகி யது[2] துர்வசு[2]லனு
சுதுலுத்[2]ப[3]வ மந்தி[2]ரஹித சூத[2]னுலு களா
ன்விதமதுலு வாரிலோ வி
ஸ்ருத கீர்தி வஹிஞ்செ துர்வசு[2]டு[2] குணநிதி[1]யை I—22

தே. வானி வம்ஸம்பு துளுவான்வய மய்யெ
அந்து[3] பெக்கண்ட்ரு ந்ருபுலுத[2]யம்பு[2] ஒந்தி[2]
நிகில[1] பு[1]வன ப்ரபூர்ண நிர்ணித்[2]ர கீர்தி
அதி[3]குலைரி ததீ[2]யான்வயமுன புட்டி I—23

மஹாச்[2]ரக்[2]த[3]ர

க[1]னுடை[2] திம்ம க்ஷிதீஸாக்[2]ரணி ஸட[1]கமட[1]க்[2]ராவ
ச[2]ங்கா[3]தவாதா
ஸனராடா[2] ஸாந்தத[2]ந்தி ச்[2]த[1]விர கிருல ஜஞ்ஜாடமுல்
மாஞ்சி யிம்மே
தி[2]னி தோர்[2]த[2]ண்டை[2]க பீடின் திரமுபறசி கீர்தித்[2]யுதுல்
ரோத[2]சி[2]ன் ப
ர்வ நராதுல்நம்ருலை பார்ஸ்வமுல கொலுவ தீவ்ரப்ரதாபம்பு[2]
சூபென் I—24

க. விதரணக[1]னி அத்திம்ம
க்ஷிதிப க்[2]ராமணிகி தே[2]வகீதே[2]விகி அஞு
சிதமூர்தி ஈஸ்வர ப்ரபு[3]
ட[2]திபுண்யுடு[2] புட்டெ ச[2]ஜ்ஜனாவன பருடை[2] I—25

அவனுக்கு யது, துருவசு என்னும் மக்கள் பிறந்தனர். பகைவரை யடக்கும் திறனும் கலைஞானமும் மிக்கவர்களாக இருந்தனர். அவருள் நற்குணச்சிறப்புடன் துருவசு புகழ் பெற்று இலங்கினான் I—22

அவன் மரபு, துளுவ வம்சம் ஆயிற்று, அதில் பலமன்னர்கள் பிறந்தனர். எல்லா உலகிலும் நிறைந்த புகழுடன் சிறப்புற்றிலங்கிய அம்மரபில் பிறந்தான் திம்மராஜு மன்னன். I—23

ஆமை, மந்தரமலை, அனந்த (சேஷ) சர்ப்பம், திசை யானைகள், முதுவராகம் இவைகள் தாங்கிய உராய்வின் துயர் தீர்த்து தன் தோளில் தாங்கி நிலைநிறுத்தி புகழ் ஒளிவான் முழுவதும் பரவச் செய்து, மன்னர்கள் மருங்கில் வணங்கிக் கொலுவிருக்குமாறு பிரதாபத்துடன் அம்மன்னன் திகழ்ந்தான். I—24

கொடைவள்ளலான அத்திம்ம மன்னனுக்கும் தேவகி தேவிக்கும் ஈஸ்வர ராஜு என்னும் நல்லோரைக் காக்கும் புண்ணிய மூர்த்தி பிறந்தான். I—25

ச. ப2லமத2மத்தது2ஷ்ட புரப3ஞ்ஜனுடை2 பரிபாலிதார்யுடை2
இலபயி தொண்டி ஈஸ்வருடெ2 ஈஸ்வருடை2
ஜனியிம்ப ரூபறென்
ஜலருஹ நேத்ரலன் தொறகி2 சைல வனம்பு2ல பீ3தசித்துலை
மெலகெ2டு2 ஸத்ருபூ3வருலு மேனுலதால்சின
மன்மதா1ங்கமுல் I—26

சீ2. நிஜபு3ஜாஸ்ரித தா3ருணீ வஜ்ரகவசம்பு2
துஷ்ட பு3ஜங்கா2ஹி துண்டி2குண்டு2,
வனஜேக்ஷணா மனோத3ன பஸ்யதோ ஹருண்
ட2ரிஹம்ச2ச2ம்ச3த2ப்3ராக2 மம்பு2,
மார்க2ணக2ணபிக மது3மாச2 தி2வச2ம்பு2
கு2ணரத்ன ரோஹண க்ஷோணித3ரமு,
பாந்த3வச2ந்தோ2 ஹபத்2மவனீ ஹேளி
காருண்யரச3 நிம்னகா2 களத்ரு

தே. ட3ன ஜக2ம்பு2ல மிகு2ல ப்ரக்1யாதி கா2ஞ்செ
த3ரணித3னத2த்த விவிதோ3பதா2விதா3 ச2
மார்ஜித ஸ்ரீவிநிர்ஜித நிர்ஜரால
யேஸ்வருடு 2திம்மபூ3பதி ஈஸ்வருண்டு2 I—27

க. ஆ ஈஸ்வர ந்ருபதிகி புண்
யதமதியைன பு2க்கமாம்ப2கு தேஜச்2
தோயஜஹிதுலுத2யிஞ்சிரி
தீ3யுதுலகு 2நாரசிம்ஹ திம்மநரேந்த்2ருல் I—28

திறன் மிக்க செருக்குடைய பகைவர் கோட்டைகளை (முப் புரங்களை) அழித்தும், நல்லோரைக் காத்தும், முன்னைய ஈஸ்வரனே ஈஸ்வரனாக பிறந்ததனால், தாமரைக் கண் மடந்தை யரை நீத்து, மலைக் காடுகளில் அஞ்சித் திரியும் பகை மன்னரின் உடலிற் பூசிய மன்மதக் குறிகளும் அழிவுற்றன. I—26

தன் தோளைச் சரணடைந்த நிலத்திற்கு வைரக்கவசமாக வும், கயவர்களான பாம்புகட்கு பாம்பாட்டியாகவும், தாமரைக் கண்ணார் தம் மனப்பொருளைக் கவர்பவனாகவும், பகைவர் எனும் அன்னப்பறவைகளை விரட்டும் மழை முகில் வரவாகவும் யாசகர்கள் எனும் குயில்கட்கு இளவேனிலாகவும், நற்குண மணிகட்குறைவிடமான மலையாகவும் உறவினர் எனும் தாமரை மலர்கட்குச் செங்கதிரவனாகவும், அருள் நதிக் கரசனாகவும், திகழ்ந்து, புகழ் பெற்றான். திம்ம பூபாலன் மகன் ஈஸ்வரன் மன்னர்கள் தந்த திறைகளின் செழிப்பால் சுவர்க்கத்தை வென்ற சிறப்புடன் மிளிர்ந்தான். I—27

அந்த ஈஸ்வர மன்னனுக்கு,கற்புடைச் செல்வி புக்க மாம்பா வுக்கும் கதிரொளியும் மதிவலிவும் உடைய நரசிம்மன், திம்ம ராஜு எனும் இருவர் உதயமாயினர். I—28

க. அந்து[2] நரச[2]ப்ரபு[3]டு[2] ஹரி
சந்த[2]ன மந்தா[2]ர குந்த[2] சந்த்[2]ராம்ஸ[்ர] நிபா[3]ச்[2]
பந்த[2] யஸச்[2]ந்துந்தி[2]ல திக்
கந்த[2]ருடை[2] தா[3]த்ரி யேலெ கலுஷமு லட[2]க[2]ன் I—29

சீ[2]. அம்போ[3]தி[2] வச[2]ன விஸ்வம்ப[3]ரா வலயம்பு[2]
க[2]னபா[2]ஹ[ு]புரி மரகதமு சேசெ[2],
ககுப[2]ந்த நிகி[1]ல ராண்ணிகரம்பு[2] சரணமஞ்
ஜீரம்பு சா[2]லப[3]ஞ்ஜிகல சேசெ[2],
மஹநீய நிஜ விநிர்மல யஸச்ச[2]ரசி[2]கி
க[2]க[2]னம்பு[2] கலஹம்ச[2]கம்பு[2] சேசெ[2],
அஸ்ராந்த விஸ்ராண நாசார லக்ஷிமிகி
கவிகத[2]ம்ப[2]மு சாதகமுல சேசெ[2],

தே. அதிஸித க்ருபாண க்ருத்த மத்தாரி வீர
மண்ட[2]லேஸ ச[2]குண்ட[2]ல மகுடநூத்ன
மச்[2]தமால்ய பரம்பரா மண்ட[2] நார்சி
தேஸ்வருண்டு [2]நாரசிம்[2]ஹேஸ் வருண்டு[2] I—30

தே. ஆந்ருசி[2]ம்ஹ ப்ரபு[3]ண்டு[2] திப்பாம்ப[2] வலன
நாக[2]மாம்பி[2]க வலன நந்த[2]னுல காஞ்செ
வீர நரசிம்[2]ஹராய பூ[3]விபு[3]னி அச்யு
தாயதாம்ஸ ஜ[ு] ஸ்ரீக்ருஷ்ணராய நின்னு[3]ஜ I—31

அவருள் நரசமன்னன், சந்தனம், மந்தார மலர், முல்லைப்பூ, நிலவுகளுக்கிணையானபுகழ்நிறைந்து நாற்றிசையும் கீர்த்தியுடன் பாவங்களைப் போக்கி அரசாண்டான். I—20

கடலாடையுடுத்த நிலவலயத்தைத் தன் தோளில் தாங்கி பரிபாலித்தும், நாற்றிசை மன்னர்களை வென்று தன் வீரக்கழல் மணிச் சித்திரமாக்கி வைத்தவனும், தன் பெரும் புகழ் என்னும் பொய்கையில் வானகத்தையே, அன்னப்பறவை ஆக்கியவனும் இடைவிடாக் கொடை மழையால் கவிச் சாதகப் பறவைகளைத் தணிவித்தவனும் ஆகிய, கூரிய வாள்துணித்த செருக்குற்ற மன்னர்தம் தலைகளை ஈசனுக்கு அணியாக்கி வழிபட்ட நரசிம்ம மன்னன் மிக்க புகழுடன் திகழ்ந்தான். I—39

அந்த நரசிம்ம மன்னன் திப்பாம்பா மூலம் வீரநரசிம்மனும், நாகாம்பா மூலம் திருமாலின் அம்சமாக கிருஷ்ண தேவராய னாகிய நின்னையும் புத்திரராக அடைந்தான், I—31

க. வீரங்ருசி2ம்ஹ¬டு 2நிஜபு3ஜ
தா2ருண கரவால பருஷ தா3ராஹத வீ
ராரி யகு2க ஏகாதப
வாரணமுக2 ஏலெ த3ரணவாரண மஹிமன் I—32

க. ஆவிபு3னனந்தரம்ப த3
ராவலயமு பூனிதீவு ரஹிமை திருமல்
தே2வியுனு அன்னபூர்ணா
தே2வியு கமலாப்2ஜமுகி3யு தே2வேருலுகா2ன் I—33

சீ. தொல கெ2னு தூ3ம கேதுக்ஷோப2 ஜனுலகு
அதிவ்ருஷ்டி தோ2ஷப3யம்பு2 வாசெ3,
கண்டகாக2ம பீதி3 க2ட2செ, உத்த3த பூ3மி
ப்ரு3த்கடகம்பெ2ல்ல எத்துவடியெ,
மாசெ 2அக3ச்2பூர்தி மருபூ3முலந்து2னு
நெல மூடு2வானலு நிண்ட2 குரிசெ3,
ஆபா2லகோ2பால மகில1 ச2த்2வ்ரஜமுனு
ஆனந்த2முக2 மன்கி அதிச2யில்லெ,

தே. ப்ரஜலகெல்லனு கடு2ராமராஜ்யமய்யெ
சாருச2த்வாட்1ய, ஈஸ்வர நாரசிம்ஹ
பூ3விபு3னி க்ருஷ்ணராய யப்3யுதய2மொந்தி2
பெம்புதோ நீவுதா2த்ரி பாலிம்பகா2னு I—34

வீர நரசிம்மன் தன் தோள்வலியால் பகைவரை வென்றடக்கிச் சிறப்புடன் ஒருகுடைக்கீழ் நிலத்தினையாண்டான். I—32

அம்மன்னனுக்குப் பின்னர், இந்நிலத்தை நீ ஆண்டாய்? திருமாலாதேவியும், அன்னபூர்ணாதேவியும் (கமலாப் ஜமுகியும்) மனைவியராக இன்புடன் திகழ்ந்தாய். I—33

கிருஷ்ண தேவராய நீ ஆட்சிப் பொறுப்பேற்று அரசாளத் தொடங்கியதுமே எங்கும் செழிப்பு ஏற்பட்டது. மக்களுக்கு *தூமகேதுவின் பீடை தொலைந்தது. மிகுமழையால் வரும் அச்சம் அகன்றது. கயவரைப் பற்றிய பயம் நீங்கியது. செருக்குற்ற மன்னரின் பெருக்கம் ஒழிந்தது. பாவம் நீங்கியது. பாலைவனத்தும் மாதம் மும்மாரி பொழிந்தது. சிறுவர், பேதையர், கோவலர் முதல் அனைவரும் மகிழ்வுடன் வாழ்ந்தனர். மக்கள் எல்லோருக்கும் ராமராஜ்யமாகத் திகழ்ந்தது. I—34

---

* தூமகேது—வால் நட்சத்திரம்

க. துனியலு தொம்மிதி2யட! பது2
னெனமண்ட்ரட மோசு வாரநேகப கிடிகூர்
மநகா2ஹு லேடி லாவரு!
லனி தாவக பா2ஹு லொகட யவனி ப3ரிஞ்சென் I—35

சீ2. தொலுதொ2ல்த உத2யாத்2ரிஸில தாகி கெர1லுநீ
அசி லோஹமுன வெச்சனை ஜனிஞ்செ,
மறிகொண்ட2 வீடெ2க்கி மார்கொனி நலியைன
அலகச2வாபாத்ரு அண்டி ராஜெ,
அடசா2கி3 ஜம்மிலோய படி2 வேக2த2 ஹிஞ்செ
கோன பி2ட்டேர்செ, கொட்டான தகி2லெ
கனக கி2ரி ச்2பூர்தி கரசெ கௌ2தமி க்ர2ாசெ,
அவுல பொட்னூர ரவுலு கொனியெ

தே. மாடெ2முலு வ்ரேல்செ; ஒட்டா2தி3 மசி2 யொனர்செ
கடகபுரி கால்செ கஜராஜு கலகி3 பறவ
தோக சிச்சன; ஔர நீது2ரவகா2ஹ
கே1ல1து2க்2ர ப்ரதாபாக்2னி க்ருஷ்ணராய I—36

உ. சித்ரமு, க்ருஷ்ணராயந்ருப ஸேக1ர நீத2கு2 தா3டிகோடி2 ச2ர்
வத்ர நிலிம்ப காமினுல வாட2கு காபுலு வோயிருத்கல
க்ஷத்ரிய பாத்ருலெல்ல கசு2க1ந்த2னி மேனுல தொண்டி
பெத்2த2லே
சூத்ரமு பன்னினாரோ ப2லசூத2னு வீடிகி கொண்ட2
வீடிகக்ஷகின் I—37

**ஒன்பது கண்டங்களாம்!** பதினெட்டுப்பேர் சுமப்பவர்களாம். **யானை, பன்றி, ஆமை, மலை, பாம்புகள் என்ன வலியுடையன எனக்கருதி உனது தோள் ஒன்றே உலகினைத் தாங்கியது.**

(சுமப்பவர் 18 ஆவது திசையானை 8 பன்றி 1 ஆமை 1 மலைகள் 7 ஆதிசேடன் 1 ஆக 18 என்பது கருத்து. பதினெட்டு பேர் சுமந்த 9 கண்டங்களையுடைய பூமியை உன் ஒரு புஜமே தாங்கிற்று என்பது கருத்து.) I—35

கிருஷ்ண தேவராய! உனது பிரதாபம் என்னும் நெருங்குதற் கரிய தீயானது வால்நெருப்புப் போல முதன்முதலில் உதயகிரி என்னும் கல்லில் உன் வாளாகிய இரும்பு உராயவே சூடேறிப் பிறந்தது. பின்கொண்ட வீடு (மலைவீடு)வைப் பற்றி எரிந்தது. அதைத் தொடர்ந்து 'ஜம்மி லோய' (வன்னிமரப் பள்ளத்தாக்கு) எனும் இடத்தை சுட்டெரித்தது. கோனசீமை (கீழ்க்கடற்கரைப் பகுதி)யைக் கொளுத்தி, கொட்டம் (கொட்டாரம்) எனும் ஊரையும் பற்றிக் கொண்டது. கனககிரி (தங்கமலை)யை கரைத்து, கோதாவரியைக் காயச் செய்து அதன் பிறகு பொட்டுனூரை (பதர்ஊர்)யும் தீய்த்து, மாடமுல (மாடி) ஊரைப் பொசுக்கியது. ஒட்டியர் நாட்டை (கலிங்கம்) கரியாக்கியது. கடகத்தை (கட்டாக்)ச் சுட்டது. கஜபதி (கலிங்க மன்னர்கள்) (யானை)கள் மருண்டோடச் செய்தது.

(வால்நெருப்பு :—வரட்டிகளை வரிசையாக ஒன்றன்பின் ஒன்றாக அடுக்கிக் காட்டில் தீ மூட்டி விடுவர். அது அணையாது. ஒவ்வொன்றாகப் பற்றியெரியும். வால்போல அமைந்து இருப்ப தால் இதனை வால்நெருப்பு (தோகசிச்சு) என்பது வழக்கம். அதுபோல கிருஷ்ணதேவராயரின் படை எடுப்பான உதயகிரியில் (நெல்லூர் அருகே) தொடங்கிய முற்றுகை வெற்றி பெற்று ஒரியாதலை தலைநகரான கடகம் (கட்டாக்) வரை சென்று வென்ற வீர வரலாற்றை இப்பாடல் விளக்குகிறது.) I—36

கிருஷ்ண தேவராய மன்னனே! உனது முற்றுகைக்குத் தாங்காமல் தோற்றோடிய உத்கல (கலிங்க) க்ஷத்திரியர்களாகிய பாத்திரர்கள் எல்லோரும் வாடாத மேனியோடு (விழுப்புண் படாமலே) தேவமகளிரின் இல்லங்களில் புகுந்தார்கள். ராஜமஹேந்திரத்திற்கும் கொண்ட வீடுவுக்கும் குடிபோக என்ன தந்திரம் (சுரங்கவழி போன்றவை) முன்னோர் செய்தனரோ? வியப்பாயுள்ளது.

(தோற்றவர்கள் ராஜமஹேந்திரவரம். பகுதி புளிஞர் (சபரர்) இல்லங்களில் நுழைந்து மறைந்து சுகமாக இருந்தார்கள் என்பது ஏளனமாக சுட்டப்படுகிறது.) I—37

உ. கூரிமி க்ருஷ்ணராய ந்ருபகுன்ஜர சேரெ களிங்க2 ராஜ்யல
க்ஷ்மீரமணீலலாம நினுமின்னுலு முட்டின மோஹனாலதோ
காரணமட்ல லக்ஷ்மி கசு4க2ந்த2னி வேடு2க க்ருஷ்ணராயனின்
சேருனுகாக வாவி செட2செந்து2னெ சோ2த2ருடை2ன
ருத்2ருனின் I—38

சீ3. கசச2க்த ப1ணிகஞ்சுகமு மௌளி வீரகே
தா2ரம்பு பா2க2 சந்தம்பு2னொந்த2
கலயனங்க2முன மர்கடகீடக்ருதமைன
மக்2க2ம்பு2 நேத்ர ச2ம்பத2 வஹிம்ப
த்வா3ந்த க2ஹ்வர ஸிலாதாடி2 தாளிகசிக்க
ணாஸ்ர பங்கமு சந்த2ர மைபொச3ங்க2
தனுப்3ருஸ ஸ்ராந்த வேஷ்டன லக்ன ப2ர்ஹிப2ர்
ஹம்பு2 முவ்வன்னெ சுங்கை2 செலங்க2

தே. நித்ர மேல்காஞ்சி செ2லயேட நீட2காஞ்சி
கோப வேஷம்பு2 செடி2 தொண்டி பூ3பவேஷ
மகுட2 அவ்வன மஹிமகா2 னலிகி அசடு
விடு2சு க2ஜராஜு நீதா3டி விந்த்ய வாடி I—39

ச. அபிர3தி க்ருஷ்ணராய விஜயாங்கமு லீவு லிகி1ஞ்சி தாளச2ன்
னிப3முக2 பொட்டுனூரிகட2 நில்பினகம்ப3மு சி2ம்ஹபூ3த3ர
ப்ரபு3 திருநாள்ளகுன் டி2கு2 சு2ரப்ரகரம்பு2 களிங்க2மேதி2னீ
விபு3னபகீர்தி கஜ்ஜலமு வேமறுபெட்டி படி1ஞ்சுனிச்சலுன்
I—40

கிருஷ்ணதேவராய மன்னனே! கலிங்க ராஜ்யலட்சுமி யானவள் விண்தொடும் யானைகளோடு வந்துன்னைச் சேர்ந் தாள்! அன்புடன் வாடாத நேயமுடன் கிருஷ்ணராயனைச் சேர்வதன்றி, முறைகெடுமாறு சகோதரனாகிய உருத்திரனைக் கூடுவாளோ? காரணம் இதுதான் ஆகும்.

(கலிங்க மன்னன் பெயர் வீரருத்திரன், லட்சுமிக்கு உருத்திரன் (சிவன்) சகோதரி முறை என்பது புராணம்.) I—38

கிருஷ்ணதேவராய! உனது முற்றுக்கைக்கஞ்சி விந்திய மலையைக் கடந்து கஜபதி மன்னர்கள் செல்வர். அவர்கள் உனக்கஞ்சியபடி இடையர் வேடம் பூண்டு காட்டில் நுழையும் போது, இரவில் குகையில் புகவே பாம்புச் சட்டையானது தலை முடியில் சுற்றிக்கொண்டு தலைப்பாகை போலவும், உடலெங்கும் சிலந்தி வலைபட்டு, பட்டுத்துகில்போல அமையவும், இருட்டில் குகையில் நுழையும்போது கல்லில் இடிபட்ட நெற்றியில் பொங்கிய குருதி காய்ந்து போய் சிந்தூரதிலகம் போல் இருக்க வும், களைப்பில் புரண்டபோது ஒட்டிய மயிலிறகுகள் மூவண்ணச் சரிகைக்கரைபோல தோன்றவும் செய்தன. தூக்கத்திலிருந்து எழுந்து, அருவி நீரில் தம் நிழலைக் கண்டு, இடையர் வேடம் போய் முன்னைய மன்னர் வேடம் வந்ததென்ன? இந்த இடத்தின் மகிமை போலும் என்று பயந்தவாறு அந்த வனத்தைவிட்டுப் பெயர்ந்தனர். I—39

கிருஷ்ணராய! நீ பொட்டுனூரி†யருகில் பனைமரம் என நிறுவிய வெற்றித் தூணில் செதுக்கிய சாசனத்தை சிம்மாசல *நரசிம்ம சுவாமியின் திருநாளுக்காக வானத்திலிருந்து இறங்கிய தேவர்கள் கலிங்கமன்னனின் இகழ் என்னும் மையைத் தடவி பல முறை விருப்புடன் படிப்பார்கள்.

(ஏடுகள், சாசனங்களில் மையைத் தடவி வாசிப்பது மரபு) I—40

---

† இத்தூணைப்பற்றி தமிழில் அரிதாசர் இயற்றிய ஒரு கவிதை உள்ளது.

* விசாகப்பட்டினம் அருகே உள்ள தலம். இராமானுசர் சென்ற இடம்.

சீ2. ச2னகாதி 2தி2விஜ மச்2கரிபால1 கோ2பி சந்
த2னபுண்ட்2ா வல்லிகல் நாகிநாகி,
செ2லசி ஹாஹா ஹ ஹ ஹுவுல தண்டி2யல தந்த்ரி
த்ரெவ்வ சி2ங்கிணு2லுகா2 திவிசி திவிசி;
ச2ப்தர்ஷி க்ருத வியஜஜ1ர வாலுகாலிங்க
ச2மிதி முச்செலகாள்ள சமரிசமரி,
ரம்பா3ப்ராதா3னாப்ச2ர ஃப்ருதா1 ரோஜகும்
ப3ம்பு2 லெச்சட க2ன்ன பட்டிபட்டி.

தே. திருகு2 ஹரிபுரி சு2ரதரு சுரலமரகி2
ப2ஹுள ஹளஹளி ப்3ரித கல்ப2ரிக3 நக2ர
ச2க2ர புரவர பரிப்3ருட2 ஜவன யவன
ப்ருதன ப2வத2சி2னனி தெகி2 க்ருஷ்ணராய I—41

ம. அலுகன் கோ3டக த3ட்டிகாகு1ரபுட ஹல்யன்கு1 ராசா3னி புச்
சலுவோ து2ன்னி தலச்சமுக2ஜ மதா2சா2ர ப்லுதின் கீர்தி புச்
கல ச2ச்ய2ம்பி2டி2, ஏகதா2டி ப2ளிரா கட்டிஞ்சி தெள
த்2ருஷ்டிகே
து2லகா1னோக்2ர கபால மர்த1ப ஹரித்2பூ3 ஜாங்க2ல
ஸ்ரேணிகின் I—42

ச. சு2மதி புனஃபுனா ரசித ஷோட2ஸதா2ன பரம்பரா வச2ந்
தமுல னனந்த வித்தமு னனந்தனனந்த மஹாக்ர ஹார ப்ருந்
த2முனு னொச2ங்கு2 நின்னொரசி2 தாரெள ராககதா2
நிலிம்ப பூ3
ஜமுலு வஹிஞ்சு துர்யஸமு ஷட்பத2 கோகில
கைதவம்பு2னன் I—43

கிருஷ்ணதேவராய! கலபரகி (குல்பர்க்கா) சாகர் பட்டணங்களில் யவன மன்னர்களை வென்றபோது படையெடுப்பில் இருந்த துருக்கப்படை வீரர்கள் சுவர்க்கத்தில் சென்று சனகாதி முனிவர்களின் கோபிசந்தன திரிபுண்டர நாமங்களை நக்கியும், தேவநாயகர்களின் வீணையின் தந்திகளை அறுத்தும், சப்தரிஷி களின் தேவகங்கை மணலிற் செய்த லிங்கங்களை காலால் துவைத்தும், ரம்பை முதலிய அப்சரமகவிர்தம் முலைக் கும்பங் களை பிடித்திழுத்தும் பூர்வவாசனை விடாமல் திரிகின்றனர். I—41

குதிரைக் குளம்புகளால் பேய்ச்சுரைக் கொடிகள் போக உழுது, யானைகளின் மத தாரையால் நனைந்த நிலத்தில் நினது புகழ் என்னும் பயிரையிட்டு ஏதில் ஷா என்னும் முஸ்லிம் மன்னனின் தலையாகிய திருஷ்டிபொம்மையை கட்டி வைத் துள்ளாய். I— 42

கிருஷ்ணராய! அடிக்கடி மனமொத்தியற்றும் உனது பதினாறு தானங்களும், அக்கிரகாரங்கள் தந்த கொடையும் கண்டு உனக்கிணையாகோம் என்றல்லவா தேவலோகக் கற்பக தருவும்இகழ்* என்னும் வண்டுகளும் குயில்களும் சேரப் பெற்றுள்ளது. I—43

---

* இகழ்—கருநிறமாக உருவகித்தல் கவி மரபு. கருவண்டும் குயிலும் உவமையாக்கப்பட்டுள்ளன.

தே. ப்ரப2ல ராஜாதி2ராஜ வீரப்ரதாப
ராஜபரமேஸ் வரார்த1 து2கார2நடேஸ
சா2ஹிதீச2மராங்க2ண சார்வபௌ2ம
க்ருஷ்ண ராயேந்த்ர2 க்ருதி விநிர்மிம்பு மநிரி I—44

வ. அந்த ப்ருஹ்ருஷ்டாந்தரங்கு2ண்2டனை I—45

ஷஷ்ட்1யந்தமுலு

க. அம்போ3தி3 கன்யகா குச
கும்போ3ம்பித3 கு3ச்3ருணமச்ரு2ண கு2ருவக்ஷனகுன்
ஜம்பா3ரி முகா1த்2யக்ஷன
கம்போ3 ஜாக்ஷனகு சா2மி ஹர்யக்ஷனகுன் I—46

க. மர்தி2த காளியப1ணிகி க2
பர்த2 ப்3ருத2ஜ பி2ம்பி2தாச்ச1பத2 நக1க்3ருணிகின்
தே2ார்த2ண்ட2 ஸார்ங்க2கிணிகக3
கர்த2மதி2னமணிகி த2னுஜகரிவரச்2ருணிகின் I—47

பிரபல ராஜாதிராஜ! வீரப்பிரதாப! ராஜபரமேசுவர! பொருள் எனும் பார்வதிக்கு நடேசனாகியவனே! சாஹித்ய (இலக்கியம்) சமராங்கன (போர்க்கள) சார்வ பௌம (சக்கரவர்த்தி)! கிருஷ்ணராயேந்திர! நூல் செய்வாயாக'' எனக் கூறினர். I—44

அவ்வளவில் மகிழ்ந்த மனத்தினனாய் I—45

## சமர்ப்பணப் பாடல்கள்

அலை மகளின் முலைதடக் குங்குமத்தொய்யில் பூசப்பட்ட மார்புடையவனும், இந்திரன் முதலியவர்கட்குத் தலைவனும், தாமரைக் கண்கள் உடையவனும், நரசிம்மமானவனும் I—46

காளிங்கனின் படத்தை துவைத்தவனும், சடைமுடியோனும், பிரம்மனும் பிரதிபிம்பிக்கப்பட்ட தூய பாதநகங்களையுடையவனும், சார்ங்கம் எனும் வில்லின் தழும்பையுடைய தோளையுடையவனும், பாவச்சேற்றினைப் போக்கும் சூரியன் ஆனவனும், அசுரர் எனும் யானைகட்கு அங்குசம் (தோட்டி) ஆனவனும். I—47

க. கு2ஹபுஷ்கரிணீதட கன3
க2ஹனகு2ஹா கே1டவஞ்சக புளிந்து2னகுன்
த்3ருஹிணாண்ட2 துந்து3னகயா
வஹ தீ3ர்கா3பா3ங்க2 க்ருக் க்ருபாச்2யந்து2னகுன் I—48

கூ. ப2ந்து3ர ரதா1ங்க2தா3ரா
க2ந்த3வஹாப்த ஜ்வலச்சிகா1 படலபுனச்2
ச2ந்து3க்ஷண க்3ருதராஹுப
லாந்தோ3ச்2ருக்ச்2ருதிகி வேங்கடாசலபதிகின் I—47

## கதா1ப்ராரம்ப3மு

வ. நா வின்னவிம்ப பூ2னு ஆமுக்தமால்யதா2 மஹாப்ரப2ந்த3 முனகு
கதா1க்ரமம் பெ2ட்டித2னின I—50

குகபுஷ்கரணிக் கரையின் காட்டில் அலைந்த வஞ்சகப் புளிஞன் (பளியர்) ஆனவனும், பிரம்மாண்டங்களைத் தன் வயிற்றிலடக்கியவனும், நலன் பயக்கும் கருணை மிக்க கடைக் கண்களையுடையவனும் I—48

சுதர்சனம் எனும் சக்கிராயுதமாகிய நெருப்புக்குத் தூண்டி விடும் நெய்யாகிய ராகு எனும் அசுரனின் ரத்தத்தைப் பெய்தவனும் ஆகிய திருவேங்கடாசலபதிக்கு I—49

நான் விண்ணப்பிக்கப் பூண்டுள்ள ஆமுக்தமால்யத (சூடிக் கொடுத்தவள்) எனும் மகா காவியத்துக்கு கதைக் கிரமம் எப்படி என்றால், I—50

## விலுபு2த்தூரிவர்ணன

ம. லலிதோத்2யான பரம்பரா பிகஸ-காலாப ப்ரதித்3வானமுல்
வலபீ3நீல ஹரின்மணீ பிகஸ-க ச்2வானப்3ரமன் பூன்பமின்
னுலதோ ராயுசு2வர்ண சௌ2த3முல னெந்து2ன்சூட
சென்னொந்தி 2ஸ்ரீ
விலுபு2த்தூரு செலங்கு2 பாண்ட்2ய நகரோர்வீ2 ரத்ன
சீம2ந்தமை I—51

ச. மலசி பயோஜ கோஸமுல மாட்2கி ஒனர்சின பத்2மராக2புன்
கலஸபு டொர்ரடா2ல் பொ2மிடி2கம்பு2லதோ அபரன்ஜி
யோடு2பில்
லலனல வைஜயந்தமு சலம்பு2ன கெ2ல்வக2தம்ஸிதம்பு2லை
நிலிசின யட்லு மாடு2வு லநேகமு லுல்லசிலு2ன்
புரம்பு2னன் I—52

சீ1. பாதோ1தி3 ஜலயுக்தி ப்ராசிபட்டின தி2ஸா
கருலுநா தகு2 மரகதபு க2ருல,
க2ருலதொண்ட2 முசிக்க கப2ளிஞ்சி ம்ரிங்கி2ன
ஹருலுநா தொண்ட2 மொப்பகு3 தத2ஸ்ம
ஹருலு தா2பின தாபலமர ஏனுகு2தோ2யி
நீரார்சு அபரன்ஜி நீடி வ்ராத
ஸ்ரீலு, தத்பார்ஸ்வ சித்ரித ச3ங்க1சக்ரமுல்
ரத்னம்பு தின்னெல ப்ரதிப1லிம்ப

தே. பெற புராளி க்ரு2ஹஸ்ரீல பெண்ட்2லியாட3
ப3வனராஜு-லு கட்டின பா1சி2கமன
தனரு மணிதோரணமுலதோ த்2வாரவிததி
பரகு2 வீது1லு புரிசூத்ர பட்டினட்லு I—53

# கதைத் தொடக்கம்

மனங்கவரும் பூங்காவிலுள்ள குயில், கிளிகளின் குரல் எதிரொலித்து, மாளிகை உப்பரிகையில் இழைக்கப்பட்ட நீலமணிகளால் ஆன குயில், மரகதத்தால் ஆன கிளிகளின் குரலாக மயங்கச் செய்யும். வானைத் தொடுகின்ற பொன் மாளிகைகள் எங்கும் எழில் பெற்றிருக்கும் ஸ்ரீ வில்லிபுத்தூர் என்னும் ஊர் பாண்டிய நாட்டின் தலைச்சுட்டியாக (திலகம் போல) சிறப்புற்றிருக்கும். I—51

தாமரை மொட்டுக்கள் போன்ற செம்புக் கலசங்களின் ஒளி, சிகப்புத் தலைப்பாகையாகவும், தங்க ஓடுகள் வேய்ந்துள்ளது கவசமாகவும் அமைய, இந்திரனின் மாளிகையான 'வைஜயந்தத்'தை வெற்றி கொள்வதற்காக நிற்கும் (படை வீரன் போன்று) ஸ்ரீ வில்லிபுத்தூரின் மாளிகைகள் எழில் பெற்றிலங்குகின்றன. I—52

கடலில் கிடந்ததால் பாசிபடித்த திசை யானைகள் என்னும் படியாக மரகதக் கல்லில் இழைத்த யானைகளும், யானையின் துதிக்கை மட்டும் மிஞ்ச (மற்ற உடலை) விழுங்கிய மரகதத்தால் ஆன சிங்கமும்* நிறுவிய படிக்கட்டுக்கள் அமைய இரட்டை யானைகள் நீராட்டும் பொன் (முலாம்)னாலான நீரில் வரையப் பட்ட திருமகளும், அவளருகில் சங்கு சக்கரங்களும் உடைய சித்திரம், அணிகளால் ஆன திண்ணையில் பிரதிபலிக்க மாளிகைகள் இருந்தன. பிற நகர மனைத்திருவினை மண முடிக்க இவ்வில்லத்தரசர்கள் கட்டிய கங்கண சூத்திரம் போல மணித்தோரணங்கள் திகழ்ந்தன. இத்தகு இல்லங்கள் நூல் பிடித்தாற் போல ஒழுங்காக இருந்தன. I—53

---

* துதிக்கையுடன் கூடிய சிங்கம் ஆன 'யாளி'யை இங்கு கவிஞர் குறிப்பிடுவதாகத் தோன்றுகிறது. இத்தகைய யாளி உருவங்கள் தென்னகக் கோயில்களில் காணப்படுகின்றன. இதனை தெலுங்கு உரையாசிரியர்கள் சிங்கம் என்றே கருதி உரை வகுத்துள்ளனர். வேதம் வெங்கடராய சாஸ்திரி, வாவிள்ள ராமசாமி சாஸ்திரி இருவர் உரையிலும் இவ்விதமே குறிப்பிடப்பட்டுள்ளது.

ச. பக2ட2பு சாய செந்திர2மு ப்ராமின பாண்ட்2யவதூ3 குசம்பு3லன்
நகு2 அருணம்பு பொ2ண்ட்2லமுல நாரிகெட2ம்பு2லு
வஜ்ரகுட்டிமம்
பகு2 பத1முன் செலங்கு2 ப3வனாஹ்ருத ஸேஷித
ரத்னரக்ஷ கப-
ரக2தரு சந்2ததின் பிரத1ம பா3ர்ய புரின் கிறவுஞ்செ
வார்தி3னான் I—54

க. கோரகித நாரி கேள
க்ஷமாருஹமுலு ரத்ன குட்டிமம்பு2லு தோபன்
த்2வாரமுலயத்ன க்ருத ச்2ருங்
கா2ரமுக2னு னலிகி ம்ருக்கு2 க3டியிஞ்சி ரனன்  I—55

ம. ஸய பூஜாம்பு2ஜமுல் க3டின் ஃட2ப2ட2ன் சந்தோயி
லேகௌனுல ப
த2யதப்பன் பசு2பாடி2, பாக1ட2பு பாத2ம்பொ2ப்ப,
செங்க2ல் வடிக்
கிய2 நீரச்யுத மஜ்ஜனார்த1மு கடின் கீலிஞ்சி, திவ்ய ப்ரப2ன்
த3யுகா2ச்ய2ல் த்2ரவிடா2ங்க2னல் நடு2து ருத்2யானம்பு
லோத்ரோவலன் I—56

பவளச் செந்தூரம் பூசிய பாண்டிய மாதர் முலைகளை நகைக்கும், செவ்விளநீர்களோடு கூடிய தென்னை மரங்களும், வைரச் சுவர்களோடு கூடிய பாதைகளும், வீடு கட்ட உபயோகித்தது போக மீந்த மணிகளைக் காப்பாற்றுவதற்காக, கடலானது தனது முதன் மனைவியாகிய கங்கையையும்; மகனாகிய கற்பகத் தருவையும் அடகு வைத்தது போலத் தோன்றின. (வைரமணிச் சுவரின் ஒளிபட்ட தெருக்கள் வெண்மையான கங்காநதி போலவும், தென்னை மரங்கள் கற்பகத் தருக்களாகவும் உவமிக்கப்பட்டுள்ளன) I—54

பாளை விரிந்த தென்னை மரங்கள், (வாயிலைச் சேர்ந்துள்ள) மணிகளால் ஆன திண்ணைகளில் பிரதிபலித்து, வாசலை முயற்சியின்றியே செய்த சிங்காரமாகி (சாணத்தால்) மெழுகிக் கோல மிட்டது போலத் தோன்றும்.

(சாணத்தால் மெழுகினால், தென்னையின் ஓலைகள் போல பசு நிறமான நீண்ட வளைவான வரைகோடுகளும், தென்னை ஈர்க்கு போல கரும்பச்சைக் கோடுகளும் விழும். இதில் பாளை விரிந்த பூ மொட்டுகள் கோலம் போட்டது போல அமையும். இவ்வுவமை மனம் கவருவதாகவும் மாமன்னனின் கவித் திறமையை எடுத்துக் காட்டுவதாகவும் அமைந்துள்ளது.) I—55

கையில் உள்ள பூசனைக்குரிய தாமரைப்பூ குடத்தில் தள்ளாட, இணைமுலைகள் மெல்லிடை மீது அருள் இல்லாது போக, செங்கழுநீர்ப்பொய்கையில் திருமால் திருமஞ்சனத் திற்காக, நீர் சுமந்து இடையில் வைத்துக் கொண்டு, திவ்வியப் பிரபந்தம் பாடும் வாயினராக, தமிழ்ப் பெண்கள், பூங்காவின் உள் பாதைகளில் சிலம்பார்ந்த பாதங்களால் நடந்து வருவார்கள். I—56

ம. கலயன் நீலமயம்பு தல்லியொற தாகன்தேட நீரெப்புரத்1
யலகூபம்பு2ல மீலசூசி வலபி3 வ்யாச2ங்கி2துங்க2 த்2ருஸா
க1லலோனுண்டி2 கு2பா2லுனன் லகுமுகுல் க்ரந்தை2 வடு2ன்
லேசு ம்ருச்
சிலி கே3ஹேந்திர2 த்2ராவிடி2 பரிசிதின் செண்டா2டு2
சந்த2ம்பு2னன் I—57

## மஹாச்ரக்2த3ர

ச்2வநிலிம்பாவாச2த2 த்வாஸனத2தலமித1 ச்2தாரதம்யம்பு2
லீரெண்
டு2னு தீ2னுல்கா2ஞ்சு அம்மாடு2வுலன யடு2க2ன் டோ2கு
உத்2யத்ர2தோன்மே
ளன சி2த்த3 த்2வந்த்2வ ப்2ருந்தா2லய பி2லதட கல்யாண
மந்தா1 த்ரு2லோ நா
வனஜாக்ஷ ச்2யந்த2ன த்2வந்த்2வமு லிகி1த நராவாப்த
தா2ம்பத்ய மொப்புன் I—58

சீ2. ச2வலயத்வ3னி காக2 சா2ரெ வ்ரேயுனத2ல்பு
யதினைன கு2ண்டெ2 ஜல்லன கலம்ப,
சு2டி2சி2ன மொக2மெத்தி சூட2குண்டு2 பராகு
குசு2ம பா2ணுனி னைனகுவிடு சேய
ஸ்ரீகார்ய பருல[காஞ்சின லேசிம்ரொக்கு அன்
ஜலிகி இந்த்2ருண்டு2 அக்கொலுவுகோர
ஹரிக்2ருஹாவச2ர ச்ஸங்கா1 கர்ணனகு த்ரிப்பு
கட2க2ண்டி ஜிகி2 ரஜ கா2டி2பாற

தே. கவற லுங்கிஞ்சி வ்ரேய கொப்பவியனவலி
கரமுன னமர்ப பைடலோ மருனிப2டுவு
பி2ல்லக்ரிய பட்டுகஞ்செல பி2கு2வுசன்னு
நிக்க தின்னெல பாத்ராளி நெத்தமாடு2 I—59

நீலமணிகளால் இயன்ற மேல் மட்ட உறை வரையும் நிறைந்த தெளிந்த நீரையுடைய, தெருக்கிணற்றில் உள்ள மீன் களைப் பார்த்து, வீட்டு மேற்கூரையைச் சார்ந்துள்ள மரக்கிளை யிலிருந்து குபீரெனப் பாய்ந்து மீன் கொத்திப் (சிரல்) பறவை கீழே வீழ்ந்தும் எழுந்தும் (வருவதும் போவதுமாக) இருப்பது, இல்லம் (வீடு) என்னும் நங்கை மறைந்திருந்து, தமிழ்ப்பெண் களிடம் பழகியதால் பந்தாடுவது போலத் தோன்றுகிறது. I—57

மனித தம்பதிகளின் உருவத்தில் செதுக்கப்பட்ட பொம்மை களோடு கூடிய, திருமால், திருமகள், இருவரது (உற்சவத்) தேர்கள்; தேவர்கட்கு உறைவிடம் நல்கிய மேருமலையும், அமுதம் (உணவு) ஈந்த மந்தரமலையும், தத்தமது புண்ணிய பலனின் தராதரங்களைத் தெரிந்து கொள்வதற்காக, எளியவர் கட்கு உணவுடைகள் தரும் திருவில்லிபுத்தூர் இல்லங்கள் அருகில் வந்து நிற்பது போலத் தோன்றுகின்றன, (பொம்மைகளுடன் கூடிய தேர்கள், சித்தர்கள் வாழும் குகைகளையுடைய மலை களுக்கு உவமை.) I—58

வளை ஒலிப்ப, பாசிகை (சொக்கட்டான் ஆடும் தாயம்) உருட்டும்போது அதட்டலைக் கேட்ட முனிவர்கள் நெஞ்சம் திகிலுற்று கலங்கும்படியாகவும், எதிரே வரும்போது ஏறெடுத்துப் பாராமல் இருக்கும் பராமுகம், மன்மதனைக் கூட அலட்சியப் படுத்தவும், கோயில் கைங்கரியஸ்தர்களைக் கண்டதும் எழுந்து வணங்குவது கண்டு இந்திரன் (சுவர்க்கத்தைவிட) இந்தக் கோயில் கொலுவினையே விரும்புவதாக அமையவும், கோயில் பூசை வேளைச் சங்கொலி கேட்டு முகந்திருப்பும் போது கடைக் கண் பார்வை மக்கள் நெஞ்சு ஊடுருவிப் பாயவும், தாயம் உருட்டி, கூந்தல் குலைய ஒரு கரத்தால் சரிசெய்து கொண்டு, அப்போது முந்தானையில் மன்மதனின் திண்டு மெத்தை போன்ற பட்டு ரவிக்கையணிந்த முலைகள் குத்திட்டு நிற்க, திண்ணைகளில் பரத்தையர் சொக்கட்டான் ஆடுவார்கள். I—59

சீ$^{2}$. வீடெ$^{2}$ம்பு பலுகெம்பு விரிசி$^{2}$ வென்னெல காய
வரிகி$^{2}$ன்ஜ ஒகட பல்வருச$^{2}$ தோம
ஒரசி$^{2}$ எத்தின மணுன் கொந்த$^{2}$க மைனெ நிக்
கு$^{2}$லுதே$^{2}$ர பசு$^{3}$பிடி$^{2}$ ஜலகமாட$^{2}$
முது$^{2}$க காகுண்ட$^{2}$ பய்யெத$^{2}$லோனெ கேலார்சி
கலய சண்டனு னொட்ட கலப மலத$^{2}$
ரதிரயச்சி$^{1}$ன்ன சூத்ரமுன சிக்கக முத்தெ
முலுரால க$^{2}$ரக$^{2}$ரிகலு வஹிம்ப

தே. பொலசி$^{2}$னனெ எட்டி நருனைன குலமு தெலிய
ப்ருபு$^{3}$த செடி$^{2}$ பல்லவுடு$^{2}$ வேத$^{2}$ படி$^{2}$ன ஏத$^{2}$
ந்ருபதி வெலியந்திபுரமுகர்$^{2}$ என்ன மெலக$^{2}$
பா$^{2}$ச$^{2}$ க்ருதி செப்ப வலதுரப்பத்ம$^{2}$ முகு$^{1}$லு I—60

உ. அஞ்சித ஹாரவல்லி வலயாப்$^{3}$ரணம்பு$^{2}$ல தக்கத்ரோயு சில்
மஞ்சு பசிண்டி$^{2}$ ஏணம$^{2}$ தமங்க$^{2}$மு சேர்சுடதக்க ரோயுஜிட்
ட$^{2}$ஞ்சு ஜவாதி$^{2}$ தூ$^{2}$பிதம யந்து$^{2}$டதக்க விது$^{2}$ர்சு பூவு,செம்
மஞ்சு, ஜிலுங்கெ$^{2}$ தக்கநகு$^{2}$ யௌவத மொத்து னடஞ்சு
அன்யமுன் I—61

உ. வேவின மேட$^{2}$பை வலபி$^{3}$ வேணிக சண்ட வஹிஞ்சி விப்பகா$^{2}$
பூவுலு கோ$^{2}$ட மீடுதறி போயெடு$^{2}$ தேடுல ம்ரோத காமிஸங்
காவஹமௌ க்ருதாப்$^{3}$யச$^{2}$னலௌடனு த$^{2}$நதபு மெட்ல
வெம்ப$^{2}$டி$^{2}$ன்
சேவடி$^{2}$ வீணமீடுடயு சிக்கெட$^{2}$ லிஞ்சுடயுன் ச$^{2}$ரின்படன் I—62

தாம்பூலச் செங்காவி நிறம் போய் நிலவொளி காலும் படியாக ஒரு நெல் மணியால் பல்துலக்கியும், வெண்துகிலால் துவட்டினும் அதில் படாதவாறு மேனியில் மினு மினுக்குமாறு மஞ்சள் பூசி நீராடியும், முந்தானைக்குள் கைவிட்டு பரிமள திரவியப் பூச்சினை மென்மையாகப் பூசிக் கொண்டும் கலவியின் விரைவில் முத்துக்கள் அறுந்த நூலில் தங்காமல் சிதறி வீழச் சிங்காரம் செய்துகொண்டு குலம் அறிந்து கூடியும், நலன் அழிந்து ஏழ்மையுறினும் அவர்கட்கு ஆதரவு காட்டியும் மன்னனின் புற அந்தப்புரம் போல எண்ணும்படி பல்வேறு மொழிகளில் காவியம் படைக்கும் திறமையுடன் அந்த தாமரை முகத்தினர் ஆகிய கணிகையர் இருந்தார்கள். I—60

அங்குள்ள இளநங்கையர்கள், மேலான முத்துமாலை வளை யணிகள் அன்றி களிம்புறும் (கடினமான) தங்க நகைகள் அணியார். கஸ்தூரியை மெய்யில் பூசுவரன்றி ஜவ்வாது (புனுகு) பிசுக்குறும் எனத் தொடமாட்டார்கள். அகில் புகையன்றி பூக்களை ஈரம் எனக் கருதிச் சூடார். மென்துகில் அன்றி பிற அணியார். I—61

வீணை வாசிப்பதில் தேர்ந்த, அக்கணிகையர், விடிந்ததும், மேடையில் உப்பரிகையிலிருந்து கொண்டு தங்கள் சடையை முலைமேல் வைத்து (சடையை) அவிழ்த்து சிக்கை எடுக்கும் போது ஆங்குள பூக்களை (மல்லிகை முதலியன) நகத்தால் விதிர்க்கும் போது மணம் நாடி வந்த தும்பிங்கள் ரீங்காரம் செய் வதைக் கேட்ட தெரு வழிச் செல்லும் காமுகர்கள், நின்று (முலை மீதுள்ள சடை) வீணையாகவும், பூக்கள் தந்தக்கட்டை(மெட்டுக் கள்) கள் ஆகவும், அவிழ்க்கும் விரலசைவின் விரைவு வீணை வாசிப்பது போலவும் தோன்ற மகிழ்வுறுவார்கள். I—62

க. அளிவச: காா்பண்யம்

பா$^{2}$ லேமல செவுல சோ$^{2}$க தத$^{1}$மான்வய ஜீர்
ணா லாவண்யுல பிலுபுன
கைலாப$^{3}$மு தெலிபெனேனி அவிஸ்ரீலகு$^{2}$டன் I—63

ச. த்$^{2}$ரவிட$^{2}$ குடும்பி$^{2}$னுல் பசு$^{2}$பு ராசின ரத்னபு தாபக்ரிந்த$^{3}$ அம்
பு$^{2}$வு தெரவாறகா$^{2}$ நிது$^{2}$ரவோயி க$^{2}$ருத்ததி பச்சபா$^{2}$றினன்
ப$^{3}$வன ச$^{2}$ரோமராளமுலு ப$^{3}$ர்மமயச்ச$^{1}$த$^{2}$ கு$^{2}$ச்ச$^{1}$விச்$^{2}$பு$^{1}$ரத்
தி$^{2}$விஜ து$^{3}$னீ மராள விததி ப்$^{3}$ரம பூன்சு புரின்
ப்ர$^{2}$மிஞ்சுசுன் I—64

ம. தல பக்ஷச்ச$^{1}$ட க்$^{2}$ருச்சி பா$^{2}$துவுலு கேதாரம்பு குல்யாந்தரச்
த$^{1}$லி நித்ரிம்பக$^{2}$ சூசி யாரெகு லுஷச் ச$^{2}$னாதப்ரயாதத்$^{2}$விஜா
வலி பிண்டீ$^{2}$க்ருத ஸாடிகல் ச$^{2}$வி ததா$^{2}$வாச$^{2}$ம்பு$^{2}$ சேர்பங்க$^{2}$ரே
வுல டி$^{2}$க்க$^{2}$ன் வெச$^{2}$ பாறுவானிகனி நவ்வுன் ஸாலி
கோ$^{2}$ ப்யோக$^{3}$முல் I—65

தோழியர் கூற்றுக்களால்,பணத்தாசைக் காட்டிக் கெஞ்சினும். தாழ்ந்த குலம், முதுமை, அழகின்மை ஆகியவையுடையவர்களின் அழைப்பினை அவர்கள் நிராகரித்துச் செவியில் ஏற்கமாட்டார் கள். * ஸ்ரீ (திருமகள்) சொரூபமான செவிகள் ஆகையால் பணப் பேராசையுடைய சொற்களைக் கேளார், I—63

தமிழ்ச் சுமங்கலிகள் (இல்லத்தரசிகள்) மஞ்சள் தங்கப்படிக் கட்டுகளின் கீழே—நீர் அலைத்ததால் அங்கு தூங்கிய இல்லப் பொய்கையில் உள்ள அன்னங்களின் இறகுகளில் தோய்ந்து பசுமையுண்டாக, அவை நகரில் திரியும் போது ஆகாயகங்கையி லிருந்து வந்த பொற் சிறகினையுடைய அன்னங்களோ என மயக்கத்தையூட்டும். I—64

தலையை இறக்கைகளில் நுழைத்து வாத்துக்கள் வயலில் கால்வாய் நடுவே தூங்கவும், அதைக்கண்ட குளக்காவலர்கள் (கரையாளர்) அதிகாலையில் (விடியலில்)குளித்துவிட்டுப் போன அந்தணர்கள் துவைத்துப் பிழிந்து வைத்த துணிகள் என்று நினைத்து அவர்களிடம் சேர்ப்பதற்காக, துறையிலிறங்கவும், அவர்களைக் கண்டதும் (வாத்துக்கள்) ஓடவே, இதைக் கண்டு (களை எடுக்கும்) உழத்தியர் நகையாடுவார்கள். I—65

---

(* ஸ்ரீ (திரு) என்னும் எழுத்து தெலுங்கில் శ్రీ என்ற உருவில் இருக்கும். இதனை காதுகட்கு உருவ ஒப்புமையாகக் கூறுவது தெலுங்குக் கவிகளின் மரபு. அதனைப் பின்பற்றி இங்கு காதுகள் ஸ்ரீ (திருமகள்) உருவுடையதாதலின் அது பணத் தாசை காட்டும் சொற்களைக் கேளாது என்று கற்பித் துள்ளார் கவிஞர்.)

ம. சொரி2தின்2 பேர்சின தீக2மல்லியலு க1ர்ஜூரம்பு2லுன் புஷ்பமன்
ஜருலுன் மாமிடி2 கு2த்துலுன் குசு2மமுல் ச2ம்பெங்க2லு ப2ச்ச1கன்
னெருலுன் ப2ாளலு கல்கி2 ராஜனபு காந்தின் தாருமுல் கு2பிசே
லருதா2ரங்நகு2 பூவுதோடல ப2லாகா
நீகத2ம்ப3ம்பு2னன் I—66

ச. ப2லசி2ன ஹல்லகச் சடலபை தம ஜுன்ஜுறுமுண்ட2லு ராயகா2
கலமமுலுண்டு2 பண்டி2யொறக2ம்ப2டி2 நீரெட2லிம்பத்ருஷ் ண லோ
தலகொன வங்கி2முன் ஜலமு த்ராவெடு2 க்ரிந்த2டி வ்ரேள்ளு மீத2டன்
நிலிபி மரந்த2 மானு கரணின் நிகடோபவனானி லாஹதின் I—67

ச. அடு2கு2ன பண்டி2 வ்ரீலி அச2லை மது3வு புட்டக2 த்ராவ தேண்ட்லுமல்
லடி2 கொனிசுட்டுரா பனச2லன் பொலுசுன் கலுகு2ண்ட2ல தோட2 நீட்2
வடு2 பெனுப2ண்ட2லு பி3ன்ன கடபான்சு2ல பூ3ரிமதா2ம்பு2 சே2சனா
ஜட2த்ருட2 ஸ்ருங்க1லாயுத வசந்தங்ருப த்ர2தா2தி3 பாக்ருதின் I—68

பூந்தோட்டத்திலுள்ள மலர்களின் பெயரையுடைய (மல்லிகை — கர்ஜூரம் — புஷ்பமஞ்சரி — மாம்பூங்கொத்து என நெல்வகைகள்) நெல்வயல்களிலும் இருப்பதால் இணையானாலும் நெல்வயலே உயர்வென்று (தராசின்) இணை முள் காட்டும் (நெல்லில் முள்போல ஈர்க்குகள் இருப்பதால் இக்கற்பனை செய்யப்பட்டுள்ளது) ஆதலின் நெல் வயல் வெண்ணிறப்பறவை (பலாகா)யின் செருக்கினால் நகும். I—66

(யானைக்கொம்பு—சீரகச் சம்பா—முதலிய நெல்வகைகள் தமிழகத்துண்டு. அதுபோல இவை ஆந்திர நாட்டில் முன்பு வழங்கிய நெல்வகைகளின் பெயர்கள் ஆம்.)

நெற்பயிர்கள் விளைந்தபிறகு (அறுவடைக்காக) நீர்வற்றம் செய்யவே, தாகம் கொண்டு, அப்பயிர்கள் செழித்த செங்கழுநீர்ப் பூக்கள் மேல் சாய்ந்து தலை வைத்து முன் நீர் குடித்த வேர்களை தலையில் கொணர்ந்து பூந்தேன் மாந்துவது போல அருகுள பூங்காவிலிருந்து வரும் காற்றினால், அசைக்கப் பட்டுத் தோன்றும். I—67

அடியில் பழுத்து உடைந்து சேறாகி, தேன் கொப்புளிக்கும் வேர்ப்பலாவின் உருண்டைக்கல் போன்ற பெரிய பழங்களின் சாற்றினைப் பருக வந்த தேனீக்கள் மல்லாடுவது காணின், மதம் ஒழுகி பூழ்தி படிந்து, சங்கிலியால் கட்டப்பட்டுள்ள வசந்த மன்னனின் பட்டத்து யானையின் கும்பம் (தலைப்பகுதி) போலத் தோன்றும். I—68

உ. சால 3த்ளம்பு2கா ப்ருது1ல சம்பக கீலன பொல்சு பொந்து2தோ
மாலெ லனங்க2 பண்டி2 மஹிமண்ட2லி சீறுசு வ்ராலி கந்த3மூர்
சா1லச2யைன ப்3ருங்க3ததிநா துத2கப்பமரன் ப1லாவளுல்வ்
ரீலிகெ2லல் சு2க2ந்தி3 கத2ளீ வனபங்க்துல னொப்பு
அப்புரின் I—69

ச. மனகனுரக்தி ஹெச்ச இதெ2 மந்த2னி கண்ட1மு
கௌகி2லிஞ்சி நிக்
கின ப1ணிராஜவல்லி எறிகி2ம் பக2னோயன பூக2முல் ப3ரம்
பு2ன படு2மட்டசே செறகு முத்திபமுல் சிடிலிஞ்சி தத்2ரச2ம்
பனிஸமு வண்டுனந்திக தலாந்திக சூர்ணமுசேயு
னப்புரின் I—70

ச. அலரு புரம்புனன் தொக2லனந்தர தாமர ப்ராசி கப்ரபுன்
வலபுலுமீற லோவலுத2 வாலுக2 மொத்தமு போர நீருகொள்
கொலகொலமஞ்சு க்ருங்குமெட2 கு2ம்புல வம்புலுதோப
மாவிதோ
புலவிருலன் பயின்னடு2வ பொல்சு புராதனதீர்த்த1
குண்டமுல் I—71

ஸா. சாயங்காலமுலன் ததீ2ஸ முரஜித்சத்2மச்2 வனத்து2ந்து3பி3ச்
பா1யத்காஹளி காப்ரதிச்2வனத தோபன் குன்ஜக2ர்ப3ம்பு2லன்
ம்ரோயுன் கேளிவனின் குலாய கூ2மன ப்ரோத்திஷ்ட
த2ந்தச்ச2ரச்2
ச்2தா1யி ஸ்வேத க2ருத்2க2ருத்பட படாத்காரம்பு2
க்கேங்காரமுன் I—72

மிகச் செறிந்த பெரிய சம்பகப் பூக்களோடு கட்டிய தோமாலை(இலைகளுடன் பூக்கள் மிடைந்து பெரிதாகக் கட்டிய பூமாலை) போலப் பழுத்த நிலந்தோய நின்ற மணமிக்க வாழைக் குலைகளில் தொங்கும் வாழைப் பழங்களின் நுனியிலுள்ள கருப்பு —சம்பகப் பூவில் வீழ்ந்து மயங்கிக் கிடக்கின்ற வண்டுகளைப் போலத் தோன்றும். இத்தகு கதலி வனங்கள் (வாழைத் தோப்புகள்) ஆங்குண்டு. I—69

(சம்பகப்பூ — மணம் வண்டுகளைக் கிறங்கச் செய்யும். ஆதலின் நெருங்காது அறியாது சென்ற வண்டுகள் இவ்விதம் மயங்கிக் கிடக்கின்றன.)

நமக்கு அனுராகம் (செம்மை—காதல்) மிகுவிக்கும் மருந்து இதுதான் என்று கழுத்தைத் தழுவியவாறு நாகவல்லி (வெற்றிலைக் கொடி) கமுகினைப் பார்த்து சொல்வது போலத் தோன்றும். அதனைக் கேட்ட கமுகு மட்டை உதிர்க்கவே அது வீழ்ந்ததால் ஒடிந்த கரும்பின் முத்துக்கள்—கரும்பாலை அடுப்பில் வீழ்ந்து பொரிந்து சுண்ணாம்பாக இருக்கும்.

(கரும்பில், கதலியில், மூங்கிலில் முத்துக்கள் விளைவதாகக் கூறுவது கவிமரபு. முத்துப் போன்ற முளைக்கணுக்களை உவமித்திருப்பர் போலும். இங்கு வெற்றிலை பாக்குக்கு செம்மை மிகுவிக்கும் சுண்ணாம்பும் ஒரே இடத்தில் விளைகிறதாகக் காட்டப்பட்டுள்ளது) I— 70

அந்நகரில் கழுநீர்ப்பூக்களும், நீர்த்தாமரையும் பாசியும் கற்பூரவாசமும் பரவியிருக்க, உள்ளே கொழுத்த வாளை மீன்கள் போராடித் துள்ள, உள்ளே நீர்க் கோழிகள் கொல கொலவென்று கூச்சலிட்டவாறு நீரில் மூழ்கும்போது அதன் கழுத்து வளைவுகள் வினோதமாகத் தென்பட, மாந்தோப்பிலுள்ள பழங்கிணறு (குட்டம்)கள் மலர்கள் சிந்தி அதில் நடந்து போக இயலுமாறு போல எழிலுடன் காணப்படும். I—71

மாலைநேரத்தில் இறைவன் திருமால் இல்லத் (கோயில்)தி லிருந்து பறைஒலியும், குழல் (நாதசுரம்) ஒலியும் எழுந்து பரவி பூம்புதர்களினுள் எதிரொலிக்கும். அது, விளையாட்டு பூங்காவி லிருந்து கூட்டை நோக்கிச் செல்ல முனைந்த அன்னங்களின் இறக்கைகளின் படபடவென்ற (பறை ஒலிபோன்ற) ஒலியும், அதன் (குழல் ஒலி போன்ற) கூவுதலும், தான் எதிரொலிப்பது போலத் தோன்றும். I—72

ம. பொலயுன் கா2ட்2புலுத2ங் மஹாலயவத2ம்போ3
ஜாக்ஷவக்ஷச்துலன்
அலகு3 ச்2ரங்மகரந்த2பி2ந்து2வுல பண்யாரம்பு புண்யம்புகம்
புலதாபத்ரயி மீடிவீட நடன ப்ரோத்2யோக2ச2ஜ்ஜீப3வல்
லலனாவர்ஜித கைஸிகக்ஷரித கஹ்லாராளி அல்லார்சுசுன் I—73

ச. மல்யபு கா2லி ரேலுவனமாலி விமான பதாக க3ல்லுமஞ்
சுலிய பசி2ண்டி2 முவ்வக2மி ஒக்கொக மாடுகத2ல்ப உல்கிமின்
னலமு ததீய2 ஹேம வரணாஞ்சல சம்பக சாக1லந்து2 ப
க்ஷ2லுரொத2 சேய, வேகெ2னனி கூடு2து2ரல்கலு தீறி
த2ம்பதுல் I—74

ச. கலமபுடெண்டு2கு2ல்த்2ரவிட2 கன்யலு முங்கி2ட
காசுசுண்டி2 தஜ்
ஜலருஹநாப3 கே2ஹருருஸாப2மு சாரெகு
பொக்குலாட2 கொண்
டெலபயிகம்ம க்ராம்யதருணீததி டி2ஞ்சின பேபக2ம்பலன்
தலமகு2சுன்ன செங்க2லுவ த2ண்ட2ல தோலுது
ரப்புரம்பு2னன் I—75

வடபெருங்கோயிலுடையானாகிய, தாமரைக் கண்ணனின் மார்பில் உள்ள துளசிமாலையின் மகரந்தத்துளிகளைத் தழுவி, பணியாரம் (நைவேத்தியத்தின்) புனித மணம் அளைந்து, நடனமாட முனைந்த நங்கையரின் ஓரஞ்சாய்ந்த கூந்தலில் (கொப்பு) இருந்து நழுவும் செங்கழுநீர்ப் பூக்களை அசைத்தும் தென்றல், (தன்மை, மணம், மென்மை ஆகிய தன்மைகளுடைய தாகி) மூன்று வருத்தங்களை (தாபத்திரயம்) நீங்கச் செய்யுமாறு வீசும்.

(தாபத்திரயம்—ஆத்யாத்மிகம்—(தன்மனத்தால் உருவாகுந் துன்பம்) ஆதிபௌதிகம் (பிற உலகிலுள்ள பௌதீகப் பொருட் களால் உருவாகும் துன்பம்) ஆதிதைவிகம் (தெய்வத்தால்—இடி—பூகம்பம் முதலியவற்றால் உருவாகும் துன்பம்) என மூன்று ஆகும். முத்துன்பமும் முக்குணம் உடையதென்றல் போக்கும் என்பது கருத்து. மகரந்தத்தால் தன்மை, நைவேத்தியத்தால் மணம், கூந்தல் மலர்களை அசைப்பதால் மென்னடையும் உடையதாகத் தென்றல் திகழ்கின்றது என்பது கவியின் கற்பனை.) I—73

பொதிகைத் தென்றல் இரவில் திருமால் கோயில் கொடிமரத் தின் பொன்மணிகளை ஒவ்வொரு சமயம் அசைக்கவும் கலீர் என்று ஒலிப்பவும், ஆங்கு விண்முட்டும் பொற்பிராகாரத்திலுள்ள சம்பகமரக்கிளையிலுள்ள பறவைகள் அவ்வொலி கேட்டு திடுக்கிட்டெழுந்து கலகலவென ஓசைஎழுப்பவும், விடிந்ததென்று கருதி தம்பதியர் புலவி நீத்துக் கலவி கொண்டின்புறுவர். I—74

அந்நகரில் முற்றத்தில் செந்நெல் காயப் போட்டுக் காவ லிருக்கும் தமிழ் மங்கையர், திருமால் கோயில் மான்கன்று நெல்லை அடிக்கடி தின்ன வரவும், கொண்டையில் வைப்பதற் காக விற்க வந்த கிராமப் பெண்கள் இறக்கி வைத்த, பிரப்பங் கூடையிலுள்ள செங்கழுநீர்ப்பூந்தண்டினாலே (நோகாதபடி) விரட்டி விடுவார்கள். I—75

## பா³க²வதுலு

சீ². எது²ரேகி² சா²ஷ்டாங்க² மெரகி² பாத்²யம்பி²ச்சி
நாரிகேள கடாச²னமுல னுனிசி,
நுனுபோக பொத்திகுட்டின தொ²ப்பக²மிதோட²
ரம்பா³விஸால பர்ணமுலு வறிசி
ஸால்யன்ன சூ²பாஜ்யகுல்யா பஹுவ்யன்ஜ
ன க்ஷீர த²து³லர்பணம்பு² சேசி
வார்சின பித²ப ச²ம்வாஹன மங்க்³ருல
கொனரிசி தாம்பூ²ல மொச³கி², குஸல

தே. மடி²கி² போயெத²மன்ன த²வ்வனிசி சி²ரிகி
தகி²ன ச²த்க்ருதி சேசி² கே¹த²முன மகி²டி²
அர்ச காவிந்து ரெபுடு² இட்லதிது¹ லைன
பா³க²வதுலகு அப்புரி பா³க²வதுலு I—76

## விஷ்ணு சித்துடு²

ஸா. அந்து²ண்டு²ன் த்²வயச²த்²ம பத்²மவத²னுண்ட²
த்²வந்த்²யுடஸ்ரந்தயோ
கா²ந்தூ² பத்த³மது³த்²வித் த்²விரது²ட²ன் வர்தா¹பி³
தா³னுண்டு²ருச்
ச¹ந்தோ² ப்ருந்த² தத²ந்தவாக²பட¹னா ச²ன்ஜாத தஜ்ஜன்யநிஷ்
பந்த²த்²வைத சு²ச²ம்விதா²லயுடு² நிஷ்ட¹ன்
விஷ்ணுசித்துண்ட²னன் I—77

எதிர்சென்று சாஷ்டாங்கமாக வணங்கி, கால் கழுவி, நீர்தந்து தென்னம்பாய் இருக்கையில் அமர்வித்து, மென்மையான கமுகம் பாளையில் செய்த தொன்னைகளோடு (காய்கறிவைத்து) அகன்ற வாழையிலை விரித்து, நெற்சோறு, பருப்பு, நிறைய நெய் பெய்து, பலவிதமான கறிகளோடு, பால் தயிர்வைத்து உண்பித்து கை கழுவிய பிறகு கால்களை ஒற்றி, தாம்பூலம் தந்து, நலம் விசாரித்து 'போகிறோம்' என்று கூறின், அவர்பின் சிறிது தூரம் சென்று, தம் செல்வநிலைக்கேற்ப மரியாதை செய்து விடை கொடுத்தனுப்பி, (பிரிந்ததால்) வருத்தமுடன் இல்லம் மீண்டு வருவர். இவ்விதம் எப்போது அதிதிகளாகிய பாகவதர்களை உபசரிப்பது அவ்வூர் பாகவதர்களின் பண்பாகும். I—76

## விட்டு சித்தன்

துவயம் (இருமை) எனும் வைணவதிருமந்திரத்திற்கு இல்லம் (உறைவிடம்) ஆனவனும், தாமரை போன்ற முகமுடையவனும் சுகதுக்கங்களாகிய இருமையைச் சமமாகக் கருதுபவனும், இடையறாத தியான யோகமென்னும் சங்கிலியால் திருமால் என்னும் யானையைக் கட்டியவனும், படிக்காமலேயே வேத வேதாங்க ஞானங்களைத் தெளிந்த துவைதமறிந்த ஞானியும், பொருத்த மான பெயரையுடையவனுமாகிய விஷ்ணு சித்தன் என்னும் ஆசார சீலன் அவ்வூரில் (ஸ்ரீவில்லிபுத்தூரில்) இருந்தான். I—77

வ. அம்மஹீசு1ருண்டு2 ப்ரக்ருதிகண்டெ பருண்ட2கு2 தன்னுனு, தனகண்டெ பருண்ட2கு4 பரமேஸ்வருன், பரமேஸ்வர ப்ரசாத2 ப2ஹுஜனனக்ருத சு2க்ருதப1லருபயகு2 ஆசார்யக்ருப கு2ப்த தா2னம்பு2 நிதா3னம்பு தெலிபின கதின்தெலுபகா2, ஆத்மீய ததீ2யஸேஷ ஸேஷித்வ ச2ம்பந்த3ம் ப2னாத்2யம் பு2கா2 தெலிஸி 'ஆ தெலிவி கலிகி2 அக1ண்ட2 நிர்வ்ருதின் காஞ்சி சு2கி1ஞ்சு பரமயோகி2கி பஹுக்லேஸ த3ம்பு2லகு2 சது3வுலன் பனியேமி? ஈ விவேகம்பு2 லேனிவானி ஹேதுவாத3ம்பு2 தா3துவாத3ம்பு2, காணாத2ம்பு2 ப்ராணாத2ம்பு2, காபிலம்பு2 சாபலம்பு, மீமாம்ச2 ஹிம்ச2, வ்யாகரணம்பு2 அஸரணம்பு; அடுகாக சது2வ தொ2ர கொனின நருனகு காலம்பு2 நாலம்பு2, விக்3னம்பு2னு ச2கலோத்2ய மக்3னம்பு2ல், அந்து2லகு சா2மக்2ரி கி2டகி2டன; கொங்தெறுங்க2னகு2 மத2ம்பு2 புடபுடன; துத2முட்டன் சதி வெனேனியு ச2முத்பன்ன விக்ஞானுண்டை2 த்ரைகு2ண்ய விஷயம்பு2 லகு2வானி ஆனீத தா3ன்யுண்டு2 நிஷ்பலம்பை2ன பலாலம்பு2னு ஆலபத3மது3ண்டு2 சி2க்த1கம்பு2னு விடு2சு வடு2வுன விடு2வவலயு காவுன ஸாந்தி தா2ந்தி பரதந்த்ரத பரமைகாங்கி2னைன நாகு மொதலனிவி அதி3க2மிம்பன் துத2 விச2ர்ஜிம்பன் ஏமி ப்ரயோஜனம்பு2; வாதி2ப3ன்ஜனம்பு2 ராஜரன் ஜனம்பு2னு சேயுசு புணர்ஜனனம்பு2லகு விசு2வனி ஜனம்பு2லகு கானிம்மு, மாத்2ருஸுலகு ததீ2யக்1யாதி யீதி, லாப3ம்பு2 க்ஷோப3ம்பு2, பூஜனம்புத்2 வேஜனம்2ப2னி விதர்கிஞ்சி உர்வர பூர்வம்பு2ம் சௌ2வீரபூ3ரமணுனகு கௌ2ரவம்ப2ங்கீ2 கரிஞ்சி, போ2தி3ஞ்சி முக்தி கனிசின ப3ரத பூ3மிசு2ரவதம்ச2ம்பு2னு போலெ து2ர்விபா3வ்ய போ2து3ண்டை2 பரமபத2ம்பு2னனு பா3க2வதுல கப்ராக்ருதம்பு2லகு2 ப2ஹுப3த்ர2 மூர்துலு ப3ரியிஞ்சி ப3க2வத்பரிசர்ய சேயுடயு பரமபுருஷார் த1ம்ப2கு2ட எறிகி2 அசடி ரத1சரண பாணிமாலிகா கரண கைங்கர்யம்பு2ன கங்குரித கௌதூஹலுண்டை2 சேயுசுண்டெ, மறியுனு. I—78

க. ந்யார்ஜித வித்தம்பு2ன
ஆயோகீ2ஸ்வருடு2 வெட்டு அன்னம்பா2ப்ரா
லேய படீராசல பத்2
யாயாதாயாத வைஷ்ணவாவலி கெல்லன் I—79

அவ்வந்தணன், பிரகிருதியைவிட வேறுபட்ட தன் (ஆன்மா) னையும், தன்னைவிட வேறுபட்ட பரம்பொருளை (ஈஸ்வரன்) யும், பரமேசுவரனின் அருளால் பல பிறவிகளின் நற்பயனாய் கிட்டிய குருவருளால் மறைத்து வைத்த புதையல் கிடைத்தது போல ஞானம் உணர்ந்து, தான் (ஜீவன்) அடிமை, அவன் (ஈஸ்வரன்) உடையவன் என்பது ஆனாதியான தொடர்பென் றுணர்ந்து, முழுமையான பேரின்பத்தில் திளைத்து இருக்கும் பரமயோகிக்கு (உத்தம பக்தனுக்கு) வருத்தந் தருகின்ற கல்வி யாற் பயன் என்ன? என்று சிந்தித்து, இந்த ஞானம் இல்லாதவன் பகுத்தறிவு பாழாகும். தருக்க அறிவு உருக்குலைக்கும். சாங்கியம் சபலமுடையது. மீமாம்சை இம்சையாகும். இலக்கணம் தலைக் கனம். அதுமட்டுமின்றி படிக்க முயன்றால் காலம் சாலாது. இடையூறுகள் தடையாகும். கொஞ்சம் படித்ததும் செருக்கை யுண்டாக்கும். முற்ற முடியக் கற்றறிந்தாலும் அதனால் கிடைத்த தெளிந்த அறிவை, முக்குன விஷயத்தை தக்க வைத்துக் கொண்டு, தானியம் கிடைத்தவன் பதர் நீக்குவது போலவும், தேனடை பெற்றவன் தேன் கொண்டு மெழுகை நீக்குவது போலவும் (விஷயஞானத்தை) விட்டு (தத்துவ ஞானத்தை)ப் பெற்று உய்தல் வேண்டும். ஆதலின் சாந்தி (புறப் புலன்களை ஒடுக்குதல்) தாந்தி (அகப்புலன்களை ஒடுக்குதல்) களையுடைய பற்றற்ற எனக்கு முதலில், படித்து முடிவில் விடுவானேன்? அதனால் பயன் என்ன? எதிரிகளை வாதத்தில் மடக்கவும், அரசர்களை மகிழ்விக்கவும் ஆன அக்கல்வி மீண்டும் பிறத்தற்கஞ்சாதவர்களுக்காகுக. எம்மைப் போல்வார்க்கு, வேதங்கற்றதால் உண்டாகும் புகழ், பரிசில், குழப்பம், இழப்புகள் எவையும் வேண்டாம்,'' என்று ஆராய்ந்து முன்பு சிந்து தேசாதிபதிக்கு ஜடபரதமுனி உபதேசம் செய்து முக்தி நெறி காட்டியவாறு பாகவதர்கட்கு பல பிறவிகளிலும் கைங்கரியம் செய்து, பகவான் திருமாலுக்குப் பணிவிடை செய்வதே பிறவிப் பயன் என்று ஓர்ந்து ஸ்ரீவில்லிபுத்தூரில் திருமால் கோயிலில் பூமாலை தொடுத்தளிக்கும் தொண்டில் ஈடுபாடு கொண்டிருந்தான். I—78

மேலும், நியாயமாகச் சம்பாதித்த பொருளைக் கொண்டு அந்த யோகீஸ்வரன், இமயமலைக்கும், பொதிகை மலைக்கும் இடையே வந்து போய்க் கொண்டிருக்கும் வைணவ அடியார்கட் கெல்லாம் அன்னமளித்து விருந்தோம்பினார். I—79

ச. க²க²னமு நீடிபு²க்க² கெனகா² ஜடி²பட்டின நாள்ளு பா³ர்யகன்
ரொக² சொரகுண்ட² நாரிகெட²பும் பொ²றியல் தகி²லிஞ்சி
வண்ட²னய்
யக²பல முஞ்சிபெட்டு கலமான்னமு ஒல்சினப்ரப்பு நாலுகே²ன்
பொக²பின கூரலுன் வடி²யமுல் வருகு²ல் பெருகு³ன்க்³ருத
ப்லுதின் I—80

ச. தெலினுலி வெச்ச யோகி²ரமு திய்யனி சாஞுலு திம்மனம்பு²லுன்
பலுசனியம்ப²ளுல் செறகுபாலெட² நீள்ளுரசா² வளுல்ப¹லம்
பு²லுனு கூ²க²ந்தி³ ஸீதஜலமுல் வட²பின்தெ²லு நீருசல்லயுன்
வெலயக² பெட்டு போ³ஜனமு வேச²விசந்த²ன சர்ச
முன்னுக²ன் I—81

ம. புனுகுன் தாவி நவோத²யம்பு² மிரியம்பும் பொ²ள்ளதோ
சட்டிசுய்
யனு நாதாறனிகூரகு²ம்பு, முகுமந்தை² ஏர்சுநாவம் ஜிகு²ர்
கொனுபச்சள்ளுனு, பாயசா²ன்னமுலு, ஊருங்காயலுன்,
சேசுறுக்
கனு நேயுன் சிறுபாலு வெல்லுவுக² ஆஹாரம் பி²டு²ன்
சீது²னன் I—82

வானம் மலையூற்றெனப் பொங்கிய அடைமழைக் காலத்தில் மனைவியின் கண்களில் புகை நுழையாதபடி, தேங்காய்ச் சிரட்டைகள் போட்டெரிந்து சமையல் ஆக்கவும், சிரட்டை அகப்பைகளால் முகந்தெடுத்த செந்நெற்சோறு, தோல்நீக்கிய பருப்பு, நான்கைந்து தாளித்த கறி வகைகளுடன், நெய் வெள்ளமெனப் பெய்து, வடகம் வற்றல்களுடன் தயிர் வைத்து உணவருந்தச் செய்தபின். I—80

முதலில் சந்தனப் பூச்சு தந்து, இதமான சூடுள்ள (இளஞ் சூடான) வெண்சோறும், இனிய சாறு (ரசம்)களும், மோர்க் குழம்பும், மென்மையான கூழும், கருப்பஞ்சாறு, இளநீர், சுவைப் பண்டங்கள், இன்கனிகள் மணம் (வெட்டிவேர்) ஊட்டிய குளிர்ந்த தண்ணீர், ஊறுகாய், நீர் மோர், முதலியவற்றோடு கோடைக் காலத்தில் உணவிடுவான். I—81

புனுகு மணங்கமழும் செஞ்சாலிப் புத்தன்னம், மிளகுப் பொடியோடு, சட்டி 'சுர்'ரென்று ஓசை எழ, (அப்போதே இறக்கிய) சுடச்சுட கறி வகைகளுடன், மூக்குக்கு மருந்தான கடுகுப்பொடியோடு கலந்த பச்சடிகள், பாயசமும், ஊறுகாய்கள், கை சுறுக்கெனும்படியான புத்துருக்கு நெய், வற்றக் காய்ச்சிய பால், முதலியன மிகுதியாக குளிர்காலத்தில்உணவிடுவான்.I—82

ச. கத2ளீக2பீர3 புஷ்பகாச்சட சேதுல இப்ப பிண்டி2பை
குது2ருக2 நில்பி, ஒபுக2தி கூ2னல நூனிய நிஞ்சி த்ராடமுன்
னுதி2கின ஸாடிவ்ரேலனதி2 ஒக்கட க்ரு2ங்கிடி2
வத்துரெந்த2றே
வத2லக ஆதனிண்ட ஸனிவாரமுனன்
பரதே2ஸிவைஷ்ணவுல் I—83

ஸா. ஆநிஷ்டா1நிதி3 கே2ஹசீ2ம நடு2ரேயாலிஞ்சினன்
ம்ரோயு எந்
தே நாகே2ந்த்2ரஸயா சு2புண்யகத1லுன்2
திவ்யப்ரப2ந்தா3னுச2ந்
தா3னத்3வானமு 'நாச்2திஸாகப2ஹ—தா நாச்2த்யுஷ்ண1தா,
நாச்2த்யபூ
போ,நாச்2த்யோத2ன சொஷ்ட3வஞ்ச, க்ருபயா
போ3க்தவ்யமன்மாடலுன் I—84

தே. இத்தெறங்கு2ன அவ்வைஷ்ண வோத்தமுண்டு2
ஜாக2ருகத தைர்திக1 பா3க2வதுல
கிதர மெறுக2க எவ்வ ரேமேமி வேடி2
ரலயகவி பெட்டி ச2ந்துஷ்டி சலுபுசுண்டெ2 I—85

சனிக்கிழமையன்று, ஆழமான வாழைப்பூமடல் தொன்னை யைக்கையில் இலுப்பைமாவில் பொருத்தமாக வைத்துக்கொண்டு வேண்டிய மட்டும் நல்லெண்ணயை நிறைய ஊற்றிக் கொண்டு சென்று, கயிற்றில் துவைத்த வேட்டி தொங்க நதியில் குளித்து விட்டு பிறநாட்டு வைணவர்கள் பலரும் அவர் இல்லத்திற்கு விருந்தென வருவார்கள். I—83

அந்த நல்லொழுக்கச் செல்வரின் இல்லத்தில் நடு இரவில் சென்று கேட்பின், திருமால் திரு அவதாரக் கதைகளும், திவ்வியப் பிரபந்த அனுசந்தானமும் கேட்கும். அந்நேரந்தில் "கறிகள் அதிகம் இல்லை. சூடு இல்லை, அப்பளம் இல்லை, அன்னம் சிறப்பாக இல்லை" என்று அடக்கத்தின் காரணமாக விஷ்ணு சித்தன் கூறும் சொற்கள் காதில் விழும். I—84

அந்த வைணவோத்தமராகிய விஷ்ணு சித்தன், இவ்வித மாக விழிப்புடன் தீர்த்த யாத்திரை வரும் பாகவதர்கட்கு சிரமம் கருதாமல் யார் எது வேண்டினும் அவர்கட்கு மனம் நிறைவுறுமாறு ஈந்து விருந்தோம்பி வந்தான். I—85

## ஆஸ்வாசா2ந்த பத்2யமுனு

ஸா. பா2லார்காம்ஸ விஜ்ரும்பி3 தாமலஸரத்பத்2 மாக்ஷபத்2மாக்ஷமா
நீளாஜாம்ப2வதீஸ, ஈஸ ப2லபி3ன்னீரேருஹோத்2 பூ3த்தி2க்
பாலாமூல்ய ஸிரோமணித்2யுதிகனத் பாதா2ப்2ஜ பா1
லாலங்காரகசாவலீ மகரதீ2ப்யத்குண்ட2 லாஞ்சன்
முகா I—86

க. ஜலசர கிடி ஹரிவடு ப்3ருகு2
குல ரகு3குல சீரிபு2த்த3 கோ3டி ப்ரமுகோ1ஜ்
வல ஜனிக்ருத ரக்ஷா
அலமேல் மங்கா2பி3 தே3ந்தி2 ராலயவக்ஷா I—87

ப2லத்விட்2விநிர்தி2ஷ்ட பா தோ1த3ரோரு
பலாசாரதா3ரா தபத்ரீக்ருதாத் ரீ
ப1லன்மூர்த3 சாணூர ப ங்கோ2க்ர பா ஹா
கலா க்ருத்த கம்சா ஸிக1ண்டா வதம்சா2 I—88

இளஞாயிற்றின் கதிர்பட்டு விரிந்த சரத்காலத் தாமரை போன்ற கண்கள் உடையவனே! தாமரைமலராள், நிலமகள், நீளாதேவி, ஜாம்பவதி எனும் நங்கயைர் கணவ! சிவன், தாமரையிற் பிறந்த பிரம்மன், இந்திரன் முதலியவர்களின் மணி மகுடங்கள் ஒளிபட்டு விளங்கும் பாதங்களையுடையவனே! நான்காம் நாள் பிறைச் சந்திரன் போன்ற நெற்றியில் அழகொளிரும் சுருள் முடியுடையவனே! மகர குண்டலங்கள் அணிந்தவனே! I—86

மீன், ஆமை எனும் நீர்வாழ்வன, பன்றி, சிங்கம், பிரம்மச் சாரி, (வாமனன்) பரசுராமன், ரகு குல ராமன், பலராமன், புத்தன், குதிரையையுடைய கல்கி ஆகிய அவதாரங்களால் மக்களைக் காப்பாற்றுபவனே, அலர்மேல் மங்கை எனும் பெயருடைய திருமகளை மார்பில் ஏற்றவனே! I—87

இந்திரனால் ஏவப்பட்ட மழைமுகில்களின் கல்மாரியை தடுக்கு மலையைக் குடையாக ஏந்தியவனே! சாணூரமல்லனை மாய்த்தவனே! ஒரேநிமிடத்தில் கம்சனைக் கொன்றவனே! மயிற் பீலியணிந்தவனே! * I—88

ம. இதி2 கர்ணாடத3ராத்3 ருதிச்தி1ர பு3ஜா ஹேவாக
லப்2தே3ப3ரா
டு2த2யோர்வீத3ர தத்பித்ருவ்யக்ருத நவ்யோபாய
னோஷ்ணீஷரத்
னத்2ருக2ஞ்சத்பத2 க்ருஷ்ணராய வசு2தா3த்3யக்ஷோ
தி2யமுக்தமால்
யத2 ஆஸ்வாச2மு ஹ்ருத்2ய பத்2யமுல நாத்2யம்பை2
மஹின் பொல்பகு2ன் I—89

*[கேட்பாயாக! என்று அடுத்த அத்தியாயத்தில் வினை முடிவு வரும்.]*

இது, கர்ணாடக (கன்னட) நாட்டின் (சாம்ராஜ்யத்தை) தாங்கிய தோள்களையுடைய, உதயகிரி கோட்டையில் மன்னன் (பிரதாப கஜபதியின்) சிற்றப்பன் (பிரஹரேஸ்வரபாத்ரனை) காணிக்கை தந்த மகுடத்தின் மணிக்கண்களின் ஒளிபடும் பாதங்களையுடைய, கிருஷ்ணதேவராய மாமன்னனால் சொல்லப்பட்ட ஆமுக்தமால்யத (சூடிக்கொடுத்தவள்) எனும் காவியத்தில் இனியசெய்யுட்களால் இயன்ற முதல் அத்தியாயமாகத் திகழ்கின்றது. * I—89

## முதல் அத்தியாயம் முடிவுற்றது

---

*கிருஷ்ண தேவராயர் திக்விஜயயாத்திரையில் கட்டாக் (ஒரிசா) சென்ற கஜபதி மன்னர்களை வென்ற காலத்தில் உதயகிரி கோட்டையில் இருந்து கொண்டு கஜபதி மன்னனின் சிற்றப்பன் "பிரகரேஸ்வர பாத்ரா' என்பவன் கடும் போரிட்டான். முற்றுகையிட்ட மன்னன் கிருஷ்ண தேவராயர் 'பிரகரேஸ்வரன் தலையை மிதிக்காமல் குளிக்க மாட்டேன்' என்று சபதம் (வஞ்சினம்) கூறி போரிட்டபோது அது தெரிந்த பிரகரேஸவரன் அஞ்சி தனது மகுடத்தை தோல்வியை ஒப்புக் கொண்டு அனுப்பிவைத்தான். மாமன்னனும் அதனை மிதித்து வஞ்சினம் தீர்ந்து நண்பகலில் குளித்தான் என்ற சரித்திரம் இந்தச் செய்யுளில் குறிப்பிடப்படுகிறது.

# ஆமுக்த மால்யத2

## த்2விதீயாஸ்வாச2மு

க. ஸ்ரீ நயன குவலயுக2ளா
ஞான ஜ்யோத்ச்2னாயி தச்2மி தோஜ்வல முக1தை2த்
யா நீத சு2ர ஸ்ரீ புன
ரா நயன க்ரமண வேங்கடாசல ரமணா II—1

வ. அவத3ரிம்புமுமா ச2மயம்பு2ன பாண்ட்ய மண்ட2லம்பு2ன II—2

## மது3ராபுர வர்ணன

சீ2. ஏவிட ச2து பாலிண்ட்2லபை கம்பூ2ர
நவஹாரமுல சிப்பகவுசு மான்பு,
மலயஜம்பே2விட தொலு செக்கடு2லிசி மே
ட2லகிட்ட2 மிகு2லு பூ3முலகு டி2க்கு2,
கலசு நேவீடி சி2ம்ஹன க2ஜம்பு2ல கா2லி
சைத்ர வேள னுதக்2தி2ஸா க2ஜம்பு3,
தால்துரேவீடி ப்ராக்தன பூ3ப நிர்மால்ய
மரகதம்பு2லு பெற த3ற்ணி பதுலு,

தே. கபிவர நியுக்த கி2ரி ச2த்2ருக்க2 ஹன நிலய
கா2த்ர கா2ஹித கனக முக்தா கவாட
கோ2 புரா வே2திதோச்சதா க்ஷோப்3ய வப்ர
தனரு த2க்ஷிண மது3ர ச2ாந்த்ர த்2ருமது3ர II—3

# ஆமுக்த மால்யத

## சூடிக்கொடுத்தவள்

### இரண்டாம் அத்தியாயம்

திருமகள் கண்கள் என்னும் குவளைமலர்கட்கு, நிலவாகிய புன்னகை சிந்தும் ஒளி பொருந்திய முகத்தையுடையவனே, அசுரர்களால் கவரப்பட்ட தேவர்களின் செல்வத்தை மீட்டித் தந்தவனே! திருவேங்கடவா! II—1

கேட்பாயாக! அவ்வமயம் பாண்டிய மண்டலத்தில் II—2

எந்த நகரில், நங்கையர் முலைத்தடத்தில் கற்பூரம், புது முத்துமாலையின் சிப்பிகளின் புலவு நாற்றத்தைப் போக்குமோ, எந்த நகரில், சந்தன மரக் கட்டைகள் முதலில் வீட்டு உத்தரங் களாகப் போடப்பட்டு மிகுந்தவை பிற நாடுகட்கு ஏற்றுமதி செய்யப்படுமோ.

எந்த நகரில், ஈழநாட்டின் வேழங்கள் (சிங்கள தேசயானைகள்) வடதிசையானைகளை வசந்த காலத்தென்றல் வீசி மருளச் செய்யுமோ, எந்த நகரில், முன்னைய மன்னர்கள் அணிந்து எறிந்த மரகத மணிகளை பிற நாட்டரசர்கள் சூடுவரோ.

குரக்கரசனால் (சுக்கிரீவனால்) பாராட்டப்பட்டுக் கூறப்பட்ட மலை போன்ற பொன்னும் முத்துக்களும் உடைய கதவுகளையுடைய (இராமயாணத்தில் கவாடபுரம் என்று சிறப்பிக்கப்பட்ட) வாசலைக் கொண்ட உயர்ந்த கோட்டையை உடையது மான மரங்கள் செறிந்துள்ள தென் மதுரை சிறப்புற்றிலங்கியது. II—3

க. ஸமனரிபுத்ரி புரபி[3] தோ[2] த்[3]
யமவத்தோ[2]ர்வர்ஜய வலயித ச[3]வர்ண[2] கிரிப்[3]
ரமதம்பை[2] காஞ்சன வப்
ரமு தீ[2]ப்ரம் ப[3]கு[2]சு அப்புரம்பு[2]ன னொப்புன் II—4

தே. சொ[2]ரிதி[2] கனுபட்டு ஹேமரஸ்முலு செலங்க[3]
பொட[2]வு கதமுன சூ[2]க்ஷமமை பொல்பு சூட[2]
பட்டணமு கோட கொம்மல பங்க்தி க[2]க[2]ன
மண்ட[2]ல ஸ்ரீகி ச[2]ம்பங்[3]கி த[3]ண்ட[3] வோலெ II—5

ம. பரிக[1]ன் தத்புர காமினீ ஜனமுலம்ப[3]: கேளி ச[2]ல்பங்க[2], தத்[2]
கு[2]ரு வக்ஷேரருஹலிப்த ச[2]ங்குமத[2] கச்[2]தூரீ மிளச்சந்த[2]னா
கு[2]ரு பங்கம்பு[2]ல சௌ[2]ரப[2]ம்பு[2]ல சுமீ கும்பீ[3]ன சா[2]வாச[2] நிர்
ஜரகல்லோலினி கந்து[2] போ[3] க[2]வதினா சன்ச[2]ன்ஜன கல்கெ[2]ன்
தக[2]ன் II—6

தே. காத்[2]ரவேயுலு பூ[3]மியு கைகொனங்க[3]
உரக[2]லோகம்பு[2] வெட[3]லி தத்பரிக[1]நீட
எக[2]சி[2] தோட[2]னெ க்ருங்கு[2]துர்நிலுவலேக
தத்தடா ப[3]த்த[3] கா[3]ருத்மதமுல குலிகி II—7

காலனைக் காய்ந்தவனாகிய சிவன் முப்புரம் எரித்தபோது மேருமலையை வளைத்து வில்லாக்கிய பின் விட்டுச் சென்ற பொன்மயமான மலையோ எனும்படியாக அந்நகரினைச் சுற்றிலும்பொற்கோட்டை திகழ்ந்தது. II—4

அந்நகரின் கோட்டை மதிற்சிகரங்களின் வரிசை பொன் கதிர்கள்திகழ உராய்வினால் நுண்ணியதாகத் தென்படுவது, வானத் திருமகள் சூட்டிய வண்ணச்சம்பங்சிப் பூமாலை போலத் தோன்றும். II—5

அகழியில் இந்நகர்ப்பெண்டிர் புனல்விளையாட்டின்போது, அவர்களது பேரெழிற் கொங்கையிற் பூசிய குங்குமமும் அகிலும் கஸ்தூரியும் சந்தனமும் ஆகிய சேற்றின் மணம் நீரில் கலந்ததால், பாதாள உலகத்திலுள்ள தேவநதிக்கும் போகவதி என்ற பெயர் பொருத்தமாக ஏற்பட்டது.

(மணம் போகப் பொருளாதலின் அது பெற்றமையால் போகவதி என்ற பெயர் பொருத்தம் என்பது கருத்து) II—6

பாம்புகள் (நாகம்) பாதாளத்திலிருந்து வந்து பூமியையும் கைப்பற்ற நினைத்து அந்தஅகழி நீரில் எகிறி மேல்வர முயலவும், ஆங்குள்ள கருடபச்சைகற்களால் ஆனபடித்துறைகளைக் கண்டதும் பயந்து நிற்காமல் உடனே மூழ்கிவிடும்.

(பாம்புக்கு கருடன் எதிரியாதலின் என்பது கருத்து) II—7

தே. தருண ஸைவால ஜல பத்ரமுலு பொது2வ
மரகதச்சா1ய பொல்சு தத்பரிக1 ஜலமு
கோட ப2ங்கா2ரு சே2யுட கொறகு முன்னு
ப்2ரஹ்ம பிடி2சின மந்தா2கு பச2ரனங்க2 II—8

ச. அடு2கு2னனுண்டி2யுன் பதிலமை சத2லண்டெடு2 கோட
னொப்புப்ரோல்
செட2னிகட2ங்க த2ஞ்சனபு சேதுல க2ங்க2னு காசெ2 தூறகா2
நடு2மனயுன்கி சேசி2 அலநாகபுரின் ச2ரிகை பெனங்2கி லா
வெட2லக2 பட்டி வ்ரேயுடகுனெத்தெனன் சனு மல்லு
போரிலோன் II—9

தே. உ2துடுகு2ப்ப2லு கலதல்புடுரமு சூசி
க2ந்த2பட்டெலுசூசி ப2ங்கா2ரு சூசி
வீடிவாசிடி சோடனே விடு2வகெபுடு2
சுட்லு வெட்டுசுனுந்து2ரு சே2ாம ரவுலு II—10

ம. ச்தி1ர சௌ3தா3க்2ர விஹா ரியௌவதரசிச்சி1ன்னாச்ச1 ஹா ர2ச்
பு1ரத்
கு2ருமுக்தாவளி சேடிகல் விருலதோ கூட2ங்க2 த்ரோயன்
நிஜோ
த2ரலக்2னம்ப2 கு2 தா2னி, நெம்மொகி2 லத1ச்2த1ம்பை2
தறின்ரால்ப, நா
கரமப்3ரம்ப2னி யண்ட்2ருகா2 குத2தி3 தக்கன் புட்டுனே
முத்தெமுல் II—11

இளம் பாசியும். தாமரை இலைகளும் மிடைந்து மரகத வண்ணத்திற் பொலியும் அந்த அகழி நீர், முன் பிரம்மதேவன் கோட்டையை பொன்னாக்குவதற்காகப் பிழிந்த மருந்திலை களின் சாறு போலத்தோன்றும். II—8

உறுதியான கால்கோள் (அஸ்திவாரம்) உடைய அந்த நகரக் கோட்டை என்னும் மல்லன், தன் கைகளாகிய பீரங்கிகளால் சுவர்க்கம் எனும் மல்லனைப் போருக்கழைத்து ஆகாய கங்கையாகிய கச்சையிடையே பிணங்கி தூக்கிப்போட முயன்றது போலச் சிறப்புற்றிலங்கும். II—9

நிமிர்ந்த கொங்கைபோன்ற இரும்புப் பூண்களையுடைய மார்பு போன்ற கதவினைக் கொண்ட சந்தனக் கட்டை (தாழ்ப்பாள்) பொன் (தகடு)களையுடைய நகரம் ஆகிய நங்கை யின் எழில்கண்டு, வாசலிலேயே விடாமல் எப்போதும் சூரிய சந்திரர்களாகிய (விடர்)கள் சுற்றித்திரிவார்கள். II—10

மாளிகையின் மேல் உப்பரிகைகளில் மகிழ்ந்திருக்கும் இளநங்கையர் கலவி வேகத்தில் அறுந்து வீழ்ந்த தூயமுத்துமாலை யின் பெரியமுத்துக்கள் சிதறி விழ, காலையில் பணிமகளிர் சூடிக்களைந்த பூக்களுடன் சேர்த்து, பெருக்கிஎறியவும், அவை கீழே உள்ள முகில்களின் வயிற்றிலடங்கியிருந்து சமயம் வரும் போது மழையுடன் கீழே விழுவதால்தான் முகிலிலும் முத்துக்கள் பிறக்கும் என்பதன்றி, கடலில் அன்றி வேறெவ்விடத்தாவது முத்துக்கள் பிறக்குமா? II—11

ம. க¹னசௌ²தா³ளி வியுத்து³னீ ஜலதி³ வீகன் நாவலை நீட³ தோ
பநெலந்தல் வணிக²ாக்ருதின் ச²ரகு மார்பன் கோலலன்
கட்டியிச்

சுநிஜத்²வீப விசித்ர பட்ட வச²ன ச்²தோமம்பு²னா பொல்சு
பெல்

லநிலான் யோன்ய விமர்ஸிதன்னக²ர நாகானேக கேதுச்ச¹டல்
II—12

உ. சோ²ரண²கண்ட்²லரா கொத²ம சுக்கலு பட்ட ச³துல்
கவாடமுல்

சேருப மௌக்திகம்பு²லனி சில்லுனு வுத்துரு தம்மடஞ்சு பொல்
பாரு விதான ஹாரமுலயன் தொ²கி² ஹாரத வ்ரேலி ப்ரொத்து²
வோ

கா² ரதி ட²ச்சி² கா²ட்²புல² குகா²தெறவன் சனுவிச்சி
மேட²லன் II—13

உ. ஆபுரி செ²ளத³வீதி¹நத³ரா;ந³ரபூ³முல க³ர்ஜ முன்னுகா²
ஆபயிகின் வினன் பட²னியட்லுக² வ்ராலு க³னாளி தால்சிலீ
லாபரதன் க¹டிம்புது²ரு லாச்²யமு சேயக³ மேக³ரன்ஜனா
லாபமு சே²சி போஷிதகலாபி கலாபி கலாப குந்தலல் II—14

(கடலில் கப்பல்களில் செல்லும் வணிகர்கள், நடுக்கடலில் தத்தமது புதிய சரக்குகளின் மாதிரி (சாம்பிள்)களை துணியில் முடிந்து ஒரு மூங்கிற்கழியில் முடிச்சினை வைத்து எதிரேயுள்ள கப்பலில் உள்ளவர்கட்கு நீட்டித்தருவர். அவர்களும் அவ்வாறே இவர்கள் பக்கம் கழியிற்கட்டிய மாதிரியைத் தருவர். இவ்விதம் பரஸ்பரம் பரிமாறிக்கொள்வது கடல் வணிகர்களின் பழங்கால வழக்கம் (அதுபோலவே.)

உயர்ந்த மேடைகள், ஆகாய கங்கை என்னும் கடலில் பிரதிபலித்து கப்பல்கள் போலவும், (மேடையிலுள்ள) மகளிர்கள் வணிகர்கள் போலவும், அந்நகரக் கொடிக்கம்பங்களில் கட்டிய கொடி (பதாகை)கள் காற்றில் அசைந்து தத்தமது கழிகளில் முடிந்துவைத்த தமது தீவில் (நாட்டில்) உள்ள புதிய சரக்குகளின் மாதிரிகள் பொதிந்த பட்டுத்துணிகள் போலவும், சுவர்க்கமும் மதுராபுரியும் பரஸ்பரம் வணிகம் செய்வது போலத் தோன்றும். II—12

மேடைகளில் உள்ள காலதர் (ஜன்னல்)களில் இளம் விண்மீன் (நட்சத்திரம்)கள் (வழிதவறிப்) புகவும், அங்குள்ள மகளிர் அதைப்பிடிக்க கதவினை மூடவும், (அவ்விண்மீன்கள்) தம்மை முத்துக்கள் என நினைத்து துளையிடுவார்கள். என அஞ்சி, அழகிய விதான (மேல்கட்டு)த்தில் தொங்கும் முத்து மாலைகளோடு தாமும் ஒரு முத்து மாலையாக ஒளிந்திருந்து விட்டு, பொழுதானதும், கலவியிற்களைத்த மகளிர் (காற்று வரட்டும் என) கதவுகளைத் திறந்ததுமே விடுபட்டு வெளியேறும். II—13

மயிற் பீலியொத்த கூந்தலையுடைய மகளிர்கள் அந்நகர மாளிகைகளின் கீழே முழக்கத்துடன் திரியும் முகில்களை, மாளிகையில் உள்ள தமது மயில்கட்கு நடனம் கற்பிக்க வேண்டி 'மேகரஞ்சனி' ராகம் பாடி முகில்களை மேலே வரவழைப்பார்கள்.

(மேகரஞ்ஜனி ராகம் பாடினால் முகில்கள் ஒன்று திரண்டு வந்து மழைபொழியும் என்பது மரபு. இந்தராகம் பதினைந்தாவது மௌகர்த்தா ராகமாகும். சரிகம நிப—பநிமகரிச — என்பது இந்த ராகம்.) II—14

ச. அநிமிஷ பட்டணம்பு2 புரஹர்ம்ய யதாகலு முவ்வம் ரோததோ
தனக்2ருஹ பங்க்திபை கலஸதாமரச2ம்பு2ல கப்ப க்ரிந்த2னுண்
டு2னு நிஜலக்ஷ்மி சேச2ரிபணுல் மொரயங்க2 ததீயலக்ஷ்மிஸங்
கனு மொக2 மெத்தி சூசுதறி கன்னுலுகேளிகி மூயகா2 ப2லென்
II—15

ச. க3னக2தஸம்ப கஞ்சமிடி2 காடுக தீர்சி புனுங்கி2னோஷ்ம தட்
டினதியலங்2தி கைஸிகமு டே1வ ப்ரபா3தஸஸாங்குமோப விச்
சின நவஹல்லகாளி கயிசே2சி2 ச2துல்பதிதோ ரமிந்து ரம்
முனிஜரடாங்க2னல் கலஹமுல்க்ருபனேட்2 வுரு தீர்ப மேட2லன்
II—16

ச. ரவியனு தி2வ்வெ கேதுவு செரங்கு2ன முசி2 த்2ரு3தோர்த்3
வயந்த்ரவா
ரவிரளக3ர்மயை கலரவால் பரவோக்துல வாந்ததூ3பரா
ஜிவரனிஸன் கனன்மத2ன சேதுல சாதுரி நெய்யபுன் குருன்
ஜீவித2லு தார்ப விஷ்ணுபத2 மொத்து புரீக்2ருஹலக்ஷ்மி
நூத்னகான் II—17

மதுரைத் திருமகளின்கரங்களில் மிளிரும் தங்கச் சங்கிளியின் ஒலி கேட்டு, சுவர்க்கத் திருமகள் என்னவென்று தன் முகத்தை மேல்நோக்கிப் பார்க்கவும்ம துரைமகள் சுவர்க்கமகளின் கண்களை விளையாட்டாகப் பொத்தியது போல,மதுரை நகர்மாளிகைகளில் உள்ள கொடிகள் கிண்கிணி ஒலிப்ப சுவர்க்க மாளிகைச் சிகரங் களின் தாமரை மொட்டுகள் போன்ற கலசங்களை மூடும் II—15

மேடைகளில் உள்ள குலமகளிர், ஏழு முனிவர் (சப்தரிஷிகள்) களின் மனைவியர் அருளோடு புலவி நீக்கி (இரவு வறிதே கழிந்த தாலும் விடியல் நேரமாயதாலும்) அறிவுறுத்தவும் விரைந்து மேகங்களிலுள்ள மின்னற்சுடரில் வட்டில் வைத்து அதன் அடியில் படிந்த கண்மையால் அஞ்சனம் தீட்டியும், இளஞாயிற்றின் சூட்டில் கரைந்த புனுகைப் பூசிக்கொண்டு, உதய சந்திரனில் படச்செய்து செங்குவளை மலர்களைவிரியச் செய்து கூந்தலில் அணிந்துகொண்டு கணவனைக் கூடியின் புறுவார்கள்.

(மகளிர் என்ற பன்மைக்கு கணவர்கள் என்ற பன்மைச் சொற் கூறுவது சிறப்பின்மையால் கணவன் என்ற ஒருமை மூலமே விளக்கிய நயம் கவனித்தற்குரியது) II—16

ஞாயிறு என்னும் விளக்கை கொடித்துகில் முனையால் மறைத்து, நீரூற்று யந்திரங்களாகிய வியர்வை யோடு கூடி, புறாக்களின் மெல்லொலிச் சொல்லினால் பேசி, சுவர்க்க நாயகனை மதுரைத் திருமகள் புதுமணப்பெண்போல, மணப் புகையாகிய இரவில், கூரை முகடாகிய தோழியர் உய்ப்ப கலத்தின் புறுவாள். II—17

ச. கீ2றிகொனு கோ2புராக்2ர பரிகீலித பங்கஜராக2 ரஸ்மி கட்
டெறயகு2 சாய பொல்சு2திவ சே2ந்த்2ருடு2 சக்கன மிண்ட
போவுசோ
மறசிவிதா3த பாடலிம மத்3யம2சந்த்3யகு சேயலேனி யா
கொறதயு தீர்சுகோ தொக2ரு கொல்பின கைவடி2 பட்டணம்
பு2னன் II—18

## புஷ்பலாவிகலு

சீ2. வெல2தி யீநீ2தண்ட2 வெலயெந்த? நாதண்ட2
குனு வெலபெட்ட னெவ்வனி தரம்பு2?
கலுவ தாவுலு கான மலிகத2ம்ப2க வேணி?
கலுவ தாவுலு வாட2கய கலுகு2னெ?
கடி2வோது2 நாகிம்மு பட2தி யீ கேத2ங்கி2
னன கடி2வோமி முந்த2றிகி சூடு2
ஜாதுலே வம்பு2 ஜேக்ஷண? பத்மினுலு சை2த
முனுனுன்னயெட3 ஜாதுலுனிகி யருதெ2?

தே. அனுசு தொலி நுடி2 அபி2லாஷ லெனய மூகி2
பலுகு தோட2னெ நர்மக2ர்ப3ம்பு2 காக2
உத்தரமு பல்லவஸ்ரேணி கொச2கு2சலரு
லம்முது2ரு புஷ்பலாவிக லப்புரமுன II—19

ச. ச2ரசு2ல நர்ம மிம்புலனொச2ங்க2 கத2ம்ப2பு த2ண்ட2
கட்டுசேர
கரகு2ட தெல்பு த்2ருக்தரள காந்துலு உத்தர மிச்சுனந்தரயந்
தரமுல நவ்வுலுன் கலுவதண்டமு மொல்லலுனஞ்சு மின்னுக்ருச்
சிரஹினிரித்த நூலொச2கி2 சி2க்கு2 வஹிந்துரு புஷ்பலாவிகஸ்
II—20

மதுரைப்பட்டினத்திற்குமேல் நேராகச் சூரியன் செல்லும் போது நடுப்பகலில் (உச்சிவேளையில்) பிரம்மதேவன் (காலை, மாலைச் சந்திகளுக்கு செம்மை வைத்தாற்போல மத்தியான வேளைக்கு செம்மை வைக்க) மறந்துபோன குறையைத் தீர்ப்பதற்காக, செம்மை சேர்த்தாற்போல நகர மாளிகைக் கோபுரங்களில் செதுக்கப்பட்ட பதுமராக (செம்மணி) க்கதிர்கள் பட்டு மிகுந்த சிகப்பாகத் திகழ்வான், II—18

"மங்காய்! உன் பூ மாலைக்கு விலை என்ன?
"என் (இடம் சேர்தற்குரிய) மாலை (நேரத்திற்கு)
விலை மதிக்க யாரால் இயலும்?"
"அங்குவளை'' எங்கே? மலர்க் கூந்தலோய்?''.
''இங்கு ''வளை'' கழன்ற தியல்புதான்.''
''கடிமிக்க தாழம்பூ தருக! நங்காய்''
கடிமிக்க தென்பதை பின்னர் பார்ப்போம்"
சாதி உள்ளவோ? தாமரைக் கண்ணாய்''
சாதிகள் இருப்பது அரிதாகுமே?''.

இவ்விதம் முற்கூறிய சொல்லில் உள்ள காமக்குறிப்புடைய சொற்கேற்ப சாதுரியமாகப் பதிலளித்து பூக்களைஅந்நகரப் பூக்காரிகள் விற்பனை செய்வர். II—19

சுவைஞர் (ரசிகர்)களின் காதற்குறிப்புடைய சொற்கள் இன்பம் ஊட்ட, கதம்பமாலை தொடுக்கும் போது தமது மனம் உருகுதலைக்காட்டும் கடைக் கண்பார்வைகளும், பதில் தரும் தமது இடை இடையே நகைக்கும் நகை களும் கழுநீர்ப்பூக்களும் மல்லிகைப் பூக்களும் என மயங்கி வெற்றிடம் தொடுத்து வெறும் நூலை மட்டும் (மாலை என்று) தந்து (பின் தம் பிழையுணர்ந்து நாணத்துடன் பூக்காரிகள் இருப்பார்கள். II—20

---

கடி — மணம், கடித்தல், வளை — வளையல், குவளை— குவளைமலர்

சாதி — சாதிமல்லிகை— பத்மினி, சங்கிளி முதலிய பெண்டிர் வகைகள்

சீ[2]. பத்[2]மாச்[2]ய, புரினனுப[3]விதகு நீவ யெத்
துலு வெட்டெட த[2]னக[2] ராவலசெ[2]னிடகு,
தெலுபுமா, ஜாமுண்டு[2] னலரிம்பொ க[1]டிகாத்[2]வ
யம்பு[2]ண்டு[2] னலரிம்பொ கம்புகண்டி[1]?
ஏவேடு[2]டகு நீவுருது வேல செப்பெத[2]?
வுவித, மேமந்தா[2]க ஒர்வ க[2]லமெ?
சேரகா[2]ராதெ[2] பா[2]சி[2]கமு கேல்சோ[2]கின,
யந்தனே செடு[2]னெ யேணாயதாக்ஷி?

தே. அனுசு, பரிபா[3]ஷ போலெ தம்மாச[2] தொ[2]ரல
ஆட[2], மோவி செறங்கி[2]டி[2] யாகு[2] நவ்வு
கண்ட நிகு[2]ட[2] விருல் நான்சுகரணி, சல்லு
ச[2]ரச[2]பு ஜலம்பெ[2] ஜாணல மருலு கொல்பு II—21

சீ[2]. இந்த[2]மன்[2]தறி த[2]ந்தகும்தா[2]ப[3] கூடி[2] நிச்
சலபு சூபுலு முன்ன ச[2]ம்ப[3]ரமிம்ப,
வெலயொப்ப கவல போவிறுசு மோவியு கோப
மொத[2]வெடு[2] சூபு மோமோட த்ரிப்ப;
திரிகி[2]ன ச[2]ச்[2]மிதோக்தியு சூபுடொய்யா,ர
முலுனகு[2] காத[2]னு பலுகுலுடு[2]ப,
அவி கானிகாவொ நீகனு பரசா[2]பத்ன்ய
ச[2]ம்பாத[2]னம் பு[2]ப்பு[2] னிம்பு பெனுப,

தே. சதுர வசனவிலாசா[2]ங்க[2] சௌ[2]ஷ்டவமுல
பசி[2]டி[2] தானிச்சினட்டி யப்பணதி மறவ,
பதிகி கைது[2]வு லந்தி[2]ச்சு ரதி வித[3]முன
விடுல கித்துரு மறி வாரு விருலு புரினி II—22

"தாமரை முகத்தவளே! இந்நகரில் நீயே கெட்டிக்காரி (பூத்தொடுப்பதில் — காதல் களியாட்டில் என்பது கருத்து)என்று தெரிந்து இங்கே வரவேண்டியதாயிற்று

நங்காய்! யாமம்" வரைக்கும் இருக்கும் கடிமணம் (மகிழ்ச்சி) வாசனைமலர் நன்றா? நாழிகை வரையிருக்கும் மலர் நன்றா?"

"நாங்கள் கேட்டால் நீ* ருது (பருவ) வேளையைச் சொல்கிறாயே? அது வரை காத்திருக்க முடியுமா?"

"பக்கத்தில் வரக் கூடாதா பந்தில் கைப்பட்டால் வாடிப் போகுமா என்ன! மான் விழியாய்: என்றிவ்வாறு பரிபாடையாக (குறிப்பு மொழியில்விடர்கள்) பேச, முந்தானையால் வாயிதழ் களைமூடி அடக்கிய சிரிப்பு கண்கள் மூலமாக வெளிப்பட்டுப் பொங்கிவர பூக்களை நனைப்பது போல தண்ணீர் தெளிக்கவும் அந்த சரசமான (காதற் சுவைமிக்க) தண்ணீரே அந்த விடலைகளை மோகங் கொள்ளச் செய்யும். II—21

'இதோ! என்று சொல்லும்போது முல்லைப்பல் வரிசை ஒளியோடு கூடிய அசையாத கூரிய பார்வையால் முன்பே (உளம்) தடுமாறவும்-

விலை ஒப்பாது அப்புறம் சென்றால், இதழ் (உதடு) மடித்து சிணங்கலந்த பார்வை வீசிட (முகங்கோணக்கூடாதென்ற தாட்சண்யத்தினால்) கண்ணோட்டமுடன் திரும்பிவரச் செய்து.

திரும்பிவந்தவரைப் புன் முறுவல் பேசும் ஒய்யாரப் பார்வையால் உண்டு, இல்லை என்று எதுவும் பேச முடியாமல் செய்து.

இவளதுதான் ஆகுமோ? எங்களது ஆகாதோ? என்ற பிற பெண்டிரைச் சக்களத்திகளாக்கிப் பேசும் துடுக்கான பேச்சுக்கள் மனம் மகிழச் செய்ய, சாதுரியப்பேச்சு, ஒய்யாரம், மேனியெழில் ஆகியவற்றால் கவர்ந்து, முன்பு பணம் தந்தமங்கையை மறந்து நிற்க, தான் மன்மதனுக்கு (மலர்) அம்புகளைத் தரும் இரதி தேவியைப்போல விடர்களுக்கு அவர்கள் (பூக்காரிகள்) விரை மலர்கள் தருவார்கள். II—22

---

* ருது — வசந்தம் முதலிய பூக்கள் மலரும் பருவ காலம் பெண்களின் மாதவிடாய் நேரம்

† பந்து — பூப்பந்து — பந்து போன்ற மென்மலைக்குவடு.

ச. த2லமகு3 சந்த்3ரக1ண்ட2முலுதா2ரலு, சா2ங்கவமொப்பு
பாணிபர

டல மகு2த2ந்தபுன் கரவடம்பு2 ஸஸாங்குடு2, குங்குமைன சீ
ரலஜி3கி கெம்பு,கா2 ப2யடிரத்1யலனொப்புது2ரிந்து2காந்தவே
து2லபயி ச2ந்த்3யயே பஹு<sub></sub>த தோசெனனன்புரிக2ட்டிவால்
சதுல் II—23

சீ2. உபரிச்2த1 ஜனவாரணோக்திகி செவிதார்சி
அம்மொக2ம்பை3 ப3யல்சிம்மி சிம்மி,
க2வனு வென்னொரய மின்னவிய த2ட்டிஞ்சு தோத்
ரத3ரு ப2ந்த2பு தா2ண்ட்ல தறிமிதறிமி,
சலுவசே த்2வாரவேது2 லெறிங்கி2 நில்சி தஜ்
ஜனஜிக்3ரு க்ஷுகு கேலு சாசி சாசி,
டி2ண்டி2மம்பு2ல குப்பி2 க2ண்டா2ல்பதான மே
லுலுக3 தத்2வஹூறால றுவ்வி றுவ்வி,

தே. வேணுகா ஹதுலகு வீடு2 வெட2லி வெட2லி,
பரபத1கஜத்3வனிகி போக திரிகி திரிகி,
த்2ருக்புடலு வைருலகு பம்பு க்ருத்யலனவ
ஸானு க2தி சேரு வெலி கருலக்க2லிகல II—24

உ. பைனனிஸம்பு2 சல்லுகொனு பான்சு2வுபை
க1க3துண்ட2க1ண்டி2தா
லான மஹாமஹீருஹப1லச்யுத பீ3ஜமு லுத்க்ஷிபத்கராம்
போ3கிபி2டா2 ப்லுதின்மொலவ பொல்சு அக2ம்யததூலுசுண்
புரோத்2
யானமுலன் மதே2ப3முலுப்ராணமுதோடி2 நகம்புலோயனன்
II—25

நிறைந்த கற்பூரத்துண்டுகள் தாரகைகள் ஆகவும், புனுகு ஜவ்வாது நிறைந்த மினுமினுக்கும் இளஞ்சிகப்பு (பாடலம்) நிற முடைய தந்தச் சிமிழ், சந்திரனாகவும், குங்குமம் தடவிய சேலையின் செம்மை படிந்து, ஒருபுதிய சந்தியாகாலம் போலத் தோன்றுமாறு அந்நகர வெளி வீதிகளில் சந்திரகாந்தக் கல் திண்ணைகளில் மணப்பொருள்கள் (வாசனைப் பொடிகள்) விற்கும் மகளிர் திகழ்வார்கள். II—23

தன் மேலிருக்கும் மாவுத்தனின் கட்டளைகட்கு செவி கொடுத்து மேல்நோக்கி வெட்ட வெளியைச் சீறி சீறி, நகர வாசல் முதுகில் உராயச் சென்று விண்ணதிர அதட்டும் (கீழே உள்ள) ஈட்டிக்காரனை தளைப்பட்ட பாதங்களால் தாண்டி விரட்டி, விரட்டி, ஈரத்தை உணர்ந்து வீட்டு வாசல் இது எனத் தெரிந்து நின்று அங்குள்ள மக்களைப் பிடிக்க விரும்பி துதிக்கையை நீட்டி நீட்டி, தப்பட்டை ஒலிக்கு மதநீர் பெருக்கெடுக்கவும், வாத்தியம் வாசிப்பவனை கற்களால் எறிந்து எறிந்து, மூங்கிற்கழி அடிகட்கு அஞ்சி ஊருக்கு வெளியே வந்து, பிற யானைகளின் பிளிறல் கேட்டுப் போகாமல் திரும்பி வந்து, கண்களால் எதிரிகளை வெல்ல அனுப்பும் சக்தியைப் போல் கூர்ந்து பார்த்து, பிடி (பெண்யானை) யின் வசப்பட்டு (பிடிப்பட்டு) த்திரும்பி ஊருக்குள் வருவதாக மதயானை கம்பீரமாக இருக்கும். II—24

தன்மேல் எப்போதும் வாரி எறிந்த தூசியின் மேல் (பறவை கள் கடித்து) எறிந்த (யானைகட்டும்) கம்பமான மரத்தின் பழங் களிலிருந்து உதிர்ந்த விதைகள், அதனுடைய (யானையின்) துதிக்கை நீரால் நனைந்து முளைக்கவும், நெருங்க முடியாதபடி உயிருடைய மலைகளோ எனும்படியாக அந்நகர நந்தவனங்களில் மதயானைகள் திரியும். II—25

ஸா. மௌனிக்ரோத3 விதூ3தபத்ரமுல மௌமாதோ ச2பத்ரல்கதா2
கானீரண்டனி கேகராக்ஷிருசிமொக்கல்ப்ரக்கலன்சார்ங்க2 தூ
ணானல்பாஹிபகல்ப காண்ட2தனுலன் தாரம்பு2ரிம் பொல்சு நா
ஜானேயம்பு2லு பே1னஹாச2 மிடி2 கைஜா மோரலல்லார்சுசுன்
II—26

ச. சலமுன சிங்கி2ணீதரகச2ம்பு2ல கட்டகமானரம்பபென்
செ2லக2தி மாகதின் வெனுக சிக்கக மானது2, தப்பிதா2ரிவென்
னொல2சின தாரு முன்னெறுக2குண்டு3ட ஒச்செமு
சா2தி2கோடிகஞ்
சலமின சிந்த த்ரவ்விகொனு அங்க3ரிதுத2ன் புரிலோனி
வாஹமுல் tI—27

உ. அன்ஜ ச2மான வாயுக2ண மந்தயு க1ன்ஜத சிக்க ஆஜவோஷ்
மன்சனி உப்பி2சிக்கனி ச2மானபு வாயுவுலோ ஒகண்டு2 கல்
மின் ஜனியிஞ்சு தூர்யஸமு மேல்கனி லேஹன வேள
வாஜுலூர்
பன் செடு2மாணிப2ந்த3 முகுரம்பு2ல காளிமபேர கார்கொனுன்
II—28

அந்நகர உயர்சாதிக் குதிரைகள் "முனிவன் சாபத்தால் எங்கள் இறக்கைகள் இற்றொழிந்தன! நீங்கள் (அம்பு) இறகுகள் உள்ளவர்கள்தானே! வாருங்கள் பார்க்கலாம் (பந்தய ஓட்டத்துக்கு) என்று வில்லோடு கூடிய பாம்புகளை ஒத்த அம்புகளைப் பார்த்து—கேட்பதுபோல ஓரக்கண் பார்வையுடனும், வாய் நுரையாகிய சிரிப்புடனும் கடிவாளமிட்ட முகத்தைத் தூக்கிப் பாய்வதுபோலத் தோன்றும்.

அம்புகளைவிட விரைவாக குதிரைகள் செல்லும் என்பது கருத்து) II—26

அந்நகரக் குதிரைகள் "நம்மேலிருக்கும் வீரர்கள் பகைவரிடம் சினம் கொண்டு போரிடும்போது நம்மிடம் வில்லும் அம்புப் பொதிகளும் காட்டாமல் விடமாட்டார்கள். அப்போது அம்பினைச் செலுத்தும்போது அம்பு நம் நடைக்குப் பின் வாங்காமல் இருக்காது. தவறுதலாக அந்த அம்பு நம்வீரர்கள் முதுகில் பட்டால், புற முதுகிற் புண்பட்டறியாத அவர்கட்கு இழுக்கு ஏற்படுமோ? என் செய்வது'' என்ற கவலையினால் போலும் தம் காற் குளம்புகளால் நிலத்தைக் கீறிக்கொண்டிருக்கும்.

(கவலையுற்றவர்கள் கால் நகத்தால் நிலத்தைக்கீறுவது இயல்பு. குதிரைகள் குளம்பால் நிலம் கீறுவதும் இயல்பு. இவ்விரு தன்மைகளை இணைத்த கற்பனை இது. • தாங்கள் விட்ட அம்பே தங்களைத் தைக்கும் அளவிற்கு குதிரைகள் விரைவாகப் போகும் என்பது கருத்து.) II—27

தனக்குச் சமமான (இணையான) வாயுக் கூட்டத்தை (பத்து வாயுக்களை) ஒரே பாய்ச்சலில் பின் வாங்கச் செய்து வென்றாலும், தன் வயிற்றில் உள்ள சமானன் (இணையானவன்—சமான வாயு) என்னும் வாயு (காற்று) மட்டும் தன்னோடு இருப்பதால் வெல்ல முடியவில்லை என்ற இகழ் என்னும் கருமை அக்குதிரைகட்கு இருந்தது. காலையில் தீனியுண்ணும் போது சுவாசக் காற்றினால் மணிபந்தம் என்னும் மலையிற் பிறந்த கண்ணாடிப் பாளங்கள் போன்ற உப்புப் பாளங்களை நக்கும் போது அவை கருமையுறுவது அதனால்தான் என்று தோன்றுகிறது
II—28

---

(பிராணன் (இதயம்) அபானம் (குதம்) சமானன் (நாபி) உதானன் (கழுத்து) வியானன் (உடல் முழுவதும்) என்று பஞ்ச வாயுக்களில சமானன் என்றும் வாயு வயிற்றிலுள்ளது.

ம. இல பாத2த்2வயி ராயனல்கொச2கு2 எந்தே பாறுசோ அங்கெவன்
னெலு ரெண்டை2 லகு3லந்த2 கீர்தியிடு2 முன்னே யெக்குசோ இந்து2 எங்
து2ல கேமௌது2 மடஞ்சு சா2து2லலயன், தூ2ர்ணோச்சமுல் வாஜுலங்
த2லருன் பாஹ்லிக பார2சீக ஸகத3ட்டாரட்ட கோ3ட்டாணமுல் II—29

## பண்ய யுவதுலு

சீ2. முடி2விப்ப அடு2கு2 தம்முலனெ ல்ராலுட தேண்ட்லு
நெறிகுருலகு2ட ச2ந்தியமு கலதெ2?
கன எந்தவானி லோகொனுட ஆத2ர்ஸம்பு2
நெம்மொக2ம்ப2கு2ட ச2ந்தி3யமு கலதெ2?
இறிகௌனு மிண்டிபை மெறயுட சக்ரத்2வி
தயி சன்னுலகு2ட ச2ந்தி3யமு கலதெ2
பொலசு2 தொ2ர்லக2 சூசு கலிகிசூபுல மீலு
தெலி கன்னுலகுட ச2ந்தி3யமு கலதெ2

தே. பொலசினனெ தாவி பு2கு2லுகோ அலருதீக2
தின்னனி ஸரீர மகு2ட ச2ந்தி2யமு கலதெ2
அனக2 செலுவொந்தி2 சு2ரதவையாத்ய நிது3லு
பண்ய யுவதுலு பொலுது ரப்பட்டணமுன II—30

ம. ப்ரதத ப்ராந்த பிஸங்க2 குங்கும ஜடாபாளீ குரங்2கீ மதா2
சித வீனாளிகலச்2வனம்பு2 லெச2க2ன் சென்னாரு கர்பூரபுன்
ஜததுல்கண்டிகி நாரத2த்வமுன மிஞ்சன் காமினீகாமி ச2ந்
ததிகேலா யெட2த்ரெச்சு கந்து கலஹோன்மாத2ம்பு2 லாப்ரோலுனன் II—31

“பாய்ந்தோடும்போது (குதிரையின் முதுகு வளைந்து) கால் நிலத்திற்பட்டும், (குதிரையில்) ஏறும்போது முன்பே இருதிவலயங்கள் வேண்டியிருப்பதாலும் (உயரமாகையால்) இருவிதத்திலும் இது நமக்கு இகழ் தருகிறது என்று கூறும்படியான பாரசீகம், பாஹ்லிகம் சகம், தாரா, ஆரட்ட, கோட்டாணம் முதலிய நாடுகளின் உயர்ந்த சாதிக்குதிரைகள் அந்நகரில் மிகுதியாக உள்ளன.
II—29

முடியவிழ்த்தலுமே அடித்தாமரையில் படிதலால் தேனீக்கள் (தும்பிகள்) தான் கூந்தல் என்பதில் ஐயமுண்டோ?

கண்டார் எப்படிப்பட்டவராயினும் தம் வசம் ஆக்கிக் கொள்வதால் கண்ணாடி தான் அவர்கள்முகம் என்பதில் ஐயமுண்டோ?

மெல்லிடை என்னும் ஆகாயத்தில் மிளிர்வதால் சக்கரவாக (அன்றில்) இணை தான் முலைகள் என்பதில் ஐயமுண்டோ?

புலவு புரளும் பார்வையால் மீன்கள் தான் அவர்கள் கண்கள் என்பதில் ஐயமுண்டோ?

அருகணைந்ததுமே மணம் வீசுவதால் பூங்கொடிதான் அழகிய உடல் என்பதில் ஐயமுண்டோ? என்று கூறும்படியாக அழகுமிக்க, மதனகலையில் சிறந்த விலைமகளிர் அந்நகரில் திகழ்வார்கள்.
II—30

பரந்து சிவந்த மஞ்சள் வண்ணமுடன் கூடிய குங்குமப் பூக்களோடும், கரு வண்ணக் கஸ்தூரி வீணையில் தேனிசை முரல, கற்பூரக்குவையானது நாரத முனிவனைப்போல் திகழும் ஆதலின் அந்நகர காமுகர்கட்கு கலவிப்போர்கட்கு இடையூறு நேராமல் மிகுந்திருக்கும்.
II—31

தே. நிங்கிடு த்ரசங்கு கதன மாதங்க[3] வாடி
யய்யெனிக னுண்ட[3] தக[2]த[2]னி அவனிகரிகி
—னட்டி நக்ஷத்ர தாரா[2]க்ரஹாலி யனக
காந்த நவரத்ன ராசு லங்க[2]ள்ள பொலுசு ||—32

ச. சிர ச[3]முபார்ஸிதாக்[2]னி தடி[2] செந்தி[1] நஸிஞ்சுடைஞ்சுனோ, க்ருதா
த்[3]வரத தத[2]க்[2]னி மைனுனிகி தானனொகங்க[2]மு தாசு சேதனோ
புரத[3]ரணீ சு[2]ருல் நிக[2]ம பூ[3]த[3]ரமுல்ஜபயஜ்ன ஸீலு ரா
ஹரி த[3]னதா[2]தி[2] கைன வலஹச்[3]தமு சாபரு தா[3]னதா[3]ரகுன் ||—33

ச. உரவடி[2] போரிகை கவச மொல்லரு மந்த்ரமுலந்து[3] தக்க, சு[2]ச்[3]
தி[1]ர பு[3]ஜஸக்தினைது[2]பதி[3] சேயரு த[2]த்தின தக்க மண்டிகை
பொரல ரதீ[3]சு[2] டி[2] கமலபு[2]த்தி[3] க[1]ளுரிக தக்க வஜ்ர தோ[2]:
பரிக[3] வஸீக்ருதான்ய நரபாலகுலப்புரி ராகுமாரகுல் ||—34

வானமும் திரிசங்குவினால் பறைச்சேரி யானது இங்கு இருக்கக் கூடாது என்று பூமிக்கு இறங்கிவந்த தாரகைகள், கிரகங்கள் என்னும்படியாக ஒளிமிக்க நவரத்தினங்கள் அந்நகரின் அங்காடிகளில் மிளிரும். II—32

நெடுங்காலமாகப் பாதுகாத்து வந்த அக்னி (யாகத்தீ) நனைந்து கெடுமென்று அஞ்சியோ அல்லது தாமே வேள்வித்தீ உருவினராதலின் அந்தணர்கள் மறைமலைகளாகவும், தவவேள்விச் சீடர்களாகவும் திகழ்ந்து இந்திர குபேரர் ஆனாலும் அவரிடம் தானம் (கொடை) பெறுவதற்காக வலது கையை நீட்ட மாட்டார்கள்.

(தானம் பெறும் போது தாரை வார்த்தலின் கைநனையும் என்று தானம் பெறமாட்டார்கள் என்பது கருத்து)

(அந்தணர் வலக்கரத்தில் தீ உள்ளதாக உருவகித்தல், வேதமரபு, வேள்வித் தீயாகவும் உவமிப்பர். II—33

மந்திரக் கவசம் அணிவார்களே யன்றி போரில் கவசம் அணியார் கொடையின் போது ஐந்தைப் பந்தாக்குவார்களே யன்றி தங்கள் ஆற்றலைக் காட்டும் போது அவ்விதம் செய்ய மாட்டார்கள்.

(முன்வைத்த கால் விரல் ஐந்தைப் பின் வாங்கி மற்ற ஒரு கால்விரலுடன் இணைத்துப் பத்தாக்க மாட்டார்கள். அல்லது கைவிரல் ஐந்துடன் மற்றொரு கைவிரல் ஐந்தும் இணைத்து பத்தாக்கி எதிரியை வணங்க மாட்டார்கள் என்பது குறிப்பு கொடை தரும்போது ஐந்து பொன் கேட்டால் பத்துப் பொன் தருவர் என்பது கருத்து. மந்திர கவசம் என்பது கந்தர் சஷ்டி கவசம் போன்றவை)

விளையாடும் களத்தில் மண்ணிற்புரள்வார்களே யன்றி அரசன் தராமல் மண்ணிற் புரளார். (நிலம் வேண்டி கெஞ்ச மாட்டார்கள் என்பது கருத்து)

இடியேறுபோன்ற (வஜ்ரம் போன்ற) தம் தோள்களால் பிற மன்னர்களைத் தம் வயப்படுத்தும் ஆற்றலுடையவர்களாக அந்நகர அரசகுமாரர்கள் (க்ஷத்திரியர்கள்) இருந்தார்கள். II—34

ஸா. த2ம்பா3பேத விதீர்ண தோயமுலு ரத்1யம் தொ2ட்டி
ஹட்டச்2தி1தச்2
தம்ப3ம்பு3ல் சிகி2ரிஞ்சு சுன்ன்வி யனன் த3ர்மைக
நித்யார்ஜனன்
ச2ம்பூ3தம்ப2கு2பைடி2 கோடி கொகடை நாநாடிகின்
ஹெச்சு சய்
யம்போ3தா3வளி கப்ப கேதுவுல வைஸ்யஸ்ரேணி
பொல்சுன்புரின் ||—35

தே. ங்ருபுல பத2 ஹலரேக1ல கெல்ல மாபு3
ஜாக்1ரஹ ரேக1லே மூலமனுசு கோடி
கொண்ட2லுக2 தா3ன்ய ராசு2லு பண்டு வீட
சு2ஜன ப3ஜனைக விக்1யாதி ஸூத்2ர ஜாதி ||—36

செருக்கில்லாமல், கொடுத்த தானம் வார்த்த நீர் தெருவில் பாய்ந்தோடி அங்காடியில் உள்ள கம்பங்களினை தளிர்க்கச் செய்கிறது என்று கூறும்படியாக, அறவழியிற் சம்பாதித்த பொன் கோடிக்கு ஒரு கொடியாக நட்டு, முகிலினை மறைக்கச் செய்யும் வளமுடையவர்களாக அந்நகர வணிகர் (வைசியர்)கள் திகழ்ந்தார்கள். II—35

மன்னர்கள் பாதங்களில் உள்ள ஏர் ஆகிய ரேகைக்கு (சங்கு சக்கர ரேகை போல ஏர் ரேகை சிறப்பினைக் குறிக்கும்) எங்கள் தோள்களில் உள்ள ஏர்தான் மூலகாரணம் என்று கூறி, கோடிக் கணக்கிலும் குன்றுகள் போலவும் நிறைவிக்கும் தானியக் குவை களைப் பயிர் செய்து விளைவித்து அந்நகர நான்காம் வருணத்தார் (சூத்திரர்கள்) நல்லோர்களைப் போற்றிப் புகழ் பெற்றிலங்கு வார்கள். II—36

ச. உமியக தன்ன நவ்வ னனநொச்செமு காஞ்சின கொன்னி
ம்ராகுலா
ப்ரமத2ல னப்பகி2ம்புட2னி ரன்ஜிலு சே2தலு கன்ன செட்லகுன்
தமகளி ஸ்ருங்க1லன் பெனசி நம்மக முட்லை புரம்பு2 கந்து
சை2ன்
யமு கொனி நாவெலின் ஸுகபிகாது2ல கேளிவனாளி
பொல்பகு2ன் II—37

சீ2. மத2க2ந்த3 தாரதம்யமு யாம்யகரிகி தத்
கருலகுன் கன2பலெ கடமு லொரசி2
சு2ரத ஸ்ரமஜமௌட சூபோபகயு ப2லெ
காமினீம்ருது2 க2ண்ட2 க3ர்ம முடி2பி,
பரிமள வாஹேச்ச1 ப்ராணமீப2லெ சிஞ்சு
ம்ருக2நாபி3 சர்ம ப3ச்த்ரிகலு தூ2றி
அஹித பன்னக2 பே3தி2லனிப2லெ க்ருஹவிடங்
கபு கலாபுல னொய்ய கறுலு நிமிரி

தே. வீடிசாமக்2ரி கனுகொ2ன வேக2பட2க
நட2வ தனதி2க்கு புஷ்ப த2ந்த த்2விபம்பு2
எக்கெனோ யன ஜட2க2தி எபுடு பொலயு
அந்து2 சந்த2ன ஸிக1ரி மந்தா2னிலுண்டு2 II—38

உமிழ்தல், உதைத்தல், உரைத்தல், சிரித்தல் ஆகிய தூண்டுகோற் செயல்கள் செய்து தம்மை இகழ்ந்த நங்கையரை (நங்கைக்குப்) பிடித்துத் தருக என்று சில மரங்கள் (அணைத்தல்: பார்த்தல், தொடுதல் முதலிய தூண்டுகோற் செயல்கள் செய்யப் பட்ட) மரங்களிடம் கூறி, வண்டுகளாகிய சங்கிலியாற் பிணித்து, நம்பிக்கையின்றி, மன்மதனின் படையாகிய கிளி, குயில்களை கூட்டிக்கொண்டு முற்றுகையிட்டனவோ எனும்படியாக பூங்கா வளங்கள் எழில் பெற்றிலங்கின.* II—37

தென்திசையானையின் மதத்துக்கும் மதுரை நகர யானை யின் மதத்துக்கும் உள்ள வேறுபாட்டைக் காண வேண்டும் என்று கருதியது போல கடாம் (யானையின் கன்னம்) உரசி,

கலவியிற் களைத்தவர்பால் அருள் கொண்டாற் போல் காரிகையாரின் கன்ன வியர்வையைத் துடைத்து, கிழித்த நாபியுடன் கிடக்கும் கஸ்தூரிமான்கட்கு உயிர் கொடுக்கப் போவதுபோல அதன் உந்திப்பையில் நுழைந்து,

தன் பகையான பாம்புகளைக் கொல்லும் என்பதால் இல்லக் கூரைகளில் உள்ள மயில்களின் இறகினை (நேயமோடு) தடவி,

நகரின் செல்வச் செழிப்பினை விரைவின்றி மெல்லக் காண்பதுபோல, மேல் திசையானை மேல் ஏறி வந்தாற்போல மென்னடையில் எப்போதும் அந்த மதுரையில் சந்தன மலையி லிருந்த வந்த மந்த மாருதன் (இளந்தென்றல்) இன்புறுத்துவான்.

(தென்றற்குரிய மணம், தண்மை, மென்னடைகட்கு காரணம் கற்பிக்கப்பட்ட நயம் காண்க) II—38

---

* (நந்தன மரங்கள் பூத்தலால் வண்டுகளாலும், பழங்கள் மிகுந்ததால் கிளிகளாலும், தளிர்கள் மிகலால் குயில்களாலும் நிறைந்து பொலிவுற்றன என்பது கருத்து)

(வடமொழி இலக்கிய மரபில் பெண்களின் சில செயல்கள் சில மரங்கட்டு எருவிட்டாற்போல தூண்டற்கிரியை (தோகதம்) ஆற்றும் என்று கற்பிப்பர். சூடாமணி நிகண்டு 12—109 பாடல் இதனை விளக்கும்.

"ஏடவிழ் மகிழ் சுவைக்க, எழிற்பாலை நண்பு கூடப்
பாடலம் நிந்திக்கத் தேம்படி முல்லை நகைக்கப் புன்னை
ஆட, நீள் குரா அணைக்க, அசோகுதைத்திட, வாசந்தி
பாட, மாப்பார்க்க வார்சண்பக நிழல்படத் தளிர்க்கும்"

இதற்குரிய வடமொழிக் காரிகை.

"அசோகஸ் சரணாஹத்யா வகுளோமுக சீதுனா,
ஆலிங்கனாத் குரவகஸ் திலகோ வீக்ஷணேனச
கரஸ்பர்ஸணே மாகந்தோ முகராகேன சம்பக;
ஸல்லாபத: கர்ணிகார; சிந்துவாரோ முகானிலாத்
கீத்யா ப்ரியாளுர் நிதராம் நமேரு ஹஸிதேன ச"

## மத்ச்2யத்3வஜாடு

சீ2. த்2வத்2யயோ பாய தீ3வித்2வத்2வதம்ச2ம் பு2
ஷாட்2 கு2ண்ய சாதுரீ சக்ரவர்தி,
க்ரீடா2சலீக்ருத ஸ்ரீக1ண்ட2 கி2ரி ராஜாடு
கனகாத்2ரி முத்2ரண க்2ரந்த1 கர்த
யந்தூ2 நிப2த்தா3ப்3த2 ப்2ருந்த2 வேத2ண்டா2ளி
வனநிதி3 ச்2தம்ப3 நாதுனிக ரகு3வு
தாம்ரபர்ண்யமல பாத1ஃ கேளிஹம்ச2ம்பு2,
லங்கேஸ மைத்ரீ ப்ரியங்கருண்டு2

தே. ச்2வச்2தி ச்ருத்2வாச்2துத்ய க2ச்2திமக3வ
மகுட மோடன ஸரகோடி மந்த்ரப்3ருத்ய
பூ3த பூ3தாத்த ஸாம்ப3வ பூ3மிகுண்டு2
தத்புரம் பே2லு பாண்ட்ய மத்ச்2யத்3 வஜாடு2 II—39

உ. இந்து2குலாவதம்ச2 மதடே2லறி னேதரிகா2 ட2ரின் ப்ரஜல்
கந்த2 கொனண்டொ2ருண்டொ2ருதலன் வினிபிஞ்சினமாட
டெ2ந்த2முன்
செந்த2 முத2ம்பு2 தக்கி செட2 சேயடொ2ருன் வினதாச்2
யுடௌ2நுதிம்
பந்தனு பந்த2னு கொறத பல்கடு2 ஸஹரத தானுமிஞ்சியுன்
II—40

## மீனக்கொடியோன்

சந்தி (நட்பு) விக்ரகங்களாகிய அறுகுணங்களில் (அரச நீதியில்) சிறந்த சக்கரவர்த்தியும் ஈரிரண்டு (நான்கு—சாமதான, பேத தண்டங்கள்) உபாயங்களாகிய அறிவில் சிறந்த பண்டிதனும், மலய (பொதிகை) மலையை விளையாடும் செய்குன்றமாகத் கொண்டவும், பொன்மலை (மேரு)யில் தன் பெயர் பொறித்த நூலாசிரியனும் சங்கிலியாற் கட்டப்பட்ட மேகங்கள் போன்ற யானைகள் உடையவனும், கடலிற்கு அணைகோலிய தற்கால இராமனும், தாமிரபரணி (பொருனை) நதியின் தூய நண்ணீரில் களிக்கும் அன்னப் பறவையானவனும் இலங்கைக்கு அரசனுடன் நட்புடையவனும் அகத்திய முனிவனுடைய ஆசிகளைப் பெற்றவனும், இந்திரனையும் வெல்லும் திறன் படைத்தவனும் பூதகணங்களை வசப்படுத்தும் சிவபெருமானின் தொடர்பான நிலத்துக்கதிபதியானவனும் ஆகிய மீனக்கொடியோன் ஆகிய பாண்டியன் அந்நகரை ஆண்டு வந்தான். II—39

சந்திரகுலத்திற் சிறந்தவனாகிய அம்மன்னன் எப்போதும் நீதி வழுவாது இருப்பான். மனம் வருந்துமாறு மக்களிடமிருந்து வரி (இறை) வசூலிக்க (ஏற்க) மாட்டான். ஒருவர் கூறும் புறஞ் சொற்களைக் கேட்டு, மனத்துட்கொண்டு மகிழ்ச்சி கெடுமாறு பிறருக்குக் கெடுதல் செய்ய மாட்டான். தன்னைப் புகழ்ந்தால் (நாணத்தால்) தலை குனிவான். தான் வீரனாகினும் கோழையைக் கூட குறை கூற மாட்டான். II—40

சீ.[2] பாடீர கிரிவனீ வாடி க்ரீடி[2]ஞ்சியு
அஹிப[3]யம் பெ[2]றுக[2]டா[2]வந்தயைன,
அத்யந்த மிதபா[3]ஷ ணவிகத்த[1]னுண்ட[2]ய்யு
பருல கேரட[2]முன ப[3]ங்க[3] பறுசு
ப்ரேம தாதாம்ர பர்ணிகி நாது[1]ட[2]ய்யுனு
ச[2]த்[3]கோ[3]ஷ்டிசேனனன் ஜனதமெலகு[2]
மஹனீய மஹிமதா மது[3]ராச்[2]பது[2]ண்ட[2]ய்யு
லாவண்ய கலன உல்லாச[2] மொந்து[2]

தே. விஷதி[3] லஹரிபி[3]தோ[2] த்பதத்ப்ருஷத ஜடில
வலது[2]ருக்ரமதிமிவர வால பதன
துலித பரப[2]லகரி ஸிரச்[2]த[1]ல ச[2]முத்த[1]
ப[1]ஹுள முக்தா விமுக்தா சி[2]பாதுட[2]தடு[1] II—41

ஸா. தா[2]னத்யாக[2] பதத்ரமை தொலுபதத்ரம்பு[2] தா[3]ரன் ச[2]தா[2]
நானன் தத்சி[2]த கீர்திஹம்சி2 சனுமிண்டன்
க்ரொத்தனா நேல நா
நாநீரார்த்[2]ர பதத்ர யய்யு வடி[2]மிண்டன் பாறுதஜ்ஜாதி கே
லா நில்சுன் க[2]தியன்யபத்ரிக[2]தி பத்ரைக ப்ரேதே[2]ஸா
ப்லுதின் II—42

மலயமலைக் காடுகளில் விளையாடினும், பாம்புகட்கு, கடுகளவும் அஞ்சமாட்டான். மிகமிகக் குறைவாகப் பேசுபவனாக தற்புகழ்ச்சியற்றவனாக, பிறரைக் கேலிப் பேச்சிலேயே அடக்கு பவனாக (சேர மன்னர்களை ஒடுக்குபவனாக) இருந்தான். தாமிரபரணிக்கு (தென்திசை பெண் யானையின் பெயர்)த் தலைவனாக இருந்தாலும் நல்லோர் (சங்கத்தார்) உறவினால் இகழ் (அஞ்சனம்-மை) இல்லாதவனாகவும் இருந்தான்.

(அஞ்சனம் எனும் யானை தாமிரபரணி எனும் பிடியின் கணவன் ஆதலின் இக்கற்பனை செய்யப்பட்டது)

சிறந்த பெருமையினால் மதுர (மதுரைநகர்-இனிப்பு) முடையவனாயினும், லாவணியம் (அழகு-உப்பு) கூடியிருந்தும் சிறப்புற்றான்.

கடல் அலைகள் முறிந்து வீழச் சிதறிய நீர்த்துளிகளை உண்டாக்கித் திரியும் திமிங்கலத்தின் வால் வீச்சுப்போல, (அலை போன்ற) பகைமன்னர் யானைகளின் கும்பங்களில் இருந்து (நீர்த்துளி போன்ற) முத்துக்கள் சிதறி விழும்படிச் செய்யும் (வால்போன்ற) வாள் வீச்சினையுடைய (திமிங்கலம் போன்ற) தோள்களை உடையவனாக அந்த மன்னன் இருந்தான். II—41

தானம் (பிறர் கேட்ப தாரை வார்த்துத் தருவது) தியாகம் (பிறர் கேளாமலேயே தாமாகவே அளிப்பது) என்னும் இரண்டு இறக்கைகளையுடைய அம்மன்னனுடைய புகழ் என்னும் அன்னப் பறவை, தானமாகிய இறகு நனைந்தாலும், பிற பறவை போலன்றி ஈரிறகுகள் நனைந்தாலும் பறக்கும் தன்மையுடைய தாதலின் வானத்தில் பறந்து திரியும்.

[அன்னம் இரு சிறகுகள் நனைந்தாலும் பறக்கும் என்பது மரபு) II—42

சீ2. ஸ்ஃகசுத2ம்ப2மு கொ2லுசு2லசே நிப2த்த3மை
வாராங்க3னாகா2ர கார பட2க2,
கி2ரிகா நிகாயம்பு2 லரிஸமின்ய ப2ஹுபுர
ஹர்ம்ய வாடிகல செண்டா2டு2சுண்ட2
க்ரந்து2கா2 னிதரேதரம்பு2 ராயிடி2 சேயு
ராஜுலு தனநூபுரமுன ஒது2க2
நெக2டு3 அனாவ்ருஷ்டி நிஜப2லேப3 ச்2பர்தி1
ச2மதா2ன்ய கரடி க2ண்ட2முல சேர

தே. தா2னவேளல அதிவ்ருஷ்டி தனகு ஹச்த
க2தமுகாக2 ப்ரதாபாக்னி க்ராகி2போவு
கண்டகுல யந்து ஸலப3த கலயனட2க2
ஏலு ஆபாண்ட்2யுடு2 மஹிநிரீதி காக II—43

வ. அம்மஹீ வல்லபு3ண்டி2 வ்வித3ம்பு2ன சா2ம்ராஜ்ய வைப3
வம்பு2லு அனுப3விஞ்சு சுண்ட2 கொந்த காலம்பு2ன II—44

க்2ரீஷ்மமு

தே. பாடல வசு2ந்த3ராருஹ பா3க2தே3ய
மாதத மரீசிகாம்பு2 பர்ஷாக2மம்பு2
த3ரணி பொட2சூபெ அந்த நிதா2க3ச2மய
மத2டுதோ ஸால்மலீப1ல வித2ளனம்பு2 II—45

கிளிக் கூட்டம் சங்கிலிகளால் கணிகையர் இல்லங்களில் சிறைப்படுத்தப்பட்டும், சிற்றெலிகளின் கூட்டம் பகைவரின் சூனியமாகிய மாளிகைகளில் செண்டாடிக் கொண்டிருக்கவும், தன் வீரக்கழலில் பிரதிமைகளாக உள்ள சிற்றரசர்கள் மட்டுமே உரசிக் கொண்டு அடங்கிக் கிடப்ப, தன் படையிலுள்ள யானை கட்கு போட்டியான எதிரி யானைகளின் கன்னங்களில் (மதம் இன்றி) அனாவிருட்டி (மழையின்மை) சேர்ந்து கொள்ள, தானம் (கொடை) தரும்போது தனது கையில் அதிவிருட்டி (மிகுமழை) அமைந்துவிட, தன் பிரதாபம் (ஆற்றல்) என்னும் தீயில் எதிரிகள் பொசுங்கிய விட்டில்கள் ஆகவும் அப்பாண்டிய மன்னன் இவ்விதம் இவ்வுலகை ஆட்சி புரிந்து வந்தான்.

(அதி விருஷ்டி அநாவிருஷ்டிர் மூஷிகாஸ் ஸபலர் சுகா. அத்யாபன்னாஸ்ச ராஜான: ஷடேதே ஈதய: ஸ்ம்ருதா.

எனும் சுலோகப்படி ஒரு நாட்டின் துன்பங்களான மழை யின்மை, மிகுமழை, எலி, விட்டில், கிளிகள் பயிர், தானியங் களை அழித்தல், எதிரி மன்னர்கள் படை எடுப்பு ஆகியவற்றைக் கடந்து நலமான வளமுடன் ஆட்சி செய்தான் என்பது கருத்து.) II—43

அவ்வரசன் இவ்விதமாக சாம்ராஜ்ய வைபவங்களை அனுபவித்துக் கொண்டிருக்கும்போது சில காலம் கடந்ததும். II—44

## முது வேனில்

பாதிரி மரம் பாக்கியம் பெற்றது போலப் பூக்கவும், கானல் நீர் தோன்றும் காலமும், இலவம் பழங்களை உடைக்கச் செய்வது மாகிய கோடைக் (முதுவேனிற்) காலம் பூமியில் வந்தது. II—45

சீ2. நிர்ஜ1ர ப்ரப2ல வேணிக லிங்க சட்ரால
பேரின ப்ராசி பெண்பீ2ட லெக2செ
நெறுகுலு படி2ய நீரிவுர கு2வ்வல பட்ட
போயு நீராடா2ட2 பொலமு நெறசெ2
சு2ரகா2லி த2வத2க்2த3 தருபர்ணததி ரேப
பாவுராலனி டே2க2 பது2வு தூ2றெ
நித்2ரிதத்2ருச்சா1ய,நிலுவக ஜருக2 வெம்
ப2டி2ன யத்3வக2 பங்க்தி பொரலுபெட்டெ

தே. க்ஷேத்ர பாலுன குதி2கின சீரலாறு
சாகிரேவுல க2முலய்யெ ச2கலதி2ஸலு
தெலுபுலுக2 தோசு எண்ட2மாவுல ப2யள்ள
கந்தெ2னிவி யெண்ட2னன தி1ங்முக1முலு ராஜெ II—46

ச. ச2ரியகு2னிட்டி வெட்டனிவி ச2ர்வமுனஞ்சட மீதி3ச்2ருஷ்டிகை
ஸரதி3பதி2 ங்மருஜ்வலித தசண்ட தராதப வஹ்னி காலகா2
கருவுலஜுண்டு2 வீனிபயிகட்டெனனன் கனுபட்டெ வெச்சலன்
கி2ரிகிரிகாச2 ராங்க2முல கப்பின றொம்புலுஅந்த
ஆறகன் II—47

ம. த2வதூ3மம்பு தமம்புலோ தமரச2 த்ரவ்யம்பு2 பங்கேஜபா3ந்
த3வுபா3னு ப்ரததுல் ஹரிம்ப குயிவெண்டன் வெள்ளு
ஸஒன்யோருகூ
பவிதானம்ப2ன சூட2சூட2 புட2மின் பாடில்லிபை விப்புலை
யவச2ம் பஞ்சுலனாட2கா எக2செ2 வாத்யாளின்
ரஜஸ்சக்ரமுல் II—48

அருவி வெள்ளம் வற்றியதும் பாறைகளில் தேங்கிய பாசி வரண்டு பெரும் பிளவுகளாக எழுந்தன. குறவர்கள், குழிகளில் நீர் வற்றியதால் குருவிகளைப் பிடிப்பதற்காக ஆங்காங்கு கொண்டுவந்து ஊற்றிய நீர் தெரிந்தது.

காட்டுத்தீயால் பொசுங்கிய மர இலைகளை சூறாவளிக் காற்று மேலே கிளப்பவும், புறாக்கள் எனக் கருதி வல்லூறுகள் ஊடே பாய்ந்தன. மரத்தடி நிழலில் தூங்கிய வழிப்போக்கர்கள் நிழல் நகர நகர தாமும் அதைத் தொடர்ந்து புரண்டு புரண்டு படுத்தனர். திகம்பரர் (திசையே உடையானவர்) ஆன வைரவ (பைரவர்)ருக்குத் துவைத்த உடைகள் காயப்போட்ட வண்ணாந்துறை போல எல்லா திசைகளும் (வெளுத்து) இருந்தன. பேய்த்தேர் (கானல் நீர்)களால் வெளியிடங்கள் வெளுத்து வெயிலில் கன்றியது போல திசைகள் புகைப்படிந்து காணப்பட்டன. II—46

வேனிலில் யானை, பன்றி, காட்டெருமை, முதலியவற்றின் உடலில் மூடிக்கிடக்கும் சேறு காய்ந்து ஆறிய பிறகு; இந்த வெக்கையில் எல்லா உயிர்களும் அழிந்துவிடும் என்றஞ்சிய பிரம்மதேவன் இனிவரும் சிருஷ்டிக் (படைப்புக்)காக மேலக் காற்றினால் ஒளிரும் கொடும் வெயில் எனும் தீயில் வேக வைத்து அச்சுவார்க்க வைத்த மூசைகளோ எனும்படியாக இருந்தது.

அச்சு வார்த்தல்—மோல்டிங் (Moalding) II—47

காட்டுத் தீயின் புகை என்னும் இருட்டில் தங்களது தண்ணீர் ஆகிய திரவியத்தை (பொருளை) தாமரை கேள்வனின் (சூரியனின்) கதிர்கள் (எனும் ஆட்கள்) கவர்ந்து சென்று விடவும் (இந்த அனியாயத்தை சூரியனிடம்) முறையிடுவதற்காக வானத்திற்குச் செல்லும் பாழும் உறை கிணறுகளோ எனும்படியாக, பார்க்கும் போதே பூமியில் உருவாகி மேலே அகன்றுள்ள, வைக்கோல் சுற்றியும் ஆட, சூறாவளிக்காற்றில் பூழ்தி வட்டங்கள் மேலே பறந்து சென்றன.

(புகை கருநீல நிறமாதலின் இருட்டெனக் கூறப்பட்டது. சூறாவளிகள் கிணறுகளாக உவமிக்கப்பட்டன. சூரியன் தாமரை கேள்வன் ஆதலின், தாமரை நீர் இன்றி வாழாதாதலின் முறையிட்டதும் நீர்மீண்டும் கிடைக்கும் என்று கருதியதாகக் கருத்து. சூரியன்கதிரால் நீர் நீராவியாகி முகிலாகி மீண்டும் மழையாக திரும்பி வருவது இயற்கை. அதை நினைவிற்கொண்டு இக்கற்பனை செய்யப்பட்டுள்ளது.) II—48

ம. பட$^{2}$மரவெட்டனய்யுடு$^{2}$ குப்ராஸன மொல்லக கூடிபேத$^{2}$லை
ப$^{2}$ட$^{2}$லிகனூடு$^{2}$ னச்சிலுவ ப்ரக்க$^{2}$முலன் ரவியாஜ்ஞு மாடிகின்
முடி$^{2}$யிட$^{2}$ பிச்சுகு$^{2}$ண்டு ரத$^{1}$முன் நிலுவன் பயனம்பு$^{2}$ சா$^{2}$க$^{2}$மின்
ஜட$^{2}$னு வஹிஞ்செ நாக$^{2}$தி வச$^{2}$ம்பு$^{2}$லு தீ$^{3}$ர்க$^{3}$முலய்யெ
அத்தறின் II—49

க. தரணிக$^{1}$ர கிரணஸிகி$^{1}$ ஜக$^{2}$
மெரியிம்பக$^{2}$ பொட$^{2}$மி கா$^{2}$லிஎக$^{2}$சி$^{2}$ன ப$^{3}$சி$^{2}$தோத்
கரமனக ஸால் மலீதரு
பரிணதப$^{1}$ல தூலமர்க பத$^{1}$முன னெக$^{2}$செ$^{2}$ன் II—50

ச. ப$^{3}$ரிதநிஜாம்பு$^{2}$ பி$^{2}$ம்பி$^{2}$தவிபா$^{3}$கர பி$^{2}$ம்ப$^{2}$ விஜ்ரும்பி$^{3}$த ப்ரபா$^{8}$ங்
குரமுலன த்$^{3}$வனீன க்ருத க்ஷபக பங்க்துலு வெங்செ
அப்$^{2}$தி$^{3}$ராட்$^{2}$
விரஹப$^{3}$ரம்பு$^{2}$னன் பொட$^{2}$மு வெச்சகு ஸாந்தியொனர்ப
வாஹினீ
தருணுலு மேனத$^{2}$ட்டமுக$^{2}$ தால்சினமுத்தெபு பேருலோயனன்
II—51

சூரியனின் தேர்க்கயிறாகிய பாம்புகள், மேல்காற்று ஆகிய சுடுகாற்றினை (உணவு ஆதலின்) உண்ண முடியாமல், வேறுணவின்றி பட்டினி கிடந்து களைத்துப்போகவே, பிடி நழுவி விட்டதால், முடவனாகிய அருணன் ஆகிய தேரோட்டி சூரியனின் ஆணையால், பாம்புக் கயிற்றினை முடிச்சுப்போட அடிக்கடி தேரை நிறுத்தியதால், பயணம் தடைபட்டுத் தாமதம் ஆனதென பகல் நீண்டதாக வேனிற்காலம் இருந்தது.

(ரதஸ்யேகம் சக்ரம் புஜங்கயமிதா: சப்த துரகர் நிராலம்போ மார்க்கஸ் சரணவிகல: சாரதிரபி ரவிர் யாத்யே வாஸ்தம் ப்ரதிதினமபாரஸ்ய நபாஸ: க்ரிய சித்தி: சத்வே பவதி மஹதர்ம நோபகரனே —போஜபிரபந்தம்.

தேர்ச்சக்கரம் ஒன்று. பாம்புகள் கயிறு, ஏழு குதிரைகள். ஆதாரமில்லா வழி. முடவன் சாரதி. (இப்படி இருந்தும்) சூரியன் தினந்தோறும் எல்லையற்ற வானத்தைக் கடந்து அத்தம் புகுகின்றான். பெரியோர்க்கட்கு தம்மன உறுதியால்தான் செயலில் வெற்றி பெறுகின்றார்களே ஒழிய துணைக் கருவிகளால் அன்று.

இந்த சுலோகப்படி ஒன்றையாழியானாகிய சூரியனுக்கு பாம்பக்கயிறும் முடவனாகிய சாரதியும் இருப்பதால் பகல் நீண்டதெனக் கற்பிக்கப்பட்டது.) II—49

சூரியனின் கதிர்க்கற்றைகள் என்னும் நெருப்பில் வெந்த பூமியின் நீறு (சாம்பல்) காற்றால் பறந்தது போல இலவமரத்தின் பழுத்த பழங்கள் உடைந்து சிதறிய பஞ்சு வானில் பரந்தது.
II—50

வழிப்போக்கர்களால் தோண்டப்பட்ட ஊற்றுக் குழிகளில் நிறைந்த நீரில் பிரதிபலித்த சூரிய பிம்பங்கள், கடலரசனைப் பிரிந்த விரக தாபத்தை நீக்குவதற்காக நதி நங்கையர் தம் மேனியில் அணிந்த முத்து வடங்களோ எனும்படியாக இருந்தன.

(நதிகளாகிய நங்கையர் வேனிலில் நீர்ப்பெருக்கின்மையால் கடலினைத் தழுவ முடியாத பிரிவுத் துயரால் ஏற்பட்ட வெம்மையைப் போக்க குளிர்ந்த முத்து மாலையணிந்தது போலக் கற்பனை.) II—51

ம. அதிவ்ருஷ்டின் முனுவார்தி3 கூார்சுனெட2 காடெள2டன்
தமின்கூர்சுனன்
மதிலஞ்சம்பு2க3 ஹேமடங்கமுலு மிண்டன் பொல்சு
பர்ஜன்யதே3
வதகீ நெத்தின கேலனா பொலிசெ நிர்வாரிச்2ரவந்தின் பயஸ்
சுதிநம்ரச்ச1 த2த்3ருஸ்ய கர்ணிகமுலை யுன்னாள
நாளீகமுல் I—52

சீ3. நுலிவாடு3 நாசுவல்புல கொ2ந்தொக2ர்சிலே
பொலவல் சுக2ாலி வேபோக எறிகி3
கட2கு வெள்ளக2 ஒக்ககட2னுண்டி3 த்ரொக்குசு
உலுசலு சிறுத கு3ல்லல நமலுசு
எண்ட2ரிகாலிறிகின எக2சி3 யொக்கிஞ்சுக
தொலகி3 ஸிதத்ரோடி தூடி தினுசு
தடி3யிங்குனில சேமமடி2வோனி தம்மிகும்3
புலுனு ஜீலுகு3ல எண்ட2லு க2ட2புசு

தே. தனருப2க பங்க்துலகு ஜானுத2க்3ன மய்யெ
செருவுக2மி யுடு3முலன ரேல்திரிகெ2 குக்க
வசி2கி பா2வுல படு2டகு பசு2லயெருவு
டெறலகு மொச2ள்ளு மலுகு3 மீன்பொறிய தூ2றெ I—53

உ. மீடகு3மீலனெல்ல முனும்ரிங்கி3 க்ரமம்பு2ன நைன
எண்ட2பென்
பீ2டிகவெண்ட தோசுதொக2 வேருப2டி2ன் கொ2டு2பை
செலங்க2கா2
த்ரோடிக கர்2தம த்2ரவமுதோ எனயிஞ்சின
பொ2ம்மிடா2யடா2த்
கூடகுலம்பு லேஜென ப2கோடகுலம் பு2ஜல
ஹ்ரத3ம்பு2லன் I—54

வருணதேவன் மிகுமழை பெய்வித்து அதனால் முன் நாட்களில் கடலோடு கூட்டுவிப்பவனாக இருந்தமையால், அதுபோல இந்நாளிலும் செய்வித்தருள வேண்டுமென்று இலஞ்சம் (காணிக்கை) ஆக, பொற்காசுகளை, நதி வானத்திலுள்ள வருண தேவனுக்கு தன்கையால் கொடுப்பதுபோல நீரற்ற நதியில் வெள்ளம் இன்மையால் வணங்கிய இதழ்களோடு கூடிய பொகுட்டினையுடைய மேல் நிவந்ததாமரைத் தண்டுகள் தோன்றின.

(மேலே தூக்கிய தாமரைத் தண்டு கரங்கள், பொகுட்டு உள்ளங்கை. அதிலுள்ள மஞ்சள் வண்ண விதைகள் பொற்காசுகள் என்று உவமிக்கப்பட்டுள்ளது.) II—52

சிறிதே வாடிய பாசிகளைத் தின்றதால் கழுத்தில் துவர்ப்பு அடைந்து, இளம்புலால் மணம் கலந்த காற்று வீசுவதால் விரைந்து செல்லாமல் மெல்ல ஒதுங்கி, முடிவாக சென்று, ஒரு பக்கமாக இருந்து மிதித்தவாறு அயிரை மீன்களையும், சிறு நத்தைச்சிப்பிகளையும் மென்றவாறு, நண்டு தன் காலைக் கவ்விடவும் சிறிது விலகி அலகால் குத்தித் தின்றும், ஈரம்புலர்ந்த நிலத்தில் சேம்புத் தோட்டம் போல உள்ளதாமரைத் தண்டுகளுக்கிடையே வெயிலைக் கழித்தும், இருக்கிற கொக்குகட்கு குளங்கள் முழங்கால் அளவானது.

உடும்புகள் போல முதலைகள் நாய்கட் கஞ்சி கிணற்றில் வீழ்ந்தும், பசுஞ்சாணத்திலுள்ள புழுக்களைத் தின்பதற்காகவும் இரவில் திரியலாயின. விலாங்கு (பாம்பு போன்ற மீன்) மீன்கள் பொந்துகளில் புகுந்தன. II—53

ஆழமான குட்டங்களில் நீர் வற்றவும் அங்குள்ள பெருநாரைகள் முதலில் பெரிய மீன்களை எல்லாம் விழுங்கி, வெயிலிற் காய்ந்த பிளவுகளின் வழியே தோன்றும் அல்லி வேரினைத் தொடர்ந்து உள்ள சேற்றின் சாற்றோடு கலந்து சின்னஞ்சிறு மீன்களையும் அதன் சினைகளையும் குடித்தன. II—54

ஸா. ப்ராதர்வேளல னட்டிவெட்ட சொ2க2ஸை2 பாடில்லெ

கும்போ3ம்ப3னோ

த்2பூ3தாம்பு2த்3வனி வாத்3யமை மருத2த3ஃ புன்ஜீப3வத் பாடல

வ்ராதாம்ரேடி2த சி2க்தபூ3சு2ர பி3ளாராமாம்பு2 குல்யாப3ஹ2ச்2

ரோதச2ந்து3லனந்து யந்த்ரனதிக்ருத் ப்ரோத்2கீ2த

கே2யௌக3முல் I—55

தே. மெண்டு2மீறின பக2டி பீ2றெண்ட2 தாகி

யொல்ல போயின லேபொ2ண்டு2 மல்லெ பொத2ல

துத2ல சப்படலை கடு தொ2ட்ட2 லகு2சு

பொட2மெ மொக்க2லக2மு லக்கி2 பொ2ப்ப2லட்லு I—56

ம. நுடி2நாபி3 ச்ச1லனன் ச2ரோஜமுலு சக்ஷுஃ ப்ரக்ரியன்

நாசுக்ரொ

ம்முடி2 த2ம்ப3ம்பு2ன சக்ரபே1ன படலம்பு2ல் சன்னுலுன்

நவ்வுகா2

அட2ரன் சேசி2 நிதா2க1பீ3தி ச2லிலம் பா2காமி பீ3ஜார்த1மை

கட2வம் பெ2ட்டின வாரி தே2வதலு நாகாந்தாளி யொப்புன்

ப்ரபன் I—57

விடியலில் அந்த வேனிற்காலத்தில் பாதிரிப் பூக்களின் மகரந்தம் நனைந்த பூந்தோட்டத்தின் மணமிக்க தென்றல் வீசும் போது அம்மரங்கட்கு நீர் பாய்ச்சும் ஏற்றக்காரர்கள் பாடும் உரத்த குரலிலான பாட்டுக்கு, ஏற்றப்பானை நீர் மொண்ட போது ஏற்படும் ஒலி மிருதங்க வாத்தியமாக அமைய மனம் மகிழ்விப்பதாக இருந்தது. II—55

மிகக் கொடுமையான உச்சி வெயிலில் வாடிய இளம் குண்டு மல்லிகைப் புதர்களின் முனையில் வேனற்கொப்புளங்கள் போல பெரிய மொட்டுக்கள் உருவாகின. II—56

நீர்ச்சுழி உந்தியாகவும், தாமரை மலர்கள் கண்களாகவும் பாசி கூந்தலாகவும் சக்கரவாகம் (அன்றில்) பறவை முலைகளாக வும், நுரை நகையாகவும் தம்முன் அமைத்துக் கொண்டு, கோடைக்குப் பயந்து (நீர் அற்று விடுமென அஞ்சி) எதிர் காலத்துக்கே வேண்டுமென்று கருதி விதை எடுத்து வைத்தாற் போல தண்ணீரைக் குடங்களில் வைத்து பாதுகாத்து உதவும் நீரரமகளிர் (ஜலதேவை)கள் என்னும்படியாக வேனிற்பந்தலில் இள நங்கையர் இருந்தனர்.

(சுழி தாமரை முதலியவற்றைத்தம் அவயவங்களில் தாங்கிய ஜலதேவதைகள் வரம் ஈந்தாற்போல வருவோர்க்கு தண்ணீர் தந்து உயிர்தரும் நங்கையர் வேனிற்காலத்து தேவதைகளாகவே தோன்றுவர் என்பது கருத்து.) II—57

சீ2. செ2க2குல்கி மறுகு2 சொச்சின ஜஹ்னுரவிஜல
ச2ரணி மல்லெல தோடி2 ஜட2லு மெறய,
வலிசன்னு கொமரு ம்ருச்சிலின தி2ம்மனு தெறங்
கு2ன முஞ்சு க2ரிக2 காகு2ல முனுங்க2,
தா3ரலோ தோசு கந்த2ளுகுலு வாசிதோத்
பலபத்ர பதன ச2ம்ப்3ராந்தி ஒச2க2
தெலிமோமு பச2மெச்சி தலயூசுடெறிகி2மா
னக நவ்வு நேர்பு டெ2ந்த2முல கரப,

தே. தெறவலிடு நீரு வோயு பந்தி2ரிய சேரி
யவல கொறகா2க பிச்சு கூ2ண்டை யனங்கு2
ட2னுபுகொண சொச்செ கல்லகு2ட்டமர வாரி
கத்3வகு2லு லாசியிடு2 விடி2யமுல பேர I—58

ச. தொடி2ப2ட2 அம்மலக்கலனி தூலுசு தீ2னத
தோ2யிலொக்கு2சுன்
வட2மறி தேரதே2ர அலவாக்யமு லென்னக, மோமு கு2ப்பலு3ன்
கடு2கொனுகக்ஷ் தீப்துலு எகா2தி2க2 கன்கொ2னு
சிட்டகம்பு த்ரா
கு2டு3கனி ச2ன்னலன்னகி2ரி க்ரோல்பக பாந்து1
ப்ரபாப்ரபாலிகல் I—59

வெம்மைக்காற்றாது மறைவிடம் தேடிய கங்கையும் யமுனை போல மல்லிகைப் பூச்சூடிய சடை (கூந்தல்)கள் தோன்றவும்.

வட்டமுலை அழகினைத் திருடியது (முலைகட்கு குடம் உவமையாதலின்) அதனை மீண்டும் தருக என்று சோதித்திடல் போல பெரிய பானைகளில் (நீர் மொண்டுதரும்) அகப்பைகள் (துழாவிய படி) உள்ளே மூழ்கினவாகவும்.

நீரின் தாரையில் தோன்றும் கண்களின் பளபளப்பு, வாசனைக்காக இட்ட ஆம்பல்மலரிதழ்கள், வீழ்ந்துள்ளனவோ என்று மயங்கச் செய்யவும் ஒளிமிக்க முகத்தழகை மெச்சி தலை யசைக்கும் )நீர் குடிக்கும் வழிப்போக்கர்கள் ஊற்றுகின்ற நீர் போதும் என்று குறிப்பிடுவதற்கான சைகையாகக் கருதாமல் தலையசைப்பினை தம் அழகினை மெச்சித்தான் என்றுணர்ந்து) நிலையறிந்து (நீர் ஊற்றுதலை) நிறுத்தாமல், நகைபுரியும் சாது ரியத்துக்கு மனங்கரையவும் ஆக உள்ள நங்கையர்கள் உள்ள வேனிற் பந்தலில், மன்மதன் வேறிடங்கள் செல்ல இயலாத வனாகி போலி அதிகாரங்காட்டி வழிப்போக்கர்கள் அந்நங்கையர் அழகில் ஈடுபட்டு அன்புடன் தரும் தாம்பூலம் என்கின்ற சுங்கம் (வரி) பெற்றவனாக இருந்தான். II—59

(முதலில் தாகத்தால் களைத்துத்) தள்ளாடியவாறு வந்து அம்மா அக்கா! என்று கிறங்கியவாறு பரிதாபமாக வந்து கை குவித்து (நீர்ஊற்றியதும்) தாகம் தீர்ந்து களைப்பு தீர்ந்து விடவும், தாம் முனபு கூறிய (அம்மா, அக்க என்ற) சொற்களைத் கணிக்காமல், முகமும், முலையும், கக்கங்களும் ஏற இறங்க பார்த்தபடி குடிப்பதுபோல பாவனை செய்யும் ஒரு வழிப் போக்கனைப் பார்த்து, நீர்வார்ப்பது போல சன்னமாக நீரொழுகுமாறு தந்தபடி தமக்குள் குறிப்பாக சைகைகள் மூலம் சிரித்துக் கொண்டார்கள் * II—59

---

* காதா சப்த சதி பாடலின் சாயல் இதில் உள்ளது இப்பாடலைத் தழுவிய அப்பயதட்சிதரின் அலங்கார மேற்கொள் சுலோகம்.

யதோ ஊர்த் வாக்ஷ பிபத்யம்பு.
பதி கோ விரலா ங்குலி:
த தா ப்ரபா பாலி காபி தாராம்
விதனுதேதனும்.

மேலே பார்த்தவாறு தண்ணீர் குடிக்கும் வழிப்போக்கன் விரல்கள் நெகிழவிட்டு நீர் குடிப்பதுபோல இருப்ப, வேனிற் பந்தல் நங்கை கூட நீர் ஒழுக்கினை மெல்லிய தாக்கி இன்னும் மெலிதாக்கி ஊற்றினாள்.

(இருவரும் பிறர் அழகினை காண கூடக்கொஞ்ச நேரம் இருக்க வேண்டும் என்ற ஆர்வத்தினால் தண்ணீரைச் சிந்தவிட்டு நேரம் கடத்தினான். அவளும் தண்ணீர் சிறிது சிறிதாக ஊற்றி நேரம் மிகுவித்தாள் என்பது கருத்து.)

தே. எச2கு2 கட்டாவி க்ரிய ஆவிரெக2ய பக2டி
எண்ட2 உடு2காறகுண்டு2 பூ3மண்ட2லமுன
பொலிசெ மாபட பண்டு2 வென்னெல சகோர
போதவிததிகி சூபட்டு வோசி2னட்டு II—60

சீ2. பவலெல்ல தீ2ர்கி3 கரம்பு2வு சல்லு போராட
னலசி2, ம்ருணாளிகா ஜட2முலைன
பா2ஹுவுல் தமது2 கூர்பரமுல கெது2ருகா2
மலசி மூபுல கரதலமு லுனிசி,
ப்ரால்மாலி மிகு2லஆர்பனி கம்ம க்ரொம்முடி2
தனிமொக்க3 விரவாதி2 த2ண்ட2விரிய,
தௌ3த க2ந்தா3மோதி3 ஸீதல ச்2தனமுலு
வொந்த2 கௌகி2ள்ளதோ போ2ரகி2ல்லி,

தே. நாரிகேளாச2வபு தீபுடுரு பொலய,
வலிபெயொண்டொல்லெதோ உரச்2த1லுல கூர்கு
ப்ரியல வேகுவ தொட2 எச்சரிஞ்சி2 கலசி2
ரெலமி த3ன்யுலு தறபி வென்னல ப2யள்ள II—61

ச. ஹ்ருத2யமு லெப்புடுன்2 க2தியகேதறசௌ
வெட2கௌகி2லிந்தலுன்
கதி2ரெடு2 மேலு கார்யமுல கல்க2க மாடலயந்தெ2 கல்கு2பென்
சது2ருலு வட்டிஸைத்யமுலு சாலக1னம்ப2யி மண்டுவேச2வின்
பொத2லக2 நில்செ த2ம்பதுல பொந்து2 லனார்யுல பொந்து2
கைவடி2ன் II—62

தோசைக்கல்லில் மாவு ஊற்றியதும் கிளர்ந்த ஆவிபோல— நீராவிப்புகை எழவும், பகல்வெயில் ஆறாத பொழுதே காய்ந்த கல்போல உள்ள பூ மண்டலத்தில் இரவில் நிலவு பொழிவது சகோரப்பறவைக் குஞ்சுகட்டு மெல்லியதாக தோசை சுட்டுத் தந்தது போல இருந்தது. II—60

பகல் முழுதும் வாவியில் புனல் விளையாட்டில் பொழுதைக் கழித்துக் களைத்தும், தாமரைத் தண்டுபோலக் குளிர்ந்துவிட்ட தோள்களை முழுங்கைகட்கெதிராக வளைத்து கைகளைத் தழுவியவாறு, சோம்பலினால் நன்கு ஆறவிடாத மணம்மிக்க கூந்தலில் மல்லிகைப் பூக்கள் மலர. கழுவியும் சந்தன மணம் மிகுந்துள்ள குளிர் முலைகள் பொருந்த தழுவியும், புரண்டும், தென்னங்கள்ளின் இனியநெட்டுயிர்ப்புகள் உண்டாக, மெல்லிய ஒற்றைத் துகில் அணிந்து மார்பில் துயிலும் தம் நங்கையரை விடியலில் தொடை நெகிழ்த்தி எச்சரித்து பால்வெண்ணிலாவில் பாக்கிய சாலிகளான இளைஞர்கள் நிலா முற்றங்களில் கலந்து மகிழ்ந்தார்கள். II—61

நெஞ்சம் (வெம்மையின் உருக்கத்தால்) இணைபாராமல் வெட்டி அரவணைப்புகளுடன், மேலான செயலில் (கலவியில்) ஈடுபடாமல் வீண் பேச்சுக்களிலே பொழுதைப் போக்கி, வெறும் தன்மை மிக்க உபசாரங்களாலும் கொடும் வேனிற்காலத்தில் பண்பாடில்லாதவர்களின் கூட்டுறவு போல தம்பதியர்கள் கூடினர்.

(நெஞ்சமிணையாத செயலற்ற பேச்சுக்கள் உடைய நட்பு பண்பாடிலார் நட்பு ஆதலின் வேனிற்காலக் கலவிக்கு உவமிக்கப் பட்டுள்ளது.) II—62

உ. தீலகு2கந்து வெம்ப2டி2னெ தெம்மெரலுன் ரவிதீ2ப்தி கல்கி3பா
தாளமு பட்டுசுண்ட2 தமதாவுலு ம்ருச்சில பட்டியோஷதீ3
பாலுன கப்பகி2ஞ்செனன பைசு2ரபி3 ஸ்வச2னம்பு
நிஞ்செ, காந்
தாலச2 வக்த்ரசீ2ம விடுலார்சுனு ஸீரபு தாளவ்ரிந்தமுல் II—63

ச. ச2மசி2 கதா1வ ஸிஷ்டமகு2 சந்தன2ஸைல ச2மீரணம்பு2 க்ருத்
ரிமக2தி இந்த்2ரஜாலமுன தே தொட2கெ2ன் பு3விதாள
வ்ருந்தஜா
ல முலதி1 மாயயெளடகு தலம்ப ததீ2ய மயூரபிஞ்சி1கர
ப்3ரமணமெ சா2க்ஷிகாதெ2 நக2ரம்பு2ன அட்டிகடி1ந்தி3
வேச2வின் II—64

தே. அட்டி வேச2வி பெ2டி2த2ம்பு வெட்ட கதன
ஹச்2தமு செமர்சி சா2ரெகு லச்2தகம்பு2
து2சி2கிலக2 காதெ2 சவரிம்ப வஸமுகா2க
புஷ்பபா2ணுனி செறகுவில்புட2மி படி2யெ II—65

வேனிற்காலத்தில் அடங்கிக் கிடக்கும் மன்மதனைத் தொடர்ந்து தென்றலும், வெயிலுக்காற்றாது பாதாளம் புக முனையவும், (இளைஞர் தம் காதலியர்கட்கு) வெட்டிவேர் கட்டிய பனையோலை விசிறிகளால் வீசும் காற்று பெண்டிர் முகத்தில் படுவது எப்படியிருந்ததென்றால் (வெட்டிவேர் மருந்தாதலின், மருந்துக் கதிபதி சந்திரன் ஆதலாலும்) வெட்டிவேர் தன் மணத்தைத் திருடிய காற்றினை தம் தலைவனாகிய சந்திரன் (பெண்டிர்முகம்) பால் ஒப்படைத்தது போலத் தோன்றுகிறது. II—63

நகரில் அத்தகைய கடுமையான வேனிலில் சந்தனமலைத் தென்றல் அழிந்து புகழ் (கதை) மட்டும் மிஞ்சியதாகிவிட, அதை செயற்கையாக இந்திரஜாலமந்திரவாதி கொண்டுவந்தாற்போல விசிறிகள் காற்றைக்கொணர்ந்தன. விசிறி மாந்திரிகம் செய்கிறது என்பதற்கு அதில் மயிற்பீலி சூட்டியிருப்பதுவே சாட்சியாகும் அல்லவா? II—64

(மந்திரவாதி மயிற்பீலி வைத்திருப்பதுமரபு. ஆதலின் விசிறிக்கு மயிற்பீலி வைத்ததை இவ்விதம் உவமிக்கப் பட்டுள்ளது.)

அத்தகு கொடுமையான வெக்கையால் மன்மதனின் கைகள் வியர்வைமிகுதலால் பிடிநழுவி அடிக்கடி பூமியில் வீழ்ந்த கருப்புவில் எனும்படியாக அக்காலத்தில் கரும்பு பக்குவத்திற்கு வந்தது. II—65

ம. தருணுல் தல்லியொறன் குசம்பு$^{2}$ லுனுபன் தச்சை$^{1}$
த்யமுல்தீ$^{3}$முலை
பெரரேபன் சனுதெ$^{2}$ஞ்செ கா$^{2}$க! ரவிதீ$^{2}$ப்தின் க்ருங்கி
பாதாளக
ஹ்வரமுல் தூறின வாரிநீயது$^{2}$கு த்ராள்ளா தெச்சு?
நாதீ$^{2}$ர்க$^{3}$தச்
சிரக்ருஷ்டின் கனுநட்டி ஸைத்யமலரிஞ்சென் நூதுலந்த$^{2}$த்தறின்
II—66

ம. ச்$^{2}$வநிதா$^{2}$னோக்$^{2}$ர நிதா$^{2}$க$^{3}$ வைக$^{1}$ரினெ யூஷ்மன்
மல்லிகல் காமினீ
கனதா$^{2}$ நீலகசா க்$^{2}$ரபங்க்தி நெறியல்கா$^{2}$ பாபகா$^{2}$ பாடலல்
க$^{1}$னதன் தேனிய சோ$^{2}$ன கூர்செ, அதியெளகா$^{2}$ நாப$^{3}$யுன்
நிர்னிஷம்
பு$^{2}$னு தோபுட்டுவுலய்யு வேர்பட$^{2}$ கு$^{2}$ணம்பு$^{2}$ல் சூபகா$^{2}$
சூட$^{2}$மே II—67

ஸா. தாருண்யாதிக$^{2}$ சூதநூத்ன ப$^{1}$லயுக்தை லாபி$^{3}$கா$^{1}$ர ச்$^{2}$வனத்
தா$^{3}$ராதூ$^{3}$பித ஸுஷ்யத$^{2}$ம்பு$^{2}$ ஹ்ருத மாத்ச்யச்சே$^{1}$த$^{2}$ பாகோத்$^{2}$
க$^{2}$தோத்$^{2}$
காரம்புன் கனரார் சுபோ$^{3}$கு$^{2}$லகு ச$^{2}$ந்த்$^{3}$யா வேளலன்
கேளிகாங்
தாராப்$^{3}$யந்தர வாலுகாச்$^{2}$தி$^{1}$த ஹிமாந்தர் நாரிகேளாம்பு$^{2}$வுல்
II—68

இளமங்கையர் கைப்பிடிச்சுவல் முலை வைத்து (குனிந்து) நீர் இறைக்கவும், கதிரவனின் வெயிலுக்கு அஞ்சி பாதாள குகை களில் ஒளிந்து கொண்ட குளுமை.

(வேட்டைக்காரன் பழக்கிய விலங்கு, பறவைகள் மூலம் அதன் இனத்தைப் பிடித்து விடுவதுபோல) இந்த முலையின் குளுமைதான் மேலே கொணர்ந்தது அல்லாமல் முடிச்சுப்போட்ட கயிறுகளா கொண்டு வரமுடியும்? எனுமாறு மிகுந்த முயற்சியால் காணப்பட்ட தண்ணீரின் குளுமை கிணறுகளில் அக்காலத்தில் மகிழ்வூட்டியது.

''கூபோதகம் வடச்சாயா தாம்பூலம் தருணிகுசௌசீததாலே பவத்யுஷ்ண முஷ்ணகாலேது சீதல என்ற சுலோகப்படி கிணற்ற நீர், ஆலமரநிழல் தாம்பூலம், களிர் முலைகள், குளிர்காலத்தில் வெம்மையும், கோடை காலத்தில் குளுமையும் தருமாதலின் ]முலைகளின் குளுமைதான் கிணற்றின் குளுமையை மேலே கொண்டுவந்ததாகக் கற்பனை.] II—66

தனக்குக் காரணமாகிய கோடையைப் போலவே சூடுடைய மல்லிகை மலர்கள் இளநங்கையரின் கருங்கூந்தலை பிளவுகளாகப் பிரித்து விடவும், பாதிரிப் பூக்கள் மிகுதியினால் பூந்தேன் சாரலாகிச் சிந்தி அக்கூந்தலை இணைவித்தது (ஒரே காலத்து உதித்த மலர்களில் வேறுபாடுண்டாகுமோ என்றால்) அது சரித் தான். ஒரே கடலில் பிறந்த நஞ்சுவும் அமுதமும் வேறு வேறு பண்பு களைக் காட்டக் காண்கிறோம் அல்லவா? II—67

(மல்லிகை, பாதிரிப் பூக்கள் கோடையில் மலர்வன.)

மாவின் (பிஞ்சு, காய், செங்காய்—பழம்) இளமை கடந்த (குழந்தைமை,இளமை, வாலிபன், முதுமை எனும் நான்கு மனித நிலைக்குவமை) புதிய பழங்களோடு நன்கு எண்ணெய் ஊற்றி, சுய்யென்ற ஒலியுடன் தாளிதம் செய்து, வற்றிய நீரோடு கூடிய மீன் துண்டங்களும் நடுப்பகலில் உண்டு அது சீரணிக்கும்போது உண்டாகும் ஏப்பம் வரவே அதன் துவர்ப்பு அடங்குவதற்காக மாலைநேரத்தில் பூந்தோட்டத்தில் மணலில் வைக்கப்பட்ட தேங்காய்களின் இளநீர் பருகி, அங்குள்ள மக்கள் இன்பம் அனுபவித்தனர். II—68

க. க்[2]ராமக்[2]ராமம்புன ஒக
சா[2]மந்துனகிடி[2]ன சலுவ சப்பரமுலுதன்
பைமேதி[3]னி கும்படிலோ
தாமரலுன் போலெ அட்டிதறி ஒப்பாரென் II—69

தே. தோட பக[3]லுண்டி[2] மல்லெலு துறிமி,காவு
லமர மாபைன இக்ஷு யந்த்ரமுலு கொய்ய
சேருப்ரஜ வொல்செபா[3]வி வ்ருஷ்டிகிளி க்[2]ருட்டு[3]
தோ மது[3]ரிமேச்ச[1]டி[2]கு[3] எர்ர சீமலனக[2] II—70

## பரதே[2]ஸி விப்ருடு[2]

க. அப்பெனு வேச[2]வி விப[3]வமு
விப்புக[2] தன்னக[3]ர நிகட வ்ருஷகி[2]ரி ஹரிகின்
தெப்ப திருநாள்ளுரா முத[2]
மொப்பன் பரதே[2]ஸி விப்ருடொ[3]க்கடு[2] ப[3]க்தின் II—71

க. சே[2]விஞ்சி போவுதறி மது[1]
ராவிப[3]வமு சூட வச்சி ஸ்ராந்திமெயின் மா
பாவைக[1]நீட க்ருத ச[3]ம்த்[3]
யாவிதி[3]யை ந்ருப புரோஹிதா வாச[3]முனன் II—72

ஊரூர்க்கு குறுநில மன்னர்கட்கிட்ட வேனிற் பந்தல்கள், குளிர்மைதந்து, உலகம் என்னும் அடுப்பில் பூத்த தாமரை மலர்கள்போல அக்காலத்தில் திகழ்ந்தன. ||—69

பகலெல்லாம் தோட்டத்தில் இருந்துவிட்டு, மாலையில் மல்லிகைப் பூக்களைச் சூடியவாறு காவியுடையுடுத்திய குடியான வர்கள் கரும்பாலைக்கு (கருப்பஞ்சாறு பருகுவதற்காக) வருவதைக் காணின்,இனிவரும் மழைக்கு அஞ்சி முட்டைகளோடு இனிப்பை நாடும் செவ்வெறும்புகள் போலத் தோற்றும். ||—70

## அயல் நாட்டந்தணன்

அந்த கொடும் வேனிற்காலத்தில் வைபவத்தோடு அந்நகருக்கு அருகே உள்ள (அழகர்கோவில்) சுந்தரத்தோளுடையார்கோவில் தெப்ப உற்சவத்திற்கு வந்த அயல்நாட்டு அந்தணன் ஒருவன் பக்தியோடு. ||—71

சேவித்து செல்லும்போது மதுரைநகரின் செல்வச் செழிப் பினைக் காணும் வேட்கையுட்ன் திரிந்து களைப்பு நீங்க வைகை நதியிற் குளித்து மாலைச் சந்தியாவந்தனம் முடித்துவிட்டு மன்னனின்புரோகிதனுடைய இல்லத்திற்கு முன்பு ||—72

சீ2. பரிபக்வ சுரபி3ரம்பா3 ப1லம்புல தோட2,
த2ளமெக்கு பனச2 பென்தொ2லல தோட2,
க்2ருத பிண்ட2நிப3 கர்கரீக1ண்ட2முல தோட2,
பலுதெறங்கு2ல மாவிபண்ட்2ல தோட2,
கோ2ச்2தனீ ம்ருது2 கு2ளுச்ச2 ச்2தோமமுல தோட2,
கப்புலேறின வட2ப்ரப்பு தோட2,
சு2மது2ர ச்தூ1ல தா2டி2ம பீ2ஜமுல தோட2,
தனுபாரு ரச2தா2டி2க3 நெலதோட2,

தே. பானம்ப3திது1லகிட்ட2 தானு க்ரோலி,
அர்சனாத2த்த சந்த2ன சர்ச தேலி,
விருலுசி2க2 தால்சி கர்பூர வீடி சௌரு
கொட்டுசு த்2விஜ2ண்டு2 வென்னெல பி2ட்டுகாய II—73

தே. மாத்ரச2ஞ்சி தலாட2லா2 மார்க2வேதி2,
ஒக்க டா2ர்யலு, கீ2தலொண் டொ2கடு3 தரசு2
பா3ஷிதம்பு2லுகா, தோடி ப்2ராஹ் மணௌக2
முடி2பு2 போககு ச2துவ, பருன்ன வேள ||—74

ராஜ2போ3கி3னி கடகு2 போவுட

சீ2. பன்னீடிதோ கத2ம்ப2மு சேசி2 பூசி2ன
ம்ருக2 நாபி3பச2 ராசனக2ரு தெலுப,
பாடலாநிலமு லார்பக3 தபாரபுஜ2ங்கு2
லலருதாவிகி முகு2 அளுல ஜோப,
கர்ண டோ2லா மௌக்திகச்சா1ய லெக2ப்ராகு
உருஹார ருசுல த்ரச்3தரிகி தன்ன
ஸஸிகாந்தி செங்கா2 வித2ஸிலி மலஞ்சின கேல
ச்2வர்ணத்ச3ருவு வாடி2வாலு மெறய,

தே. மெலதயட2பமு தே சரண்மேருவனக2,
தலவருலு கொந்த2றொலசி2 முங்க2ல ஜனங்க,
அர்தி1 ரத்1யாந்த ராந்த: புராந்தரமுன
போ3கி2னீ ச2ங்கு2திகி ராஜ2 போவுசுண்டி2 ||—75

பரிபக்குவமான மணம்மிக்க வாழைப்பழங்களுடனும், பருத்த பலாவின் பெரியசுளைகளோடும், கட்டிநெய்த்துண்டுகள் போன்ற கண்டசக்கரையுடனும், பல்வகையான மாம்பழங்களோடும், திராட்சை, மென்குலைகளோடும், தோல் நீக்கிய பாசிப்பயிறுடனும், இனிய மாதுளை விதைகளுடனும், அன்னமிட்டு பானகந்தரவும் விருந்தினரோடு தானும் உண்டுகளித்து, சந்தனம் பூசிக்கொண்டு தலையில் பூச்சூடி, வெற்றிலைக் கற்பூரமுடன் மென்று அந்த அந்தணன் நிலாக்காயும் நேரத்தில் II—73

(தான்கொணர்ந்த) பையை தலையணையாக வைத்து வழித்திண்ணையில் படுத்து, ஒருவன் பாட்டும் ஒருவன் கீதையும் பாட தான் சில நீதி சுலோகங்களைக் கூறிக்கொண்டு பொழுதைக் கழித்தவாறு இருக்கும்வேளையில். II—74

## அரசன் கணிகையிடம் செல்லல்

பன்னீரோடு பரிமளதிரவியங்கள் கலந்து பூசிய கஸ்தூரியின் மணம், அரண்மனையைச் சார்ந்தவன் என்று தெரிவிக்க,

பாதிரிப் பூமணத்தென்றல் அசைப்ப தலைப்பாகையில் உள்ள குஞ்சங்கள் அசைந்து பூ மணம் நாடிவந்த வண்டுகளை ஓச்ச,

காதில் ஊஞ்சலாடும் முத்துக்களின் ஒளி, மார்பணியான முத்துமாலையின் மேலேறும் ஒளியை கீழே தள்ளிவிட,

சந்திரனின் நிலவொத்த செங்காவி உருமாலையுடைய கையில் தங்கக் கைப்பிடி போட்ட கூர்வாள் ஒளிர,

ஒரு பெண் அடைப்பைதர, முன்னும் பின்னும் மெய்க் காவலர்கள் வர, நடமாடும் மேரு மலைபோல நடுவழியில் இரண்டாவது அந்தப்புரம் போன்ற மாளிகைக்கு தனது காமக் கிழத்தியிடம் கலந்தின்புறச் சென்று கொண்டிருந்த அந்த பாண்டிய மன்னன் II—75

ச. வினியெ 'நெலல்சதுர்த்2வயினி வ்ருஷ்டி தி2னாளிகி,
ராத்ரிகைதி2வம்
பு2ன, ஜரகை வயச்சு2னனு, பூனி, பரம்பு2ன கிப்புடு2த்2யமம்
ப2னுவுக2 சேயகா2 வலயு'னஞ்சு புரோஹித த3ர்ம மாத்ம கீ2ல்
கொன அலவிப்ரு டாத்2விஜுல லோன சு2பா3ஷிதமுன்
படி1ம்பக2ன் ||—76

க. வினி, தத்க்2ரந்தா1ர்தமு1 நெம்
மனமுன ஊஹிஞ்சு, தெலிசி2, ம்ரான்படி2, கட2குன்
தன மோச2முனகு ப3யபடி2,
ஜனபதி அடுசனக நிலிசி, ச2ந்தாபமுனன் ||—77

உ. எக்கடி2 ராஜ்ய வைப3வமுலெக்கடி போ3க2மு லேடிச2ம்ப்3ரமம்
பக்கட! பு2த்3பு2த2 ப்ரதிமமைன ஸரீரமு நம்மி மோக்ஷபுன்
சக்கிக2ணிம்பகுண்டி, யுக2ச2ந்து3ல நில்சியு, காலுசேதிப2ல்
த்ரொக்குல நம்மனு ப்ரப்3ருதுலுன் துத2 ரூபறகுண்ட2
நேர்சிரே? ||—78

மழைக்காலமாகிய நான்கு மாதங்கட்கு மற்ற எட்டு மாத காலத்திலும், இரவுக்காக பகலிலும், முதுமைக்காக இளமையிலும், பரலோகத்துக்காக இக லோகத்திலும் (எச்சரிக்கையாக இருந்து வேண்டியவற்றை) முயற்சித்தல் வேண்டும் என்ற பொன்மொழியை (சுலோகத்தை) அந்த அந்தணன் எதிர்கால நலன் கருதும் நீதியை மற்ற அந்தணர்கள் மனம் கொள்ளும்படி சொன்னதைக் கேட்டான்.

["வர்ஷார்த்தமஷ்டௌப்ரயதேத மாஸான்
நிசார்த்தம் அர்த்தம் தி[2]வஸே யதேத
வார்த்க்ய ஹேதோர் வயஸா நவேந
பரத்ர ஹேதோ ரிஹஜன்மனாச"

என்ற வடமொழிச் சுலோகத்தை அந்தணன் கூற பாண்டிய மன்னன் கேட்டான் என்பது கருத்து.] II—76

கேட்டு, அச்செய்யுளின் பொருளை மனத்தில் நினைந்து புரிந்து, மயங்கி, முடிவில் தன் அறியாமைக்கு அஞ்சி, மன்னன் (காமக்கிழத்தியின்மனையின் (அப்)பக்கம் செல்லாமல் நின்று வருத்தத்துடன் II—77

"என்ன அரசவைபவங்கள்? என்ன போகங்கள்? என்ன விரைவு? அந்தோ! நீர்க்குமிழி போன்ற இவ்வுடம்பினை நம்பி, மோட்சத்தை (வீடுபேற்றை) எண்ணாமலிருந்தேன்! யுகங்கள் முழுதும் இருந்த மனுமுதலானவர்கள்கூட இறுதியில் காலனின் கைப்பட்டு அழிவதிலிருந்து தப்பிக்க முடிந்ததா? II—78

க. உன்னட்ல யுண்ட2 அத்த2ரி
கின்னருலனு நாவ சேர்சுக்ரிய வெச2தாபோ
குன்னட்ல யுண்டி2 காலம்
பு2ன்னருலகு வயசு2 புச்சி மோச2மு தெச்சுன் ||—79

ச. ச3க2ருநலுன் புரூரவு த்ரிஸங்குசு2துன் புருகுத்சு2 கார்தவீர்
யுக2யு ப்ருது1ன் ப3கீ2ரது1 சு3ஹோத்ரு ஸிபின் ப3ரதுன்;
தி2லீபுனின்
ப்3ருகு2குலு யௌவனாஸ்வு ஸஸிபி2ந்து2 அனங்கு2னி
அம்ப2ரீஷு, பூ
ருகு2ருனி ரந்தி ராக3வு மருத்துனி காலமு கோலு
புச்சதே ||—80

க. கானதடிச்சல மகு2 ராஜ்
யானந்த2மு மரகி2 இந்த்2ரியா ராமுட2னை
போனிந்த னுண்டி பரலோ
கானந்த2ம் பு2னகெ யத்ன மாபாதி2ந்துன் ||—81

க. வர்க2த்ரயபரத முஹுச்2
ச்வர்க2 க்ஷமா மத்3யமாத்3வ ஜங்கா1லகதா
து2ர்க2தியு ஒல்ல; மறி அப
வர்க2து2 டே2வேல் பெறிகி2 வானிப3ஜிந்துன் ||—82

இருந்தாற்போலிருந்து அக்கரைக்குச் சேர்க்கும் நாவாய் (படகு) போல மனிதர்களை விரைந்துதான் போகாதது போலிருந்து காலம் ஆயுளைக் கழித்து மோசம் (மரணத்தை) செய்விக்கும் II—79

சகரன், நளன், புரூரவன், அரிச்சந்திரன், புருகூதன், கார்த்த வீரியார்ச்சுனன், கயன், பிருது, பகீரதன், சுகோத்திரன், சிபி, பரதன், திலீபன், பரசுராமன், யௌவனாஸ்வன், சசிபிந்து, அசங்கன், அம்பரீடன், யயாதி, ரந்திதேவன், இராகவன் மருத்து முதலிய மன்னன்மன்னர்களை எல்லாம் காலம் தன் பால் ஆக்கிக் கொள்ளவில்லையா? II—80

ஆதலினால், மின்னல்போன்ற நிலையற்ற அரசபோகங்களில் மூழ்கி புலனின்பங்களில் திளைக்க மாட்டேன். இனிமேலாவது மறுமை இன்பத்திற்காக முயல்வேன். II– 81

(அறம்பொருள் இன்பம் ஆகிய) முப்பால் தன்னில் முயன்று சுவர்க்க நகரங்களில் உழலாமல், வீடுபேற்றை எந்த தெய்வம் தருமோ அவனை அறிந்து வழிபடுவேன்". II—82

க. அனிதலசிமெச்சி, அவ்விப்
ருனிகின் வீடிகரண்ட2முன முத்2ரிதமை
யுனிசின ஒகமுடு2பார
க்ஷ¬னிசே இப்பிஞ்சிநக2ரு சொ2ச்சி நிஸிசனன் ||—83

க. கொலுவை பஹ¬ச2மயம்பு2ல
மெலகெ2டு2 கோவிது2ல கூர்சி மீமீ ஸாச்த்ரம்
பு2லலோ எவ்வடு2 மோக்ஷம்
பெ2லயிஞ்சுனோ சூசி நிஸ்சயிம்பு ட2டஞ்சுண் II—84

தே. வாத2மொனரிஞ்சி கெ2லிசிதத்வம்பு2 தெலுபு
வானிகனி பீ2ரபுவ்வுல போனி டங்க
சா2லவாடுலு நிஞ்சி ஆச்3தா1னி கட்ட
காலச2ர்பமு க2தி வ்ரேலு ஜாலெசூசி ||—85

க. ஹருனொகட2ன, உமனொகட2ன,
ஹரினொகட2ன, ஸிகி1னொகட2ன, அர்குனொகட2னன்
கரிமுகு1னொகட2ன, ரஜநீஸ்
வருனொகடன னஜ¬னொகடன வாதை2ன தறின் ||—86

என நினைந்து, மெச்சி, அவ்வந்தணனுக்குத் தாம்பூலத் தட்டோடு பொற்கிழி ஒன்றை காவலர் மூலம் கொடுக்கச் செய்து, பின் நகரை யடைந்து இரவு கழிந்ததும் II—83

கொலுவிருந்து, பல்வேறு சமயவாதிகளையும் சித்தாந்த பண்டிதர்களையும் ஒன்றுகூட்டி "உங்கள் உங்கள் சாத்திரங்களில் யார் மோட்சத்தை அடைவிப்பான் என்பதை ஆராய்ந்து நிச்சயிப்பீர்களாக" என்றான் II—84

வாதம் செய்து (பிறன் மதம் மறுத்துத் தன்மதம் நிறுவி) வென்றவர்கட்கு என்று பீர்க்கம்பூவைப் போன்ற பொற்காசு களை நிறைத்து ஆஸ்தானமண்டபத்தில் பொற்கிழியைக் கட்டித் தொங்கவிடவும் கருநாகம் போன்று தொங்கும் கிழியைக் கண்டு II—85

ஒருவன் சிவன் எனவும் ஒருவன் உமை எனவும் ஒருவன் இந்திரன் எனவும் ஒருவன் அக்னி எனவும், ஒருவன் சூரியன் எனவும் ஒருவன் சந்திரன் எனவும், ஒருவன் கணபதி எனவும் ஒருவன் பிரம்மன் எனவும் விவாதமானது அச்சமயத்தில் II—86

தே. வில்லிபுத்தூரிலோ அல்ல விஷ்ணுசித்து
ட2துல துலசீ2 சு2க2ந்தி3 மால்யமுனு மூல
மந்த்ரமுன அக்கு சேர்பபோ2 மன்னனாரு
தா2ரமது3ரோக்தி அவ்வித3மானதிச்சி II—87

உ. நேடு2, மஹாமதி, மது1ர நீவுரயம்பு2ன சொச்சி, அந்து பாண்
டி2டு2 தி2வாணமுன்னெறய நிஞ்சின ப்ரேலெடு2
து2ர்மதா2ந்து3லன்
போடி2மிமான்சி, மன்மஹிமமுன் ப்ரகடிஞ்சி ஹரிம்பு
ஸுல்கமுன்
வாடு2னு ரோசி2னாடி2ஹமு வைஷ்ணவுகா2 ஒனர்பு
சத்க்ருபன் II—88

தே. அனின வட2வட2வட2கி சா2ஷ்டாங்க2 மெறகி2
ச2ம்மதா2ஸ்ருலு புலகலு மும்மரிம்ப,
வினய வினமித கா2த்ருடை2 விப்ரவருடு2
வென்னுனகு ப3க்தி இட்லனி வின்னவிஞ்செ II—89

ஸா. 'ச்2வாமீ, நன்னு இத: புராபடி1 தஸாச்2த்ரக்ரந்த3
ஜாத்யந்து3, ஆ
ராம க்ஷமாக1னன க்ரியா க1ரக1னித்ர க்ராஹி தோத்2யத்கிணச்
தோமா ச்2னிக்2த3கருன் ப3வத்2ப3வனதா2சு2ன் வாதி2கா2
பம்புசேர
பூ3மீப்3ருத்ச2ப3 ஒடமைன அயஸம்பு2ல் மீகு காகுண்டு2னே?
II—90

திருவில்லிபுத்தூரில் உள்ள விஷ்ணு சித்தர் (பெரியாழ்வார்) துளசிமாலையும் மூல மந்திரமும் மார்பில் அணிவிக்கப் போகும் போது மன்னார் (திருமால்) இன்மொழிகளில் (மதுரை சம்பந்த மான செய்திகளை) விவரித்து இவ்விதம் ஆணையிட்டார் II—87

பேரறிவுடையோய்! இன்று நீ மதுரைக்கு விரைந்து சென்று அங்கு பாண்டியன் அவையில் நிறைந்து ஏதேதோ பேசுகின்ற செருக்குற்ற குருடர்களின் திறல் அடக்கி, எனது பெருமையை வெளிப்படுத்தி, பொற்கிழியை அறுத்துக்கொண்டு வருக அவனும் (மன்னனும்) இவ்வுலக இன்பங்களை வெறுத்துள்ளான். அவனை அருளோடு வைணவனாக்குயாக II—88

எனவும், கடகடவென நடுநடுங்கி சாட்டாங்கமாக வணங்கி, ஆனந்தக் கண்ணீர் பெருகிட, புளகமுற, அடக்கத்துடன், அவ்வந்தணன் (விட்டுசித்தன்) திருமாலிடம் பக்தியுடன் இவ்விதம் விண்ணப்பித்தான் II—89

"சுவாமி" இதற்குமுன்பு படித்தறியாத, சாத்திர நூல்களைக் கற்றறியாத என்னை, பூந்தோட்டத்தில் மண்ணைத்தோண்டி கடப்பாரை, மண்வெட்டிகளைப் பிடித்து காய்த்துப்போன கைகள் உடையவனும், தங்கள் கோவிலில் வாழ்பவனுமாகிய என்னை, வாதம் செய்ய அனுப்புவீர்களேயானால், மன்னரவையில் நான் தோற்றால் அதனால் வரும் இகழ் தங்களைச் சாராதிருக்குமா? II—90

ம. க்2ருஹ சம்மார்ஜனமோ, ஜலாஹரணமோ, ஸ்ருங்கா2ர பல்யங்கிகா
வஹனம்போ2, வனமாலிகா கரணமோ, வால்லப்3ய லப்3யத்3வஜ
க்2ரஹணம்போ2, வ்யஜனாதபத்ர த்3ருதியோ, த்2ராக்2தீ2 பிகரரோபமோ,
ந்ருஹரீ வாத2மு நாகு? லேரெ இதருல் நீலீலகுன் பாத்ரமுல்?' II—91

## மன்னனாரு விஷ்ணு சித்துனனுக்2ருஹிஞ்சுட

தே. அனின தத்ப3க்திகெத2 மெச்சி அச்யுதுண்டு
மொலக நக2வொப்ப ஸ்ரீதேவி மோமுசூசி
'வாதி2தனி சேநே கெ2லிபிந்து நாது2மஹிம
முவித2 கனு'மனி ப்ராபு3வம் பொ2ப்ப பலிகி II—92

க. 'நீ இச்சயெ? மின்னக போ
வோயி; முனிப்ரவர, நின்னு ஒப்பிந்துனுபூ3
நாயகு ச2ப3; இந்து2லகை
ஏயட்ட2மு வலவத2வல நேனுன்னாட2ன்' II—93

ஆ. அனின, மாறுபலுக அலிகி அய்யாளுவா
ரிய்ய கொனியெ போவ இந்தலோன
பத்2மநயனுட2தனி பயனம்பு2 தூகி2ம்பு
மனுசு நம்பி2தோட2 ஆனதிச்செ II—94

கோயில் மெழுகல், தண்ணீர் கொண்டு வருதல் சிங்காரப் பல்லக்கை சுமத்தல், துளசி மாலை கோத்தல், கொடி பிடித்தல், விசிறுதல், குடை பிடித்தல் தீப்பந்தம் ஏந்துதல் முதலிய வேலைகளா? நரசிம்மனே! வாதமாடல் இது போன்றதல்லவே! நின் திருவிளையாட்டிற்குப் பாத்திரமானவர்கள் வேறு யாரு மில்லையா? ||—91

## திருமால் பெரியாழ்வார்க் கருளல்

என்று கூறவும் அவனது பக்திக்குமெச்சி அச்சுதன் (திருமால்) புன்முறுவல் பூத்து திருமகள் முகத்தைப் பார்த்து "இவன் மூலமாகவே வாதத்தில் வெற்றி பெறச் செய்வேன். எனது பெருமையை மடந்தாய்! காண்க'' என்று தனது வைபவம் தோன்றச் சொல்லி ||—92

"உன் விருப்பமா? சும்மா போ அப்பா! வரமுனிவனே! மன்னன் அவையில் உன்னை ஏற்கும்படி செய்கிறேன். மறுப்பொன்றும் கூற வேண்டாம். அதன் பிறகு நான் பார்த்துக் கொள்கிறேன்." ||—93

எனவும், பதில் சொல்ல அஞ்சி, அந்த ஆழ்வார் போவதற்கு ஒப்புக் கொண்டார். அதற்குள் தாமரைக் கண்ணனாகிய திருமால் பயண ஏற்பாடுகளைச் செய்யுமாறு நம்பி (பூசாரி)க்குக் கட்டளை இட்டார் ||—94

விஷ்ணுசித்துடு[2] மது[1]ர கேகு[2]ட

ஆனதி படி[2] ஸ்ரீ ப[3]ண்டா[2]
ரானன் ச[2]ம்ப[3]ட[2]மு தனது[2] ப்ராதந்த[2]லமுன்
ச்[2]தா[1]னிகு டொ[3]ச[2]ங்கி[2] பனுபங்
கா[1], ஆனதிபடி[2]ன நிமிதகாண்ட்[2]ரு வஹிம்பன் II—95

க. லாவு கல அத்தெ[2] கு[2]ர்ரபு
சாவட[2]முல மீத[2] மாத்ர ச[2]ஞ்சுலு தூலன்,
க்ரேவல ஏகாங்கு[2]லு ரா,
வீவத[3]முல னறிசெ[2]லவனி விபு[3]னகு கொனுசுன் II—96

சீ. ப[3]க்தி த்ரோவகு சா[2]த்[3]வி பரிகரம்பு[2]லு வெட்டி
கட்டின பொரிவிளங்கா[2]ய க[2]மியு,
எ ஸடி போதலு காக[2] ஏர்பரஞ்சின சிரங்
தனபு ஸாலிக்ஷேம தண்டு[2] லமுலு
வடி[2]பெட்டி லோசெறகட[2]முசா பாலூன்ப
செலகு[2] அம்பாரம்பு சிந்தபண்டு[2]
பெல்லு லோஹண்டி காவள்ள கொம்முல வ்ரேலு
கி[2]ட்டி[2] மொத்தபு நேதிலட்டி[2]க[2]லுனு

தே. பெருகு[2] வடி[2]யம்பு[2]லுனு, பச்சி வருகு[2] பே[2]ட[2]
லு நதராச்யுத பூஜோபகரண பேடி
கலுனு, சாத்[3]தின சா[2]த்தனிகுலமு ப[2]லசி[2]
விதி[3]நிஷேத[3]மு லெறிகிதே[2] மது[1]ரகரிகெ[2] II—97

## பெரியாழ்வார் மதுரைக் கேகுதல்

கட்டளைப்படியே, கோயில் நிர்வாகிகள் பழைய பல்லக்கும், சுமப்பவர்களையும் ஏற்பாடு செய்து கோயில் கொட்டாரத்தி லிருந்து பயணப்படி தந்து அனுப்பி வைத்தான் II—95

வலிய குதிரைகள் மேல் பயணப்பைகள் தொங்க, பக்கத்தில் ஏகாங்கிகள் வரவும் மன்னனுக்கு கோயில் பிரசாதங்கள் (அதிரசம்) எடுத்துக்கொண்டு சென்றான். II—96

இல்லாள் பக்தியுடன் வழிப்பயணத்திற்காக வேண்டிய பொருட்களோடு, பொரிவிளங்காய் வைத்து அனுப்பவும், உலையில் அப்படியே போடுவதற்கேற்ற (கல் பொறுக்கி சுத்தம் செய்த) பழைய நெல்லரிசியும், வெல்லம் (பலசரக்கு சாமான்கள்) கூடிய புளி, சமையல் பாத்திரங்கள் (அடிசிற்கலங்கள்) உள்ள காவடியின்நுனியில் கட்டிய நெய்ச்செம்புகளும், தயிர் வடகம், பச்சை வடகம், பருப்பு, பூசைக்கான பெட்டி, முதலியவற்றை சாத்தினவர்களும் சாத்தாதவர்களும் * முறையறிந்து கொண்டு வர மதுரைக்குச் சென்றான். II—97

---

* சாத்தினவர் : பூணூல் சாற்றிய + மேற்குலத்தவர்.

சாத்தாதவர் : பூணூல் இல்லாத பிறகுலத்தவர்.

தாசம் : என்னும் சொல் பிறழ்ந்து தாசாணி என்பது சாதாணி என்று ஆயிற்று என்பது சிலர் கருத்து.

ஆஸ்வாசா2ந்தமு

ச. யமநியமாதி2லப்3ய, த்3ருஹிணாதி2 ஜரன்மருதிப்3ய,
ச2ம்ச்2ருதி
ஸ்ரம ஹரநாம கீர்தன, முரப்ரவிகர்தன, பாதகாவலீ
த2மண, ரமாங்க2நாகமண, தாமரசா2யதநேத்ர, ப3க்தஹ்ரு
த்2ப்3ருமத்ருணதா2த்ர, பூ3யுவதி ரன்ஜன, வர்ண
ஜீதாப்3ர க1ன்ஜனா II—98

க. தோ2ர்தூ3ர்த்3ருத து2ர்த3ரகோ2
வர்த3ன, ராதா3னுராக2 வர்த3ன, லீலா
வார்து3ஷிகா, யிஷிகாக்ருத
வார்த3 ஸ்ரவசை2க நேத்ர வைக்ருதிநிபுணா II—99

மா. த்2ருஹிணஜமுக1 மௌனிச்2தோம நிச்2தந்த்2ர பா3ச்2வத்
த2ஹரவிஹர மாணாதாம்ர பாதா2ம்பு2 ஜாதா
ப2ஹிர ப2ஹிரபார ப்ராணிகோடி ப்ரபூர்ணா
மஹிமவினுத வாணீமாது3ரீ வேத்2யபர்ணா II—100

ம. இதி2 பூ3மண்ட2ன கொண்ட2 வீடு2த2ரணீ ப்3ருத்து2ர்க2
பூர்வாத்2ரிபா3
ச்2வதி2பே3 ஸாத்ம ஜவீரப3த்2ப ஜனஜீவ க்2ராஹராஹ1யமா
ணத்2ருடா3 ஞ்சத்2பு3 ஜக்ருஷ்ணராய மஹிப்3ன்னாமாச்2ம
தா2முக்த மால்
யத2 ஆஸ்வாச2மு ஹ்ருத்2ய பத்2யமு த்2விதீயம்பை2
மஹன் பொல்பகு2ன் II—101

த்2விதீயாஸ்வாச2மு ச2மாப்தமு

யமம், நியமம், (அடக்கம்) முதலிய யோகத்தினால் அடையப் படுபவனே! பீரம்மா முதலிய தேவர்கட்குத் தலைவனே! பிறவித் துயர்கெடுக்கும் நாமசுங்கர்த்தனையுடையவனே! முரன் என்னும் (முரண்பட்ட) அசுரனைக் கொன்றவனே! பாவங்களை அழிப் பவனே! திருமகள் காதலனே! தாமரைக் கண்ண! அடியார் மனத்திலுள்ள அறியாமை என்னும் புல்லைச் செதுக்கும் வாள் போன்றவனே! நிலமகள்கேள்வனே! முகிலையும் கரிக்குருவி யையும் வென்ற வண்ணமுடையவனே II—98

நுகம் போன்ற தோள்களால் ஆற்றற்கரிய கோவர்த்தன கிரியைத் தாங்கியவனே! இராதையின்பால் அன்பு பூண்டவனே! விசாயாட்டாக வட்டி (திருப்பதி வெங்கடேசப் பெருமான் வட்டி வாங்குவதற்காக புராணம்) வாங்குபவனே! இந்திரன் மகன் (சயந்தன்) கண்களை (காகமாக வந்து சீதையை அவமானப் படுத்தியபோது இராமனாக) விகாரம் படுத்தியவனே II—99

பிரம்மபுத்திரனாகிய நாரதனின் மனத்தில் வசிக்கும் சிவந்த பாதங்களையுடையவனே! எல்லா உயிர்களிலும் உள்ளும் புறமும் நிறைந்திருப்பவனே! பார்வதி தேவியால் துதிக்கப்படும் சிறப்பினையுடையவனே! II—100

உலகுக்கணியாகக் கொண்ட 'வீடு' என்னும் கோட்டையிலும் உதயகிரியிலும் கஜபதிமன்னன் மகன் வீரபத்திர பாத்திரனின் படை மக்களின் உயிரைக் கவரும் இராகுவான வீரமிக்க கிருஷ்ண தேவராயர் எனும் பெயருடைய என்னுடைய ஆமுக்த மால்யத எனும் காவியத்தில் இனிய செய்யுட்களோடு கூடிய இரண்டாவது அத்தியாயம் இதுவாகும். II—101

---

*இப்பாடல்கள் திருமாலை நோக்கி விளிப்பதாக அமைந்த சமர்ப்பண பாடல்கள்.

# ஆமுக்தமால்யத2

## த்ருதீயாஸ்வாச2மு

க. ஸ்ரீ க்ஷிதி நீளா வர த2னு
ஜோக்ஷ ப்ராணஹர த2ன்ஷ்ட்ரி கோத்க்ருத்தஹிரண்
யாக்ஷ க்ஷபாசர, க்ருபா
வீக்ஷாத்2 ருத பா2ஹுலேய வேங்கடரமணா. III—1

வ. அவத3ரிம்பு, அட்லறிகி2 விஷ்ணு சித்துண்டு2 III—2

விஷ்ணுசித்துண்டு2 ராஜச2ப3 கேகு2ட

ஸா. நித்யம்பு2ன் ப்ரதிஹாரி வாத2 மகு2டன் விஜ்ஞப்தி
லேகம்ய, தா2
னத்யூர்ஜச்2வலுடொ2ட பூ3பதியு ச2ப்3யவ்ராதமுன் ஸங்கமை
ப்ரத்யுத்தானமுன் சே2சி நில்வக2 ச2பா3பா3க2ம்பு2
சொ2த்தெஞ்சி யெளன்
னத்யப்ரோஜ்வல ராஜத2த்த வரரத்ன ச்2வர்ண பீட1ச்2துடை2
III—3

க. ஆதித்1யமு கொனி, ஹரி தன
சேதோக2தி ஒலய ரந்து சேயனி வித்2வத்
வ்ராதம்பு2 சூசி 'லாதுல
மாதரவா யுடு2க2? மாட லாடு2ண்ட2னுசுன் III—4

# ஆமுக்த மால்யத

## மூன்றாம் அத்தியாயம்

திருமகள், நிலமகள், நப்பின்னை (நீளா தேவி)யர்க்குக் கணவ! எருதாகி வந்த இராக்கதனைக் கொன்றழித்தவனே! வராக அவதாரத்தின் தன் கோரைப் பற்களால் இரணியாட்சனைக் கொன்றவனே! குமரனை பார்வையால் அருள்பவனே! வெங்கடேசனே! III—1

கேட்பாயாக.

அவ்விதம் சென்று விஷ்ணு சித்தன் (பெரியாழ்வார்) III—2

நாள்தோறும் விவாதங்கள் நடந்து கொண்டிருந்ததால் முன்னறிவிப்பின்றியே காவலர்கள் அனுமதிக்கவும் தான் செல்லவே, மன்னனும் அறிஞர்குழுவும், ஐயமுடன் உடன் எழுந்து மரியாதை செய்யவும், அவைக்களம் புகுந்து, மன்னனால் தரப்பட்ட உன்னதமான இருக்கையில் அமர்ந்து III—3

விருந்தாளியாக மரியாதை செய்யப்பட்டு, திருமால் தன் மனத் தமர்ந்திருக்க, அமைதியாக இருந்த அறிஞர் குழுவை நோக்கி, ''அன்னியமா நான்? தொடங்கியதை நிறுத்துவானேன்? பேசுங்கள்'' என்று சொன்னான். III—4

தே. கதிபயோக்துல லோனெ தத்ப்ரதிப$^{3}$ தெலிபி
நக$^{2}$வு தளுகொத்த ராஜு நெம்மொக$^{2}$மு சூசி
'ஈவு மாத$^{3}$யச்$^{2}$த$^{1}$முன உன்ன ஏமுகொன்னி
நுடி$^{2}$வெத$^{2}$மு மாட'லனி தத$^{2}$னுஜ்ஞு பட$^{2}$சி$^{2}$ III—5

## விஷ்ணுசித்துல வாத$^{2}$மு

சீ$^{2}$. அந்து$^{2}$லோ ஒகமேடி க$^{3}$பிமுகு$^{1}$ண்டை$^{2}$ ஆத
ட$^{2}$னின வன்னியுனு முன்னனுவதி$^{2}$ஞ்சி,
தொட$^{2}$கி$^{2}$ யன்னிடி கன்னி தூ$^{3}$ஷணமுலு வேக$^{2}$
பட$^{2}$க தத்சப$^{3}$ யொட$^{2}$ப$^{2}$ட$^{2}$க$^{2}$ பல்கி,
ப்ரக்கமாடல னென்ன கொக்கொக மாடனெ
நிக்$^{2}$ரஹச்$^{2}$தான மனு$^{2}$க்ர ஹிஞ்சி,
க்ரந்து$^{2}$கா$^{2}$ ரேகி$^{2}$னன்கலக$^{2}$ கந்த$^{2}$ற தீர்சி
நிலிபி, யம்மொத$^{2}$லி வானிகினெ ம$^{2}$கிடி$^{2}$,

தே. மறிஸ்ருதி ச்$^{2}$ம்ருதி சூ$^{2}$த்ர ச$^{2}$மாஜமுனகு
ஐக்யகண்ட$^{1}$மு கல்பிஞ்சி, யாத்மமதமு
ஜக$^{2}$மெறுங்க$^{2}$க$^{2}$ ராத்தா$^{3}$ந்தமுக$^{2}$ ஒனர்சி
விஜிது காவிஞ்சி த$^{2}$யவானி விடி$^{2}$சிபெட்டி III—6

க. 'நீவேமண்டிவி ர'ம்மஞ்
சாவலி வானிகினி ம$^{2}$கிடி$^{2}$ யட்லனெ வானின்
காவிஞ்சி ஒகடொ$^{2}$கடு$^{2}$ரா
நாவிப்ருடு$^{2}$ வாத$^{2}$ச$^{2}$ரணி அந்த$^{2}$ற கெலி$^{2}$சென் III—7

சில சொற்களிலேயே அவர்களது திறமையைப் புரிந்து கொண்டு, புன்முறுவலோடு அரசன்முகம் நோக்கி ''நீ நடுவராக இருப்பின் யாமும் சிலபேசுகிறோம்'' என்று கூறி அவன் அனுமதி பெற்று, III—5

## பெரியாழ்வார் வாதம்

அவர்களுள் ஒரு அறிஞனைப் பார்த்து அவன் கூறிய வாதங் களையே தானும் மீண்டும் கூறி அவன் கருத்தை நிச்சயப்படுத்திக் கொண்டு பின் அவன் வாதங்களைக் கண்டிக்கத் தொடங்கி சொன்ன கருத்துக்களில் உள்ள குற்றங்களை மெல்ல எடுத்துக் காட்டிப் (விரைவுபட்டால் தன் வாதமே கெடலாம். பொறாமை ஏற்படலாம்) பின்னர், அவ் அவையோர் உடன்படப் பேசி, இடையே பேசும் வாதங்களுக்கு ஒவ்வொன்றாக பதில் கூறி, எல்லாரும் இடைமறித்துப் பேசும்போதும், கலவரமடையாமல், எல்லோரையும் சமாதானம் அடையச் செய்து, முதலில் பேசியவ னிடமே திரும்பி, மற்றும் சுருதி சுமிருதி, சூத்திரம் (வேதம் மனுதர்மசாஸ்திரம், பிரம்ம சூத்திரம்) முதலியவற்றால் ஒரே கருத்தை உருவாக்கி, தனது சித்தாந்தத்தை அனைவரும் ஏற்கச் செய்து, எதிரியை முறியடித்து அருளோடு அவனை விடுத்து III—6

''நீ என்ன சொன்னாய்? வருக'' என்று அடுத்தவனை அணுகி, அவனையும் தோற்றோடச் செய்து, அவ்வந்தணன் (பெரியாழ்வார்) அனைவரையும் வென்றான் III—7

## அன்யமத க1ண்ட2ன

சீ. 'ஜக2து2த்2க2திகினி பீ2ஜமுப்ர தா3ன'மன நீ
க்ஷத்யாதி2 வீஸ௱ ணஸப்2தவாதி2,
பொரி 'ஈஸ௱டே2ன' நாபோ3க2 மாத்ரேத் யாத்2யு
தா2ஹ்ருதி ச்2பூ1ர்தி மாயாவி வாதி2
'ப1லியிஞ்சு க்ரியய' நா ப1லமத யித்யாதி2
ச2ர்வேஸ௱ கொனனி யபூர்வவாதி
'ஸாச்2த்ர யோனித்வா'தி2 ச2ரணி 'ஈஸ்வருனிதெல்
பெடு2 அனுமான' மன் பீலுவாதி2,

தே. 'நித்யுலங்தெ2ல்ல நித்யு' ட2ன்ஸ்ருத்யுருக்தி
க்ஷணிக ச2ர்வஜ்ஞுதேஷி சௌ2க2த விவாதி2
'அனுபவத்தேர்ன' யனுசூத்ர மாதி2யைன
வாணிங்ருப்தீஸ௱ ப்ரத்ய க்ஷவாதி3 கெ2லிசெ III—8

ஸா. வித்2வத்2வந்தி2து டா2தடி2ட்லு சு2க1ச2ம்வித்தத்வ
போ2தை2கசுங்
சுத்2வைபாயன சூ2த்ரச2த்ஸ்ருதுல ஈஸ௱ன் முன்நிரூபிஞ்சி,பை
தத்2விஷ்ணுத்வமு தா3ணிகன்யத்2 விஷத்வ்யாவர்தனம்
பு2ன்விஸிஷ்
டாத்2வைதம்பு2னு தேடகா2 தெலுப மாடாடெ2ன்
ப்ரமாணம்பு2லன் III—9

## பிறர்மதம் மறுத்தல்

உலகப் படைப்புக்கு 'பிரகிருதி' (பிரதானம்)யே மூல காரணம் என்னும் சாங்கிய வாதியை 'ஈக்ஷதேர் நாசப்தம்' முதலிய பிரம்ம சூத்திரங்களைக் கொண்டும்,

''ஈசன் (பிரம்மம்) 'நானே' என்னும் ஜீவாத்மா, பரமாத்மா ஒன்றே என்கிற) வேதாந்தியின் (அத்வைதிகளின்) மாயா வாதத்தை ''போக மாத்ர சாம்யலிங்காச்ச'' எனும் சூத்திரங் களைக் கொண்டும்,

''கருமமே (வேள்வி முதலியவை) பலன் தரும் எனும் பூர்வமீமாம்சா வாதியாகிய கடவுளை ஏற்காதவர்களை 'பலம் அத: உபபத்தே' என்றும் சூத்திரத்தின் மூலமும் இறைவனை அனுமானம் மூலமே பெறமுடியும் (சப்தபிரமாணத்தாலன்று) எனும் பரமாணுவாதி, யாகிய வைசேடிகரை, ''சாஸ்த்ர யோனித்வாத்'' எனும் சூத்திரம் மூலமும்,

'நித்தியங்களில் எல்லாம் நித்தியமானது' எனும் (நித்யோ நித்யானாம் எனும் கடோபநிடத) சுருதி மூலமாக உலகம் க்ஷணிகம் (அநித்தியம்) எனும் பௌத்தமத வாதியையும்,

'மன்னனே இறைவன்' எனும் பிரத்தியட்சவாதியாகிய சார்வாகனை 'அனுபபத்தேர் நசாரீரக:) எனும் சூத்திரம் மூலமும் வாதிட்டு வென்றான். III—8

அறிஞர்களால் புகழப்பட்ட விஷ்ணு சித்தன்(பெரியாழ்வார்) இவ்விதம் சத்.சித். ஆனந்தமயமான பரப்பிரம்ம தத்துவத்தை- வியாசபகவானால் அருளப்பட்ட பிரம்மசூத்திரம், மற்றும் உபநிடதங்கள் மூலம் நிறுவி, பின்னர் அப்பரப்பிரம்மதத்துவம் விஷ்ணுவே(திருமால்)என்று விசிஷ்டாத்வைத தத்துவத்தை தெளி வாக தக்க பிரமாணங்களுடன் எடுத்துச் சொன்னான். III—9

சீ2. ஆதி2நாராயணுண்டா2யெ ஒக்கட2 ப்2ரஹ்ம
லேடு2 மஹேசு2ண்டு2 லேடு2, லேது2
ரோத2சி2, லேடு2சூர்யுடு, லேடு2சந்த்ருடு2
லேவு நக்ஷத்ரமு,ல்லேவு நீள்ளு,
லேத2க்2னி, யட்லுண்ட2 'லீல ஏகாகித
சனது2 பெக்கய்யெத2னனுசு அய்யெ,
சித2சித்2வயம்பு சொச்சி 'யனி சா1ந்தோ2க்2யம்பு2
தெலிபெடு2 அந்தராதி2த்ய வித்2ய

தே. அர்குலோ புண்ட2ரீகாக்ஷு ட2தட2 யகு2ட
கக்ஷிணீயனி அஷ்ட த்ருக்த்ர்ய க்ஷத2ஸஸ
தாக்ஷ விதி2ருத்2ர ஸக்ராது2லந்து2 ஒகடு2
காமிகாஸ்ருதியே விலக்ஷணத தெலிபெ III—10

ம. துலலேகுண்டு2 ச்2வரூபரூப கு2ணபூ3துல் தோசு ஏதத்ஸ்ருதின்
தலமை லோவெலி தானெயுன்கி தெலிபென் நாராயணம்
பா2ருணம்
பு2லசா2மான்ய விஸேஷரீதி நிகி1லம்பு2ன்ஸப்2த2 ஜாலம்பு2நிர்
மலநாராயண ஸப்2த2மந்து2னெதுத2ன் பர்யாப்தமய்யென்
ஸ்ருதின் III—11

க. வா'த2பஹத பாப்மாதி2
வ்யோ தே2வ' யனங்க2 பரகு2சூக்துலமீத2ன்
பாத2கு2 நாராயண பத2
மே தே2வாந்தரமு லேமிகீஸ்ருதி தீர்சென் III—12

ஆதியில் (படைப்பின் தொடக்கத்தில்) நாராயணன் ஒருவனே இருந்தான். பிரம்மா இல்லை. மகேசன் இல்லை. ஆகாயம் இல்லை. சூரியன் இல்லை. சந்திரன் இல்லை. நட்சத்திரங்கள் இல்லை. நீர் இல்லை. தீ இல்லை. அப்படியிருக்கும் போது "விளையாட்டாக தனித்திருப்பது தகாது: பலவாகிறேன் என நினைந்து சித்-அசித் இரண்டிற் புகுந்து, என்று சாந்தோக்கிய உபநிடதம் தெரிவிக்கிறது. 'அந்தராதித்யவித்யையில்' சூரியனில் இருக்கும் தாமரைக் கண்ணன் அவனே என்று கூறுகிறது.

எட்டுக் கண்களையுடைய பிரம்மாவும், முக்கண் உடைய சிவனும், ஆயிரங்கண்ணுடைய இந்திரனும் அன்றி இரு கண்கள் உடைய (திருமால்) தெய்வமே கூறப்படுதலின் அச்சுருதியே தெளிவாகக் கூறியுள்ளது.* III—10

இந்தச் சுருதியில் (சாந்தோக்கியத்தில்) இணையற்றுள்ள சொரூபமும், குணங்களும், செல்வங்களும் உள்ளும் புறமும் நிறைந்திருப்பது நாராயணனே என்றும், நாராயணீய யக்ஞி கோப நிஷத்திலும் வேதத்தில் அருணம் எனும் பாகத்திலும் நாராயணனே பரம் பொருள் என்பது தெளிவாக்கப்பட்டுள்ளது. III—11

இந்த சுருதியில் "அபஹதபாப்மாதி தி[1]வ்யோ தே[1]வ ஏதோ நாராயண" என்று கூறப்பட்டுள்ளபடி வேதவாக்கியங்களில் நிலையற்றுள்ள நாராயணபதமே. வேறு தெய்வம் இல்லை என்னும் உண்மையை சொல்லி வாதத்தைத் தீர்த்து வைத்துள்ளது. III—12

---

*(சாந்தோக்கிய உபநிடதத்தில் அந்தராதித்ய வித்தையில்,

"ய ஏஷோ ன்தராதித்யே ஹிரண்மய...
ஸர்வ ஏவ ஸுவர்ணஸ் தஸ்ய யாதா,
கப்யாசாம் புண்டரீகமேவ மக்ஷிணீ
தஸ்யோதிதி நாம"

எனும் மந்திரம் ஈண்டு குறிப்பிடப்படுகிறது)

வ. தொல்லி ஜாமத2க்2ன்ய ப3யம்பு2ன பரித்யக்த ராஜ்யுண்டை2 வைராக்யம்பு2ன தி2வோதா2சா2த்ம ஜுண்டு2கு2 ப்ரதர்த2 னுண்டு2 ஜனார்த2னு எறுங்க2க அபவர்க2காங்க்ஷ இந்த்3ருன் ஆராதி3ஞ்சின அதண்டு2 ச2ன்னிஹிதுண்டை2 'மாமுபாச்2வ' யனுடயு; முந்து2 க2ர்ப3முனந்து2ண்டி2யு அக1ண்டி2த தபச்2துலித வாம தே2வுண்டு2கு2 வாம2தே2வுண்டு2 'சூர்யோஹம் மனுரஹம் கக்ஷீவானஹ'ம்மனி ஸரீர வாசக ஸப்2த2ம்பு2 ஸரீரபர்யந்தம்பு2 போவுடன் சேசி2 சித2சித்ஸரீர குண்டு2கு2 அப்பரமாத்முன்கூர்சி அனுச2ந்தி3ஞ்செனனியு தெலிபி, சேதனண்டை2னதா ஜக2த்காரணம்பு2 காமி விபு2து3லந்தெ2ல்ல விஜ்ஞான வ்ருத்து3ண்டு2கு2 ஆவ்ருத்த3 ஸ்ரவுண்டு2 தத2னுச3ந்தா2ன ந்யாயம்பு2ன உபதே2சி ஞ்செனனி ஸ்ருதி சூத்ரமுக1ம்பு2ல நிக2மாந்த ஸாச்2த்ர ப1க்கிகசால வக்கானிம்பன்படு2; ஆத்மயு அவனியு அனல பவன க2க2ன காலம்ருத்யு ப்ரப3ருத்யகி1ல சித2சித்ப்ரபஞ்சம்பு2ல் அதனி ஸரீரம்பு2லனியு அந்தெ2 வினன்படு2; அட்லகு2ட அஸேஷ தி2விஷத் ஸரீரம்பு2ல் அந்நாராயண ஸரீரம்புலேகதா2, யனி முமுக்ஷுவுன கப்புண்ட2ரீகாக்ஷு தக்க ஏவ்யக்தினைன உபாசி2ம்ப வச்சுனே? விஷ்ணுனகு தத்தத்கால விக்2ரஹம் பு2லகுடன் ப்2ரம்ஹ ருத்2ரார்ஜுன வ்யாச2 பா3னு பா3ர்க2வாதி2 ப3ஜனம்பு2 த்ரைவர்கி2னகுன் காக அபவர்க2 காஞ்க்ஷுல கயுக்தம்ப2னி ச2ம்ருதிசெப்பு; அதி2யுன் காக, ஈஸ்வருனகு சேதனுனகு நித்ய ச2ம்பந்த3ம்பு2 'மாதா பிதா ப்2ராதா நிவாச2 ஸ்ஸரணம் ஸு2ஹ்ருத் க2திர்நாராயண'யனி ச2மச்2தம்பு2னகு பராயணம்பு2கா2 அதனின் ப்ரதி2பாதி2ஞ்சு ஸ்ருத்யத்யரம்பு2 கல; த2ட்டி பரமேஸ்வருன் கனுடகுன் தகி2ன யோக2ம்பு2 செப்பெத2; கா1ண்டி2க்ய கேஸித்3வஜ ச2ம்வாத2ம்பு2 வினு'மனி இட்லனியெ, III—13

## கா1ண்டி3க்ய கேஸித்3வஜ ச2ம்வாத2மு

ம. ஜனகாக்1யாகி1லராஜ மொப்பு நிமிவம்ஸம்ப2ந்து2
த3ர்மத்3வஜுண்
டனுபூ3ஜானி மிதத்3வஜாக்1ய வசு தா3த்3யக்ஷுன்
ஜக2த்2ரக்ஷணா
வனஜாதாக்ஷு க்ருதத்3வஜாக்1யு கனியென் வாரித்த2றுன்
கர்மடு1ன்
க1னவிஜ்ஞானு க்ரமம்பு2னகனிரி தத்கா1ண்டி2க்யு
கேஸித்3வஜுன் III—14

க. வாரிருவுரு தமலோபல
வேரமு கொனி விஜீகீ2ஷுவுலை
ஹோரா ஹோரிக2 போரிரி
பா2ராதி2 தி2னம்பு2 லவனி ப்ரஜலு தலங்கன் III—15

முன்பு 'பிரதர்த்தனன்' எனும் அரசன் பரசுராமனுக்கஞ்சி, அரசினை நீத்துக் காட்டுக்கேகி, வீடுபேற்றுக்காக இந்திரன் வேண்ட, இந்திரன் பிரத்தியட்சமாகி 'என்னை வணங்குக' என்றான். தன்னை வணங்கி வரும்போது தன்னை வணங்குக என்றது அந்தர்யாமியாக உள்ள நாராயணனை வணங்குக என்பது கருத்தாகும். சித் அசித் அனைத்தும் நாராயணனின் சரீரம் ஆகும். வாமதேவ முனிவரும் இதையே கூறுகிறார். அறம், பொருள், இன்பம், மூன்றும் பிரம்ம ருத்திரர் முதலிய தெய்வங்கள் அளிப்பினும் வீடுபேறு அளிப்பது நாராயணனே. மற்றும் எல்லாவற்றுக்கும் அவனே அடைக்கலம். தாய், தந்தை, சகோதரர், வீடு, பாதுகாவலன் அனைத்தும் அவனே என்று சுபாலோபநிஷத் கூறுகிறது. இவ்விதமாக பாண்டிய மன்னனுக்கு போதித்து விஷ்ணு சித்தன் அம்மன்னனுக்கு நாராயணன் அடைய வழி கூறுகிறேன் என்று காண்டிக்ய, கேசித்வஜ சம்வா தத்தைக் கூறலானான். III—13

## காண்டிக்கிய கேசித்துவஜ உரையாடல்

நிமி எனும் அரச வம்சத்திற்கு சனகர்கள் என்பது பொதுப் பெயராகும். அம்மரபில் தருமத்துவசன் எனும் மன்னனுக்கு மிதத்துவசன், திருதத்துவசன் என இருமக்கள் பிறந்தனர். அவர் கட்கு முறையே (மிதத்துவசனுக்கு) கருமத்திலீடுபாடுடைய காண்டிக்கியனும், கிருதத்துவசனுக்கு பிரம்மஞானத்தில் ஈடுபாடுடைய கேசித்துவஜனும் பிறந்தனர். III—14

அவர்கள் தமக்குள் அரசு பெற வேண்டும் எனும் நோக்கில் பகைமை பூண்டு பல நாட்கள் போரிட்டனர். மக்கள் நிலை குலைவும்படி இடைவிடாது போரிட்டனர். III—15

ச. பலபல வேக[2]னிச்சலுனு பௌஜ[4]லு தீர்சி அதண்டு[2]னாதடு[2]ன்
வெலுவடி[2] வச்சி இக்ஷு[4]மதிவேணிக ஏபிரிகாக[3] வீகு[2]சுன்
தலபடு[2]சுன் பெனங்க[2]க[2] க்ருதத்[3]வஜநந்தனு சை[2]னிகாவளீ
ஹளஹளிகின் செட[2]ன் விறிகெ[2] ஆர்திமித த்[3]வஜநந்த[2]னுண்
ட[2]னின் III—16

க. செட[2]விறிகி[2] அட[2]விபடி[2] யெட[2]
னெட[2] கட்டுலதுத[2]ல கோடியிடி[2] லோகட[2]குன்
தடு[2]கு ஒடி[2]பிஞ்சி, ஆகுல
கு[2]டி[2]செ[2]ல வ[2]சியிஞ்செ மந்த்ரிகு[2]ருப[2]டயுதுடை[2] III—17

ஸா. ஆகேஸி த்[3]வஜ[4]ட[2]ந்த ஆந்ருபுனி ராஜ்யம்பெ[2]ல்ல
சேரன்ப[1]லம்
பா[2]காஞ்க்ஷிஞ்சக 'கெ[2]ல்து ம்ருத்யுவு, அவித்[2]யன்
புட்டகுந்து[2]ன் துத[2]ன்
சாகுந்து[2]ன்வடி[2]'னஞ்சு யோக[2]நிரதின் ஜ்ஞானாஸ்ரயுண்டை[2]
மகா[1]
னீகமும்ரசியிஞ்சு சந்தொ[2]கடிந்தீ[2]க்ஷிஞ்சி தானுன்னசோன்
III—18

ச. புலுமக[1]ஸாலிகா நிகடபூ[3]முல மேயுசு ஏடிவெண்டபெல்
லலமெடு[2]நீறமுன் தறிசி[2] யாம்யபதாகன க[3]ர்மதேனுவா
கெலவுலன் ஆடு[2] வாலபு[3]ஜகி[2]ன்கனி கோ[2]ண்ட்[2]ரனி
அங்க[2]லார்சுசுன்
க[2]ளக[2]த க[3]ண்டம்ரோய உறுகன் பிடு[2]கு ன் ப[2]லெதாகெ
யுத்த[3]தின் III—19

அவர்கள் இருவரும் 'இச்சுமதியாற்றின் இருகரையிலும் இருந்து கொண்டு, விடிந்ததும் படைகளைத் தத்தம் பாசறைகளி லிருந்து ஒன்று சேர்த்து வெளியே வந்து போரிட்டு, மீண்டும் பாசறைக்குச் சென்றும் இவ்விதம் நாள்தோறும் போரிட்டுக் கொண்டிருந்தனர். இறுதியில் கேசித்துவஜனின் படைகளின் முற்றுகைக் காற்றாமல் காண்டிக்கியன் தோற்றோடினான்.

III—16

தோற்றோடிக் காட்டிற்குச் சென்று, ஆங்காங்கே மலைச் சிகரங்களில் ஒற்றர்களை வைத்து சுற்றிலும் தடையமைத்துக் குடில்களில் மந்திரி, குரு, சேனைகளோடு கூடி இருந்து வந்தான்.

(மலைச்சிகரங்களில் ஒற்றர்களாக காவலர்கள் இருந்து எதிரி நடமாட்டத்தை உடனுக்குடன் அடுத்தடுத்துள்ள பாசறைகட்கு ஒலி மூலமோ, தீப்பந்தம் மூலமோ, சமிக்ஞை செய்து அறிவிப்பது வழக்கம்)

III—17

இவ்விதம் இரு அரசுகளும் தனக்குச் சேர்ந்ததும் கேசித்துவஜன், பயனில் பற்றற்றவனாக அறியாமையையும் சாவினையும் வெல்வேன் இனிப் பிறப்பெடுக்கமாட்டேன் என்று யோகத்தில் இணைந்து ஞானம் அடைந்து, வேள்விகள் செய்து, தீட்சை பெற்று இருக்கும் காலத்தில்

III—18

வேள்விச் சாலைக்கருகே ஆற்றோரம் புதரில் புல் மேய்ந்து கொண்டிருந்த யாகப்பசு, யமனின் கொடியோ என அசையும் பெண்பாம்பு போன்ற புலியின் வாலினைக் கண்டு, பயந்து, கழுத்திலுள்ள மணி ஒலிப்பப் பாய்ந்து குதிக்கவும், அந்தப் புலி இடிபோல மேலே தாக்கியது.

III—19

உ. க2ப்பு2 ச2மகூஷிகம்ப2யி மொக2ம்ப2டு2வன் தருபர்ணமுல் பட2ன்
த்2ரொப்பு2சு, கார்மொகி2ள்ள ரொத2தோ, செறலாடெட2டு2
பொ2ப்ப2ரிந்தகா2
ட்2புப்பி2 விச2ம்ஜ்ஞுகாக2 செவுலூதி2ன வல்லபுடு2ர்வி கூலகா2
பெ2ப்பு2லி கொ2ந்துக்ரோல் கறசிபெல்லுன மார்மெட2
த்ரெள்ள தா2டுசுன் III—20

ஆ· தனுவு,கொம்மு கொ2ரிஜ கொ2னகுண்ட2 மலபுசு,
சப்புடெ2ச2க2 தோக னப்பளிஞ்சி,
ஸோணிதம்பு2 க்ரோலுசுனெ நேர்புமை க3ர்ம
க2விநிக2விகி ஈட்2சு அவச2ரமுன III—21

ச. பொலமருலந்தி2 கூதலிட2, பூ3சு2ருலன்னதி2லோன
வார்சி, ம்ரா
குலதுத2லெக்கி சப்படலு கொட்டி அத2ல்பக2 சா2ஹிணீலுமா
வுலபறபங்க2, வைசிநெலவுல் வெச2நாகுசு போயெ
வ்ருக்ஷமண்
டலிகயி தேலுசுன் கு2டகு2ட த்2வனி சா2ரெமலங்கி3
ரூசுசுன் III—22

க. ஜுாறுஜுாறு கனி நெத்துரு வெலி
குறுகுசு ரொத2சேய, அறிதியொட2பின ஊர்புல்
பறவ, மிடி2க்3ருட்2ல வணகுசு
கொற ப்ராணமு தோட2 தன்னிகொனு அம்மொத2வுன் III—23

புலி வாய் நாற்றமும் ஈக்களும் மூச்சையடைக்க பசு மயங்க, மர இலைகள் உதிருமாறு தள்ளிக் கொண்டு போகவும், மேக முழக்கம் போன்ற ஒலி செவியில் வீழவும் பசுமேய்ப்பவன் மயங்கி நிலத்தில் விழவும், அந்த வெம்புலி(வேங்கை) கழுத்தைக் கடித்து மாறு தலைபோட்ட பசுவை வீழ்த்திப் பாய்ச்சலுடன் III—20

தன்னுடம்பில், கொம்பு குளம்புகள் படாமல் (பசுவின் உடலை) திருப்பியவாறு ஓசையோடு வாலையாட்டி உதிரம் குடித்தவாறே சாதுரியமாக வேள்விப்பசுவைத் தன் குகைக்கு இழுத்துச் செல்லும் நேரத்தில் III—21

வயல் வெளிகளில் காவலிருப்பவர்கள் கூச்சடலிடவே, அந்தணர்கள் அந்நதியில் சந்தியா வந்தனம் செய்து கொண்டிருந்தவர்கள் மரக்கிளைகளில் ஏறி கைதட்டி அதட்டவும் குதிரை வீரர்கள் விரட்டியடிக்கவும், அப்புலி (பசுவை) அங்கேயே போட்டு விட்டு உதடுகளை நக்கிக் கொண்டும் (சினத்தினால்) குடகுட வென உறுமிக்கொண்டும் (மீண்டும் இரை கிடைக்குமோ என) திரும்பிப் பார்த்துக் கொண்டும், மரங்கள் செறிந்த இடத்திற்கு (தப்பித்துக்கொள்ள) விரைந்தோடிச் சென்றது. III—22

குபுகுபுவெனக் குருதி கொப்புளித்து வரவும், கழுத்துக் குழியில் உயிர்ப்பு திக்குமுக்காடவும், கண்விழிகள் பிதுங்க நடுங்கியவாறு குற்றுயிரோடு உதைத்துக்கொண்டு இருந்தஅந்தப் பசுவைப் பற்றிய செய்தியை, III—23

சீ2. வின்னவிஞ்சுடயு ருத்விஜுல ப்ராயஸ்சித்த
மடி2கெ2 ராஜடி2கி2ன அடு2கு2மனிரி
வாருக சே2ருவு தாரெறுங்க2க போயி
அதடு2னு ஸுனகுனி அடு2கு2 மனியெ
அதடு2 தானு எறுங்க2னனி பல்கி,'ந்ருப,வினு:
மாருத்விஜுல பிண்டு2 நாகசே2ரு
வேனு எறுங்க2லேமிக ஒக்கஜமெ கா
தி2லமறி எவ்வாடு2 எறுக2 டெ2வ்வ

தே. டே2னி ச2ப்தாங்க2முல நீகுனிச்சி செட்லு
வட்டி பென்ரால திப்பலு வட்டிதிருகு2
அட்டி கா1ண்டி2க்யு டொ2க்கடு2 அரயஎறிகெ2
நேநெறுகு2 வேடு2மதி2 கர்ஜமேனி'யனின III—24

ச. நரபதிபல்கி 'மொனிவர, நாரிபு நிஷ்க்ருதி வேட2போயினன்
த3ரஹது சேசெ2னேனி ச2வனம்பு ப1லம்பொ2ட2 கூ2டுகாகமத்
பரக2தி செப்பெனேனி மக1தந்த்ர மதந்த்ரமு காக பூர்ணமொ
இறுதெறகு2ன் மதீ2ப்சி2தமெ ஏகெ2த2னஞ்சு ரதா1தி2ருடு3டை2
III—25

க. ஹரிணாஜினோத்தரீயுடு2
நிராயு து3டு2னகு2சு அதனி நெலவகு2 அட2வின்
சொர, கொட்டி காண்ட்2ரு டெ2க்கெமு
பரிகிஞ்சி, எறிகி2 கலயப2டி2 கூதலிட2ன் III—26

அரசன் (கேசிதுவஜன்) இடம் விண்ணப்பிக்கவும் அவன் (தன் வேள்விப் பசு இறந்து போனதால்) பிராயசித்தம் (கழுவாய்) என்னவென்று ருத்துவிக்குகளை (யாகசாலைத் தலைமை யந்தணனை)க் கேட்டான். அவர்கள் கசேரு முனிவனைக் கேட்கக் கோரினர். கசேருவும் தனக்குத் தெரியாதென்று சுனகமுனிவனைக் கேட்கச் சொல்ல, அவரும் தனக்குத் தெரியாது என்று கூறிவிட்டு "மன்னனே! ருத்துவிக்குகள், கசேரு, ஆகியோருக்கோ எனக்கோ தெரியாது. நாங்கள் மட்டுமல்ல! உலகில் யாருக்கும் தெரியாது. உனக்கு (தோற்றோடி) அரசினைத் தந்து (படை, குடி, கூழ், அமைச்சு, நட்பரண்களையும் தந்து) மரங்கள் வெறும் கற்பாறைகளுக்கிடையே திரிந்து கொண்டு இருக்கும் காண்டிக்கியன் ஒருவன்தான் தெரிந்திருக்கலாம்! விரும்பினால் அவனைக் கேள்'' என்றான். III—24

அரசன் "முனிவரனே! என் பகைவன் நான் பிராயச்சித்தம் கேட்கச் செல்லும் போது என்னைக் கொன்றால் யாகப்பலன் கிட்டும். கொல்லாமல் பிரயாச்சித்தம் சொன்னால் யாகம் நிறைவேறி முழுமைபெறும். இருவிதத்தும் என் விருப்பமே நிறைவேறும்'' என்று சொல்லித் தேரில் ஏறிச்சென்றான். III—25

கேசித்துவஜன், மான்தோல் மேலாடையாக, ஆயுதமின்றி, காண்டிக்கியன் இருக்கும் இடத்திற்குப் புறப்பட்டுக் காட்டையடையவும், ஒற்றர்கள் அவன் கொடியைக் கண்டதும் யார் என அறிந்துகொண்டு ஒன்றுகூடி கூச்சலிட்டு அறிவிக்கவும். III—26

ஆ. வலச2பெ2த2ர, ந்ருபதி கலக2க ப்ரஜவக2
லார்ப பனிசி, கனுமலந்து2 நிலுவ
வேறுவேற ஏர்சி விலுமந்தி, பனிசி;தா
தடு2கு பெண்டெ2 மலுக வொட2ம வெட2லி III—27

க. வச்சுரிபு சூபுலென சுற
புச்சுசு, சி2ரிகொனுட மகு2ட2பொட2முட ருஷமுச்
சிச்சுன லாவெச்சக2வி
த்யுச்சலதாபமுன தூபு தொடு2கு2சு பலிகென் III—28

ம. த3னதா2ன்யத்2விர தா2ஸ்வ கோ2கூ2ணம்பெ2ல்ல
சா3ம்ராஜ்யமுன்
கொனியுன்சாலக தாடகேய பலபு3க் கூடாக்ருதின் ஜிங்கதோ
லுனனாச்ச1ன்னுட2வை ப்ராஸாந்துக2தி மாலோ சொச்சி
ப்ரணம்பு2லன்
கொன ஏதெஞ்செதெ2? து2ர்மதீ, கெட2பெத2ன் க்ரூரம்பு
ப3ல்லம்பு2னன் III—29

மஹாச்2ரக்2த3ர

அனினன் சேயெத்தி 'யோஹோ
யலுக2கவினு; கானாததாயின் ப்ரமாத3ம
பு2ன வைகல்யம்பு யாகு2ம்
பு2னகு பொட2ம, நேபூ3சு2ர ஸ்ரேணி வேட2ன்
நினு ஆவேதி2ஞ்சி பம்பென்
'ந்ருப, அதனெறுகு2 நிஷ்க்ருதின்வேடு2 போபொ
ம்மனி, கோபம்மைன ரோஷ
ம்மயின விடு2வு மெட்லைன மேலிங்க'ன்னனன் III—30

நாட்டை விட்டோடி வந்த மக்கள் பயந்து கலங்க் காண்டிக்கியன் அவர்கள் பயம் தீர்ப்பதற்காக சிலரை நியமித்து, மலைச் சிகரங்களில் ஆங்காங்கு வில் வீரர்களை அனுப்பி தகுந்த ஏற்பாடுகளைச் செய்து, தான் கோபம் மிக்கவனாக வாசற் கதவைத் திறந்து வெளியே வந்தான். III—27

வருகின்ற பகைவனை (கேசித்துவசனைப்) பார்வையாலேயே சுட்டெரித்து, தன் செல்வத்தைக் கவர்ந்ததாலும் மீண்டும் ஈண்டு வந்துற்றதாலும், சினத்தாலும் முத்தீயாகச் சேர்ந்து வலிமை யுற்று மின்னல்போல அசையும் வில்லில் அம்பைத் தொடுத்துச் சொன்னான். III—28

தனம், தானியம், யானை, குதிரை, பசுக்கூட்டம், அரசு எல்லாம் கவர்ந்தது போதாதென்று மாரீசனைப்போல மான் தோல் போர்த்துக்கொண்டு, சாந்தமுடையவனைப் போலப் புகுந்து, உயிரையும் கவர வந்தனையோ? தீய நோக்குடை யவனே! உன்னைக் கூரிய வேலால் கொன்றொழிப்பேன்''

III—29

எனவும், கையெடுத்து ஓ! கோபப்படாமல் கேள்! நான் கொல்ல வரவில்லை. என் வேள்வியில் தவறுதலாக இடையூறு நேர்ந்துவிட்டது. அதற்குப் பிராயச்சித்தம் அந்தணர்களைக் கேட்க அவர்கள் உன்னிடம் அனுப்பி வைத்தார்கள். "மன்னா! அவனுக்குத்தான் பிராயச்சித்தம் தெரியும் போ!" என்று கூறினர். கோபத்தையோ சாபத்தையோவிடுக. எதுவானாலும் மேல்தான்

(கோபம் விட்டால் அருள்கூர்ந்து பிராயச்சித்தம் கேட்டு வேள்வி முடித்து நலம்பெறுவேன் அல்லது சாபம்(வில்) விட்டால் இறந்துபடுவேன் அதுவும் சரிதான் என்பது கருத்து.) III—30

வ். அனின, அதண்டு[2] த்ருஷ்ண்ட[2]ம்பு[2] சொச்சி, மந்த்ரி புரோஹித ப்ருப்[3]ருதி சுஹ்ருஜ்ஜனம்பு[2]லகு தத்வ்ருத்தாந்தம் ப[2]ந்தயுன் செப்ப, மந்தனம்பு[2]னகுன் சொச்சின மந்த்ருலு இட்லனிரி. III—31

க. பாலுகலவாடு[2] மனகொக
ஜாலியிட[3]க தானே தாரசா[2]னகு வச்சென்
வேளயிதெ[2], லெம்மு, ந்ருபக்ருப
சாலுன் காராகு மேபி சம்பகு ப்ரஜலன் III—32

உ. அண்டலுகட்டி செல்கலகு ஆண்ட்[2]ருனு[2]பிட்ட[2]லு
கூரகோயபோ
கண்டகமுல் பதா[2]ப்[2]ஜமுல காட[2]னொத[2]ர்சின னொப்பி
கூயிட[2]ன்
கண்டிகி நித்ரகான கொது[2]க[2]ம்ப[2]டி[2] வேகெ[2]த[2] மிந்து[2]
ஒக்கமா
கண்டயு காது[2]; நீவு படுனட்டி யவச்[2]த[1] வசிம்பஸக்யமே?
III—33

தே. ச்[2]வாம்யமாத்ய சு[2]ஹ்ருத்கோஸ ஜனபத[2] ப[2]ல
து[2]ர்க[2]முலு ச்[2]வாமி கலிகி[2]ன தொலுத கலவு
அங்கி[2] சு[2]கி[1]யைன அங்க[2]ம்பு[2] லடகு முனுபெ
சால சு[2]கு[1]லௌட மனகு த்[2]ருஷ்டம்பு[2] காதெ[2] III—34

எனவும், அவன் (காண்டிக்கியன்) மரச்செறிவிற்குள் புகுந்து மந்திரி, புரோகிதர் முதலியவர்களுடனும் அச்செய்தி சொல்லி ஆலோசனை கேட்கவும் மந்திரிகள் இவ்விதம் கூறினர். III—31

''பங்காளி (தாயாதி) நமக்கொரு சிரமமும் இல்லாமல் தானே அருகணைந்துள்ளான். இதுதான் சமயம்! எழுக! மன்னவா! அருள்போதும்! முற்றிய இலைகளைத் தின்னச் செய்து மக்களைக் கொல்லாதே!'' III—32

மனைவி மக்கள் குழுமி தரிசு நிலங்களில் கீரை கொய்யச் சென்று, மெல்லடித் தாமரைகளில் முள் தைத்து அதை எடுக்கும் போது அவர்கள் நோவால் அலறுவதால் கண்களுக்குத் தூக்கம் வராமல் ஒதுங்கிச் கிடந்து வேதனைப் படுகிறோம். எங்களுக்கு மட்டுமன்று! நீ படும் பாட்டைச் சொல்ல முடியுமா? III—33

உடையவன், அமைச்சு, நட்பு, பொருள் (பொக்கிஷம்) நாடு, படை, அரண் எனும் ஏழு அரசியலங்கமும் உடையவன் (அரசு) இருந்தால் முன்பாக அதுவும் இருக்கும். அவயவி (ஆன்மா) சுகமாக இருந்தால் அங்கங்களும் (உறுப்புகளும்) சுகமாக இருக்கும் என்பது நாம் அறிந்ததுதானே III—34

க. அதனிபனி தீர்ப ராஜ்ய
த்2விதய மு நினுசேரு; எட்டிநெரவுன னைனன்
க்ஷிதிபுல கரிஜயமு த3னோன்
னதியு ப்ரஜாச2த2ய ரக்ஷணமு த3ர்மம்புல் III—35

க. அந்யாயம்பு2ன து3ச்ச2ஹ
மன்யுண்ட2கு3 ப்ரப2ல ரிபுனி மடி யிஞ்சினத3ர்
மன்யக்ருதி ககு2நிஷ்க்ருதி
சந்யாயம்பு2க3 ப்ரஜாளி ச ம்ரக்ஷிம்பன் III—36

க. தன ராஷ்ட்ரமு செட2 வச்சின
அனிமிஷபதி விப்ருட2னக ஆசார்யு த்ரிஸீர்
ஷுனி துனுமடெ2? விடு2வுமு த2ய
நினு நம்மின ப்ரஜலு நவய நீத2ய யேலா? III—37

க. ஸிஷ்டு நினுனிந்த சேசி2ன
து2ஷ்டாத்முனி பிலுகுமார்சி, து2ரிதமு பித3பன்
நஷ்டம்பு2க2 பூ3வல்லப3
இஷ்டாபூர்தமுலு சேசி எச2க2க2 ராதே? III—38

தே. இங்க ரென்னாள்ளுசூசி, நீவங்க தெகு2வ
கலுக2 குண்டி2ன ப்ரஜலூள்ளு தலசி போவ
மௌனி வகு2டயெ யொண்டெ2, விஹீன ச2ந்தி3
அதனி கனுடொண்டெ2 காகொண்டு2 மதமுகலதெ2? III—39

அவன் காரியத்தை முடித்துவிட்டால், அரசு இரண்டுமே உன்னைச் சாரும். எப்படியேனும் அரசனுக்கு பகைவனை வெல்வது இன்றியமையாதது. அதனால் பொருட்பேறும் மக்களை அருளோடு பாதுகாத்தலும் அறமாகும். III—35

தாங்கரிய குரோதமுடைய வலிமையான பகைவனை அநியாயத்தால் கொன்றால் அந்தப் பாவத்திற்குப் பரிகாரம், நியாயமாக மக்களைப் பாதுகாப்பதுதான் ஆகும். III—36

இந்திரன், திரிசிரிடன் (முத்தலையன்) எனும் அந்தணனும் தன் குருவானவுமான பெரியவனால் தன் நாட்டுக்குத் தீமை நேரும் என்று அறிந்து கொல்லவில்லையா? அருளை விடுக! உன்னை நம்பிய மக்கள் துன்புற்று மெலிய இந்த அருள் என்ன பயன்? III—37

மன்ன! நல்லொழுக்கமுடைய உன்னை இந்தப் பாடுபடுத்திய கயவனைக் கொன்று, பின்பு வேள்விகள், தான தருமங்கள் செய்து பாவத்தைப் போக்கிக் கொள்வாயாக. III—38

இன்னும் இரண்டு நாட்கள் பார்த்து உன்னிடம் சாரமில்லை என்று கண்டால் மக்கள் ஊரை நோக்கிப் போனால், நீ துறவியாக வேண்டும் அல்லது தாழ்ந்த நிலையில் உடன்படிக்கை செய்து கொள்ள வேண்டும்! இது தவிர வேறுவழியுண்டோ? III—39

க. ஜனவர, தபமுனகுன் சொச்
சின கன்னுலு மூசி2கொண்டெ செ2லவிந்தியகா
கனிதி2த்3யாச2கு ப்2ரம்ஹம்
பெ2னயுனெ புரிபு3வபு ஸல்யு மெத2லோ மெறமன்! III—40

க. அவமதி பித்ருக்3னு லகு2பூ3
த3வுல வெத2கி பில்லபில்ல தரமுதுனிமி பா3ர்
கவுடு3 முனியய்யெ; மறிவை
ப3வமுவலது2, ஸாந்திகைன, பக2தெக2 கருனே? III—41

தே. பக2யு வக2யுனுலேக யேபாடி கன்ன
அலரு சா2மான்ய ச2ம்சா2ரி யகு2ட மேலு
மறி தகி2லெனேனி ஸாந்திசே மறவதக2து
ராஜ்ய பூ3மிக தால்சின ராஜுனகுனு III—42

க. புலிமல டி2கி2 யூள்ளகு அ
க்ஷலருஜரா ஜனமு மான்புகோ பனிசிக2வின்
நெலகொன சு2ரியலு கொனி சனி
பொலியுனொ? ஊரகுயிரேகி2 பொடு3சுனொ செபுமா
III—43

க. ஈவேள ப2லியு அதனின்
போவிடி2சிதி பொம்மு பாடி2 போயின ராஜ்யம்
பே2விதி3 க்ரம்மறு? னாவெர
வீவெரனி வ்ரேலு மடி2சி யேர்பட2 செபுமா III—44

மன்ன! தவம் செய்ய முயன்றாலும், அவமானம் என்னும் அம்பு தைத்த வேதனை இதயத்தில் இருக்கும்போது வெறும் கண்ணை மூடிக்கொள்ளலாமே தவிர, பரப்பிரம்மத்தை தியானிக்க முடியுமா? III—40

பரசுராமன் அவமானத்தால், தன் தந்தையைக் கொன்ற மன்னர்களைக் கொன்று அவர்கள் குழந்தைகளையும் மரபினரையும் தேடித் தேடிக் கொன்று பிறகுதான் தவம் செய்து முனிவன் ஆனான். அரசைப் பெறுவதற்காக இல்லாவிட்டாலும் மன அமைதியுறவேனும்பகையை அழிக்கவேண்டாமா? III—41

பகைமையும் கவலையும் இல்லாமல் கிடைத்தது போது மென்கிற சாதாரண குடிமகன் ஆக இருப்பது மேல்தான். ஆனால், அரச வேடம் பூண்டவனுக்கு பகை ஏற்பட்டுவிட்டால் அமைதியாக பகையை மறந்திருப்பது தகுந்ததன்று III—42

புலிமலையிலிருந்து (ஈன்ற(புனிறு)காலத்தில்) கண்ணோயால் ஊருக்குள் வந்துவிட்டால், மனிதர்கள் நோய் நீக்கிக் கொள் என்று சொல்லி குகைக்கு அனிப்பி வைத்துவிட்டுப் பின்னர் அதனாலே கொல்லப்படுவரோ? ஊரிலேயே கூச்சல் போட்டுக் கத்தியாற் குத்திக் கொல்வார்களா? சொல்க! III—43

இந்நேரம் வலிமை மிக்க அவனை நீதிக்காக விட்டு விட்டாயானால், இழந்த அரசினை மீண்டும் பெறுவதற்கு என்ன வழியிருக்கிறதென விரல் மடித்துச் சொல்க.'' III—44

தே. அலச2த பருன்ன மனுஜுண்டு2 கலியுக2ம்பு2
த்2வாபரம் பெ2ன்ன கூர்சுன்னவாடு2 த்ரேத
யுத்தி1துடு3, யாயிமறி க்ருதயுக2 மடன்ன
நமுசித2 மனோக்தி ருக்2ப்3ராம் ஹணமுன விஷமெ? III—45

க. சி1த்2ரப்ரஹாரி, ராஷ்ட்ரோ
பத்2ரவ பரிஹாரி, ஆப்தபா3ஷண ருசிவே
ளோத்2ரிக்துண்டு2 அவேளா
னுத்2ரிக்து ட2னல்ப காலமுர்வி பு3ஜிஞ்சுன் III—46

வ. லேலெம்மனுடயு, ப்ரதா3னுலகு பூ3நாது1ண்டி2ட்லனியெ III—47

க. மீநொடி2வினயதி3 கார்யம்
பௌ2, இப்பனி சேய ராஜ்ய மந்தயு மனகுன்
வானிகி பரலோகமு ஜித
மௌனொக்கட, இந்து2 வாசு2லரயக2 வலயுன் III—48

க. பரலோக சு2க1மு ஸாஸ்வத
மரய, மஹீராஜ்ய சௌ2க்1ய மல்பா னேஹ:
பரிபோ3க்2யம் பி2ந்து2லகை
து2ரிதமு காவிஞ்சி தொலகு2து2னெ வரமுனகுன்? III—49

சோம்பேறியாகப் படுத்திருக்கும் மனிதன் கலியுகமாம். உட்கார்ந்திருப்பவன் துவாபரயுகமாம். எழுந்திருப்பவன் திரேதாயுகமாம். மற்றும் நடப்பவன் திருதயுகமாம். இவ்விதம் கூறும் ருக்வேத பிராமணத்தில் உள்ள சொல் கேட்க வில்லையா?

(நடக்கும் முயற்சியே சிறந்தது என்பது கருத்து) III—45

தன்னாட்டிலுள்ள குறைகளை உடனே நீக்கியும், தன் னாட்டை எதிரிகளிடமிருந்து துன்புறாமல் பாதுகாத்தும், பகைவரை அழிக்க ஏற்ற காலத்தில் நண்பர் கூறும் வாக்குக்கேற்ப முயற்சி செய்தும், தகாத காலத்தில் விரையாமல் ஆழ்ந்து சிந்தித் தும் இவ்விதம் இருக்கும் அரசன் நெடுநாள் உலகினை ஆள்வான். III—46

எழுக! எழுக! என்று கூறவும் மந்திரிகளைப் பார்த்து மன்னன் இவ்விதம் கூறலானான். III—47

"நீங்கள் கூறியது செய்யத் தகுந்தது தான்! இவ்விதம் செய்தால் அரசு முழுதும் நமக்கும் அவனுக்குப் பரலோகம் (சுவர்க்கம்) கிடைக்கும். இதில் எது சிறந்தது என்பதை ஆராய வேண்டும். III—48

பரலோகம் (துறக்க இன்பம்) நிலையானது. உலக அரச போகங்கள் நிலைத்தவையன்று. ஆதலின் பாவம் செய்து பரத்தை இழக்கலாமோ? III—49

க. 'ப2த்தா3ன்ஜலி புடுதீ2னுன்
க்ருத்து3ண்டை2 ஸரணு சொரக2 கூல்சுட கடு2கீ
டுத்த3தி பரலோகார்ஜன
பு2த்தி3கி'னனு கண்வ வாக்யமுலு தலப ரொகோ?' III—50

ஆ. அனுசு வெட2லி வச்சி, யாராஜு2னடி2கி2, தத்
க3ர்ம னைசிகீவத3 க்ரமம்பு2
தெலிசி, தகி2ன நிஷ்க்ருதி வசிம்பனாதண்டு2
மகு2ட2 க்ரதுவு சா2ங்க2முக2 ஒனர்சி III—51

ஆ. அவப்3ருதா1 ப்லுதோத்த மாங்கு1டை2; ருக்விக்ச2
த2ச்2யக2ணமு பூஜதனிபி, பித2ப
சூ2தமக2த2 வந்தி வைதாளிக ப்ருப்3ருத்
யர்தி1கோடி கபி3மதார்த1 மொச2கி2 III—52

தே. மறியு கோரினவாரி அக்கறலு தீர்சி
யுனு மனஃபூர்தி சாலகொய்யனதலஞ்சி
'அகட கு2ருத2க்ஷிண யொச2ங்க1 னயிதி'னஞ்சு
மகு2ட2சனி, ஸங்கனதடு ச2ம்ப்3ரமபட2ங்க2 III—53

க. வாரிஞ்சி'நீகு னொய்யதி2
கோரிக? ஏதெஞ்சினாட2 கு2ருத2க்ஷிணயீ,
பூ3ரமண, வேடு2மனுடயு,
ஆராஜன்யுண்டு2 ஆப்துல தோட2ன் III—54

கைகூப்பி எளிமையுற்று வரும் அடைக்கலமானவனை, பரலோக சிந்தையுடைய ஒருவன் சினத்தால் கொல்வது மிகுந்த தீங்காகும் என கண்வமகரிஷி கூறிய வாக்குகளைச் சிந்திக்க வேண்டாமோ? III—50

என்று கூறி வெளியே வந்து அம்மன்னனிடம் (கேசித்துவஜ னிடம்) கேட்டு, யாகப்பசு கொல்லப்பட்ட விதம் அறிந்து, அதற் கேற்ற பிராயச்சித்தம் (கழுவாய்) கூறினான்: அது கேட்க அவனும் வேள்வி முறையாகச் செய்து முடித்து, III—51

வேள்வியின் இறுதி நீராட்டு முடிந்து, வேத அந்தணர்கட்கு வணங்கிப் பரிசுகள் ஈந்து, பின்னர் இரவலர்கட்குப் பரிசுகள் நல்கி, கேட்டவர்கட்கெல்லாம் அவர்கள் தேவைகளை நிறை வேறச் செய்து, III—52

அதன்பின்னும் தன் மனம் அமைதியுறாமையால், ஆராய்ந்து "குருதட்சணை கொடுக்காமல் இருக்கிறோமே" என வருந்தி மீண்டும் காண்டியக்கியனிடம் செல்லவும் அவன் ஐயமுற்று பரபரப்புறவும், III—53

அமைதியுறச் செய்து "உனக்கு எது விருப்பம்? குருதட்சணை (காணிக்கை) தர வந்துள்ளேன். மன்ன! கேட்பாயாக!" எனவும் அம்மன்னன் மீண்டும் தன் நண்பர்களுடன் III—54

க. கு2ருத2க்ஷிண யிச்சுடகீ
நரவருடே2 தெஞ்சே; மீருநாகனுரக்துல்
பரிகிஞ்சி பதி2ம்பதி2கா2
அரயுடு2 மதி2னெத்தி2 மேலு ப்ரார்தி1ஞ்சுடகுன் III—55

உ. நாவுடு2, வாரலம்மனுஜநாது1ன கிட்லனிருப்பி2; நேடு2கா2
தை2வமு கல்கெ2; வேக2கு2ருத2க்ஷிணகா2 சதுரர்ண
வீவ்ருதோர்
வீவலயம் பஸேஷமுனு வேடு2மு,பூ3வர, மம்முனந்த2றுன்
ப்ரோவுமு; பா2ந்த3வாப்த ஜனபோஷண கன்னனு
புண்யமுன்னதே!2 III—56

உ. என்னடு2 லாவுகூடு2 மன?கென்னட2கு2ந்த2றி?
அய்யெனேனிபோ
ரென்னிகயெளனெ? போரின ஜயிம்பனெ செப்பிரெ?
நீது2பா3க்2யச2ம்
பன்னத சேரெ கார்யமிடு; ப2ந்து3சு2 ஹ்ருத்ததி
கொக்ககீடு2ரா
குன்னடு லுண்ட2கா2னெ, சி2ருலூரக சாவக நோவகப்பு2னே
III—57

ச. அனவுடு2, அல்லநவ்வி மனுஜாதி3 புடி2ட்லனு 'மீரலர்த1சய3
த3னபரதந்த்ர கோவிது2லு தக்க, மஹாசு2க1தா2யி மோக்ஷமார்
க3நய விசாரகோவிது2லு காரதிசஞ்சல ராஜ்யலக்ஷ்மி னே
மனிசனி வேடு2வாட2 பரமார்த1மு வேட2க அம்மஹாமதின்
III—58

குருதட்சணை தர இம்மன்னன் வந்துள்ளான்! நீவிர் என்பாற் பற்றுடையவர்கள்! ஆராய்ந்து நன்றாகச் சிந்தித்து நாம் கேட்பதற்கு எதுமேல் என்று கூறுங்கள்.'' III—55

எனவும், அவர்கள் அம்மன்னவனிடம் மகிழ்ச்சியோடு இவ்விதம் கூறினர். ''இன்றல்லவா தெய்வம் அருள் கூர்ந்தது!. விரைந்து குருதட்சணையாக கடல் சூழ்ந்த நிலம் முழுதும் கேட்பாயாக! மன்ன! எங்கள் அனைவரையும் காப்பாற்றுக! சுற்றமும் நட்பும் பாதுகாத்தலைவிடப் புண்ணியம் வேறிருக்கிறதா? III—56

நமக்கெப்போது பலம் வரும்! எப்போது சமயம் வாய்க்கும்! வாய்த்தாலும் போர் ஏற்படுமா? ஏற்பட்டாலும் நாம்தாம் வெல்வோம் என்று யாரேனும் சொல்ல முடியுமா? உன் பாக்கிய வசத்தால் இந்த நற்பயன் கிடைத்துள்ளது. சுற்றத்தார்க்கும் நட்பினர்க்கும் ஒரு தீங்கும் நேராமலேயே, தீ இருந்தாற் போலிருந்து நமக்குக் கிடைக்கிறது. செல்வம் சாகாமலும் நோகாமலும் கிடைக்குமா? III—57

என்று கூறவும், மெல்ல நகைத்து அம்மன்னன் (காண்டிக்கியன்) இவ்விதம் கூறினான். ''நீங்கள் பொருளாதார நூல் வல்லவர்களேயன்றி, பேரின்பம் நல்கும் வீடுபேற்றைக் காட்டும் தத்துவ ஞானத்தில் வல்லவர்கள் அல்லர்! நிலையற்ற செல்வத்திருமகளை எவ்விதம் சென்று கேட்பேன்! அப்பேரறிஞனிடம் பரமார்த்தம் (தத்துவம்) கேட்காமல் அரசினைக் கேட்பதெப்படி?" III—58

க. நிமிவம் ஸோத்பன்னுல மட,
மமுபோ[2]டுல ககட ராஜ்யமா லக்ஷ்யமு?வா
ட[2]மலின யோகா[2]ஸ்ரயு டு[2]த்
தம யோக[2]மு கொனுட யுரவொ, த[3]ர கொணுடுரவோ?
III—59

சீ[2]. விடு[2] 'ட[2]னிவீடு[2] வெல்வடி[2] வச்சி கா[1]ண்டி[2]க்யு[2]
டா[2]ராஜு கனிகொ[2]னி கா[2]ரவமுன,
கு[2]ருநிஷ்க்ரயம்பு[2] நிக்குவமுகா[2] ஒச[2]க[2]தே[2]?
அனிபல்கி, 'இத்து தத்[1]யமுக[3]'னன்ன
'அவனிதலேந்த்[2]ர, நீவத்[3]யாத்ம ரது[1]ட[2]வு
த[2]க்ஷிண கு[2]ருனகீ தலசிதேனி,
ச[2]கலப[3]வக்லேஸ ச[2]ஞ்க்ஷய ம்பெ[2]ய்யதி[2]
அவ்வித்[2]ய போ[2]தி[3]ம்பு'மனின நவ்வி,

தே. அஹஹ! நிஷ்கண்ட காச்[2]மதீ[2]யாதி[3] ராஜ்ய
மடு[2]க[2]னொல்லக இதி[2] ஏடிகடி[2]கி[2]திபுடு[2]?
க்ஷத்ரியுல கெல்ல ராஜ்யம்பு[2] கண்டெமறிப்ரி
யம்பு[2] கலதெ[3]? அடன்ன இட்லனியெ அதடு[2] III—60

ம. வினு,கேஸித்[2]ஜ, தா[2]த்ரி வேட[2]மிகி னாவேதிஞ்செத[2]ன்
ஹேதுவ
ஜ்ஞுனகுன்காக விவேகி கேல ஜனியிஞ்சுன்லெனல்ய
மெந்து[2]ன் ரணம்
பு[2]னபாடி[2]ன்ரிபு கூல்சு வாடி[2]யு, ப்ரஜாபோஷணம்பு[2]
த[2]ர்மம்பு[2]ரா
ஜுனகெள;னைன அஸக்து த்வத்விஜிதராஜ் யுன்னன்னகம்[3]
ப[3]ண்டுனே? III—61

நிமி மரபில் பிறந்த எமக்கு அரசுதான் குறிக்கோள்! அவன் தூய யோகநெறி சார்ந்தவன். மேலான யோகத்தைப் பெறுவது சிறப்பா? நிலத்தைக் கேட்பது சிறப்பா? III—59

'விடுக' என்று பாசறை நீங்கி வெளியேவந்து காண்டிக்கியன் கேசித்துவஜனைக் கண்டு கௌரவித்து "குருதட்சணை நிச்சய மாகத் தருவாயா?'' என "நிச்சயமாகத் தருவேன்'' எனவும், "மன்ன! நீ ஆன்ம இன்பத்திற் திளைப்பவன் குருவுக்கு தட்சணை தர விரும்பினால், எல்லாப் பிறப்புக்களையும் ஒழிக்கும் வித்தை எதுவோ அதனைப் போதிக்கவும்" என்று கூறவும், கேசித்துவஜன் சிரித்து, "அடடா! இடையூறு இல்லாத எனது அரசினைக் கேட்காமல் இது ஏன் கேட்டாய் இப்போது? க்ஷத்திரியர்கட்கு அரசினைவிடப் பிரியமானது வேறொன்றுண்டோ?" என்றான். எனவும் அவன் இவ்விதம் கூறினான். III—60

"கேசித்துவனே! அரசினைக் கேட்காததற்குக் காரணம் கூறுகிறேன். அறியாமையால் உள்ளவர்க்கன்றி ஞானிகட்கு ஆசைகள் உண்டாகுமா? போரில் பகைவரை அழிக்கும் வீரமும், அறத்தோடு குடிமக்களை ஓம்புதலும் அரசனுக்கு தருமமாகும், உன்னால் தோற்கடிக்கப்பட்ட எனக்கு (இவ்விரண்டும் இயலாமையின்) பாவம் சேராது. III—61

சீ[2]. நரநாத[1], ஈராஜ்ய பரிபாலனாராதி
ஹனனாதி[1] க்ருதரூப யகு[3]அவித்[2]ய
அனதி[3]காரிகி விச[2]ர்ஜனமு காவிம்பங்க[2]
கலுஷம்பு[2] ராத[2]தி[3] காரியைன
வாடு[3] விச[2]ர்ஜிம்ப வச்சு வர்ணாசார
லோம்பபு[2]சே அகு[1]பாப லேப
மைன நேனித்து கொம்மன கொனுத[2]ரணிபோ[3]
க[1]முனகு காக த[3]ர்மமுன கரு[2]னெ?

தே. கான சத்க்ஷத்ரியுலகு பை[3]க்ஷம்பு[2] கீடு[2]
மத்ப்ரதா[3]னுலு வேடு[2] சா[2]ம்ராஜ்ய மனெடு[2]
பலுகு த[3]ர்மச்ச[1]லம்பு லோப[3]ம் ப[2]யுக்த
மிதி[2]யெறிகி[2] ராஜ்யமடு[2]க[2] நேனிச்சகி[2]ம்ப III—62

தே. ஆச[2]படு[2]து[2]ரெ பு[2]து[3]லு, ராஜ்யம்பு, மமத
மானனி ஜடா[2]த்முலட்ல ஹங்கார பான
மத்துலகு காக அதி[2]ஏல மாத்[2]ருஸா[2]லகு?
அளின ஹர்ஷிஞ்சி மெச்சி அஜ்ஜனகுட[2]னியெ III—63

ஆ. 'ஏனவித்[2]ய வலன ம்ருத்யுவு தரியிம்ப
அனக[3], ராஜ்யமுலு மகா[1]தி[2]கமுலு
சேயுசுன்னவாட[2], க்ஷீணிம்ப சேயுது[2]
புண்யப[1]லமு போ[3]க[2] பு[3]க்திசேத III—64

மன்ன! அரசினை ஏற்று குடிமக்களைக் காத்தல், பகைவரை அழித்தல் எனும் மன்னர்க்குரிய தருமத்தை அதிகாரமில்லாதவன் விடுவதில் தவறில்லை. அதிகாரமுடையவன் விட்டால்தான் பாவம் சேரும். மேலும் ஒருவன் தர ஒருவன் ஏற்கும் அரசு போகத்துக்கேயன்றி தருமத்துக்குரியதன்று. அரசன் இரந்து பெற்றுக் கொள்வது மிக்க இழிவாகும், என் மந்திரிகள் அரசினைப் பெறுக என்று கூறுவது ஆசையால் கூறுவதன்றி அறத்தால் அன்று. அது தக்கதல்ல. ஆதலின் நான் அரசினைக் கேட்காமல் ஆன்மஞானத்தைக் கேட்கிறேன்.'' III—62

ஞானிகள் அரசினுக்கு ஆசைப்படுவரோ? நான் எனும் அகங்காரக் கள்ளினைக் குடித்தவர்கள் போன்று, எம் போன்றோர்க்கு ஆசைகள் எதற்கு?'' என்று (காண்டிக்கியன்) கூறவும், கேசித்துவஜன் கூறினான்: III—63

''நான் அறியாமையால் சாவினைத் தாண்டுதற்கு அரசும் வேள்விகளும் செய்துகொண்டிருக்கிறேன். புண்ணியப் பயனை அனுபவித்து அழிப்பேன்.'' III—64

க, மன ஈநிமி வம்ஸமு பா
வனமகு2 பா3க்2யமுன, மனுஜவர, தத்வ விவே
சனசிந்த நீகுபொட2மெனு
வினுமிக வினிபிந்து நேனவித்3யா வித3முன் III—65

ஆ. ஆத்மகானி மேன ஆத்ம பு3த்தி3யுனுன
ச்2வம்பு2னந்து2 மிகு2ல ச்வத்வமதியு
அவனிவர, அவித்3யயனு மஹாதருவு உத்
பத்தி கீத்2வயம்பு3 வித்து மொத2லு III—66

க. நரநாத1! பாஞ்சபௌ3திக
ஸரீரமுன தே2ஹிமோஹ சா2ந்த்2ர தமதம:
பரிவ்ருதுடை2 'ஏனிதி2 நா
பரிகர'மனியவதி3 லேனி ப்3ரம படி2திருகு2ன் III—67

க. ஜலவசு2தா2ம்ப3ர பவன
ஜ்வலனம்பு2ல கண்டெ தானஜச்ரம்பு2 வெலின்
வெலுகொ2ந்து2 ஆத்ம யுண்ட2க2
களேப2ரமு னெவ்வ டா2த்மக2 தலபோயுன்? III—68

மன்ன! நமது இந்த நிமி மரபின் புனிதமான நற்பேற்றினால் உனக்கு தத்துவ ஞானச் சிந்தை உண்டாயிற்று! இனி உனக்கு அஞ்ஞானத்தின் இயல்பைக் கூறுகிறேன். கேள்! III—65

அஞ்ஞானம் எனும் மாபெரும் மரத்தின் உற்பத்திக்குத் தான் (ஆன்மா) அல்லாத உடம்பில் தான் எனும் புத்தியும், தனது இல்லாத (மனைவி, மக்கள், வீடு, சொத்து)வற்றில் தனது எனும் பற்றும், ஆகிய இவ்விரு விதைகளே மூலகாரணங்களாகும். III—66

மன்ன? பஞ்சபூதங்களாலான சரீரத்தில், ஆன்மா, அஞ்ஞானமாகிய செறிந்த இருளினால் சூழப்பட்டு, 'நான், இது எனதுடைமை' என்று எல்லையற்ற மயக்கத்தில் சுழல்வான்.'' III—67

நீர், மண், விண், தீ, காற்றெனும் பஞ்சபூதங்கட்கு அப்பாற்பட்டு ஒளிரும் ஆன்மா இருக்கும்போது, இவ்வுடம்பினை யார் ஆன்மா வென்று கருதுவார்கள்? III—68

சீ2. வபுருபபோ3க்3யமுல் ந்ருப க்2ருஹ க்ஷேத்ராது2
லவிபொந்தி2 வெளகாக, யாத்மவகு2னெ;
அட்லன புத்ர பௌத்ராதி2கமுலு ஆத்ம
கானிமை புட்டுட காவு தனவி
கான ம்ருத்யுவு கனுகாயம்பு2ன ஜனிஞ்சு
புத்ராது2லெட2 ச்2வத்வ பு2த்தி3 தக2து2
எபுடே2னி ஆத்ம வேறெ யனுனப்புடெ2
அட2ரு போ3க2ம்பு2லு ஈயாத்மகண்ட;

தே. வட்லுகா2 கீயொட2லெ யாத்ம யன்னனண்டு
மத்க்2ருஹமு நில்சுனெட்லல்கு ம்ருஜ்ஜலாதி2
னட்லு பௌ3திக போ3காஸ2னாதி பௌ3தி
காங்க3முலுநில்சு போ3க2மிந்தாத்ம கெத்தி2? III—69

ம. ஜனிசா2ஹச்2ர ப2ஹ-ப்ரயாண மகு2ச3ம்சா2ரம்பு
த்ரோவஞ்ச2தா2
சனுசுண்டு2ன் க3ன மோஹகே1த2 மலமச்2ச2ம்சா2ரி
பாந்து1ண்டு2வா
ச2னலன் தூ3ளிமுசு2ங்கு2 காக; எபுடே2ன்
ஜ்ஞானம்புடுஷ்ணோத2கம்
பு2னதத் க்ஷாளன சேயு, வானிகபுட2ம்மோஹ
ஸ்ரமம்பு2னன்சனுன் III—70

தே. அட்டி மோஹாஸ்ரமம் பாறனாஸரீரி
ச்2வச்2து1டை2 தானனன்யாதி ஸயமபா2த3
மனக2விலசி2ல்லு நிர்வாணமுனு ப3ஜிஞ்சு
அனக3 தொல்லியு நிர்வாண க1னிய கான III—71

மன்ன! வீடு, மனைவி முதலியவை உடல் அனுபவிக்கத் தக்கதேயன்றி ஆன்மாவிற்குடையதன்று. அதுபோன்று உடலால் பிறந்த மகன், பேரன் முதலியோரும் ஆன்மாவிற்கு தொடர்பின்றி உடல் தொடர்புடையவரே யாவர். மரணத்தையடையும் இவ்வுடலிற் பிறந்த மகன் முதலியோரும் தன்னவர் எனக் கருதுதல் தகாது. எப்போது ஆன்மா வேறு, உடல்வேறு என்று அறிகின்றானோ அப்போது அனுபவங்கள் ஆன்மாவைத் தீண்டாது. அப்படிக்கின்றி இவ்வுடலே ஆன்மா எனக் கருதினால் அனுபவங்களும் தன்னைத் தீண்டும். மண்குடில் மண்ணாலும் நீராலும் பூசப்பட்டிருப்பதைப்போல, பஞ்சபூதச் சேர்க்கையான இவ்வுடலும் உண்பது, குடிப்பது முதலியவற்றினால் இருக்கும். இதில் ஆன்மாவினைப் பௌதீக அனுபவங்கள் தொடாது.
III—69

சம்சாரியாகி (பிறவியுற்ற) வழிப்போக்கனாகிய ஜீவன் ஆயிரக் கணக்கான பிறவிகள் என்னும் பயணங்களையுடையவனாக, பிரபஞ்ச வாழ்க்கை என்னும் வழியே சென்று கொண்டிருப்பான். அனாதி கருமவாசனையாகிய தூசி படிந்து அஞ்ஞானமாகிய களைப்பினையுற்று துன்புறுவான். எப்போதேனும் ஞானமென்னும் வெந்நீரால் கழுவப்பட்டு அக்களைப்பினைத் தீர்ந்து இன்புறுவான். III—70

நல்லோய்! ஜீவன் முன்பு நிர்வாண (மோட்ச) ஆனந்த ரூபியாகலின், அஞ்ஞானமாகிய களைப்பினைத் தீர்ந்ததும் முன்னைய நிர்வாண (மோட்ச) சுகத்தையே அடைவான். III—71

வ. வினுஜனேஸ்வர! ஜலம்ப²ச்²ப்ருஷ்ட த²ஹனம் ப²ய்யு,தத்²ய யோக²ம்பு²ன கலஸோத²ரம்பு²ன உனிகின்தா னதிஸீதலம் ப²ய்யு உடி²கி, ஸப்²தோ²த்²ரேகாதி² த³ர்மம்புன் பொந்து²னட் லாத்மயுன் ப்ருக்ருதி ச²ம்ப²ந்த³ம்பு²ன அஹம்மானாதி² தூ²ஷி² துண்டை², ப்ராக்ருதம்புலகு² த³ர்மம்பு²லன் பொந்து; வீனி கத்யந்த விலக்ஷணுண்டு² அக்ஷயுண்டு² ஆத்ம; அட்லகு²ட இந்த அனர்த¹மூலம் ப²கு²ஈ அவித்²யா பீ²ஜம்பு நீகெறிங்கி²ஞ்சிதி; ஏவம்வித³ம்பு²லகு² ச²கல க்லேஸம் பு²லகுனு ச²ஞ்க்ஷயகரம்பு² யோக²ம்பு²தக்க மறியொண்டு² பாயம்பு² லேத²னுடயு, ப்ரீதுண்டை² கா¹ண்டி²க்யுண்டு²னு 'மஹாத்மா, இன்னிமிவம்ஸம்பு²ன விஜ்ஞாத யோக² ஸாச்²த்ரார்து¹ண்ட² வீவு;நாகு அயோக²ம்பு² ச²மச்²தம்பு² விச்தரிம்ப வலயு'னனின கேஸித்³வஜுண்டு² க்ருபாளுண்டை, 'மஹீபாலா, வினுமெந்தே²னி ச²ம்ச்²தி¹ துண்டை² முனிமறி புனர்ப³வம்பு²னகு ராக ப்²ரம்ஹ சா²த³ர்ம்யம்பு² பொந்து²னட்டி யோக²ம்பு² செப்பெத², சா²வதா³னுண்ட²வை வினு²மனி யிட்லனியெ III—72

ஆ· ப்ராணிகோடி கெல்ல பந்த³ம்பு² மோக்ஷம்பு²
சேருடகுனு மனசு² காரணம்பு²;
விஷய ச²ங்கி²யைன, வினுப²நத³காரி; நிர்
விஷயமைன, முக்தி விப³வகாரி III—73

சீ². விஜ்ஞானமுன சேசி² விஷயாதி²வலன நெ
ம்மன மாஹரிஞ்சி ப்²ரஹ்மமு பரேஸு
சிந்திம்ப வலயு நிஸ்ரேயச²ம்பு²ன, கட்லு
சிந்திம்ப னதடு² தத்சிந்தகுனகு
ஆத்ம பா³வம்பி²ச்சு, னாகர்ஷகமு விகார்
யஸ்மசா²ரமு தார்சுனட்லு, யோக²
மன, யமாதி³ விஷயமைனதி² ஆத்ம ப்²ர
யத்னம்பு²ன கதீ³ன யைன சா²த்த்வி

தே. கபு மனோக²தி எய்யதி² கலது²தா²னி
ப்²ரஹ்ம ச²ம்ப²ந்தி³னிக² சேய ப்ரௌடி³கு³வெ
இட்டி வைஸிஷ்ட்ய த³ர்ம மெந்தேனி கலுகு²
அட்டி யோக²ம்பு² கலிகி²ன யதடெ² யோகி² III—74

கேள் மன்னனே! நீர் நேரிடையாக நெருப்பினால் தொடப் படாதிருந்தும் குடத்தின் வயிற்றில் இருப்பதினால்தான் மிகக் குளிர்ச்சியுடையதாயிருந்தும், வெந்து கொதித்துப் பொங்குவது போல, ஆன்மாவும் பிரகிருதி (மாயை) சம்பந்தத்தினால், ''நான் எனது" எனும் அகங்காரத்தால் அழுக்குற்று பிரகிருதியின் தன்மையைப் பெறும். இவற்றிற்கு முரண்பட்ட தன்மையுடைய ஆன்மா அழிவற்றது. ஆதலின் துன்பங்கட்கு மூலகாரணம் அஞ்ஞானமே. அதைத் தெரிவித்தேன். எல்லாத் துன்பங் களையும் நீக்கும் ஒரே உபாயம் யோகம்தான்! வேறொரு உபாயம் இல்லை'' எனவும் மகிழ்ந்து, காண்டிக்கியன்! "மகாத்மா! நிமிமரபில் யோக சாத்திரத்தை அறிந்தவன் நீ. எனக்கும் அந்த யோகத்தைத் தெரிவித்தருள்க" எனவும் கேசித் துவஜன் அருளோடு கூடியவனாக, "மன்ன! மறுபிறப்பை எய்தாது பிரம்மத்தில் இணைவிக்கும் யோக சாத்திரத்தைச் சொல்கிறேன்! கவனமாகக் கேள்!" என்று கூறி இவ்விதம் கூறினான். III—72

உயிர்கள் கட்டு (பந்தம்) வீடுபேறு (மோட்சம்) அடைவதற்கு மனமே காரணமாகும். புலன்களோடு சேரும்போது பந்தம் அடைகிறது. புலன்களிலிருந்து விடுபடும்போது வீடுபேற்றை யடைகிறது. III—73

வீடுபேற்றையடைய சாதகன் புலனின்பங்களிலிருந்துமனதை மீட்டு, பரப்பிரம்மத்தை தியானித்தல் வேண்டும். காந்தம் இரும்பைக் கவர்ந்து தன் சொரூபத்தைத் தருவதுபோல, பிரம்மம், தன்னை தியானிப்பவனுக்கு தன் சொரூபத்தை யளிக்கும். யோகம் என்பது யமம், நியமம் (அடக்கம், கட்டுப் பாடு) முதலியவற்றால் மனதைப் பரிசுத்தமாக்கி, அம்மனத்தை பிரம்மத்தில் நிலை நிறுத்துதல் ஆகும். இத்தகு சிறப்பான யோகத்தை உடையவனே யோகி ஆவான். III—74

வ. மறியு, ப்[2]ரஹ்ம சர்யாது[2]லகு[2] யமம்பு லேனுனு, ச்[2]வாத்[3]யாயா து[2]லகு[2] நியமம்பு[2] லேனுனு, நிஷ்காமுண்டை[2] யோகியகு[2] வாடு[2] மனோ நைர்மல்ய ச[2]ம்பாத[1]னகு ஆசரிம்ப வலயு; இவி காம்யம்பு[2]லைன விஸிஷ்ட ப[1]லத[2]ம்பு[2]லு; நிஷ்காமுலகு முக்தித[2]ம்பு[2] லகு, அட்டி யமநியமம்பு[2]லு வத[2]லக ப[3]த்[2]ராச[2]னாது[2]லந்து[2] ஒகடி அவலம்பி[2]ஞ்சி ப்ராணாபி[3]தா[2]னம் ப[2]கு[2] பவனம்பு[2] அப்[3]யாச[2] வஸம்பு[2]ன வஸ்யம்பு சேயவலயு அதி யெ ப்ராணாயாம மனம்ப[2]டு[2]; அட்டி ப்ராணாயாமம்பு; ச[2]பீ[2]ஜ நிர்பீ[3]ஜ ச[3]ம்ஜ்ஞலன் பரகு[2]; அதி[2]யெ ப்ராண[2] பானம்பு[2]ல மிதோ[1]னு ரோத[3]ம்பு[2]ல உப[3]ய நிரோத[3]னம்பு[2]ன ரேசகாதி[2] த்ரைவித்[3]யம்பு[2]னுன் பொந்து[2]; மொத[2]ல நாசெப்பின ச[2]பீ[2]ஜ நிர்பீ[2]ஜ சம்ஜ்ஞலந்து[2] அந்தத்[2]தூல ரூபாவலம்பி[2]யகு[2]னதி[2]ய ச[2]பீ[2]ஜம்பி[2]தரம்பு[2] அபீ[2]ஜம்பு[2]; மறி ஸப்[2]தா[2]தி[2] விஷயம்பு[2]லன் ப்ரணவம்பு[2]லகு[2] இந்த்[2]ரியம்பு[2]லன் த்ரிப்பி மானச[2]ம்பு[2]ன கதீ[3]னம்பு[2]லு சேயுட ப்ரத்யாஹாரம்பி[2]ட்டி ப்ரத்யாஹாரம்பு[2] முமுக்ஷு[2]வுன கவஸ்ய கர்தவ்யம்பு[2]; தீ[2]னிவலன அதிசஞ்சலம்பு[2]லகு[2] இந்த்[2]ரியம்புலகு ஆத்ம வஸ்யத கலுகு[2], இவிகன வஸ்யம்பு[2]லு காகுண்டி[2]ன ஆயோகி யோக[2] சா[2]த[3]னுண்டு[2] காநேரடு[2]; ப்ராணாயாமம்பு,ன பவனம்பு[2]லு, ப்ரத்யாஹாரணம்புன இந்த்[2]ரியம்பு[2]லு, வஸம்பு[2]லைன பிம்மட; சித்தம்பு ஸு[2]பா[3]ஸ்ரயம்பு[2]னந்தி[2]டு[2]னதி[2] யனுடயு கா[1]ண்டி[2]க்யு டி[2]ட்லனியெ III—75

க. மனமுன கெத்தி[2] ஸு[2]பா[3]ஸ்ரய
மனக[3], எறிங்கி[2]ம்பு, மறி ச[2]மச்[2]தாதா[3]ரம்
பன சனு யத்[2]வச்[2]துவு?யன்
மனனமஸே ஷோருது[2]ஃக[1] மண்ட[2]லி செறகுன் III—76

மேலும், பிரம்மச்சரியம் முதலிய யமம் (அஹிம்சை, சத்தியம், திருடாமை, பிரம்மச்சரியம், பரிமிதபரிகிரகம் (மிகு பொருள் விரும்பாமை) என்னும் ஐந்தும், தன் பயிற்சி (ஸ்வாத்யாயம்) சௌசம் (சுத்தம்), சந்தோஷம், தவம், கடவுள் வணக்கம், முதலிய நியமம் ஐந்தும் பற்றற்றவனாகி மனப் பரிசுத்தத்திற்காக அனுசரிக்க வேண்டும். இவை பற்றுடன் கூடியிருந்தால் சிறந்த பேறுகளும், பற்றற்றிருப்பின் வீடு பேறும் நல்கும். இந்த யம, நியமங்களை விடாது பின்பற்றி, ஆசனங்கள் (பத்ரம், பத்மம், சிம்மம், சித்தம் முதலிய யோகாசனங்கள்) முதலியவற்றில் ஒன்றைப் பின்பற்றி, பிரணாயாமத்தினால் உயிர்ப்பினைத் தன் வயமாக்க வேண்டும். அது சபீஜம், நீர்பீஜம் என இருவகைப் படும். ரேசகம் (மூச்சை வெளியிடுதல்) பூரகம் (மூச்சை உள்ளுக் கிழுத்தல்) கும்பகம் (மூச்சை அடக்குதல்) எனும் மூன்று வகைப் படும். சபீஜம் என்பது உருவத்தை தியானிப்பது, நீர்பீஜம் உருவற்றதை தியானிப்பது. மனதைப் புலன்களிலிருந்து திருப்பி, மனத்துக்குள் கட்டுப்படுத்துதல் பிரத்தியாஹாரம் எனப்படும். இத்தகைய பிரத்தியாஹாரம் மோட்சத்தை விரும்புபவன் செய்வது இன்றியமையாதது. இதனால் மிகுந்த சஞ்சலமுடைய இந்திரியங்கள் (புலன்கள்) தன்வயம் ஆகும். இது வசமாகா விட்டால் அவன் யோகியாகமாட்டான். பிராணாயாமத்தால் காற்றையும், பிரத்தியாஹாரத்தால் புலன்களையும் வசப் படுத்திய பிறகு சித்தம் (மனம்) நலஞ்சார்ந்து அமைதியுறச் செய்யவேண்டும்'' என்றலும் காண்டிக்கியன் இவ்விதம் கூறினான். III—75

''நல்லோய்! மனதிற்கு மங்களம் (நலம்) தருவதெதுவோ? எது எல்லாவற்றுக்கும் ஆதாரமோ? எதை நினைத்தால் எல்லாத் துன்பங்களும் நீங்குமோ அதனைக் கூறுவாயாக.'' III—76

தே. அனின கேஸித்$^{3}$வஜ"டு$^{3}$ வானிகனியெ; ப்$^{3}$ரஹ்ம
மாஸ்ரயம்பு$^{2}$ மனம்பு$^{2}$ன; கதி$^{3}$ய பரமு
அபரமு னனங்க$^{2}$ பொலுசு; அந்த$^{3}$பர மனக$^{2}$
மூர்தமு, பரம்பனங்க$^{3}$ அமூர்த மனக$^{3}$ III—77

தே. முனுநா செப்பின ரெண்டிலோ பரமனன் முக்தாத்ம; தூரம்பு$^{2}$பா
ச$^{3}$னகாவிம்ப னமூர்தமிங்க பர ச$^{3}$ம்ஜஞும்ப$^{2}$ப்$^{3}$ ஜக$^{3}$ர்பா$^{3}$ தி$^{3}$ப$^{2}$
த்த$^{3}$னிகாயம்ப$^{2}$தி$^{2}$ மூர்தமைனனு பரித்யாஜ்யம்பு ஸஸ்வத்ரிபா$^{3}$
வனலன் கூடு$^{2}$டநாருரு க்ஷ"ன கசே$^{2}$வ்யம்பீ$^{2}$த்$^{2}$வயம்பு$^{2}$ந்துத$^{2}$ன்
III—78

பின், கேசித்துவஜன் அவனுக்குச் சொன்னான். "பிரம்மமே மனதுக்குப் பற்றிடம் ஆகும். அது பரம், அபரம் என இருவகைப் படும். பரம் உருவற்றது. அபரம் உருவுடையது. III—77

முன்பு நான் கூறிய இரண்டில் பரம் எனப்படுவது பிரகிருதி சம்பந்தமில்லாத (வீடுபேறுற்ற) ஆன்மா (பிரம்மம்) ஆகும். உருவற்றது. உபாசனை (தியானம்) செய்ய இயலாதது. மற்றது அபரபிரம்மம் என்பது பிரம்மன் (நான் முகன்) முதலிய கட்டுப் (பந்தத்தில்) பட்ட ஜீவர்களின் கூட்டம். இது உருவுடைய தேனும் மூன்று பாவனைகளுடன் கூடியிருப்பதனால், கைவிடத் தக்கதாகும். மோட்சத்தை விரும்புபவன் இவ்விரண்டையுமே கைவிடவேண்டும். III—78

௬. ஆபா3வனாத்ரயம் பெ3ததி3 யனின செப்பெத2 :—ப்2ரஹ்ம பா3வனயுன் கர்மபா3வனயு ப்2ரம்ஹகர்மோப பா3வனயு; அந்து2 ப்2ரஹ்ம பா3வனாயுதுலு சனந்த2னாது2லு; தே2வாதி: ச்2தா1வரா வருலகு2 ப்ராணு வந்த2று கர்மபா2வனா பா2வகுலு, ஹிரண்ய க2ர்பா3து2லுப3ய பா3வனாபருலு, ஈமூடு2 தெறகு2ல வாரு பா3வனா த்ரயான்விதுலு காவுன ஈ த்ரிவிதா3த்க ரூபம்ப2 சே2வ்யம்பு; ச3னந்த2னாது2லுனு ப்ராக் ப்2ரம்ஹ கல்பம்பு2ல ச2ம்சரிஞ்சுட பா3வனாப2த்து3லெ; இப்பா3வனாத்மகம்ப2கு2 விஸ்வம்பு2ச2ம்ச்தி1திகி அவதி2 தே2வ மனுஷ்யாதி2 விஸேஷ ஜ்ஞான கர்மம்பு2லு க்ஷீணிஞ்சுடய; அட்டி விஸ்வம்பை2 தோசு ஹிரண்ய க2ர்பா3து2ல கண்டெ அன்யம்பு3 பராக்1யப்பி2தி2 முக்தரூபம் ப2மூர்தம்பை2 உண்டு2னனி மொத2ல சூ2சிஞ்சிதின் கதா2; ததா2காரம்பு2 தேடபறிசெத2; பூர்வோக்த தே2வாதி2 பே3த2ரஹிதம்பை2 தத்பே3த2ராஹித்யம்பு2ன, ணிட்டித2ட்டி த2ணி வசின்சுடகு கோ2சரம்பு2கா2க யபக்ஷயாதி2 ரஹிதம்பு2னு, ச2த்ஸப்2த2 வாச்யம்பு2னு ஆத்ம ச2ம்வேத்3யம்பு2னுனை, ஜ்ஞானைக நிரூபணீயம் ப2கு2சு ஜ்ஞான ஸப்2த2 வாச்யம்புனுன் தானயை, ப்2ரஹ்மாத்மகம் ப2கு2ட ப்2ரஹ்ம ச2ன்ஞுயுன் காஞ்சி யொப்பு, மறி பா3வனா த்ரயாத்மக விஸ்வ வைலக்ஷண்யம்பெ2 லக்ஷணம்பு கா2 கல ஈரூபம் ப2ப்3யச்2யமான யோகு2ண்ட3கு2 யோகி2கின் சிந்திம்ப அஸக்யம்பு2; மறி அபரம்ப2னி செப்பம் ப2டி2ன ஹிரண்ய க2ர்பு2ண்டு2 வாச2வுண்டு2 ப்ரஜாபதுலு மருத்துலு வசு2வுலு ருத்2ருலு ஆதி2த்யுலு தாரகம்பு2லு க்2ரஹம்பு2லு க2ந்த3ர்வ யக்ஷரக்ஷோ தை2த்யாதி2 ச2மச்2த தே2வயோனுலு மனுஷ்யுலு பசு2வுலு அத்2ருலு ச2முத்2ரம்பு2லு த்2ருமம்பு2லு வெண்டி2யு ஏகபாத2 த்2விபாத2 ப2ஹு2 பாதா பாத2ம்பு2லகு2 இதர பூ3தம்பு2லுன் தது2த்பத்தி ஹேதுவுலுகா: விலசி2ல்லுனட்டி2 ப்ராதா3னாதி2 விஸேஷாந்த சேதனா சேதனாத்மக ப்ரபஞ்ச பா3வம்ப2கு2 ச்2தூ1லரூபம் பு2பக்ராந்த யோகு2னகு சிந்திம்ப ஸக்யம்பு2, ஸக்யமேனியு தத் பா3வனாத்ர யாத்மகம் ப2கு2ட அஸுபா2ஸ்ரயம்பு2 காவுன முக்தி சா2த3னம்பு2 காதீ2செப்ப ப2டி2ன ச2கல ப்ரபஞ்சம்பு2னு விஷ்ணுஸக்தி ச3மன்விதம்பை2 அதனிகி ஸரீரம்பு2னை யுண்டு2; அட்டி விஷ்ணு ஸக்துலு மொத2ல மந செப்பின பராபராக்1யலனு தத2திரிக்தயகு2 கர்மாக்1யனுன் த்ரிவித3முலை யுண்டு2; அந்து2 கர்மாக்1ய ஸக்திசேத வேஷ்டிதயை அபராக்1யகு2 க்ஷேத்ரஜ்ஞ ஸக்தி ஜன்மஜரா மரணாத்2யனேக ச2ம்சா2ர தாபம்பு2லு அனுப2விஞ்சுசு தத்தத் கர்மானுகு2ண ஸரீரம்பு2 லெத்தி விஜ்ஞான தாரதம்யம்பு2லு பொந்து2; தத்ப்ரகாரம்பு2 ஆகர்ணிம்புமு

அந்த மூன்று பாவனைகள் யாதெனக் கூறுகிறேன்! பிரம்ம பாவனை, கரும பாவனை, பிரம்ம கரும உபயபாவனை என மூன்றும் அவற்றில், பிரம்ம பாவனையாளர்கள் சனந்தனர் முதலானோர். தேவர்கள் முதல் தாவரங்கள் ஈறாக உள்ள உயிர்கள் யாவும் கரும பாவனையாளர்கள். பிரம்மா முதலானோர் உபயபாவனை (இரண்டிலும் ஈடுபட்டோர்) யாளர்கள். இம்மூவகையினரும், மூன்று பாவனைகள் உடைய வர்கள். ஆதலினாலே இம் மூவகை உருவினையும் போற்றுதல் கூடாது. சனந்தனர் முதலானோர் முன்னைய பிரம்ம கற்பத்தில் சஞ்சரித்தவர்கள் ஆதலின் பாவனையால் கட்டுப்பட்டனர். பாவனையோடு கூடிய உலகு இருப்பதற்கு எல்லை யாதெனின் ஞான கருமங்கள் தேவமானுடர்களில் ஒழிந்து போவதுதான்!

இத்தகைய உலகாகக் காணப்படும் பிரம்மா முதலியவர் களைவிட வேறுபட்ட பரம் எனக் கூறப்படும் உருவற்றது, கட்டற்றதுமான பொருளைப்பற்றி முன்பே குறிப்பிட்டேன் அல்லவா? அதன் சொருபத்தைத் தெளிவாக்குகிறேன். முன் கூறிய தேவர்கள் முதலிய பேதங்கள் இல்லாததாய், அத்தகைய வேறுபாடில்லாததாலே இத்தகையது எனக் கூற முடியாததும், அழிவு முதலிய சிந்தனைகட்கு உட்படாததும், சம் (உட்பொருள்) என்ற சொல்லால் குறிப்பிடப்பட இயல்வதுமாய, தன்னாலே உணரப்படுவதும் (ஆத்ம சம்வேத்யம்) ஆன, ஞானத்தால் மட்டுமே நிருபிக்கப்படத் தக்கதும், ஆன பிரம்மம் எனப் பெயரிடப்பட்ட பரம் பொருளாகும்.

மேலும், மூவகை பாவனைகளையுடைய, உலகுக்கு வேறு பட்ட உருவற்ற பிரம்மத்தைப் பயின்ற யோகியர்க்கும் சிந்திக்க இயலாததாகும் இனி அபரம் எனச் சொல்லப்பட்ட பிரம்மன், இந்திரன், பிரஜாபதி (தக்ஷன்) முதலானவர்கள் மருத்துக்கள், வசுக்கள் (8) ருத்திரர் (11) ஆதித்தர்கள் (12) நட்சத்திரங்கள், கிரகங்கள் (9) கந்தருவர், யட்சர், இராக்கதர், அசுரர்கள், முதலிய எல்லா தேவர்களும், மனிதர், விலங்கு, மலை, கடல் மரம் முதலியனவும், மேலும் ஒருகால், இருகால், பலகால், காலற்றவை ஆகிய உயிர்களும், அவை பிறத்தற்கு காரணமாகித் திகழ்கின்ற, பிரதானம் முதல், விசேடம் வரையுள்ள அறிவுடைய, அறிவிலாத பிரபஞ்சத்திலுள்ள உயிர்த்தொகைகள் பருவுருவுடை யவர்கள் யாவும் யோக முயற்சியாளனுக்குச் சிந்தித்தற்குரிய தாகும். இவை மோட்சம் தர வல்லன அன்று. இவை திருமாலின் உடலாக அமையும். கருமத்தினால் சூழப்பட்ட ஆன்மா (ஜீவன்) பிறப்பு, இறப்புக்கள் எனும் பிறவித் துன்பங்களில் உழன்று, வினைக்கேற்ற உடல்கள் எடுத்து, அறிவின் தராதரங்கட் கேற்ப, ஏற்றத்தாழ்வுகளை அடையும். அதன் தன்மையைக் கேட்பாயாக.

சீ[3]. உண்டு[2] அப்ராணு லந்தொ[2]க்கிஞ்சு காஸக்தி
ச்[2]தா[1]வர ஸ்ரேணி தத்ஜாதி கண்டெ,
எர்ர ரோகடி ப[2]ண்ட[2] ஜெர்ரி மந்தி[2]ண்டி[2]முன்
னகு[2] ச[2]ரீச்[2]ருபமுல ந்த[2]ந்த கண்டெ
க[1]க[2]முல யந்த[2]ந்தகண்டெ ம்ருகா[2]வலி
யந்து[2] ஊஹிம்பங்க[2] அந்தகண்டெ
த[2]ந்தி கோ[2]முக[1] பசுததி னந்தகண்டெ, மாத்
யகத[2]ம்ப[2]கமுல யந்த[2]ந்த கண்டெ

தே. யக்ஷ க[2]ந்த[3]ர்வ நாகா[3]ளி னந்தகண்டெ
அந்தகண்டெ நிலிம்புலந் த[2]ந்தகண்டெ
ஹரிஹயுனி யந்து[2], தக்ஷுனந்த[2]ந்தகண்டெ
ஆத்[2]யுடு[2] ஹிரண்ய க[3]ர்பு[3]னந்த[2]ந்தகண்டெ III—80

ஆ. இட்டிரூப கோடுலெல்ல அவ்விஷ்ணுனி
தனுசயம்பு[2] சு[2]ம்மு த[3]ரணிநாத[1],
அதட[2]சிந்த்ய ஸக்தி னகி[1]ல பூ[3]தமுலஆ
கச[2]மு வோலெ நிண்டி[2] யொச[2]கு[2] கான III—81

சீ[2]. முன்னென்னின பராக்[1]யமுனகு த்[2]விதீயமை
விஷ்ணு ச[2]ம்ஜ்ஞுனகு உர்வீதலேஸ
யோகி[2] ஹ்த்த்[3]யேயமை யொப்பு னமூர்த ரூ
பம்பொ[2]ண்டு[2] ச[2]த்ச[2]ம்ஜ்ஞ ப்ராஜ்ஞ கோடி
தா[2]னி வசிஞ்சு; ஏதத்ரூபமெ ச[2]மச்[2]த
ஸக்துல கெல்ல ஆஸ்ரயத பொந்தி[2]
ப்ராகு[2]க்த விஸ்வரூப விலக்ஷணத காஞ்சி
கல்யாண கு[2]ண பூ[2]தி க[2]ரிம தனரி

•

தே. அதிமஹத்வம்பு[2]சே வெல்கு[3] னட்டி ஸக்தி
னலரு ப்[2]ரஹ்மம்பு[3] தே[2]வதிர்யஞ்மனுஷ்ய
நாமசேஷ்டாவ[2]த வதரணமுல ஆத்ம
லீல ஜக[3]து[2]பக்ருதிகி கல்பிஞ்சு சுண்டு[2] III—82

(ஆத்ம சைதன்யத்தின் (அறிவின்) தராதரமாவது) உயிரற்றவைகளில் ஓரளவு அந்த சக்தி (ஆற்றல்) உண்டு. தாவரங்கட்கு அதைவிட அதிகமுண்டு. மண்புழு, பூரான், முதலிய ஊர்வனவற்றுக்கு அதைவிட அதிக அறிவுண்டு. பறவைகட்கு அதைவிட அதிகம். விலங்குகட்கு அதைவிடஅதிகம் உண்டு. யானை,நரி,பசு முதலியவற்றுக்கு அதைவிட அதிகமுண்டு. அதைவிட தேவர்கட்கு அதிகமாகும். இந்திரனுக்கு அதைவிட அதிகம். தட்சபிராஜாபதிக்கு அதைவிட அதிகம். அதைவிட இரணிய கருப்ப(பிரம்மா)னுக்கு அதிக ஆன்ம ஆற்றல் உண்டு. III—80

ஆகாயம் எவ்விதம் எல்லாவற்றிலும் நிறைத்திருக்குமோ அது போல விஷ்ணு (திருமால்) எல்லா உருவங்களிலும் சிந்தனைக் கெட்டாத ஆற்றல் மூலமாக நிறைந்திருப்பான். அந்த உருவங்கள் எல்லாம் அவனுடைய உடலாகும். III—81

முன்பு யான் கூறிய பரம் என்ற குறியீட்டையுடைய, இரண்டாவது (தத்துவமாக) யோகிகள் தியானத்திற்குரியதாகி, உருவற்ற மற்றொரு சொரூபம் 'விஷ்ணு' எனும் பெயரில் உண்டு. அதையே தொல்லறிஞர்கள் 'சத்' என்பர். அச்சொரூபமே எல்லாச் சக்திகட்கும் மூலமாக, முன் கூறிய பிரபஞ்ச உருவத்தைவிட முரணுடையதாகி, கல்யாணகுணங்களும் எல்லையற்ற செல்வங்களும் உடையதாகி; மிகுந்த பெருமைபெற்றிலங்கும், அத்தகைய ஆற்றல் உடைய அந்த பிரம்மம், உலகைக் காப்பாற்ற தன் திருவிளையாடல் காரணமாக, தேவர், மனிதர், விலங்கு முதலிய பெயர்களோடும் உருவங்களோடும் அவதாரம் எடுக்கும். III—82

ஆ. கர்மபு³க்தி கொறகு காதி²ட்டி தல்லீல
அதடு² ச³கல ஜாதுலந்து² புட்டு
புட்டினட்டி யதனி பூ²ரி சேஷ்டிதமுல
வ்யாஹதமுலு ராவணா²தி வலன III—83

வ. அட்டி பரமேஸ்வருனகு பத்த³ முக்தாதி² ரூபமபு² லனேகம்பு²லு கலிகி²ன முமுக்ஷுனகு ஞான²சித்²திகி பரமவ்யூஹவிப³வாதி² ரூபம்பு²லே சிந்தனீயம்பு²லு! ப்ரஜ்வலித ஸிகுண்ட²கு² பவன ச²கு¹ண்டு² நீரச நிகுஞ்ஜம்பு²னெட்லு த²ஹிஞ்சு. அட்லு சித்தச்²து¹ண்ட²கு² அவ்விஷ்ணுண்டு² யோகி² ஜனம்புல² ச²கல கில்பி²ஷம்பு²லு நிர்த்²ஹிஞ்சு காவுன ச²கல ஸக்த்யா ஸ்ரயுண்டை²ன அப்பரமாத்முனியந்து² சித்தம்பு² நில்புட விஸுத்த³யகு² தா²ரண யனம்ப²டு²; ச²ர்வச²ங்க்²ம்பு²ன சலாத்மகம் ப²கு² சித்தம்பு²னகுத்ரிபா³வ பா²வனாதீதுண்ட²கு² அத்தே²வுண்டு² ஸுபா²ஸ்ரயுண்டை² முக்தி கருண்ட²கு²; ஏதத்வ்யதிரிக்துலகு² ப்²ரஹ்மா²திதே²வதலு கர்மயோனு லகு²ட அஸுத்து³லு காவுன சித்தம்பு²ன கவலம்பனீயுலு காரு; மறி நிரவலம்ப² த்³யானம்பு² பொந்து² பட²து² காவுன² தா²ரணா த்³யான விஷயம்பை² ஸுத்த³ம்ப²கு² ச்²தூலரூபாந் தரம் ப²ய்யனந்துனகுன் கலது²,தா²னி ச²விச்²தரம்பு²கா, செப்பெத²; ஆகர்ணிம்புமு III—84

சீ.² ஸரதி²ந்து சகசகச்² மயஜித்ப்ரச²ன்னாச்²யு
தொ²ட்ட, கெந்²தம்மி கன்தோ²யிவானி
அதிகம்ர க²ல்லபா³கா²போ³க² பாலாட்³யு
மகராங்க ரத்ன கர்ணிகல வானி
காம்ப² வோத்²யத் ஸ்ரீவிட²ம்பி² வ்ருத்த ஸிரோ³தி
சி²ரி பொல்சு மச்ச பேருரரமுவானி,
நதநாபி³யுத வளித்ரிதய ஸாதோத²ரு
ஜானுலம்²பி சதுர்பு³ஜமுலவானி

தே. கரிவரகரோரு, ருசிரஜம்கா³ மனோஜ்ஞு
ச²மத பொந்தி²ன பத²பல்லவமுல வானி
ஹைமவச²னு, கிரீடஹாராங்கதா²தி²
கலிது,ஸங்கரதர்ங்கா²து²ல லருவானி III—85

(நம்போல) கரும (வினைக்கீடான) பலனைத் துய்ப்பதற்காக அன்றி, (உயிர்களை உய்விக்க) அவன் எல்லாக் குலத்திலும் பிறப்பெடுப்பான். பிறந்த அவன் செயல்கள், இராவணன் முதலானோர்களால் குறைபாடுறுவதில்லை. III—83

அத்தகைய பரமேசுவரனுக்கு, பக்த, முத்த (கட்டு, வீடு பேறு) முதலிய பல்வேறு உருவங்களையுடைய முமுட்சு (வீடு பேற்றைத் தேடுபவன்)விற்கு அறிவைப்பெற, பர, வியூக, விபவ, முதலிய உருவங்களே சிந்திக்கத்தக்கன. சுடரும் நெருப்பானது காய்ந்த புதரினை எப்படி எரிக்குமோ அதுபோல உள்ளத்துறையும் இறைவன், யோகியரின் எல்லாப் பாவங்களையும் சுட்டெரிப்பான். ஆதலின், எல்லா ஆற்றல்கட்கும் உறைவிடமான அப்பரமான்மாவிடம், உள்ளத்தை நிறுத்துதல் தூய தாரணை எனப்படும். எல்லாப் பற்றுக்களையும் நாடி ஓடும் சபலமுடைய மனத்திற்கு, மூன்று பாவனைகள்) (பிரம்ம, கரும பிரம்ம கரும பாவனைகள்) கடந்தவனாகிய அத்தேவன், நலமீந்து வீடுபேறருள்வான். மற்ற (பிரம்மா, சிவன் முதலிய; தேவர்கள் கருமத்திற்குட்பட்டவர்கள் ஆதலின் மனதிற்கு பற்றுக் கோடாகமாட்டார்கள். பற்றுக் கோடில்லாத தியானம் அமையாது. ஆதலின், தாரணை தியானங்கட்குத் தென்படும் தூய, மற்றொரு பரு உருவம், அப்பிரம்மத்திற்கு உண்டு. அதை விரிவாகக் கூறுகிறேன் கேள்! III—84

சரத்கால சந்திரனின் மின்னொளியை வென்ற கருணைமிக்க முகமுடையவனும், பெரிய செந்தாமரைகள் போன்ற கண்களையுடையவனும், அழகிய கன்னங்களும் நுதலும் உடையவனும், மகரகுண்டலங்களை யணிந்துள்ளவனும், கமுசினை வென்ற எழில்மிகு கழுத்தும், மார்பில் திருவும் மறுவும் மருவியவனை, ஆழமான நாபி (உந்தி)யும், மும்மடிப்புகளையுடைய சன்னமான வயிறுடையவனும், முழங்காலளவு நீண்ட நான்கு தோள்களையுடையவனும், யானையின் துதிக்கை போன்ற துடைகள் அழகிய தளிர்கள் போன்ற பாதங்களையுடையவனும், பொன்னாடை, மகுடம், முத்துமாலை முதலிய அணிகளும், சங்கு சக்கரம் முதலிய ஆயுதங்களும் உடையவனும், ஆன திருமாலைத் தியானிக்க வேண்டும். III—85

சீ3. ஸ்ரீவிஷ்ணுனீக2தி சிந்திம்ப வலயுதன்
மயுட2யி யோகி2 க்ரமம்பு2 தோட2
ஒக்க யங்க2மெ முன்னுசிக்க லோபா3விஞ்சி
அதி2 த்2ருட3ம்ப2கு2டயு னவலியங்க2
கமுமறி சிந்திம்ப கா2த2கு2; அட்டியப்3
யாச2ம்பு2வலன அய்யவயவி மறி
நட2சின உன்ன மானக எத்தி2யேனியு
சேயுசுன்னனு மதி2 பாயடே2னி

தே. அதனி சா2ம்யம்பு2 கனிமுக்துட2கு2 சு2ராதி2
பே3த2 ச2ன்ஜன காஜ்ஞுாள மேத2பிதப
அலமு கல்யாண கு2ணமுல ஹரிகிதனகு
லேனிபே3த2 மெவ்வாடு2 கல்பிம்ப க2லடு2 III—86

க. நரவர, இடு ப2ந்த3 ச்யுதி
கரமகு2 அங்கா2ஷ்டகாக்1ய க3னயோக2மு விச்2
தரமுக2 செப்பிதினிங்கன்
கரணீயம் பெ2த்தி2 நாகு கல்பிம்பு'மனன் III—87

தே. 'ந்ருப, க்ருதார்து1ண்ட2 னைதி நாகிந்தகண்டெ
அர்த1னீயம்பு2 மறியெத்தி2?' யனுசு அதனீ
கர்ச காவிஞ்சி வலத2ன்ன அதடொ2ச2ங்கு2
தனது2 தொண்டி ராஜ்யம்பு2ன தனயுநிலிபி III—88

திருமாலை இவ்விதம் தியானம் செய்யவேண்டும். எவ்விதம் எனின், முதலில் ஒரு உறுப்பை மனதில் அழுத்தமாகப் பதித்துக் கொண்டு, அதன்பின் அதைத் தொடர்ந்து மற்ற உறுப்புக்களையும் பாவனை செய்து முழு உருவமும் மனத்தில் நிலைபெறச் செய்யமேண்டும். தான் நடந்தாலும் கிடந்தாலும் எப்பணி செய்தாலும் விடாது தன் மனத்தில் இறைவனை இருத்திக் கொள்ளவேண்டும். இ வ் வி த ம் இறைவனோடிணைந்து அஞ்ஞானம் அழிந்து, கல்யாண குணங்களுடைய திருமாலும் தானும் ஒன்றேயான நிலைபெற வேண்டும். அப்படி இறைவனோடிணைந்தவனை எவரும் பிரித்திடஇயலாது. III—86

மன்னனே! (காண்டிக்கியனே) இவ்விதமாக கட்டற்ற வீடு பேற்றினை அளிக்கும் அங்காட்டகம், எனும் பெயரையுடைய யோகத்தை விரிவாகச் சொன்னேன். இனியும் எனக்குச் செய்யத் தக்கது யாதெனக் கூறுவாயாக" என்றான். III—87

எனவும், "மன்ன! (கேசித்துவஜனே) நற்பேறடைந்தேன் எனக்கு இதைவிட வேண்டத்தக்கதென்ன இருக்கிறது'' என்று கூறி, அவனை வணங்கி, வேண்டாம் என்று மறித்தும் தானே ஈந்த தனது அரசினை தன் மகனுக்கு அளித்துவிட்டு III—88

வ. புரோஹித ப்ரதா3னுல அப்ராப்த யௌவனுண்ட2கு3 னதனி விநீதுகா2 மெலபி கொண்ட2னி நியோகி2ஞ்சி; வாரல தா2ன ச3ம்மானாது2லன் ப்ரோவுமனி குமாருனகு அப்பகி2ஞ்சி; கோ2விந்த2 சரணாரவிந்த2 வின்யச்3த மானசு3ண்டை2 கா1ண்டி2க்யுண்டு2ப3ய கர்மம்பு2 லுடி2பி; யவ்வனம்ப2 தபோவனம்பு2கா2 கொந்தகாலம்பு2 கேஸித்3வஜோபதி2ஷ்ட ப3க்தியோகா2னு ச2ந்தா3னம்பு2ன மது3மத1ன சா2த3ர்ம்யம்பு2 னொந்தெ2, கேஸித்3 வஜுண்டு3னு தத்புத்ருனி, தத்ப்ரதா3னுல, ததீ2யராஜ்ய பரிபாலன கனிசி, மகி2டி2 மிதி2லா புரம்பு2 ப்ரவேஸிஞ்சி, யோகா2ஸ்ரயுடை3 போ3க2ம்பு2லன் புண்யம் பு2லு, ததி1தரம்பு2லு து2ரிதம்பு2லு, ப்ரக்ஷீணம்பு2லுகா2 க்ஷோணீதலம் பே2லு அண்டென்; காவுன முமுக்ஷுன குபாஸ்ரயணீயுண்டு2 அதோ1 க்ஷஜுண்டு3; பாண்ட2ய க்ஷிதீஸா, நீவதனி ப3ஜியிம்பு மிதி2யெ ப3க்தியோக2ம்பு, தீ2னியந்து3 ஒக்க கொறத கலது, அந்தராயம்பு2 னொந்தி2ன புனர்ப3வம்பு பொந்தி2ஞ்சி மறிமுக்தி சேர்சு; அட்லகு2ட இந்தகண்டெ சு2லபோ3பாயம் பா2யோத3னம்பு2ன அய்யதோ3 க்ஷஜுண்டு2 கா2ண்டவி குபதே2 ஸிஞ்சின ஸரணாக2த த3ர்மம்பு2 நிரபாய த3ர்மம்பு' அனி பரிணதாந்த: கரணுண்ட2கு2 அதனிகி மூலமந்த்ர பூர்வகம்பு2கா2 த2வயமு ப்ரசா2தி2ஞ்சி பா3க2வத ப்ரதா3னுன் காவிஞ்சின III—89

ம. வகுளாலங்க்ருத யோகி2 ஹ்ருன்நிலய, பா3ச்2வத்பாண்டு2 பா3ச்2வன்மயாம்

ப2க, நாபீ3ஜலஜாத சூ2தவிதி3 ச3ம்ப்ராப்தச்2 மராரிஷ்ட,முஷ்டிகடோ1ரார்பண கர்கடப1லித கேஸீ க்ரூர ரக்ஷோங்க2கா, க்ருக வாகுத்3வஜ தீ2ர்கி3காப்லவ தபக்ரீடோ2த் சு2வாத்2யுத்சு2கா III—90

புரோகிதர், மந்திர முதலானவர்களிடம், இளமையடையாத தன் மகனை ஒப்புவித்து, தன் மகனிடம் அவர்கட்கு கொடை, பரிசு முதலியவற்றால் பேண வேண்டுமெனக் கூறி, தான் கோவிந்த திருவடிகளை நினைந்த உள்ளத்தவனாக, காண்டிக்கியன் இருவினைநீத்து,அக்காடே தபோவனமாகஅமையச்சில காலத்தில் கேசித்துவஜன் சொன்ன பக்தியோகத்தில் நிலைத்து திருமாலுடன் இரண்டறக் கலந்தின்புற்றான்.

கேசித்துவஜனும், அவன் மகனையும், மந்திரியையும், அரசினை நடத்துமாறு ஒப்படைத்துவிட்டு, மீண்டும் மிதிலை புக்கு, யோகத்தில்நிலைத்து இருவினை தீர நன்னெறியில் ஆண்டு வந்தான்.

ஆதலின் பாண்டிய மன்னனே! அந்த திருமாலே நீ அடையத் தக்கவன். பரந்தாமனையே வணங்குவாயாக! இது பக்தி யோகம் ஆகும். இதிலும் ஒரு குறையுண்டு. இடையூறு ஏற்படின் மறுபிறவி உண்டு. அதன் பின் முக்தியடையலாம். ஆதலினாலே, இதை விட எளியவழி, அக் (குருட்சேத்திர) போர்க்களத்தில் கண்ணன் அர்சுணனுக்கு உபதேசித்த சரணாகதி தருமமேயாகும்.''என்றிவ்வாறு, பரிபக்குவமான மனத்தை உடைய பாண்டியனுக்கு, எண்ணெழுந்து (ஓம் நாராயணாயா நம) மந்திரத்தையும் துயத்தை (இரட்டை) யும் அருளிச் செய்து, சிறந்த வைணவனாக்கி, பெரியாழ்வார் மகிழ்ந்தார். III—89

வருள மாலையணிந்த (நம்மாழ்வார்) உடைய இதயத்துறைபவனே! ஒளிறும் ஞாயிறும் திங்களும் இரு கண்களாக உடையவனே! தாமரையிற்பிறந்தவன் (பிரம்மா) காமனைக் தாய்ந்தவன் (சிவன்) இருவரையும் படைத்தவனே! கொடிய அரக்கனாகிய கேசியைக் கொன்றவனே! கோழிக் கொடியையுடைய (முருக)னின் தெப்ப உற்சவத்திலும் கோடையில் தெப்ப உற்சவத்திலும் ஈடுபாடுடையவனே! III—90

க. ஊரீக்ருத பாண்ட2வரத1
சா2ரத்1ய, ச2யூத்1ய கோ2ப ஸாப2க ச2ஹ கே
வீரத, ப3க்த ப்ரஹ்லா
தா2ரசித ச்2தோத்ர புலகிதாஞ்சித கா2த்ரா III—91

ஆச்2தி1தாஹீந்த்2ர ஸய்யா, த2வீயச்2தர
ப்ரச்2தி1தாங்க்3ரீ, ஸ்ரித வ்ராத சேதோக3தா2,
கச்2த2ல ப்ரச்2ப்ருஸத்காளிய க்ஷ்வேளமூ
ர்த3ச்2த1லீ ந்ருத்த மத்தல்லி ஹல்லீச2கா III—92

ம. இதி2 பாத்ர ப்ரஹரேஸ்வர ப்ரப்3ருதி பம்ஹிஷ்டோ1த்
கலானீகசு2ப்
ததி2விச்2ப்ருக்படு யந்த்ர கொண்ட2பலி ஹ்ருத் பா2ஹாசி2
கத்2ருஜ தீப்
யது2தா2ரோத்2யம க்ருஷ்ண ராயந்ருப ச2ன்ஜ்ஞாச்
மத்க்ருதா முக்தமால்
யத2 னாஸ்வாச2மு ஹ்ருத்2ய பத்3யமு த்ருதீயம்பை2 மஹின்
பொல்பகு2ன் III—93

 T 4697

அருச்சுணனுக்குத் தேரோட்டியவனே! இடைச்சிறுவரோடிணைந் தாடுவதில் விருப்பமுள்ளவனே! பிரகலாதனின் பிரார்தனைப் பாடலைக் கேட்டு புளகாங்கிதமுற்ற உடலையுடையவனே.

அரவின் பாயலில் படுத்தவனே! வானமும் மண்ணும் அளந்த பாதங்களையுடையவனே! பக்தர்களின் மனமாசுகளைப் போக்குபவனே! காளிய நாகப்படத்தின் மேலே நாட்டியங்கள் ஆடிய ஸ்ரீவெங்கடேசா! III—92

இது பிரகரேசுவரபாத்ர முதலிய உத்கல மன்னர்களால் பாதுகாக்கப்பட்ட விண்தொடும், திறமையான யந்திரங்களையுடைய 'கொண்டபல்லி' கோட்டையைக் கவர்ந்த பாம்பொத்த வாளினையும் வலமிக்க தோளினையும் உடையகிருஷ்ணதேவராய மன்னன் இயற்றிய ஆமுக்த மால்யத (சூடிக்கொடுத்தனை) எனும் காவியத்தில் மூன்றாவது அத்தியாயமாகப் பொலிவுறும். III—93

———

# ஆமுக்த மால்யத

## சதுர்தா2ஸ்வாச1மு

க, ஸ்ரீ மந்தி2ர பு3ஜமத்3யம,
கோ2மண்ட2லகர்க்ஷி வேணுகு2ம்ப3ன, த்2ருப்யத்2
பொ3மாஹ்ருத சு2ரஜனயித்2
ரீமணிதாடங்க, வ்ருஷ கி2ரிச்2த1, க1கா2ங்கா IV—1

வ. அவத3ரிம்பு மா ச2மயம்பு2ன IV—2

## விஷ்ணுசித்துனி விஜயமு

ம. ப2லிமின் த்ரெம்பக2 போலெ பாயவடு2சுன் பர்யாய
ப3ங்க2ம்பு2கா2
கலநூலெல்லனு அண்டு மோவ தெகி2ராகா2 கொந்த
சே2புண்டி2,தா
பெலுசன் க2ண்டு புடக்குனந்து2னிபி வேப்ருத்1வின்
படெ2ன்ஜாலெ, மின்
னுல ம்ரோசெ2ன் சு2ரது2ந்து2பு3ல் குரிசெ2 பென்சோ2னை
விருல்போ2ருனன் IV—3

# ஆமுக்த மால்யத

## (சூடிக் கொடுத்தவள்)

### நான்காம் அத்தியாயம்

திருமகட்கில்லமாகிய மார்பினையுடையவனே! பசுக்களைக் கவரும் குழலூதுபவனே! செருக்குற்ற நரகாசுரன் கவர்ந்த குண்டலங்களை மீட்டியவனே! பசுமலை (வேங்கடகிரி) உறையும்கருடக் கொடியுடையவனே! IV—1

கேள்! அச்சமயத்தில் IV—2

### பெரியாழ்வாரின் வெற்றி

வலிதின் அறுத்தாற்போல நூலறுந்து தொங்கிய பொற்கிழி, சிறிது நேரம் அந்தரத்தில் இருந்து பின் படீரெனக் கீழே நிலத்தில் வீழ்ந்தது. வானத்தில் துந்துபி முழங்கப் பூமழை பொழிந்தது. IV—3

ஸா. ஆவேளன்பதி பாரிதோஷிக முலீனந்த[2]ந்த[2] பம்பன், ப்[3]ரம[3]த்
சே[2]வி்ராதமுசே த்[2]ருத ச்[2]க[1]லிதயை தீ[2]வ்யண்மணி
ச்[2]வர்ணபூ[3]
ஷாவாச[2]ஸ்ச[1]ட ஜானுதக்[2]னி யகு[2]சுன் ச[2]ம்ச[2]ச்சதுஸ்ஸாலிகா
ரைவேஸ்மாந்தர பத்த[3]தின்னெரசெ[2] கோ[2]த்ராசித்ர
மால்யம்ப[2]னன் IV—4

ஆ. வேத வேத்யமைன விஷ்ணுதத்வம்பி[2]ட்லு
வாது[2] கெ[2]லிசி, தெலிபி, வசு[2]மதீஸ
ப[3]க்தி னோலலார்சி, ப[3]க[2]வத்ப்ரபன்னுகா
சேசி[2] லோக ஹிதமு சே[2]யுடயுனு IV—5

ஸா. அத்தா[3] வக்[2]ஷிபு[2]த[3]ம் ப[2]ஹோவசன கவ்யாஹார, மாஹாவசச்
சி[2]த்த[3]ம் பாஃக்ருததாம் க[2]தஃகலிரிதி ஸ்ரீசூ[2]க்தி வித்[2]யாத[3]ரம்
பி[3]த்தெள[3]த்த[1]த்ய மகா[2]ல்லயம் ஹிருதி[3] யாமித்யுன்னத[2]
த்கின்னரம்
பத்தீ[3]ராக்[2]ரணி கெ[2]ல்புடுத்ஸவ முனந்த[2]ய்யென்
நப[3]ம்ப[2]ந்தயுன் IV—6

அப்போது, பாண்டிய மன்னன் பரிசளிக்க அனுப்பிய சேவகர்கள் அங்குமிங்கும் அலைந்து விரைவதினால் மணிகளும் பொன் அணிகளும், உடைகளும், சிந்தி, அவைக்களத்துக்கும், கருவூலத்திற்கும் இடையே உள்ள நிலம், முழங்காலளவு நிறைந்து நிலமகள் மகிழ்ச்சிப் பெருக்கால் அணிந்த பல்வண்ண மலர்மாலையோ எனும் படியாக இருந்தது.

(சிந்திய மணிகளும் அணிகளும் முழங்காலளவு நிறையப் பெற்றதென்றால், கொடைந்த பொருட்குவையின் அளவினை எவ்விதம் கூறுவது? என்பது கருத்து) IV—4

வேதங்களால் உணரப்பட்ட விஷ்ணு தத்துவத்தை விளக்கி இவ்விதம் வாதிட்ட பெரியாழ்வார், வென்று, பாண்டிய மன்னனை பக்தியில் மூழ்கச் செய்து, இறைவனைச் சரணடையுமாறு செய்து உலக நன்மையை உருவாக்கினார். IV—5

அப்பெரியாழ்வார் வென்றதைப் பாராட்டி வானத்தில் எல்லாம் வாழ்த்தொலிகள் முழங்கின. தேவர்கள் 'அடடா' என்னும் பிதுர்கள் "ஆகா!" என்றும், சித்தர், "அப்பப்பா என்றும், கந்தருவர்கள் கலியுகம்" "கிருதயுகமாயிற்று" என்றும், கின்னரர்கள் "சிறுமதியாளரின் செருக்கடங்கிற்றல்லவா?" என்றும் கூறிப்பரவினார்கள். IV—6

சீ2. செ2லவுலு நாகுசு வெலியரங்கு2லுகூட2
கரிகி2 பாது2வாஹ- னரயுவாரு,
தமம்ரோல உண்டு அந்த2லமு கானகதா2டி
பேரெலுங்கி டி- பெ2ச்2த சீருவாரு,
நக2ரு வெல்வடு2 தா2க தெகி2போயி மறிநில்சி
தோடி2 வித்2வாம்சு2ல கூடு2வாரு,
எது2ரைன தமவானி க்2ருஹ க்ருத்ய மடி2கி2வா
ட2னுனவி தப்ப னூகொனெ டி2வாரு

தே. வாத2மேமாயெ?னன்ன 'பூ3வருனிகூ பக்ஷ
பாதமா தா2ச2ரிகி கல்கி2 ப்ரதி கெ'னனெடு2
வாரு' ஔலெண், டி2டு விமர்ச தூ2ரமைன
வாகிட வசி2ஞ்சு னெவ்வ' ட2ன்வாருனகு2சு IV—7

தே. கலிசி2 ஒக கொந்தசே2பு ஸ்ருங்கா2ட கமுல
நக2ரி தெ2ச2 சூசுசுனெ மந்தனம்பு2லாடி2,
சனிரி வித்2வாம்சு2 லிண்ட்ல, கஜ்ஜனவிபு3ண்டு2
ரூடி3 கதனி மஹா க2ஜாருடு3 சேசி2 IV—8

ம. 'புரியேகி2ஞ்சி ததீ2யமைன நக2ரம்பு2ன் சேர்பு'
ட2ஞ்சுன் படி2ன்
தொ2ரலன் ராஜகுமாருலன் பனுபகா2, தூர்யச்2வனம்பு2ல் நிரந்
தரவந்தி2 ச்2துதுலுன் க2ஜேந்த்2ர ஹயக3ண்டா
வாரகாந்தாங்க்3ரிநூ
புரமுல் ம்ரோயக2, கொல்சி வாரிருக2ட2ம் போ2மார்க2
மத்3யம்பு2னன் IV—9

மேலுதட்டினை நக்கியவாறு, (அரண்மனை) வெளித் திண்ணைகளைப் பாராமல் சென்று, பாதுகைகளைச் சுமப்பவர் களைத் தேடுவோர்களும், தம்மருகிலுள்ள பல்லக்கினைக் காணாமல் தாண்டிச் சென்று, பெருங்குரலில், சுமப்பவர்களைக் கூவியழைப்பவர்களும், நகரை நீங்கும் வரையும் தனித்துச் சென்றுபின் நின்று, கூடவந்த புலவர்களைக் கூடுவோரும்' தம் வீட்டினர் எதிர்வரவும் வீட்டு விவகாரங்களை கேட்டு அவர்கள் ஒன்று கூடி தாம் ஒன்றாக நினைந்து ஏதோ நினைவில் 'சரி சரி' என்பவர்களும் ''வாதம்'' என்னாயிற்று?'' என்று கேட்ப, ''மன்னன் ஒரு பக்கம் சாய்ந்து அந்த தாசரி (நாலாம் வருண பாகவதர்) யைப் பாராட்டினான். இல்லாவிட்டால் அவனை விட்டு வைப்போமா? ஏதோ தப்பித்துக்கொண்டான்'' என்போரும் ''சரி! விடு ஆராய்தலில்லாதவன் வாசலில் எவன் இருப்பான்,'' என்பவர்களுமாக பண்டிதர்கள் புறப்பட்டனர்.

IV—7

அவர்கள் சதுக்கத்தெருவில் ஒன்று கூடி அரண்மனையைப் பார்த்தவாறு ஏதோ மந்தனங்கள் (இரகசியப் பேச்சுக்கள்) பேசியவாறு தத்தம் இல்லங்கட்குச் சென்றனர். அப்பாண்டிய மன்னன் அனைவரும் அறிய பெரியாழ்வாரைப் பெரிய யானை யின் மீது ஏற்றி அமரச் செய்தான். IV—8

நகர்வலம் வரச் செய்து, சிற்றரசர்களும், இளவரசுகளும், இருமருங்கும புடைசூழ, திருவல்லிபுத்தூருக்கு அனுப்பி வைத் தான். பாடகர்களும், யானை, குதிரைகளின் மணிகளின் ஓசை யும் பரத்தைய ரின்பாதச் சிலம்பிசையும் முழங்க, வழிச்செல்லும் போது நடுவழியில் IV—9

விஷ்ணுசித்துனகு ப3க2வந்துடு2 சா2க்ஷாத்கரிஞ்சுட

உ. இங்கி2லிகம்பு2னன்தடி2பி எத்துகசீ2ச2பு ரெண்டெமோ யனன்
நிங்கி2 க2ருத்பரம்பரல நிக்கு2ன லேதொக2ரெக்கெ; அந்தவீ
சென் கலஸாப்3தி3 மீக2ட2ல ஜிட்டெ2றிகி2ஞ்செடு2
கம்மகா2ட்பு; நிண்
டென் கடு2ம்ரோத; பெந்திருவடி2ன்கனி ராக1க2ராஜு
மூபுனன் IV—10

சீ2. சிவுருபொட்லபு தோ2யி ஜெந்த2ம்மு லண தார்க்ஷ்யு
ஹச்2தோத2ரமுல தி2வ்யாங்க்3ரு லமர,
நுனுகப்பு மேன தோசின தனூ2ர்த்3 வச்ச1ாய
லீலதால்சு பசி2ண்டி2 சேல மெறய,
வ்ராலின யோகி2 வர்க2மு நிர்மலாந்த:க
ரணமுலு வோலெ ஹாரமுலு தனர,
சி2ரிகி புட்டிண்டி நெச்செலுலௌட மனவிகி
டா2செநா மகரகுண்ட2லமு லமர

தே. ஸ்ரித சி2தச்ச1த2 வாத்யாபி3ஹத பராக2
வலய மண்டி2த கல்பஸாக1 லொயனங்க2
ஸங்க சக்ராஞ்சிதோரு ஹச்2தமுலு தனர,
தோசெ கமலேக்ஷணுண்டு2 சதுர்பு3ஜுண்டு2 IV—11

க. எப்புடு2 ஹரி கனி ரமருலு
முப்பதி2யுனு மூடு2கோட்லுமுனி கனுகொ2னுனா
ரப்புடு2 தத்கரமுலதோ
விப்பின கொ2டு2கு2லுனு மிண்ட வேக2ம மொகி2டெ2ன்
IV—12

## இறைவன் காட்சிதரல்

இங்கிலீகம் நனைத்த மயில் துத்த ஈரிழைச் சீரையோ எனுமாறு வானம் தன் சிறகின் ஒளி வீச்சினால் இளஞ்சிகப்பு வண்ணமுற்றது, அவ்வளவில், பாற்கடலின் பாலாடைப் பிசுபிசுப்பினை உணர்த்தும் இனிய காற்றுவீசியது. பின் (கருடன் நெருங்கி வருதலால்) பேரோசை நிறைந்தது. பின் பெரிய திருவடியைக் (கருடாழ்வார்) கண்டனர். அந்தப் புள்ள ரசன் முதுகில் திருமால் தோன்றினான். IV—10

தளிர்க்கொத்து இணையில் செந்தாமரை இருந்தாற்போல கருடனின் உள்ளங்கைகளில் தெய்வீக அடியிணைகள் அமர, மென்கரிய மேனியில் தோன்றிய கருடனின் (செவ்) வண்ணப் பிரதிபலிப்போ எனுமாறு பீதாம்பரம் மிளிர, படிந்த யோகி யரின் தூய இதயங்கள் போல முத்தாரம் ஒளிர, திருமகளுடன் கூடப்பிறந்த உரிமையினால் போலும் ஏதோ விண்ணப்பிப்பது போது (செவியருகே நெருங்கிச் சென்றுரைப்பது போல) மகர குண்டலங்கள் திகழ, கற்பக மரக்கிளை போன்ற தோள் களும் அதிலுள்ள அன்னம் போன்ற சங்கும், சுழல் காற்றில் எழுந்து சுழலும் பூமகரந்தம் போன்ற சக்கரமும் தோன்ற கமலக் கண்ணனாகிய நான்கு தோள்களையுடைய திருமால் தோன்றினான். IV—11

எப்போது திருமாலைக் கண்டனரோ அப்போது முப்பத்து முக்கோடி தேவர்களும், பெரியாழ்வாரைக் கண்டு கொண்டிருந் தவர்கள் அனைவரும் தமது கரங்களுடன் குடைகளையும் விரைந்து முகிழ்வித்தனர். (விரித்த குடையைச் சுருக்கி வணக்க மிடுதல் நமது மரபு) IV—21

தே. ச$^{2}$ம்மத$^{3}$ தி$^{2}$த்ருக்ஷு$^{ஈ}$க$^{1}$ச்$^{2}$த$^{1}$ ரக்ஷ:பிஸாச
புன்ஜ மஹிபு$^{3}$ க்பதத்ர ப்ரப$^{3}$ன்ஜனமுலு
சோ$^{2}$க வெறபாறெ கள்ளான ஸ$^{ஃ}$ர்பவாத
க$^{3}$ட்டனல பாறு பெனு பொல்லகட்டு வோலெ IV—13

க. நீரந்த்$^{3}$ர குசு$^{2}$ம தா$^{3}$ரா
சா$^{2}$ரசர ச்சஞ்சரீக ச$^{2}$ங்குல கலஜ$^{1}$ங்
காரானுகாரி ச$^{3}$ம்ச்$^{2}$தவ
காரி முனிச்$^{2}$தோம சா$^{2}$மகா$^{2}$னம் பெ$^{2}$ச$^{2}$கெ$^{2}$ன் IV—14

தே. அட்லு ப்ரத்யக்ஷ மைன பத்$^{2}$மாக்ஷு$^{ஈ}$ னந்த
ரிக்ஷமுன காஞ்சி,முனி ப்ரமோதா$^{2}$ க்ஷிஜலமு
நிகு$^{2}$ட$^{2}$ புலகிஞ்சி, கரடி க$^{3}$ண்டிகலெ தாள
முலுக$^{2}$ இட்லனி அம்மஹாத்முனி நுதிஞ்செ IV—15

ஜயஜய தா$^{2}$னவதா$^{2}$ரண காரண ஸார்ங்க$^{3}$ ரதா$^{1}$ங்க$^{2}$
க$^{2}$தா$^{2}$சி$^{2}$த$^{3}$ரா,
ஜயஜய சந்த்$^{2}$ர தி$^{2}$னேந்த்ர ஸதாயுத சா$^{3}$ந்த்$^{2}$ர ஸரீர
மஹ:ப்ரச$^{2}$ரா,
ஜயஜய தாமரசோ$^{2}$த$^{2}$ர சாருபதோ$^{2}$ ஜ்ஜி$^{1}$த கா$^{2}$ங்க$^{2}$ஜ$^{1}$ரா,
ஜயஜய கேஸவ கேஸிநிஷு$^{ஈ3}$த$^{2}$ன ஸௌரி ஸரஜ்ஜலஜாக்ஷ
ஹரீ IV—16

தேவர்களுடன் கூட இராக்கதரும் பிசாசர்களும் கூட்டமாகக் கண்டு கொண்டிருந்தபோது கருடனின் இறக்கைகளிலிருந்து வீசிய காற்றினால் நெற்களத்தில் முறத்தால் புடைக்கப்பட்ட காற்றில் பறந்தோடும் பதர்போல இராக்கதரும் பிசாசர்களும் அஞ்சியோடினர். IV—13

இடைவிடாது சொரிந்த பூ மழையில் படிந்து சஞ்சரிக்கும் வண்டினங்களின் ரீங்காரம் போல தன்னைத் தொடர்ந்து முனிவர்கள் பாடும் சாம கானம் இசைத்தது. IV—14

இவ்விதம் வானில் கண்ணெதிரே திருமாலைக் கண்ட பெரியாழ்வார் மகிழ்ச்சிப் பெருக்கால் ஆனந்தக் கண்ணீர் சொரிந்து, புளகாங்கமுற்று, (தானமர்ந்துள்ள) யானையின் மணிகளே தாளங்களாக இவ்விதமாகத் திருமாலைத் துதி (மங்களாசாசனம்) செய்தார். IV—15

வெல்க! வெல்க! அசுரரை அழிக்கும் சார்ங்கம் எனும் வில்லும், கதையும், சக்கிரமும் (சுதர்சனம்) பூண்டவனே! ஞாயிறும் திங்களும் போன்ற நூறுமடங்கு பேரொளியுடைய மேனியை உடையவனே! கங்கைக்குப் பிறப்பிடமான தாமரை போலும், பாதங்கள் உள்ளவனே! பிரம்மனும் சிவனும் உருவான மூலகாரணனே! தாமரைக் கண்ண! வெல்க! வெல்க! IV—16

## மத்ச்2யாவதாரமு

ம. தி2விஜத்2வேஷி னுதா3ரவாரி சரமூர்தின்சிஞ்சி சாதுர்யமொப்
பவடி2ன் செளகபு தெல்ல கௌசுக2மி த2ம்ப3ம்பொங்த
மைதால்சிவே
தவிஸூத்தா3க்ஷர பங்க்தி க்ரம்மறக2 வேத3ன் சேர்செதோ2
நாக2தத்
பு3வனம் ப2ப்3தி3சி3தாம்பு2 பி2ந்து2லலமன் ப்ரோத்2ய
த்ருசின் தா2டவே IV—17

ச. எலமி யுகா2ந்தவாரி கெது1ரெக்குதறின் வடி1தாலு க1ஹ்வரம்
பு2ல சனுநீடி வெல்லுப2டி2 போவு அபக்ஷ னகோ2ரு வாஸ்சரம்
பு2லுதனுதாக, தத்க2தத ம்ரோயு அஜாண்ட2ம தை2த்யு
வேத1 பங்க்
துலுகொனி கூல்சினட்டி ஜயது1ந்து2பி3 சேசி2திகா
முராந்தகா IV—18

ச. மிதிக1ட2வன் திமிங்கி2லத மெய்மெயி பெஞ்சின நீது2வாதகுத்
சி2த பலலாஸியைன சிறுசேபதி2 த்ரெள்ளுட நீவும்ருங்கு1டே?
ஸ்ருது லகு2னூருபுல் மகு3ட2 சொச்சுதறின்
ப3வதே2த3னைத3னை
தி3த ஜலஸக்தி ஈட்2சிகொனி தெச்சுடகாக
தத2ல்பதால்பதன்? IV—19

ம. ஜலபூரப்லவமான ம்ருண்மய மஹீச2ம்ரக்ஷகை கா2ரயீ
ப2லெமுக்தாமணி ஸூக்தி ஸங்க1 நிகுரம்ப2ம்பெ2ல்ல
சூர்ணம்பு2கா2
ப2லபி3த்2வஜ்ர ச2த்2ரு ங்கிஜோபரி ப்3ராம்யன்மஹா மந்த2ரா
சலச2ங்க்3ருஷ்டி க3ரட்டமைன கமட1ச்3வாமின் நினுன்
கொல்செத2ன் VI—20

வேதங்களைத் திருடிய சோமன் எனும் அரக்கனை, மீன் உருவில் அழித்து, செதிள்கள் *சதுரமான வேதாட்சரங்கள் (வடமொழி நாகரி எழுத்துக்கள்) ஒப்பப் பொலிவுறவும், நீலக் கடலைக் கலக்கித் தாண்டியபோது எழுந்த நீர்த் துளிகள் பிரம்ம லோகத்தை அடைவது வேதத்தை பிரம்மனிடம் ஒப்படைப்பது போல தோற்றுமாறு நீ பேரொளிப் பிழம்பாக நீ கடலலைகளைத் தாண்டவில்லையா? IV—17

மகிழ்வுடன் பிரளயகால வெள்ளத்தில் எதிர் நீச்சலடித்துக் கொண்டு நீ (மீன் உருவில்) செல்லும்போது உன் .(வாயில்) தாடைகளில் மலைகளும், திமிங்கலங்களும் உட்புகுந்துறை தலான், அந்த வேகத்தில் மலைகளும் பிரம்மாண்டமும் மோதும் பேரொலியே, அரக்கனை வேதங்களை மீட்டிக் கொன்ற வெற்றி முழக்கத்துந்துபி (பறை) ஒலியாக அமைந்ததன்றோ? IV—18

நீ உன் திமிங்கல உருவை மிகமிக வளர்த்தபோது உன் வாயில் தானாக துள்ளி வீழ்ந்தானன்றி, அவ்வரக்கன் மிகச்சிறு மீன்போலும் அளவினனாதலின் அவனை நீ விழுங்கினாய் என்பது பொருந்தாதன்றோ? உன் மூச்சுக்காற்று உள்ளிழுக்கும் போது எழுந்த வேகத்தில் வேதத்துடன் கூட அவனும் ஈர்க்கப் பட்டு உன் வாயில் தானே புகுந்தான் என்பதே மெய்யாகும். IV—19

T 4697

வெள்ளத்தில் மூழ்கிய மண் (பூமி) ஆகிய நிலம், கரைந்து போகாமல் இருக்க, காரை (சுண்ணாம்பு) பூசிப் பாதுகாப்பதற் காக, வைரம் (இடி) ஒத்த தன் முதுகு திரிகையின் அடிக்கல்லாக அமைய, (பாற்கடல் கடையுங்காலத்தில்) மந்திரமலை மேற் கல்லாக உராயவும், முத்து, சிப்பி, சங்குகள் எல்லாம் சூரணமாக (நீறாக) ஆக்கிய கூர்ம (ஆமை) மான தேவனே! உன்னை வணங்குகிறேன்.* IV—20

---

*தெலுங்கு எழுத்து வட்ட எழுத்து, நாகரி சதுர எழுத்து என்பது கருத்து.

*இப்பாடல் பெத்தன 'மனுச்சரித்ர' விலும் உளது.

ச. ஒகமறி பு2ட்ட2கி3ம்ப விலயோத2கமுல் பயிகுப்பி3, சிப்ப வ்ரச்
சுகொனி, மஹாப்3ரவீதி1சன, சூ2கரதன்மெயி பெஞ்சி,
வெண்டி2க்ரிந்
தி2கி கயிவ்ராலு தத்ச2லில நிர்மலதா3ர நத2ஃபரச்2பு1ரத்ப்
ரக்ருதிகி ஈஅஜாண்ட2முளெ ப2ங்க2ரு முங்க2றகான்
ஔர்பவே III—21

ம. அசு ரேந்த்2ரா ஸயகுண்டி2கா ச்ச1ருதி3ர வ்யாப்த
ச்2வகச்சா1ய காஞ்
சிச2முத்1யத்ப்ரதி சி1ம்ஹமத்ச2ர மிளச்சேஷ்டன்
தது2த்தா3மதீ3ர்
க3ச2டா ஜா1டமு பெல்லகி2ஞ்சு க3தி னாந்த்ர ஸ்ரேணி
கின்கன் வெரன்
ஜ்ஃசி3த க்ரூர ப3வன்னகா1வளுலு ப்ரோசு ச்2மர்த்ய
பஞ்சானனா IV—22

உ. முனுமுன்தெல்புனு. தூ2றதூ2ற மறிகெம்புன்
வெண்டி2யுன்தூ2ற,கந்
தனகாயன் கலநல்பு,தோ2 பநக1கோண ஸ்ரேணிசே விக்ரமம்
பு2ன வாடு2க்2ரத கொன்னயட்டி விலச2ன் மூர்தித்ரயீ தேஜமுன்
கொனுலீலன் வித2ளிம்பவே அசு2ரவ க்ஷோபி3த்தி
மித்1யாஹரீ IV—23

வராகமாக உடலை வளர்த்துப் பேருருத் தாங்கி பிரளய வெள்ளத்தை நீ ஒரே தடவை முட்டியாற் பெயர்த்தபோது எழுந்த நீர், பிரம்மாண்டத்தைக் கடந்து மேலெழும்பி, மீண்டும் கீழே தாரையாக விழுந்தபோது, அந்த தாரை—பொற் சரடாகவும், பிரம்மாண்டம் தங்கமணி ஆகவும் அமைய மாயை (இயற்கை)த் தாயிற்கு அணிவித்த மூக்குத்தியாக அமைந்த தன்றோ? IV—21

(நீரின் தாரை பொற்சரடாகவும் அதில் வெண் முத்துக்கள் கோர்த்திருப்பதால் வெள்ளிய தாரையாக உவமை. பிரம் மாண்டம் அந்த சரட்டில் நடுமணியாகிய பொன்மணியாக உவமிக்கப்பட்டுள்ளது.)

நரசிம்மனே! இரணியனின் இதயமாகிய குண்டத்தில் தூய குருதியில் தோன்றும் தனது பிரதிபிம்பத்தைப் பார்த்து எதிரி யாகிய சிங்கம் எனக்கருதி அதன் பிடரி மயிரைப் பிடித்திழுத் தாற்போல, அவன் குடல் மாலைகளைப் பிய்த்தெறிந்த சினமிக்க உனது கூரிய வெள்ளுகிர்கள் எம்மைக் காக்குமாக. IV—22

முதன் முதலில் வெளுப்பும், நுழைய நுழைய பின் சிகப்பும் மீண்டும் நுழைய குண்டிக்காய் (ஈரல்)க் கருப்பும் தோன்ற, தன் கூரிய நகங்களால் அசுரனின் மார்பாகிய சுவரினைப் பிளந்து, மும்மூர்த்திகளின் தேசினை மீண்டும் பெற்றது போல் தோன்றும் படி பொய்ச்சிங்கமாகிய நீ செய்தனையன்றோ?

(நகம் தோலிற் துளைப்ப முதலில் வெளுப்பும், சதையிற் துளைப்ப சிகப்பும், ஈரலைத் துளைப்ப கருப்பும் தோன்றுதல், சிவன் தேசு (தேஜஸ்) வெளுப்பும் பிரம்மன் தேசு சிகப்பும், விஷ்ணு தேஜஸ் கருப்பும் ஆகிய மூன்றும், இரணியம் முன்பு கவர்ந்ததனை மீண்டும் பெற்றெடுத்தாற் போல் தோன்றியது என்பது கற்பனை.) IV—23

ம. ப2லிதை2த்யேய ப3யாந்த3காரப3ரித ப்2ரஹ்மாண்ட2
கே2ஹம்பு2லோ
பலபை மண்டெ2டி தத்ப்ராதாப மயத்2வீபஜ்வால
டி2ந்த2ன்கடு2ன்
தலமை மிண்டிகி க்2ரக்குனன்னெக3யு உத்2யத்தன்
மஹாச்சா1யனா
கலநீலாங்க2மு ஸிம்ஸுமார மொரயங்கா2 பம்பவே
வாமனா! IV—24

ம. ஸமித க்ஷத்ரகளத்ர நேத்ர ஜவவர்ஷாவேள நீகீர்திஹம்
ச2மு க்ரௌஞ்சச்2பு1டதா வகாம்ப2க சு2ஷின் சாக2ங்க2
வீக்ஷிஞ்சிவர்
ஷமு ரா ன2ஞ்சலு னந்த2 நேடு2 சனுனிச்சன்னாடி
தச்சேஷ்ட வா
பமி திர்யக்ததி தா க2தானுக2திகம் பௌ2கா2 குடா1 ரீஹரீ
IV—25

ம. பவிதா2ரா பதனம்பு2 கைகொனனி அப்பௌலச்த்யுமை
ச2ப்ததா2
துவுலன்தூ2று பரிஸ்ரமம்பு2னகு உத்2யோகி2ஞ்செனா
ச2ப்தசா2
லவிபே3த2ம் பொ2னரிஞ்சி நில்வக ச2லீலன் சன்னயுஷ்
மன்மருஜ்
ஜவனாச்2த்ரம் பொ2ச2கு2ன்சி2ருல் ரகு2குலச்2வாமீ
ரமாவல்லபா3 IV—26

மகாபலி சக்கரவர்த்தியாகிய அசுரனைப் பற்றிய அச்சமாகிய இருள் பிரம்மாண்டமாகிய இல்லத்தில் படியுமாறு, மேலோங்கி நிமிர்ந்த பலிச் சக்கரவர்த்தின் ஆற்றலாகிய தீபச் சுடர், அவிந்ததுமே, இருள் விண் முழுதும் விரைந்து பரந்து செலுமாறு போல உன் நீலமேனியை வானகத்துக்கப்புறமும் (சிம்சுமார சக்கரம் எனும் (நெபுலப்படலம்) இடம் வரையும்) வளர்ந்த வாமன மூர்த்தியல்லவா நீ!

(விளக்கின் அடி நிழல் இருள்—உலகில் பலியைப் பற்றிய அச்சத்துக்கு உவமை. பலியின் ஆற்றல் விளக்குச் சுடர் வாமனன் அதை அணைத்ததும் பேரிருட்டு மூவுலகும் பரவுவதற்கு, திருமாலின் கூரிய திருமேனி வளர்ந்தது உவமை.) IV—24

பரசுராமனே! உன்னால் அழிக்கப்பட்ட க்ஷத்திரியர் (அரசர் குலம்)களின் மனைவியர் அழுத கண்ணீர் மழைக்காலமாக, உனது புகழ் என்னும் அன்னப்பறவை, நீ அம்பாற் துளைத்த கிரெளஞ்சமலைத் துளையின் வழியாகச் சென்றதைக் கண்டு அன்று தொட்டு இன்று வரையும் மழைக் காலம் வரவும் அன்னங்கள் பழக்கத்தால் அதே வழியிற் செல்கின்றன. சிறுக்காகச் செல்லும் (விலங்கு, புள்) இனங்கள் எல்லாம் செல்வழிச் செல்லும் இயல்பினதன்றோ? IV—25

(சிவனிடம் வில்வித்தை கற்ற பரசுராமன், தன்னோடு கற்ற சிவகுமாரன் முருகனுடன் பந்தயம் போட்டு அம்பெய்த போது கிரெளஞ்சகிரி துளைக்கப்பட்டது என்பது புராணக்கதை. கிரெளஞ்சகிரி துளை வழியாக அன்னங்கள் மழைக் காலத்தில் இமயமலையிலுள்ள மானச சரோவரத்திற்குச் செல்லும் என்பது கவிமரபு. ஹம்ஸத்வாரம் ப்ருகு 'பதி யசோ வர்த்மயத் க்ரெளஞ் சரந்த்' ரம்என்று மேகதூதத்தில் காளிதாசன் பரசுராமனின் புகழ் வழியான கிரெளஞ்சமலை துளை வழியாக அன்னங்கள் செல்வதை வருணித்து இருப்பதும் காணலாம்.)

இரகுகுல வீரனே! திருமகள் கேள்வனே! இந்திரனின் இடியேற்றின் அடிகளைப் பொருட்படுத்தாத இராவணன் உடலிலுள்ள சப்த தாதுக்களையும் புகுந்து பார்க்கும் பயிற்சிக்காக முயன்றதோ எனுமாறு, சப்த சால மரங்களை (ஏழ் கூந்தற் பனை மரங்களை) வீழ்த்தியும் நில்லாது அப்புறம் சென்ற உனது காற்றினும் கடிய அம்பு எமக்கு செல்வத்தை ஈயுமாக!

(சப்த தாதுககள்—வச்சை, இரத்தம், மாமிசம், மஜ்ஜை எலும்புக்குள்ளிருக்கும் நெய்) எலும்பு, மூளை, விந்து (சுக்கிலம்) என்பன சப்த தாதுக்கள். இவற்றால் உடம்பு ஆக்கப்பட்டுள்ளது. வச்சை—என்பது கொழுப்பு.) IV—26

சீ2. ச்2யந்த2ன ச்2தி1த பி2டௌ2ஜ: க்ஷத்ளரு ஜாட்2யக்ருஜ்
ஜ1ன்ஜா1 மருத்க2ரு ஜ்ஜா1த்க்ருதமுலு,
க்ரவ்யாஸி ராட்2கா2த்ர கனத3ச்2ருக்கா ஹன
ச்2பு2ட ஸல்யஹவ்ய பு3க்சூ1த்க்ருதமுலு,
யோத3வர்மித ஹ்ருத்புடோத்க்ராந்த நிஜபாத
சா2லாஸ்ம க்ருத முஹுஷ்டாத் க்ருதமுலு,
பதிதோக்2ர ரக்ஷ: கப2ந்த3 பார3 ப்2ருஸார்தி
பு3க்2ன போ3க2 ப1ணீந்த்2ர பூ1த்க்ருதமுலு.

தே. ஸ்ராந்தரத்3ய நிரந்தர ச்சா1யத2முலு,
தி2வ்யதாவக கார்மு கோத்ப்ரேரிதமுலு,
கலுஷமு லட2ஞ்சு கா2த லங்கா புராங்க2
ணாம்ப2ர சலத்கலம் ப2கத2ம்ப2கமுலு IV—27

ச. 'க்ஷிதி ஹலக்ருஷ்டி புட்டி யட2கெ2ன் க்ஷிதியந்து னெசீ2த'
யஞ்சுதத்
ச2தி விரஹார்தி பாண்டி2மமு தாலிசி ராம ஸரீரமெத்தி, யீ
க்ஷிதி க1னனக்ரியன் மகு2ட2 செந்த2க2 காக, களிந்த2
ஜாதடின்
க்ஷிதி துனனேடிகின்ஹலமு சேகொனி நீகவ ஸாத்மதன்ஹலீ
IV—28

உ. ஆயத யுஷ்மாதாக்ருதி கராக்2ர நகா2ஞ்சல வாந்த வாரிதா3
ராயுத சந்த்2ர காந்த ப1லகாவளி பி2ம்பி2தயை செலங்க2,நா
ராயணமூர்தி மத்கவச ரத்னமுசே பரிரக்ஷ காஞ்செனா
ஓ யது2வீர, வ்ருஷ்டி பசி2னூறட2ப்ரோவவெ ச2ப்தராத்ரமுல்
IV—29

இந்திரன் அனுப்பிய தேரின் சாரதி மாதலியின் தலை சுற்று மாறு (மயங்குமாறு) பிரளயக் காற்றுப் போல அம்பிறக்கைகளின் சிவ்வெனப் பறக்கும் ஓசையும், இராவணனின் உடலைப் பிளந்து எலும்பினை உராய்ந்து பற்றிய தீப்பொறிகள்அவன் இரத்தத்தில் புகுந்ததால் 'சுய்' என்ற ஓசையும், அரக்க வீரர்களின் கவசங் களைத் துளைத்து இதயத்தைப் பிளந்து ஊடுருவிச் சென்று (இலங்கைக்) கோட்டைச் சுவர்க் கற்களிற் பட்டு 'டாண்' என்ற ஓசையும், வீரர்கள் வீழ்ந்து பட்ட முண்டங்களின் பாரத்தைத் தாங்க முடியாமல் ஆதிசேடன் தலை நெளிய விட்ட நெட்டுயிர்ப் பாக 'உஸ்' என்ற ஓசையும், உண்டாக்கி, களைத்த தேர்க் குதிரைகட்கு வெயில் தோன்றாதபடி நிழலிட்டதாயும் அமைந்த உனது தெய்வீக வில்லிலிருந்து புறப்பட்ட இலங்காபுரி வானகத் தில் சஞ்சரித்த அம்புகள் எமது பாவங்களைப் போக்குமாக.

IV—27

''மண்ணை உழும்போது கிடைத்து (பிறந்து) மண்ணிலேயே மறைந்தாள் சீதை" என்று அந்த கற்புக்கரசியின் பிரிவாற்றாமை யால் வெளுத்துப் போய் ராமனாக உருவெடுத்த (பலராமனாகிய) நீ, அந்தச் சீதையை மீண்டும் அடைவதற்காக அல்லவா ஏர் பிடித்து யமுனை நதிக் கரையில் உழுது கொண்டு, இருக்கிறாய்! இல்லாவிட்டால் மெய் தள்ளாட (மதுவுண்டதாலோ, பிரி வாற்றாத மயக்கத்தாலோ) ஏன் உழ வேண்டும்? ஏர் ஏந்திய பலராமா! எம்மைக் காப்பாயாக. IV—28

இந்திரன் பெருமழை பொழிவித்தபோது கோவர்த்தன கிரியைக் குடையாக உன் விரலில் ஏந்தியபோது, சுற்றிலும் வீழ்ந்த நீர்த்தாரைகள் சந்திர காந்தக் கல்களில் உன் உருவம் பிரதிபலித்து பசுக்கட்கு நாராயணகவசம் போல ஏழு நாட்கள் பாது காத்தது. யதுகுலவீர! எம்மையும் காப்பாயாக!

(நாராயணன் என்ற சொற்கு நீரில் உறைபவன் என்பது பொருள். மழை நீரில் கண்ணன் உரு பிரதிபலிப்பது அப்பெய ருக்குப் பொருத்தமாக உள்ளது என்பது கருத்து,) IV—29

ம. தருணத்வத் சு²த பா²ணபஞ்சகமுனன் தை²த்யாப²லாஸ்
ரேணீதத்

வரச²ந் தோ²ஹமு யுஷ்மதா³த்மக ஐரத்³பாணம்
பொ³கண்டன் செட²ன்,

த்வர காவிஞ்சிதி வேடிகோ! யஹஹ, பு²த்த³ம்ப³ய்யெ
நீபா³வ,மத்

தருணீ ஸீலதனுத்ரமேரிகி அசா³த்³யம் பௌ³டகா² கேஸவா!
IV—30

ஸா. கோ³ராபார மஹாபஞ்சகமு சக்குல் சே²யகா² நேர்புனா

தா³ரா பஞ்சக தா³வனம் செலகு³ க³ந்த³ர்வம்பு²
த்ரொக்கிஞ்சுப²ல்

பீ²ரம்புன்னெறரௌது கீகட ஸராளீவார வாணீப³வத்²

தோ³ருத் ப்³ராந்த க்ருபாணி காத்³விதய வித்³யுத்³க்³ரந்தி¹
நின்கொல்செத³ன் IV—31

இளமையுடைய உனது மகனை (மன்மதனை) அனுப்பி ஐந்து (மலர்) அம்புகளால் அரக்கர் மகளிர் சீலத்தை அழித்து, பின் நீயே ஒரே முதிய அம்பாகி (திரிபுரம் எரித்த சிவன் கையில்) அரக்கரை அழித்த தன்மை ஏன்? அடடா! போதமாயிற்று (உன் கருத்து அறிந்தோம்) அந்நங்கையர் கற்பு எனும் கவசம் யாரா லும் வெல்லற்கரிதல்லவா? கண்ணனே! உன் எண்ணம் என்னே?

(திரிபுர தகன காலத்தில் திருமால் அம்பானான் என்ற புராணக்கதை நினைவு கூரத்தக்கது. இரட்டையர் எனும் தமிழ்க் கவிகள்—

''நாணென்றால் நஞ்சிருக்கும் நற்சாபம் கற்சாபம்
பாணந்தான் மண்தின்ற பாணமே''

என்று மண்தின்ற கண்ணனே அம்பானான் என்பதை அழகாக வருணித்துள்ளதும் அறிக! ஈண்டு அரக்க மகளிர் சீலம் கெடச் செய்தற்கு இளமையும் ஐந்து மலரம்புகளும் உடைய மன்மதன் தேவைப்பட்டான்.

''புகழ்புரிந்த இல்லிலோர்க்கில்லை இகழ்வார்முன்
ஏறுபோல் பீடு நடை''

என்ற குறட்படி அரக்கர் மனைவியர் சீலம் அழிந்த பிறகு அவர் களை முதிய அம்பால் வெல்வதும் எளிதாயிற்று என்று கருத்து. இப்பாடலில் இத்தன்மை ஏன்? என வினவிய கவி ''புத்தம்பய் யென்'' (போதம் ஆயிற்று) என்று கூறிய புத்தன் பெயரை முத்திரையலங்காரம் எனும் அணியில் பெய்து புத்தாவதாரத்தை நினைவூட்டி வணங்குகிறார். காமத்தை வெல்வது வீரத்தை விட அரிய செயல் என்ற குறிப்புத் தோன்றும் இப்பாடல் மூலம் புத்தன் காமத்தை வென்று சிறப்புற்றான் என்று குறிப்புப் பொருள் தோன்ற நயமுடன் அமைத்துள்ளார் கவிஞர்.) IV—30

கலியுகத்தில் மிஞ்சும் பஞ்சமாபாதகங்களை ஒடுக்க கல்கி அவதாரமாகி, குதிரையின் பஞ்ச கதிகளை (ஐந்து நடை பேதங் களை) அறிந்தவனாகி, தன்னிரு கரத்தும் ஏந்திய பட்டாக் கத்தி கவின் மின்னொளியே கவசமாக மிலேச்சரின் அம்புகளைத் தடுக்க கல்கியாகிய பெருமானே! எம்மைக் காப்பாயாக. IV—31

ச. அனிவினுதிம்பகா² ஹரி சு²தா³ஸனவர்த³கி சூசி
'பாண்ட²யுடி²ச்
சினத³ன மிம்முனீஸ்வருட² ஸேஷமு பா³க²வதாச்³மதீ²யகே²
ஹநிவஹசா²த்கரிஞ்சி, அகடா கடுரிக்ததனொாந்து² ஏததீ²
யநிலய மப்புரின் மணிமயம்பு²னு சா²ர்த¹மு சேயு' நாவுடு²ன்
IV—32

தே. விஸ்வகர்மயு னட்ல காவிஞ்செ; அந்த
அம்பு²ஜாக்ஷுடு² அம்முனி னாத²ரிஞ்சி,
ஈக்ஷணா கோ²சருண்ட²ய்யெ; ருஷியு ஏகி²
பௌருலு ப³ஜிம்பகா²னெ புத்தூரி கரிகெ²
IV—33

## விஷ்ணுசித்துனி ச்²வபுர ப்ரவேஸமு

க. ச்²தா¹னிகுலு தன்முனி தி²த்²ரு
க்ஷானந்தி²துலகு²சு புரமு லைகசே²சி² ப்ரஜல்
தோநடு²வ நாக²வாச³மு
தோ எது²ருக² ஏகி²ரந்த தூர்ய முலுலியன்
IV—34

என்றிவ்வாறு துதிக்கவும், திருமால், தேவசிற்பியை நோக்கி "பாண்டிய மன்னன் தந்த அளவற்ற செல்வம் முழுதும் வைணவ அடியார்கட் கீந்து வெறுங்கையன் ஆவான் ஆதலின் இவனது இல்லத்தை அவ்வூரில் மணிமயமாகச் செய்து சிறப்பிக்கவும்'' என்று கூற, IV—32

விசுவகருமனும் அவ்விதமே ஆக்கித் தந்தான். அவ்வளவில் தாமரைக் கண்ணனும் பெரியாழ்வாரை ஆதரித்து காட்சி யளித்துப் பின் மறைந்தான். முனிவனும் (பெரியாழ்வாரும்) ஊரார் போற்றத் திருவில்லிபுத்தூருக்குப் போந்தான். IV—33

## பெரியாழ்வார் தன்நகர் புகல்

வில்லிபுத்தூர் மக்களும் பெரியாழ்வாரைக் காணும் வேட்கையுடன், நகரை அலங்கரித்து மக்கள் எதிர் சென்றழைத்து வர மேளதாளத்துடன் சென்றனர். IV—34

வ. இட்லெது3ர்கொனி பட்டபவித்ர ப3க2வத்ப்ரசா2த தீர்த1ம்பு2லுபாயனம்பு2லுகா2 ப்ரணாமம்பு2 லாசரிஞ்சி லேசி, ப்ராஞ்ஜலுலை, ப3ர்ம பரிகர்ம வர்மிதம் ப2கு2 ப்ரம்ஹ ரத1ம்பு2ன அப்பா3க5வத வதம்ச2ம்பு2 னுனுசுகொனி போவு ச2மயம்பு2ன, பரச்2பர சு2மேதம்பு2 லகு2 பௌரஜானபத ஜனம்புலு2 கலசி2 மெலசி2 நட2சுனெட2; ம்ருத2ங்க2ம் பு2பாங்க2ம் பா2வஜம்பு2 த3ண்டெ2 தாளம் பு2ரும கின்னெர ச2ன்னகா2ளெ வீணெ முக1வீணெ வாசெ2 க்2ரோலு டோ3லு மௌரி பே3ரிகௌ2ரு கு2ம்மெட தம்மெடம்பு2 டு2க்க ட2க்கி சக்கி சுய்யங்கி லோனகு2 அச2ங்க்1யாத வாதி2த்ரத்ரிதய பரம்பரலு மொரய; எட2னெட2 பட2துகலு மலபுகொன, பட்டணாக2த க2ஜத3ட்ட கோ3ட்டாண கோ3டக க3ண்டா கத2ம்ப2 க3ர்க3ர கோ3ஷம்புல2 கனுப்ராச2ம்பு2லை, விலாசி2னீ மஞ்ஜு மஞ்ஜீரம்பு2 லெலுகி3ய்ய அல்லனல்லனன் ஜாகு2தறி கெலங்குல கவசித குதா1கர்பு2ரலகு2 கரிவர கரேணுகந்த1ரலன் கனகாம்குஸம்பு2லு கேலன் பூனி சே3விஞ்சி போவு சா2மந்த பூ3காந்த குமார த3ட்டம்பு2லன் பிட்டு காஞ்சி, ஒண்டொ2ரு க2டல ச2ம்ப்3ரமிஞ்சுசு, ம்ரொக்கி நிக்கி சேயெத்தி யொத்திலி நேத்ரம்பு2லுத்தான தரள தாரகம்பு2லுகா2 மகி2டி2 மகி2டி2 பொக2டு2சுன் போவு தறி, தத்ராஜ கத2ம்ப3கம் ப2ச்சடி பட2ந்துகலகுன் தமகுன் புரிகின் சனுதெ2ஞ்சு னப்புடெ2ல்ல னெட2காண்ட்2ரகு2ட மேலமாட2 போ2லுனா ப்ரோலி மேளம்பு களாவதுல வைசு நெபம்பு2னன் க்ராம க்ராம க்2ரமணுலு ஒச3ங்கு2 நாரங்க2 மாதுலுங்க2 ஜம்பீ2ரகுந்த கந்து2காது2லன் பூர்வானுபு3க்தலகு2 நக்தங்கர முகு1லவைவ; த3ளதளத்தரள தாடங்கம் பு2னு அங்குரித ஸ்மிதம்பு2னுகா2, ஆதன்முக1 ப்ரேங்கோ1ளித ச்2பீ1த சாகூத விப்3ரமா கேகராபாங்க2 விலோகனம்பு2னுனாசலித த3ம்மில்லம்பு2னுங்கா2, மொக2ம்பு2லு திவிசிகொனி ச2ம்மர்த2ம்பு2னன் சனுமார்த2ங்கி2குல மூபுல மறுகு2லன் டா2கி, அந்நாக2 வாச2ம்பு2லு நாக2ரக விலோகனம் பு2னன் செலரேகி2, மொக2ம்பு2லு பி3கி2ஞ்சிகொனி, வேது2ரெத்தின க2தி னரிதி2யெத்த ப்ரதிபத2ம்பு2னு மர்த2ல முகா1வமர்த2னகு க்ருங்கு2டயு, ப2யடபடி2 சேயுனதி2 லேக ஆகட2கு மகி2டி2 துறுமு தித்து2சு, தத்வாரணா3பினய வத்பராசீன கராப்2ஜலை சு2டி2 வடு2னெட2ம் பொட2மு கர்ண குசு2மாவதம்ச2 கபோலகு1ரளீ கிஞ்சிச்சலனோப லக்ஷ்ய வைலக்ஷ்ய ஹாச2குந்த2ம்பு2லு சா2ந்த்2ரதர சந்த்2ரிகா கந்த2ம்பு2லன் தீ2டுகொலுப; சாடுக்தி வாசாலகு2 ஜடரட1 வனிதலு தமகு ம்ரொக்கன் தாரு ம்ரொக்க கொக்கிஞ்சுக ஓர

இவ்விதம் அவ்வூரினர் எதிர் சென்று, பரிவட்டமும், புனித மான பகவத் பிரசாத தீர்த்தங்களும் காணிக்கையாக்கி,வணக்கம் செய்து, கை குவித்து, தங்க ரதத்திலேற்றி அமரச் செய்து அழைத்துச் சென்று போகும்போது, நகரவாசிகளும், கிராமவாசி களும் தம்முட் கலந்து பரந்து நடந்து சென்றவாறு, மிருதங்கம், பறை தாரை, தப்பட்டை, உருமு, காகளம், வீணை, முகவீணை புல்லாங்குழல், தவில், நாதசுரம், முதலிய வாத்தியங்களோடு, இசை முழங்க, நடனமங்கையர் நடனமாட, யானை, குதிரை களின் மணியோசைக்கியைய, நங்கையர் சிலம்பிசைபாட மெல்ல நடந்து வந்தனர்.

அருகில் இரத்தினக் கம்பளம் போர்த்திய களிறுகளிலும் பிடி களிலும் ஏறிய, பொன்னாலான அங்குசங்களைத் தரித்த சிற்றரசர்களின் குமாரர்களின் குழு, ஒருவரை ஒருவர் முந்த பரபரப்புற்று, பெரியாழ்வாரைக் கண்டு வணங்கி, ஒருபக்கம் ஒதுங்கி மேல் நோக்கிய அசையும் கண்பார்வைகளோடு திரும்பித் திரும்பிப் பார்த்து, புகழ்ந்தவாறேகினர்.

அவ்வரச குமாரர்கள் திருவில்லிபுத்தூரில் புகும்போது தமக்கு முன்பே பழக்கமான, கலைத்திறனார் தந்த கணிகையர்மேல் வீசி எறியும் சாக்கிட்டு, கிராம அதிகாரிகள் காணிக்கையாகத் தரும் நாரத்தை, மாதுளம், எலுமிச்சை, முல்லைப் பூப் பந்துகளை முன்பு தாம் வந்தனுபவித்த நங்கையர்மேல் எறிந்தவாறு சென்றனர். ஒளிவீசும் கம்மல்களுடன், புன்முறுவல் பூத்தவாறு இளைஞர்களை, கருத்தோடு கூடிய கடைக்கண் வீச்சுக்களோடு பார்த்து சிறிதே கூந்தலசைய, முகத்தைத் திருப்பிக் கொண்டு மத்தளக்காரரின் முதுகு மறைவில் ஒதுங்கி வேசியர் நடக்க, மத்தளக்காரர் வாசிக்கும்போது குனிவதால் வெளிப்பட்டு, வேறு உபாயமின்மையின், கொப்பினைச் சரிசெய்து இளைஞர்கள் எறியும் பூப்பந்து முதலியவற்றைத் தடுக்கும் வகையில் கைகளை மறித்துச் சுழலும்போது காதிலணிந்த பூக்களும்; கன்னத்தில் தவழும் புன்முறுவலாகிய முல்லைகளும் செறிந்த நிலவினை உமிழச் சென்றனர்.

இனிய சொற்களும் சாதுரியமான சொற்களும் உடைய பேரிளம் பெண்டிர் (அரச குமாரர்களான) இளைஞர்களை வணங்க, அப்பெண்டிர்கட்கிருபுறமும் ஒதுங்கி நிற்கும் இள நங்கையர், பழைய காதலுறவை நினைந்து (நாணத்தால்) தலை குனிந்து, (இளைஞர்களை) வணங்காமல் சிறிதே முகந்திருப்பி

மோமிடி2, வாரி இருபக்கியல ஒதி2கி3 தொண்டியண்டு தலஞ்சி தலவாஞ்சின, வஞ்சனன் கடாக்ஷிஞ்சி, எக்கச3க்கெம்பு3னகு தம சேத ம்ரொக்கிஞ்சுகொனு வேட்3கன் அக்கட2ன் புட2மிறேடு2 லேமி சா2மான்ய மானவுலன் கைகொனக, சு2மாளம்பு2 வேத்2யம்பு2கா3 வித்2யா வயோவ்ருத்து3லரகு3 மீரு ம்ரொக்ககா2 தா2ரு ம்ரொக்கமி எட்லு ம்ரொக்கிம்புண்ட2 னுடயு; க்2ரக்கனன் பொட2மு மொலக நக3வுல மோமுதம்முலகு வேறொக்க விந்த தெலிவி யெக்க, ம்ரொக்ககக்கட3 கெட2கூடி2 நட2சு தோடி3 சேடி3யல கத்தொ2ரலகுன் தமகுன் தத்த2யுன் பொங்து3 கலத2னு பெத்த2றிகம் பெறுகபறுப கெம்மோவுலு மலஞ்சி லோலோன ஒய்யனொய்யன னுசுக்கன ணக்கீலெறிங்கி2 தக்கெ சொ2ம்மனி தம்மு நம்முது2ச2ள்ளு முந்த2றிகி நூகி 'அக்கக்க, ம்ரொக்கவே மனபாலி வேலு' பனி பு3ஜ்ஜதி3ஞ்சியு பொ2மலுகொனி ஜங்கிஞ்சியு எட்டகேலகு ஒட2ம்ப2றசின, த்ரபாதரள நயனலை விரள விரளாங்கு3 ளாங்ஜலி ப3ந்த3ம்பு3கா3 ம்ரொக்கி, கக்கசா2ன இட்லு ம்ரொக்கிஞ்சி, ஹெச்சி, யச்சய்யாட மெட2பட2கயுண்ட2கா3 சிகு2று க3ண்டெ2லவோலெ அல்லுகொனி கொ3ல்லன நகு2னல்லோ லாங்க2னல, கல்லகோபம்பு2ன கொட்டி கச2ரு சூடினாராஜ ச1ங்க3ம்பு2 மீத3 நிகு3ட2, மகு2ட3 மறுபடு2 கொமிரெஹரின லோசனல சலிதகங்கண ச2ங்குல க்ரேங்காரம்பு3 லாலனா மோத3 மேது3ராளி ஜ1ங்காரம்பு2ல பி2ங்கம்பு3லட2ம்ப; செவுலஸங்குலு லோவங்க பு3ஜம்புலு கொங்கி சி2க3லு காவி து2ப்படுலுனொப்ப, னிம்மு தெ2ப்பரம்பை முப்புன அப்புரம்பு3 சேரி, ரசி2கஜன பா3ந்த3-வம்பு2ன பந்து3 வியோக2ம்பு3 மறசி, க3ந்த3கலனா குசு2மச்2ர க்2ரத3னாது2ல னாந்த்3யம்பு2 லேகலரு அந்த்3ர தே3ஸீயுலகு3 க3ந்த3காருலு பாடபாடி பத்2யம்பு ம்ரொக்குலதோ வொர்ரி வொர்ரி கைவாரம்பு3லு கௌருதத்தடு3லபை வச்சுராசவாரிபை, ஆடு2வாரிபை, ஆளுவாரிபை, சல்லகா2சல்ல, பெல்லெக3சி3 ச்2ருஷ்டியெல்லனு முஷ்டிகரிஞ்சுசு, அச்2பஷ்ட பே3த2யகு3 பரிமள சமஷ்டின் பெட்டு பிஷ்ட2தகம்பு2 நபோ3மண்ட2லகின் சண்டா2தகம்பை3 சண்ட2கரகிரணம்பு2ல மாடுபறுப, பன்னீரு நிஞ்சின தன்னீருதித்துலொத்த, வியத்தலம்பு3னன் பாறி கைவ்ராலு தார3ல வாத்3யம்பு3லு தடி3சி2ன வித்2யோப ஜீவுலு புஷ்கரம்பு2லு க்2ராப அக்கி2ரோயுசுண்ட2; அம்மொத்த மத்தறி ந்ருத்தம்பு3சூட2 நிலிசி மெத்தமெத்தன நட2சுசுண்டு2 மிண்ட3 தண்ட3ம்பு2னுன் தா2ருனப்பிண்டு3 புண்ட2ரீகாச்2ய லவகா-ச3ம்பு3 காஞ்சி காஸகுசு2ம ப்ரதிப3லன பாண்டு2ரம்பு2லை பத்2யாதி ஹ்ருத்2ய பார்ஸ்வ த்2வயோத்2யான பாத3பம்பு2-

வேறுபக்கம் பார்க்கவும், அவ்வரச குமாரர்கள் அந்நங்கையர் தம்மை வணங்காத வஞ்சனையைப் பார்த்து, பரிகாசமாக அவர் களையும் வணங்கச் செய்யும் வேட்கையுடன், ஆங்கே பேரரசர் இன்மையாலும், பொதுமக்களைப் பொருட்படுத்தாமலும், தம் கருத்தினை அறியும்வகையில் பெண்டிரைநோக்கி, "வயதிலும்கல்வி யிலும்மூத்த நீங்கள் வணங்கும்போது அவர்கள் (இளநங்கையர்) ஏன் வணங்குவதில்லை. அவர்களையும் வணங்கச் செய்க" என்றும் உடனே முறுவல்பூத்த முகத்தாமரைகட்குப் புதிய எழில் கூட்டி, வணங்காமல், ஆங்கு இணைந்தேகும் தோழியர்கட்கு, தமக்கும் அவ்வரச குமாரர்கட்கும் நெருங்கிய உறவுண்டு என்ற பெருமையை வெளிப்படுத்தச் செவ்விதழை மடித்து, உள்ளூர விரைந்தெழும் உணர்ச்சித் துடிப்பில் இகழ்ச்சியாக உச் சென்று ஒலி செய்யவும், அக்குறிப்புணர்ந்த பேரிளம் பெண்டிர் "நமக்குச் செல்வம் கிட்டியது, நமக்கருள் செய்யும் வள்ளல் பெருந் தெய்வங்கள் ஆன இவர்களை வணங்கீரோ?" என்று கூறி இளநங்கையரை முன்னேறும்படி உற்சாகப் படுத்தியும், புருவ நெரிவில்அச்சுறுத்தியும் எப்படியோ உடன்பட வைத்துவற்புறுத்த வும், அவ்விள நங்கையர், வெட்கத்தால் சஞ்சலித்த கண்களோடு இடையீடுடைய விரல்களோடு கூடிக் கை கூப்பி வணங்கவும், அவ்விதம் வற்புறுத்தலுக்காக அரைமனதோடு வணங்கிய அந்நங் கையரை பறவைகளைப் பிடிக்கும் வலைகள் போலச் சூழ நின்ற பெண்டிர் பெரு நகை செய்யவும், அவர்களை இளநங்கையர் பொய்க்கோபம் கொண்டு அடித்து, சிணுங்கலந்த பார்வையை அரச குமாரர்கள் மேல் செலுத்திப் பின் மீண்டும் மறைந் தொதுங்கும் மான் விழியாரின் வளையல்களின் ஓசையும், முகத்திற்பூசிய வாசனைப் பூச்சுக்காகப் படிந்த வண்டுகளின் ரீங்கார ஒலியும் மிக, நடந்தனர்.

காதுகளில் சங்குமணிகளும், உள் வளைந்த தோள்களும், சுரி குழலும், காவித் துப்பட்டாவும் (துண்டு) அமர சுயகிராமம் தவிர்ந்து முதுமையில் வில்லிபுத்தூர் அடைந்து அவ்வூர் மக்களின் உறவினால் தன் சொந்த பந்தங்களை மறந்து, வாசனைப் பொருள்கள் கலப்பதும் பூமாலை தொடுப்பதும் ஆகிய தொழில் களில் சிறந்து, ஆந்திறன் காட்டும் ஆந்திர நாட்டு சுகந்தப் பொடி செய்பவர்கள், சில சில சொற்களில் பாடல்கள் புனைந்து துதித்து பைத்தியக்காரச் சேட்டைகளோடு வணங்கி, யானை, குதிரை களின் மேல் வரும் அரசகுமாரர்கள் மேலும், நாட்டியக்காரிகள் மேலும் பெரியாழ்வார் மீதும், குளிரும்படியாக (மணப்பொடி

ல்குன்பாறு செங்க2லுவ காலுவலகுன் டி2க்கி3 காச2ரீத2தி3 மண்ட2 மாச2ரம்பு2லுகா2 பிசி3கி யாரன் பெட்டின நாரங்க2 ஸ்ருங்க2பே2ர ப3ங்க3ம்பு2லதோ கட்டின கலமான்னம்பு சலிதி3 போக பொத்துலன் குடு2வ கூர்சுண்ட2 வீக்ஷிஞ்சி; குக்ஷிம் ப3ரித்வம்பு2ன க்ஷுத்க்ஷாமுலை திரிகி3திரிகி3 வேச2ரி ஓச2ரிலின தா2ச2ரி கு3ம்பு வாரிபால கோ2பால பி3க்ஷ பி3க்ஷிஞ்சி ப3க்ஷிம்ப, தீர க்ஷோணுல நிலிபின தோம்புர தி3வெதா2ரி கோலல ரந்த்3ர கோ2ளம்பு2ல உத்கீலம்பு2லை மண்டு2 த3க2த3க2னி ஜகஜ்யோதி தீ3பஜாலம்பு2ல மத்3ய தூ3பகுண்டி2 காங்கா2ரம்பு2ல நீராறக்ராசி, நாது2பரிகிம்ப வாயிஞ்சு தி3மிதி3மி த்3வானம்பு2லகுன் பெ3த2ரி ஈவலி உபவன ஸுகம்பு லாவலிகாவலி உபவனஸுகம்பு2 லீவலிகி த2ட்டம்பு2கா2 கட்டனி தோரணம்புலைபறவ, தவலு விச2ருடயு நோருதெறசுடயு கேலு ச2றசுடயு தக்கமிக்குடம் ப2கு2 அக்கோலா ஹலம்பு2ன ஏபாடியுள் பாடவினராக மூககட்டின பா2க2வத ஜாதம்பு2 லேதேர; ஊரூரி ச2ந்த ச2ந்தகுன் திருக பெத்த2 லிண்டிண்ட ச2ந்தரிஞ்சின பிலுகுவாடு கோ2டி2க2ல ஜாவட2ம்பு2லகுபுட்டி கால்க2ட்டி விடு2வ நெத்தம்பு2ன மெத்தனி க2றிக மேசி3 போச2ரிஞ்சி மாபுமாபுன மேபு ச2ஜ்ஜக வனம்பு மேபுன பிடு2க கொ2றபம்பு2 தோமகம்பு2ன புடபுடனை கறியகன்ப2டி2 ப்ராத கனியைன நீட2ன் கனியைனன் பெ3த3ரு கொத2ம தட்டுவக2ம்பு கலிகொலந்தி3கி வ்ரேலு லாலுகுஞ் செலு கீலி2ஞ்சின க2வ்வத2ண்டல க2ண்டல அலங்கரிஞ்சி, மோலுக2மட டி2ன் தோ2சி மூரகொக்கண்டு னு; ஜேனகொக் கண்டு னுகா2 குட்டின டொல்லு டுல்லாருலுல்ல சில்லம் ப2ல்லிஞ்சின பல்லம்பு2லபை, சில்ல தைலம்பு2னு வாச2ன கொடு2புலன் பூசி னமணுங்கு சந்த்2ரிக சேலலெ ரவணம் பு2லுகா2 எது2ருகா2 வேடு2கன் சூட2வச்சின அவ்வீடி மேடிசா லெ யக2சா2லெ படுசாலெ வானெவைஜாதி சா2நு லேதுல கொமருலு துமுலமை வச்சுதச்சமுசா2 மஜம்பு2லன் சூசி ஏசின வெறன் தம எக்கிரிந்த லெக்கிகொனி வாகெ2 விருகேலன் கு தி யம் பட்டின நிலுவகய்யுத்ச2வம்பு2 ஈக்ஷிம்ப வச்சின ப்ரஜலன் த்ரொக்குசுன் போவ, தன்மத்3ய வ்ருத்த3வ த்3வாதுராது2லு திட்ட னிட்டட்டனலேக ப்ராணம்புலு2

யைத்) தூவ, அப்பொடி மேல் எகிறி உலகனைத்தும் ஒரு பிடிக்குள் கொணர்ந்தாற் போல் பரந்து கதிரவனின் வெயில் மறையும்படியாக வானகத்தையும் மூடவும், பன்னீர் நிறைந்த தோற்பைகளை அமுக்கவும், அதன் வழிப் போந்த நீர் வானத்திற் பாய்ந்து கீழே வளைந்திறங்கும் போது அதன் தாரைகள் மிருதங்கம் முதலிய வாத்தியங்களில் பட்டு, நனைந்துவிட அக் கலைஞர்கள், தம் வாத்தியங்களைக் காத்துக் கொள்ள சூடாக்க நெருப்பினை வேண்டி அலைய, அக்கூட்டம் சென்றது.

அக்கூட்டத்தில் அப்போது நாட்டியமாடுவதைக்கண்டு நின்று மெல்ல மெல்லச் செல்லும் உல்லாசம்மிக்க இளைஞர்கள், தாமும் ஆங்குள்ள தாமரை முகத் தையலர்களும், சமயம் பார்த்து; நாணற்பூக்கள் பிரதிபலிப்பதனால் வெளுத்துள்ள பாதைகளில் இருபுறமும் மனோகரமான பூங்காக்களுக்கும் செங்கழுநீர்ப் பூக்கள் நிறைந்த கால்வாய்களில் இறங்கி, எருமைத் தயிரும் பாலாடையும் பிசைந்து கட்டிய நாரத்தங்காய், இஞ்சித் துண்டு களுடைய ஊறுகாய்களுடன் செந்நெற் சோற்றினை கமுகம் பாளைகளில் வைத்து உண்பதற்காக அமரவும், அவர்களைக் கண்டு வயிற்றுப் பாட்டுக்காக, பசி கொண்டிளைத்து அலைந் தலைந்தலுத்துப்போன தாசரிகள் (வைணவ அடியார்களில் ஒரு வகை) கூட்டம் அவர்களை அணுகி "கோபாலா பிச்சை'' என்ற அன்னப் பிச்சை கேட்டு, உண்டனர். ஆற்றங்கரையில் வைத் துள்ள பருத்த கல் விளக்குத் தூணில் எறியும் சகசோதி (அகலும் வத்தியுமின்றி, எண்ணெய் ஊற்றி துணிப் பொதியை வைத்துத் தீப்பந்தம் போல எறியும்) தீபங்களிலும், சாம்பிராணிப் புகை போட்ட தூப குண்டிகையின் நெருப்பிலும், (முன் பன்னீரால் நனைந்த வாத்தியங்களை) ஈரம் புலர்த்திடக் காய வைத்து தமது வாத்தியங்களின்) நாதத்தைப் பரீட்சிக்க வாசிக்கும் திம் திம் எனும் ஓசை கேட்டுப் பதறிய இந்தப் பக்கத்துப் பூங்கா விருந்த கிளிகள் அந்தப் பக்கத்திற்கும் அந்தப் பக்கப் பூங்காவி லிருந்த கிளிகள் இந்தப் பக்கமும் பறந்து நெருங்கி கட்டாத தோரணமாக எழில் கூடிப் பரந்துலவி ஓடின. தலையசைத்தலும், வாய் திறத்தலும் தாளமிடக் கைதட்டலும் காணப்பட்டதன்றி அந்தக் கோலகலத்தில் சிறிதும் பாட்டுக் கேட்க இயலாமல் போக், (திவ்விய பிரபந்தம் பாடும்) பாகவதர்கள் அக்கூட்டத்தில் பாடிக் கொண்டு வந்தவர்கள் மௌனம் வகித்தார்கள்.

பிடி2கிடன் பட்டுகொனி போவுசு,நவீனசவித3 கேதா2ரம்பு2லன் த்ரெள்ளி சட்டலு தி3க2ம்ப3டி வெட2ல லேகுண்ட2ன் தா2ரு தி3க2னிம்முலேக பிம்மடகொனி நலு தெ2ச2லன் சூட2ன் சூசி கேலுச2றசி கோஹோ யனி கே2லிசே2யு க3ணிகாகத2ம்ப2ம்பு2ல சப்ப2டுலு நிபி2ட2 நிஷ்குட விடபி ஜா1டம்பு2லன் ப்ரதி ஸப்2த2ம்பு2லு புட்டிம்ப, இட்லனூன விப3வம்பு2 சிகு2ரொத்த அத்திருபதிசொச்சி அச்சக்ரத3ரு நக2ரி மோச2ல நிலுசுடயு' அவ்விஷ்ணு சித்துண்டு2 தத்ரதா1வரணம்பு3 சேசி2, த3ரணித3வ ச்2தா1னிக ச2மூஹம்பு3 வெண்டரா அவ்வை குண்டு1 சே2விஞ்சி, தத்ப்ராசாத3 லப்2த3ம்ப2கு3 பரிவட்டம் பு2ன அலங்க்ருதுண்டை2, நாநாலங்கார ச2ஹிதம்பு3னு ரத்ன காஞ்சன மயம்பு2லு அகு3ஆத்மீய ப3வனம்பு2ன் காஞ்சி விச்மிதுண்டை2 புண்ட2ரீகாக்ஷ மஹிமாபி3லப்2த3 வைப3வம் பு2கா2 தெலிசி2 தத்ரத்ய தா3த்ரீ களத்ர வர்க2ம்பு2ல னனிபி ப்ரவேஸிஞ்சி, தொண்டிகண்டெ ஸதகுணம்பு3கா2 பா2க3வத பூஜா ப்ரவணுண்டை2 யுண்டென் அந்த

ஒவ்வோர் ஊர்ச்சந்தைகட்கும் செல்வதற்காக தனவந்தர்கள் வீட்டில் வளர்க்கும் பெண் குதிரைகட்குப் பிறந்து, நீளக் கயிற்றால் காலிற் கட்டப்பட்டு தரிசுகளில் மென்மையான பசும் புல்லைத் தின்று கொழுப்பேறி, மாலை நேரங்களில் கொள்ளு காணம் முதலிய ஊட்டங்களைப் பெற்று வளர்ந்து, வரட்டி, முதலியவற்றால் (குதிரையுடன்) தேய்க்கப்பட்டு மினுமினுப்புற்று கருங்கம்பளித் துணி, நிழல் முதலியன கண்டு பதறித்துள்ளும் இளம் குதிரைகளை கால்வரை தொங்கும் குஞ்சங்களும், சிறு மணிகளும், புரசம்பட்டையிற் தோய்ந்த முழத்திற்கொன்றும் சாணுக்கொன்றுமாகத் தொங்கும் வலைகள் தொங்க, அலங்கரித்து, வாசனைப் பூச்சு தொய்த்த நிலவொத்த ஆடைகள் அலங்கரிக்க (அக்குதிரைகளில்) ஏறி இளைஞர்கள் வந்தனர்.

அவ்வூரின் மேலோர்களான சாலியர்களும், தட்டார்களுக்கும், கம்மாளரும் செட்டிகளும், கோமுட்டிகளும், பாய்முடைவோரும் ஆகிய பல குலங்களின் இள நங்கையர்கள் கூட்டமாக கலந்து வரும்போது யானையைக் கண்டு பயந்து ஒதுங்கவே, கடிவாளம் இருகரத்தாலும் பற்றி ஈர்த்தும் அடங்காதோடிய குதிரைகள் மிரண்டுஅக்கூட்டத்தினை மிதித்துக்கொண்டோடின.

மிதிபட்ட கூட்டத்திடையே உள்ள முதியவர்கள், பெண்டிர், நோயாளிகள் முதலியோர் (அக்குதிரையில் ஏறியவர்களை) வையவும், அவர்கள் எதுவும் பேச முடியாமல் உயிரைக் கையில் பிடித்துக்கொண்டு, போய் அருகிலுள்ள புதிய வயலில் துள்ளிக் குதித்து தொடைகள் வரையும் மூழ்கி எழ முடியாத குதிரை மீதிருந்து தாம் இறங்க இடம் இன்றி நாலுதிசையும் பார்த்து பரிதாபகரமாக இருப்ப அதைக்கண்ட பூப்படையாத பெதும்பைப் பருவத்து மகளிர்கள் 'ஓ' 'ஓ' என்று கூவி பரிகாசமாகக் கேலி செய்து கைதட்டவும் அந்த ஓடை செறிந்த பூங்கா மரங்களில் எதிரொலிக்கவும் செய்தன.

இவ்விதமாக மகாவைபவத்தோடு, அத்திருவில்லிபுத்தூரை யடைந்து, அந்த சக்கிராயுதமுடைய திருமாலின் கோயில் புக்கு நின்று, அப்பெரியாழ்வார் அந்த பிரம்மரதத்திலிருந்து கீழே இறங்கி, சிற்றரசுகளும், தேவஸ்தானாதிபதிகளும் குழுமி பின்தொடர, திருமாலைச் சேவித்து, சுவாமி பிரசாதமான பரிவட்டத்தினால் அலங்கரிப்பட்டு, பின்னர், பல்வேறுஅலங்காரங் களுடன் கூடிய, மணிகளும் பொன்னும் நிறைந்த தனது இல்லத் தைக் கண்டு வியந்து, திருமாலின் திருவருட்பேறென நினைந்து ஆங்குள்ள மன்னர்களை விடை கொடுத்து அனுப்பி வைத்து, இல்லம் புகுந்து, முன்னைவிட நூறு மடங்கு அடியார்களை ஆதரித்துச் சிறப்புற்றிருந்தார்.

ம. உலுபால்பட்டின யிண்ட்2ல மஜ்ஜன ந்ருபார் ஹோதா2ர
புக்திக்ரியோஜ்
ஜ்வலுலை, ரே ஹரிகொல்வுனன் விவித3லாச்2ய ச்2பர்தி3
சு2ப்ருப்3ருகும்
சு3ல வாது2ல்சரிதே2ர்சி புச்சி, மணிவாசோ2
பூ3ஷணக்2ராமமுன்
ஜலஜாதாக்ஷுனகுன் ச2மர்பணமு நிஷ்ட2ன் சேசி2,
அவ்வேகுவன் IV—36

தே. ப்ரபு3வுலரிகி2ரி க்ரம்மற பாண்ட்2ய நக2ரி,
கம்முனியு அட்லு வைஷ்ணவாப்3 யர்சனம்பு3
தனசிரந்தன துலசி2காதா2மகரண
தா2ச்2யமுனு சேசி3கொனுசு தத்பரதனுண்டெ2 IV—37

வ. ஒக்கநாடு2 மத்3யாஹ்ன ச2மய மாலிகா ச2மாரோபணா னந்தரம்பு2ன மந்தி2ரம்பு2னகு போவு னதனி ப்ரசா2த3 மந்த2ச்2மித சு2ந்த2ர வலக்ஷம்ப2கு2 கடாக்ஷம்பு2ன வீக்ஷிஞ்சி பக்ஷி புங்க2வ கேதனுண்டு2 புண்ட2ரீக நிகேதன கிட்லனியெ IV—38

தே. 'யாமுனா சார்யு டொ2க்கடு2 ஈமஹாத்மு
டொ2க்கடு2னு காதெ2 த2ர்ஸனம் பு2தத3ரிஞ்சி
ரச்2மதீ2ய க்ருபாதிஸயமுன' னனின
இந்தி2ராதே2வி தனப3ர்த கிட்டுலனியெ IV—39

அப்போது காணிக்கை ஈந்தவர் இல்லங்களில் விருந்தினனாகக் குளித்துண்டு மகிழ்ந்து, இரவில் திருமால் கோயிலில் பல்வேறு நாட்டியக்காரர்களின் வாதங்களைத் தீர்த்து வைத்து; மணிகள், உடைகள், ஊர்கள் திருமாலுக்கு சமர்ப்பணம் செய்து, மறுநாள் காலையில் IV—36

சிற்றரசுகள் மதுரைக்குத் திரும்பிச் சென்றனர். பெரியாழ்வாரும் முன்போல வைணவ அடியார்களைச் சேவித்தும் தனது நெடுநாளைய தொண்டாகிய துளசிமாலை கட்டித் தரும் கைங்கரியம் செய்து கொண்டும், பக்தியுடன் திகழ்ந்தார். IV—37

ஒரு நாள் நண்பகலில் பூமாலை சமர்ப்பித்த பிறகு வீட்டுச்கு போய்க் கொண்டிருந்த பெரியாழ்வாரை, அருளொழுகும் புன்முறுவல் பூத்த கடைக்கண்களோடு பார்த்துப் பின், கருட வாகனனான பகவான் தாமலை மலராள் ஆகிய தேவியைப் பார்த்து இவ்விதம் கூறினான். IV—38

"யாமுனாசாரியர் (ஆளவந்தார்) ஒருவனும், இந்த மகாத்மா (பெரியாழ்வார்) ஒருவனும் அல்லவா (வைணவ) தரிசனத்தை புனருத்தாரணம் செய்து எனது பேரருளுக்குப் பாத்திரம் ஆனார்கள்.'' என இந்திராதேவி (லட்சுமி) தன் கணவனிடம் இவ்விதம் கூறினாள்''. IV—39

## யாமுனாசார்ய சரித்ரமு

க. 'இதனிகத1 ஏறிக2னதெ2 கா,
அதடே2மி யொனர் செ?' அனின அப்ஜாக்ஷுண்டா3
ஸதபத்ர நிலயகிட்லனு,
'அதிவ' கலண்டொடா2கடு2 மத்பதா ஸ்ரிதுடா2தி2ன் IV—40

ஆ. அதடு2 சிறுத நாடெ2 ஆசார்யகுலமுன
வேத2 ஸாச்2த்ர முக்1ய வித்2யலப்3ய
சி2ஞ்சுசுண்டெ2, அபுடு2 செலுவ, இப்படி பாண்ட்2ய
ந்ருபதி பூர்வவம்ஸ்யுடே2 யொகண்டு2 IV—41

தே. வெர்ரி ஸைவம்பு2 முதி2ரி மத்வினுதி வினடு2,
நதி யொனர்படு2 மாமக ப்ரதிமலகுனு
ஹருடெ2 பரதத்வ மனு, மதீ2யாலயமுல
உத்ச2வம்பு2ல குலுகு2 நெய்யுருனு அட்லெ IV—42

## ஆளவந்தார் வரலாறு

"இவர் (பெரியாழ்வார்) கதை தெரிந்ததுதானே! அவர் என்ன செய்தார்?" என்று கேட்ப, தாமரைக் கண்ணன், அந்த நூற்றிதழ்த் தாமரையில் உறையும் திருமகளுக்கு இவ்விதம் கூறினான்! "நங்காய்! என்னைச் சேவிக்கும் பக்தன் ஒருவன் முன்பிருந்தான்.* IV—40

அவன் சிறுவயது முதலே ஆசாரியரிடம் வேத சாத்திரங் களைக் கற்றுச் சிறந்திருந்தான். நங்காய்! அப்போது இப்போ துள்ள பாண்டிய மன்னனின் முன்னோராகிய ஒருவன் ஆண்டு வந்தான். IV—41

பித்துற்ற சைவத்தில் முதிர்ந்து, எனது துதிகளை (விஷ்ணு துதி)க் கேட்க மாட்டான். எனது விக்கிரகங்களை வணங்க மாட்டான். சிவன்தான் பரம்பொருள் என்பான். எனது ஆலய உற்சவங்களைக் கண்டு அஞ்சுவான். அவனைச் சார்ந் தோரும் அப்படியே இருந்தனர். IV—42

---

* வரலாற்றுப்படி யாமுனராகிய ஆளவந்தார் பெரியாழ்வாருக்குச் சில நூற்றாண்டுகள் கழிந்த பின் தமிழகத் தில் வாழ்ந்த வைணவ அடியார் ஆகும். கிருஷ்ணதேவராயர் தமது காவியத்தில் பின்னர் இருந்தவரை முன்னவராக வருணித் திருப்பது பொருந்தாது. எனினும் இலக்கியங்களில் இவ்விதம் காலக் கணக்கைப் பொருட்படுத்தாது அமைப்பது மரபாகவே வந்துள்ளது. பின் வந்த வேதாந்த தேசிகர் அகோபில மடம் உருவாக்கிய ஆதிவண் சடகோபர் போன்றவர்களையும் இக் காவியத்தில் ஆண்டாள் சரிதம் கூறுமிடத்து வருணித்திருப்பதும் காணலாம். இப்போக்கு பல புராணங்களிலும் காவியங்களிலும் காணப்படுகிறது. எனினும் சரித்திர நோக்கத்தில் இது முரண் பாடாகும். 'தாதா யதாபூர்வம் கல்பயேத்' என்ற சுலோகப்படி பிரம்மா மீண்டும் மீண்டும் முன்போல உலக சிருஷ்டி நடத்து கிறார் என்பதால் யாமுனர் முன்னைய யுகத்தவர் ஆகக் கொள்ளலாம் எனச் சிலர் சமாதானம் கூறுவர்.

சீ$^{2}$. அஸ்ராந்த ஜங்க$^{2}$மார்சா ச$^{2}$க்தி வர்திலு
வேத$^{2}$ வித்$^{2}$விஜபூஜ வீடி கலிபி,
பௌ$^{3}$மவாரபு வீரப$^{3}$த்ர பள்ளெரமிடு$^{2}$
க்$^{2}$ருஹ தை$^{2}$வதம்பு$^{2}$ லிர்ரிங்கு லிங்க,
ஷண்ணவதி ஸ்ராத்த$^{3}$ சய மாரபெ$^{2}$ட்டு ச$^{2}$ங்
கரதா$^{2}$ச$^{2}$ மய்ய ப$^{3}$க்த ப்ரததிகி
ஆத்$^{2}$யம்பு$^{2}$லைன தே$^{2}$வாலயம்பு$^{2}$லு வ்ரால
அவனீ நிராள மடாளி நிலுபு,

தே. ஜங்தெ$^{2}$முத்தர ஸைவம்பு$^{2}$ செந்தி$^{2}$ த்ரெஞ்சு
பதிது லாராத்$^{3}$ய தே$^{2}$வுள்ளெ ப்ராப்யுலனுசு
உபனிஷத்துலு வாரிசே உப்பி$^{2}$வினுசு,
வெண்டி$^{2}$ ஏஜங்க$^{2}$ மெத்தின வெர$^{2}$கு படு$^{2}$னு IV—43

க. ஸிவலிங்க$^{2}$மு தால்சின ஜன
நிவஹம் பே மைன சேயனிதி பாபமு தா
னவுகாத$^{2}$ன டா$^{2}$ ச$^{2}$மயமு
னவுனனு விப்ருலக அக்$^{2}$ரஹாரமுலிச்சுன் IV—44

தே. அதடு$^{2}$ ராஜ்யம்பு$^{2}$ பாலிஞ்சு அவச$^{2}$ரமுன
தன வஸம் பை$^{2}$னயட்டி அத்தாம்ரபர்ணி
கலுகு$^{2}$னல புட்டரானி முக்தாமணீகு
லம்பு$^{2}$ மாஹேஸ்வருல கந்த$^{3}$லகுனெ தீறெ IV—45

அவன் வேதமுணர்ந்த பிராமணர்களைப் போற்றுவ தொழிந்து, ஜங்கமர் (சைவ அடியார்)களைப் போற்றி வணங்கினான்.

செவ்வாய்க் கிழமைகளில் வீரபத்திரனுக்கு மாவிளக்கெடுத்துக் கொண்டு சென்றான். குலதெய்வங்களையும் கும்பிட மறந்தான். தொண்ணூற்றாறு நாள் விரதங்களில் சங்கரதாசமய்யர்களான சிவனடியார்கட்கு மன நிறைவுண்டாகும்படி சிரார்த்தங்களைச் செய்து மகிழ்விப்பான்.

பழமையான கோயில்கள் பாழாகிக் கிடக்க சைவ மடங்களை நிறுவினான். வடக்கத்திய சைவமதத்திற் சேர்ந்து பூணூலையும் அறுத்தெறிந்தான். ஆசாரமற்ற ஆராத்தியர்களை பெரிதாக எண்ணி தொண்டு செய்தான். அவர்கள் கூறும் உபநிஷத்துக் களை (வேதாந்தம்)க் கேட்டான். ஏதாவதொரு சைவஅடியார் வந்தால் வியந்து பாராட்டிப் போற்றி வந்தான். IV—43

சிவலிங்கதாரிகளாகிய ஜங்கமர்கள் எது செய்தாலும் இது பாவம் புண்ணியம் என்று ஆராயாமல் ஒப்புக் கொண்டு இருப்பான். சைவத்தைப் போற்றும் பிராமணர்கட்கு மட்டுமே அக்கிரகாரங்கள் தருவான். IV—44

அவன் அரசாண்டு வந்த காலத்தில் அவனது ஆட்சியிலிருந்த தாமிரபரணி நதித்துறையில் மட்டுமே கிட்டும் ஆணி முத்துக்கள் எல்லாம் சைவ அடியார்கள் கழுத்துக்கு (ருத்ராட்ச மாலையில் கோர்த்து) தீர்ந்து போய்விட்டன. IV—45

தே. அப்பு டி2ச்சகுலகு3 சு ப்2ராஹ்மனுலு கொந்த2
றாத்மஜ நிஜபூ5மி விடு2வலே கலிகபூ3தி
க2ட்ட2முல னானருது2ராக லிட்ட2ச2ந்தி3
சூ2தச2ம்ஹித லிறிகிஞ்சி சொர தொட2கி2ரி IV—46

க. ஸீலமு பட்டியு க2ஞ்ஜா
ஹாலலு பாம்ஸுன பு3ஜிஞ்சுனத3முல பை2டஞ்
ஜாலடு2 வைவன், விப்ரச்2
கா1லித்யமு பை2லு சேசி2 கனுகி2றபு ச2ப3ன் IV—47

க. ஆராஜு மஹிஷிகேனி ம
தா2ராத3னபரத னுண்டு2; அட்லுண்டி2யு து2ர்
வாரவ்யதகுன் கானது2
பாரமு, விபு3ட2 ச்2மத2ங்க்3ரி ப3க்துடு3 காமின் IV—48

வ. மறியு அப்புரந்த்3ரீரத்னம்பு2 IV—49

அவ்வப்போது, மன்னன் விருப்பப்படி நடந்துகொள்ள வேண்டுமென்ற எண்ணத்தில் அந்தணர்கள், தம் நாட்டைப் பிரிய மனமில்லாமல், நெற்றி நிறைய விபூதி பூசிக்கொண்டு, ருத்திராட்ச மாலை தரித்து, சூதசம்ஹிதைச் சுவடியைக் கக்கத்தில் இடுக்கிக் கொண்டு அவைக்களம் புகத் தொடங்கினர்.
IV—46

ஒழுக்கத்திற்கு முரண்பாடாக மறைவாகக் கஞ்சா, சாராயம் குடிக்கும் நீசர்களை வெளியேற்ற இயலாமல் ஏற்றுக் கொண்டான். பிராமணர்களின் சிறு தவறுகளை வெளிப்படுத்துமாறு சைவர்களுக்குச் சைகை செய்வான். IV—47

அப்பட்டத்தரசி, நற்பேற்றினால் என் மீது பக்தியால் ஆராதனை கொண்டிருந்தும், தன் கணவன் எனது பக்தனாக இல்லாததை நினைந்து மிகுந்த வருத்தத்தையடைந்திருந்தாள்.
IV—48

மேலும் அப்பெண்மணி IV—49

சீ[3]. விங்க[2]ட[2]ம்பை[2]னட்டி முங்கி[3]ட நெலகொன்ன
ப்[2]ருந்தா[2]வனிகி ம்ருக்கு[2] வெட்டு தா[2]ன;
தஸமிநாடே[2]க பு[3]க்தமு சேசி[2], அவலிநா
டோ[2]ர்சி ஜாக[2]ரமுதோ னுண்டு[2] னிட்ரு;
பா[2]ரசி[2] போனீ[2]து, பைநித்[2]ர பாறுடக்
கலுபாடு[2] மத்புண்ய கத[1]ல த்ரோயு
நேமம்பு மூன்னாள்ளு காமிம்பத[2]தி[3] நாது[1];
மநுநாடு[2] மன்னுனு மனசு[2] தனிய

தே. நாரஜபுவன்னெ ப்ரியுசெ[2]ஜ்ஜ கருகு[2] கூர்மி,
அருகு[2]சோ நாபி[3] துடி[2]சி கப்புரபு நாபி[3]
பெட்டு; இட்டுல மத்ப[3]க்தி புட்டியுனு நி
ஜேஸ ெனட[2] ப[3]க்தி செட[2]து[2] மதி[2]ஷ்ட ம[2]குட IV—50

க. வனஜஜ ருத்[2]ராது[2]லு மத்
தனுவுலெ; தத்பூஜனம்பு[2] தத்[1]யமு மத்பூ
ஜனமெ; ததீப்[2]சி[2]த ப[1]லதா[2]
தனு நேனெ; அடைன கலவு தரதம வ்ருத்துல் IV—51

க. கேவல ஸரீர த்[2]ருஷ்டின
தே[2]வதலன் வேறு கலுக[2] தெலி[2]சின ஜடு[2]லன்
நாவாசு[2] தே[2]வதா ச்தி[1]தி
பா[3]விம்பனி பூஜசா[2]ந்த ப[1]லமை த்ரிப்புன் IV—52

தன் மாளிகைக்கு முன்புள்ள அழகிய துளசி வனத்திற்கு தானே கோலமிடுவாள். தசமியன்று ஒரு பொழுதுமட்டும் உண்பாள். மறுநாள் ஏகாதசியன்று தூங்காமல் உபவாசமிருந்து துவாதசியன்று பிராமணப் பெண்கள் கூறும் கதைகளைக் கேட்பாள். விரதம் இருக்கும் மூன்று நாட்களும் தன் கணவனை விரும்ப மாட்டாள். அதன் மறுநாள் தன் கணவன் படுக்கைக்குள் அன்போடு செல்வாள். செல்லும் போது கஸ்தூரி திலகத்தை துடைத்து கற்பூரத் திலகத்தை அணிந்து செல்வாள். இவ்விதமு என் மேல் பக்தி மிகுந்திருந்தாலும் தன் கணவனிடம் பக்தி குறையாமல் இருப்பாள். இதுவே எனக்கும் விருப்பமாகும்.
IV—50

பிரம்மா, ருத்திரர்கள் என் உடல்கள் தாம் அவர்களை வணங்குவதும் என்னை வணங்குவதுதான். அவர்களை விருப்பத்தைத் தருபவனும் நான்தான். எனினும் அதில் சிறிது ஏற்றத் தாழ்வுகள் உள்ளன. IV—51

பிற தெய்வங்களை என்னிலும் வேறாகக் கருதி உள்ள மந்த மதியினர், எனது வாசுதேவநிலை—(அனைத்திலும்தான். தன்னில் அனைத்தும்)யை உணராமல் இயற்றும் பூசனையின் பயன். எல்லைக்குட்பட்டதாகவே முடிவுறும். IV—52

வ. மறியுனீ ரஹஸ்2யம்பு2 தெலியகப்பூ3பதி தாமசு2ண்டை2, மாமகீ னம்பு2லகு2 ஜனம்பு2ல சா2மான்ய பு2த்தி3ன் சூசுசுதத் வ்ருத்துல கசு2 உபத்2ரவம்பு2ல உபேக்ஷிஞ்சுசு ரக்ஷ2 விமுகு1ண்டை2 யுண்ட2 வீக்ஷிஞ்சி; கலியுக2ம்பு2ன த்2ரவிட2 மண்ட2லம்பு2ன க்ருதமாலா தாம்ரபர்ணீதடம்பு2ல் மத்ப3க்துலு தறசகு2டனு, தத் தேஸம்பு2ன கொட2யண்ட2தண்ட2கு2டனு, ரக்ஷண சிக்ஷணம் பு2லு ராஜமுக1ம்பு2னன் காக நேன சா2க்ஷாத்ரிஞ்சி சேயமியு தத் ரக்ஷனேச்ச1 அச்2மதா2பி3முக்1யம்பு2னன் கா2னி பொட2மமியு, நாயாபி3முக்1யம்பு2 ச2ம்வாத2ம்பு2னன் கானி புட்டமியு, நேவிசாரிஞ்சி, ததா2பி3முக்1ய கரணார்த1ம்பு2க2 னாச்2தா1னம் பெ2க்கி வாதி3ஜயம்பு2 சேயவலயுனனு தலம்பு அவ்விப்ரகுமாருனகுன் புட்டிம்ப; அதண்டே2கி2 நாநா தே2ஸா க2ததீ2னா நாத1 வ்ருத்த3 பூ3சு2ர குடும்ப3முலகு தா3ன்யாஜின படாது2லு, வடுவுலகுன் பெண்ட்2ண்ட்2ல, கனுபகீதுல குபன யனம்பு2லகு பங்க்2வந்த3 பதி3ராது2லகு சௌரபே1யாதி2 யானம்பு2லு; மறியு செறுவு கட2ம படி2யெ னனியு, பேத2 கு2டு2லகு பூஜ நடு2வத2னியு, னெட2வுனன் சலிபந்தி2ரிடி2 யெத2மனியு, திதி1 சிக்குனனியு, தீர்த1யாத்ர சனியெத2 மனியுனு, வ்ரதோத்யாபன கனியுனு, வ்யாதி3 மான்பு கோனனியுனு, செப்பிபம்ப, ஆராணி வாச2ம்பு2 கு2ப்தாகு2ப்த ப்ரகாரம்பு2லன் பம்பு த்2ரவ்யம்பு2 தெச்சி இச்சு முது2ச2ள்ளகு2 வர்ஷத3ருல சேதுலகுன் க்ரந்து2கொனி சேசா2சின ச2ந்தி2டி தோரணம்பு2லை தோசு ஏகத2ண்டி2 த்ரிதண்டி2 ப்2ரஹ்மசாருல யுன்னமித த2ண்ட2ம்பு2ல நிண்டா2ரு காஷாய கத்2ரு வச்3த்ர கௌபீன பரம்பரலன் க்ரம்மி, காவள்ள பட2கல3 ஜாட2கொனி, கார்பண்யம் ப2வித்2யகா2, தக்கின வித்2யலெறுங்க3க வேடு2னீத்ருக் விதா3னேக ப்ராணுல காதா3ரம்ப3கு2 பட2மடி த்2வாரம்பு2சேரி, ப்ரதிதி2னாச்2மத் பாத2ப3ஜன கதா1ஸ்ருத பூர்வயகு2ஆ உர்வீ த2வுதே2வி காஸீர்வசனா க்ஷதம்பு2லு தௌ2வாரிக முக1ம்புனன் பம்பி; 'வைதே3ஸிகுண்ட2, வைஷ்ணவ வடுண்ட2, வாதி3 கலிகி2னி விஷ்ணு தத்வம்பெ2 பரதத்வம்ப2னி வாதி2ஞ்கி கெ2லிசெத2, வசு2தா3வருண்டு3 விஷ்ணுப3க்தி விமுகு1ண்டு2, காவுன வைஷ்ணவுனி மனவி வின்னவிம்ப எவ்வாரு வெறதுரு; நீவுவிஷ்ணு3ப3க்திபராயணவு, பதிஹிதாசாரவுன் காவுன நீகு வின்னவிஞ்சி பம்பிதி; நீவிபு3டு3 நீகு விதே3யுண்டு3, வின்னவிஞ்சி நன்னு ரப்பிஞ்சி வாத2ம்பு2 சேயிம்ப ஓபுதே2னி வாதி2ஞ்சி கெல்சி, நீதுப3ர்தகு ப3க2வத்ப3க்தி புட்டிஞ்சி க்ருதார்து1ன் காவிஞ்செத2'னனி வின்னவிம்பன் பஞ்சின,

மேலும், இந்த ரகசியம் (எல்லாம் நானே எனும் தத்துவம்) தெரியாமல் அம்மன்னன், தாமத குணமுடையவனாய், எனது பக்தர்களை சாதாரணமாகக் கண்டு, அவர்கட்கு ஏற்படும் தொல்லைகளை நீக்காது அலட்சியப்படுத்தி, காவல் கடமையில் நீங்கியவனாகினான். இதைக் கண்டு கலியுகத்தில் தமிழ் நாட்டில் (த்ரவிடமண்டலம்புன) கிருதமாலா,* தாமிரபரணி நதிக் கரை களில் எனது பக்தர்கள் பரந்திருப்பார்கள். அந்நாட்டு மன்னனாகிய பாண்டிய மன்னன் ஆதலின் காத்தல், தண்டித்தல் முதலியன நானே பிரத்தியட்சமாக செய்ய இயலாது. மன்னன் மூலமே செய்வித்தல் வேண்டுமாதலினாலும், எனது பக்தர்களைக் காப்பாற்றும் விருப்பினாலும், எனது பரதத்துவ நிர்ணயம்வாதத் தாலன்றி நிலை நாட்ட முடியாதாகையாலும், மன்னனை என் பக்தனாக்க அவன் சபையிற்சென்று வாதாடி வெற்றி பெறச் செய்யும் வகையில் அவ்வந்தணனுக்கு (யாமுனாசாரியருக்கு) உணர்வைத் தோற்றுவித்தேன்.

பல்வேறு நாடுகளிலிருந்தும் வந்த ஏழை எளியோர், அனாதை, முதியவர்கட்கு தானியம், உடை, மான்தோல் முதலியன தந்தும், பிரம்மச்சாரிகட்குத் திருமணம் செய்வித்தும், உபநயனங்கள் நடத்தியும் முடம், குருடு, செவிடுகட்கு எருது முதலிய வாகனங்கள் தந்தும், மேலும், குளம் (தோண்டும் வேலை) முடியாமல் மிஞ்சியுள்ளது என்றும், ஏழ்மை மிக்க (மானியங்களற்ற) கோயில்கட்டு பூசை நடத்த வேண்டியும், பாலை வழிகளில் தண்ணீர்ப்பந்தல் வைக்க வேண்டியும், சிராத்தம் செய்ய வேண்டும் என்றும்,

தீர்த்த யாத்திரைபோக வேண்டுமென்றும், நோன்பு (விரதம்) முதலியவற்றுக்காகவும், நோய் தீர்க்கவும் என்று சொல்லி பட்டத்தரசியுடன் சென்று தெரிந்தும், தெரியாதும் கொடை தந்த பொருட்களை முதிய பணியாளர்கள் கொண்டு வந்து தர இடைவிட்டுக் கட்டிய தோரணம் போலுள்ள கரங்களால் வாங்கிய ஏகதண்டி (சுமார்த்தர்கள்) திரிதண்டி (வைணவர்கள்) பிரம்மசாரிகளின் கையிலேந்திய கோல்களில் காவி வண்ணக் கொடிகளும், பச்சைக் கொடிகளும் உடைகளும், நிறைந்து, யாசிக்கும் வித்தையன்றி வேறு வித்தையறியாத இரவலர்கள் கூட்டமும் நிறைந்து கிடக்கும், மேற்கு வாசலில் அந்த யாமுனரும் சென்று என் கதைகளை முன்பே கேட்ட பாண்டிய மன்னன் பட்டத்தரசியிடம் வாயிலர் மூலம் சொல்லி யனுப்பி "வெளி நாட்டவன், விஷ்ணுவே பரதத்துவம் என வாதில் நிரூபித்து வெல்வேன். அரசன் விஷ்ணு பக்தர்களை மதியான். ஆதலின் அவனிடம் நேரில் யானோ, மற்றவர்களோ சென்று கூற முடியாது. நீ கணவன்பால் அன்பும் விஷ்ணு பக்தியும் உடையவள் ஆதலின் உன்னிடம் விண்ணப்பம் செய்து கொள் கிறேன். நீ சொல்வதை அரசன் கேட்பான். நீ சொல்லி என்னை அழைப்பித்து வாதம் செய்ய ஏற்பாடு செய்வாயாயின் வாதம் செய்து வென்று உன் கணவனை விஷ்ணு பக்தனாக்கி பேறு பெற்றவனாக்குவேன்." என்று கூறி அனுப்பினான். IV—53

---

* கிருதமாலா—மதுரையில் தெற்கில் உள்ள சிற்றாறு. புனித நதியாக மதிக்கப்பட்டது. மகாபாரதத்திலும் இந்நதி குறிப்பிடப் பட்டுள்ளது. தற்போது இந்த ஆறு தூய்மையற்ற சிறுகால்வா யாக மதுரை தெற்கு மேமபாலததருகே காணப்படுகிறது.

தே. க்[2]ரீஷ்ம ச[2]மய நிருத்சா[2]ஹ கேகிரமணி
நவக[3]ன த்[3]வனி கலரு சந்த[2]முன அலரி,
ஏகதம நர்மகோ[2]ஷ்டி[1] ப்ராணே ஸு[2]தோட[2]
அதனிவித[3] மெறிகி[2]ம்ப, இட்டட்டு வடு[2]சு IV—54

க. பூ[3]வல்லபு[3] 'டெ[2]ட்டெட்டு!
தாவாத[2]மு சேசி[2] ஸிவமதம்பு[2] ஜயிம்பன்
காவச்செனொ? சூதமுகா[2],
ராவிம்பு மடன்ன நாடி ராத்ரி சனங்க[3]ன் IV—55

வ. ப்ரபா[3]தம்பு[2]னன் பரிமித ஜனம்ப[3]கு[2] ஆச்[3]தா[1]னம்பு[2]னன்
கொலுவுன்ன ப[3]ர்த ம்ரோல தானுண்டி அய்யிந்து[2]வத[2]ன
அதனி அனுமதின் ப்ரதிஹாரிசேத, பிலுவ பஞ்சின, அப்பூ[3]
நிலிம்ப குமாருண்டு[2] IV—56

யாமுனாசார்யுடு[2] பாண்ட்[2]யு ச[2]ப[3]ன் சேருட

க. த்[2]வாரம்பு[2] சொச்சி, கீலித
கா[2]ருட[2]மஹி வஜ்ர வேதி[3]கன் சிவுருல கெம்
பாரு ஒக்க பிப்பலமு கனி
ஆராவின்வாத[2] சா[2]க்ஷிகை வலகொ னுஜுன் IV—57

கோடைக் காலத்தில் வாடியிருந்த வெண் மயில் புது முகில் முழக்கம் கேட்டதும் மகிழ்வுறுவதுபோல மகிழ்ச்சியுற்று, அந்த அரசி தனித்திருக்கும்போது கணவனிடம் யாமுனரைப் பற்றிய செய்தி அறிவிக்கவும் அரசன் வியப்புற்று IV—54

''எப்படி எப்படி? தான் வாதம் செய்து சைவமதத்தை வெல்வதற்கு வந்தானோ? பார்ப்போம். வரவழைக்கவும்" என்று கூற அன்றிரவு கழியவும் IV—55

காலையில் அவையோடு கூடிய அவையில் (குறிப்பிட்ட உயரதிகாரிகள், கவிஞர்கள், மட்டும் உள்ள அவை) கொலுவிருக்கும் கணவன் அருகில் தான் அமர்ந்து இருந்து அந்த மதிமுகத்தாள், கணவனின் அனுமதியுடன் காவல் மூலம் ஏவி அழைப்பிக்கவும் அவ் அந்தண குமாரன் IV—56

## ஆளவந்தார் பாண்டியன் அவைபுகல்

வாயில்புக்கு, கருடபச்சைகளுடன் கூடிய நிலத்தில் வைரம் பொதிந்த மேடையுடன் அமைந்த செந்தளிர்களுடைய *அசுவத்த மரம் (அரசமரம்) கண்டு அதனை வாதத்திற்கு சாட்சியாக்கி வலம் வந்து வணங்கினான். IV—57

* மரங்களில் நான் அசுவத்தமரமாக இருக்கிறேன் என்று கண்ணன் கீதையில் கூறியுள்ளான். ஈண்டுதிருமாலாகவே அம்மரத்தை பாவித்து வணங்கினான் என்பது கருத்து. வாதத்திற்கு நாவல் மரத்தினை நடுதல் நமது மரபாகும்.

சீ3. பசி2டி2 க2ச்சமர சோ2பானமுல் மூடதுங்
கி2த விஸாலிதயு சித்ரிதயுனைன
ச2ப3 மஹாகுத1முபை ஸார்தூ2ல சர்மக1ண்
டாவ்ருதுல் ஐடிலுலுனைன ஐரட1
மாஹேஸ்வருலு சுட்டுரா, ஹாரச2ந்தி3ருத்2
ராக்ஷாயுதமு தால்சி அளிகபூ3தி
சு2ரடி கா2ட்2புல ரால, அருணாயதா க்ஷு2டை2
குறுக2த்தெ2 பி2ல்ல ப்ரோகோஷ்ட1முனிசி,
நந்தி2 முத்2ரித பாணியந்து2 செக்கூதி2யா
க2மமுலு வினுசு, ஹேமமு பொதி2வின

தே. அலதி ருத்2ராக்ஷ க2மி குட்டுலந்து2மெறய,
வெலித பாரம்பு2 மிஞ்ச து2வ்வலுவ கப்பி,
அட2பமுனு வாடி2வாலொக்க அதிவ தால்ப,
பா3ர்ய விஞ்ஜாமரிட2, ஒப்பு பாண்ட்2யு கனியெ IV—58

வ. கனி விநீதுண்டை3 சேரனரிகி2 யஜ்ஞோப வீதம்பு2 கானுகிச்சி கூர்சுன்ன ஆத2ரிம்பக ச2ம்ரம்பி3யை அவ்விஸ்வம்ப3ரா ப3ர்த இட்லனியெ IV—59

தே. 'ச2ங்க2தியெ யோயி, இசு2மந்த டி1ங்க2ணாவு,
தத்வநிர்ணய வாத2ம்பு2 தரமெ நீகு?
ஒடி2தேனியு பட்டி மொர்ரோ யனங்க2
லிங்க முனு கட்டகுடு2க2, மெறிங்கி2 நொடு3வு IV—60

தே. வாது லம டஞ்சு செப்பிஞ்சிவத்து, ரோட
மைன த2ய னீரெ யேமைனனனி விலஜ்ஜ
ஐ2டுதனமுன ச2ப3 கெக்கு சொரவ காண்ட்2ரு
பாறுவாரல சு2த்தி2 செப்பங்க2 னேல?' IV—61

வ. அனிபலிகி த2ரஹாச2ம்பு2தோ தே2விதெ2ச2சூசி இட்லனியெ
IV—62

பொன் வேய்ந்த மூன்றுபடிக்கட்டுகளையுடையதும் பரந்துயர்ந்து சித்திர வேலைப் பாடுகளுடன் கூடியதும் ஆன மேடையில், இரத்தினகம்பள மெத்தையில், பாண்டிய மன்னன் அமர்ந்திருந்தான். அவனைச் சுற்றிலும் புலித்தோல் மேலாடையாக உடைய முதிய சைவ சன்னியாசிகள் இருந்தனர். முத்துச்சரத்தில் கோர்த்த ருத்திராட்சை மாலை அணிந்து, நெற்றியில் பூசிய விபூதி விசிறியினால் வீசிய காற்றில் உதிர சிவந்த கண்களுடன் சிறு பீடத்தில் வட்டத் தலையணையில் முழங்கையை ஊன்றி நந்தி பொறித்த மோதிரக் கையை கன்னத்தில் வைத்தவாறு, சைவாகமங்களைக் கேட்டவாறு, பொன்பொதிந்த சிறிய ருத்திராட்சங்கள் காதில் பளபளத்து ஒளிர, வெண்தலைப்பாகையின் மேலாக பெண்துகில் போர்த்து, தாம்பூலப்படிகம் ஒருத்தியும் கத்தி ஒருத்தியும் ஏந்தி நிற்க, அரசி வெண்சாமரை வீச ஓலக்கமிருந்த மன்னனை யாமுனன் கண்டான். IV—58

கண்டு, அடக்கத்துடன் அருகணைந்து பூணூல் காணிக்கையாகத் தந்து அமரவும், அரசன் ஆதரவு காட்டாமல் பரபரப்புடன் இவ்விதம் கூறினான். IV—59

"என்னப்பா? சிறிய குட்டிப் பயல் நீ. உனக்குத் தகுமா? தத்துவவாத நிர்ணயங்கள் செய்ய இயலுமா? தோற்றால் ஐயோ அப்பா என்று கூவினும் பிடித்து லிங்கத்தைக் கட்டாமல் விடமாட்டோம் தெரிந்து சொல்!" IV—60

வாதாடுவோம் என்று சொல்லிவிட்டு வருவார்கள். தோற்றபின் வெட்கமில்லாமல் ஏதாயினும் தயவுடன் தரமாட்டீர்களா? என்பார்கள். இவ்விதமான வஞ்சகமுடன் சபையிலேறும், துணிவுடைய பிராமணர்களைப் பற்றிச் சொல்வானேன்? IV—61

ஒன்று கூறி இரகசியமாக தேவியைப் பார்த்து இவ்விதம் கூறினான். IV—62

க. 'அச்2மன்மதச்2து1 டோ2டி2ன
பச்2மமு ருத்2ரா க்ஷமுலுணு பா2சி2 இதனிசே
விச்2மயமுக2 சா2ப்தமு முர
கு3ச்2மர சக்ராங்கிதுண்ட2கா க2லவாட2ன் IV—63

தே. உவித2, ஈநீது2 வித்2வாம் சுடோ2 டெ2னேனி
நீகுனிதனிகி நேனன்ன பூனிகய' யன்ன,
'ஒப்பிதிமி தே2வரானதி தப்பகுன்ன
சாலு மறிபஞ்ச பூ3தமுல் சா2க்ஷிகாக2 IV—64

வ. அனி பலுகு அய்யிருவுர ப்ரதிஜ்ஞ லாகர்ணிஞ்சி IV—65

தே. அதடு2 ம்ருக2க்ருத்தி பௌபௌ யனக2, பசு2பு
கோ2சி கட்டின மோது2கு2 கோலனெக2ய,
ப்ராஞ்ஜலி விநீதுடை2 வின்னபம் ப2டஞ்சு
அர்த2முக்தாச2னத இட்டுலனியெ த்3ருதினி IV—66

க. 'தே2வா! இட்லனி யானதி
ஈவலதெ2 கடு2பு கூடி கிடரா னாட2ம்
பே2வாரி ப்ரோவ? பி3க்ஷா
ஜீவிக வர்ணிகினி விதி3 ச்ருஜிஞ்செனெ காதே2? IV—67

"என் (சைவ) மதத்தவன் தோற்றால், விபூதி, ருத்திராட்சங் களைத் துறந்து இவனால், வியப்புறும் வகையில் என்னவர் களுடன் விஷ்ணுவின் சக்கிர முத்திரையை ஏற்றுக் கொண்டவனா கிறேன். IV—63

"பெண்ணே! உனது இந்த பண்டிதன் தோற்றால், உனக்கும் இவனுக்குச் சொன்ன மாதிரி தான்" (கழுத்தில் லிங்கம் கட்டி விடுவேன்). "பஞ்சபூதங்கள் சாட்சியாக தேவரீர் ஆணை தவறாமல் இருந்தால் போதும்." IV—64

என்று கூறும் அவ்விருவரின் சபதங்களைக்கேட்டு IV—65

அவன் (யாமுனர்) மான்தோல் படபட என ஒலிப்ப, மஞ்சள் துணி கட்டிய புரசங்கோல் மேலெழ, கை கூப்பி அடக்கமுடன், விண்ணப்பம் என்று பாதி இருக்கையிலிருந்து எழுந்து தைரிய முடன் இவ்விதம் கூறினான். IV—66

"தேவா? இவ்விதம் கூறலாகாது. நான் வயிற்றுப் பாட்டுக் காக இங்குவரவில்லை. என்தோற்றம் (பிரம்மச்சாரி)கண்டாலே, பிரம்மா பிச்சை ஏற்றுண்ணுமாறு விதித்துள்ளான் ஆதலின்(வேறு தேவைகள்) இல்லை என்பதுணரலாம். IV—67

தே. எவ்வடே2 ச2ர்வ பூ3தச்2து1 டி2த்தெறங்கு2
னகுனு ப்ரேரெசெ, அதனியானதியெ தெச்செ
எறிகி2னவி நால்கு2 நொடு2வ ஏமயின லெச்ச2
அதட2 பொ2ங்கின ஏமி சேயங்க2 வச்சு? IV—68

தே. பந்தமைனனு கானிம்மு பார்தி2 வேந்த்2ர,
யுக்துலனு நிக்2ரஹ ச்2தா1ன மொதிவெனேனி,
அம்மதெச்சின வித்வாம்சு2 ட2னக2 வலவ
தெ2ட்லு காவிம்ப வலயு னட்லட்ல சேயு IV—69

வ. அனி யுலுகு விடி2சி பலிகி, மகு2ட2ன் கூர்சுண்டி,2
அதனி அனுமதி வாத2ம்பு2னகுன் தொட2ங்கி2 IV—70

## அன்யமத க1ண்ட2னமு

சீ. அந்து2லோ ஒகமேடி கபி3முகு1ண்டை2 யாத
ட2னின வன்னியுனு முன்னனுவதி2ஞ்சி;
தொட2கி2 யன்னிடி கன்னி தூ2ஷணம்பு3லு வேக2
பட2க தத்ச2ப3 ஒட2ப2ட3க2 பல்கி,
ப்ரக்க மாடல னென்ன கொக்கொக மாடனெ
நிக்2ரஹ ச்2தா1ன மனுக்2ரஹிஞ்சி
க்ரந்து2கா2 ரேகி2ன கலக2 கந்த2ற தீர்சி
நிலிபி; அம்மொதலி வானிகினெ மகி3டி2

தே. மறி ஸ்ருதி ச்2ம்ருதி சூ2த்ர ச2மா ஜமுனகு
ஜககண்ட1யம்பு2 கல்பிஞ்சி, ஆத்ம மதமு
ஜக2மெறுங்க2க2 ராத்தா3ந்தமுக2 னொனர்சி
விஜிதுகாவிஞ்சி த2யவானி விடி2சிபெட்டி IV—71

எவர் எல்லா உயிர்களிலும் இருப்பாரோ அவரே இவ்விதம் (வாதாடத்)தூண்டினார். அவர் கட்டளைப்படியே வந்துள்ளேன். தெரிந்தது நாலு சொல்ல எல்லாம் நல்லதாகவே முடியும். அவரே பொய் கூறின் நான் என்ன செய்ய முடியும். IV—68

அரசே! நானே போட்டியிட வந்தேன். என்று நினைத்தாலும் அப்படியே ஆகட்டும். அம்மா (அரசி) அழைத்து வந்து பண்டிதம் என்று (தாட்சண்ணியம்) பார்க்க வேண்டாம். வாதத்தில் தோற்றால் தாங்கள் எப்படிச் செய்ய வேண்டுமானாலும் அப்படியே செய்து கொள்ளுங்கள். IV—69

என்று தைரியமாகக் கூறி, மீண்டும் அமர்ந்து, அவன் அமைதியுடன் வாதத்தைத் தொடங்கினான். IV—70

## பிறன்மதம் மறுத்தல்

* அவர்களுடன் ஒரு அறிஞனைப் பார்த்து, அவன் கூறிய வாதங்களை மீண்டும் தானும் கூறி அவன் கருத்தை நிச்சயப் படுத்திக்கொண்டு, பின் அவன் வாதங்களைக் கண்டிக்கத் தொடங்கி, அவன் சொன்ன கருத்துக்களின் குற்றங்களை மெல்ல எடுத்துக்காட்டி, பின்னர் அவ் அவையோர் உடன்படப் பேசி, இடையே பேசும் வாதங்கட்கு ஒவ்வொன்றாக பதில்கூறி எல்லோரும் இடைமறித்துப் பேசும்பேதும் கலவரமடையாமல் எல்லோரையும் சமாதானம் அடையச் செய்து, முதலில் பேசியவனிடமே திரும்பி மற்றும் சுருதி, சுமிருதி, சூத்திரம் முதலியவற்றால் ஒரே கருத்தை உருவாக்கி, தனது சிந்தாந்தத்தை அனைவரும் ஏற்கச் செய்து எதிரியை முறியடித்து அருளோடு அவனை விடுவித்து* IV—71

* இப்பாடல் மூன்றாம் அத்தியாயம் 6வது பாடலாகும்.

க. 'நீவேமண்டிவி ரம்மஞ்'
சாவலி வானிகினி மகி2டி2 யட்லனெ வானின்
காவிஞ்சி, ஒகடொ2கடு3 ரா
னாவிப்ருடு2 வாத2ச2ரணி அந்த2ற கெ2லிசென் IV—72

வ. இட்லு ஜயிஞ்சி விஷ்ணு தே2வுண்டெ2 பரதத்பம் ப2னியு விஸிஷ்டா த்2வைதம்பு2 மதம்பு2 அகு2டயு ப்ரதிஷ்டிஞ்சின IV—73

க. ஆ யெட2னு ஒக்கபலு கெது2
ரை யுண்டெ2டு2 பிப்பலமுன னாயெனுவின, 'ஒ
ஹோ இதி2 நிக்கமு, ந்ருப நா
ராயணுடெ2 பரம்பு2 கொல்வுமதனி' னடஞ்சுள் IV—74

வ. அப்பலுகுலு வினி கி1ன்னம்பை2 அக்கூடி2ன பாஷண்ட2 ஷண்ட2ம்பு தலவஞ்சுகொனி போயின, ஆஉர்வீத3வுண்டு2 அதனி மாஹாத்ம்யம்பு2னகு ச2ந்தோஷிஞ்சி சா2ஷ்டாங்க2 மெறகி2, ஹர்ஷாத்2பு3த ரசோ2த்தரங்கி2 தாந்தரங்கு2ண்டை2, பு2ஜக2ஸயன சரண குஸேஸய ப3க்தி பொட2மி க்ருதா1ர்ததன் பொந்தி2, பாண்ட்2ய மண்டலமுனகு பா3கினேயுண்ட2 பட்டார் ஹு2ண்டு2 காவுன, பாத்ரம்ப2னி ப்2ரம்ஹ சாரியகு2ன தனிகி தன கட2கொ2ட்டு செலியலின் பரிணயம்பு3 சேசி2 அரணம்பு2க2 அம்மஹாத்முனகு தா3ராபூர்வகம்பு கா2 அர்த1 ராஜ்யம்பி2ச்சி யுவராஜு2ன் சேஸி2, அதீ2த சா2ங்க2 வேது2ண்ட2கு2 னதனிகி அத1ர்வ ஸிரச்ச2ப்3யச்2தம் ப2னி எறிங்கி2, அந்து3 தி வ்யாச்2த்ர மந்த்ரம்பு2ல கலிமியுன் தெலிசி2, அம்மஹாத்முன கெச்சரிஞ்சி து2ச்சா2த3ம்ப2கு2 விரோதி3 பூத3ம்பு2 சா2தி3ம்பு மனித2ண்ட2யாத்ரன் பனிசின, ச2ய்யாமு னுண்டு2னு ச2ன்னத்து3ண்ட2கு2தறி தத்புரோஹித ப்ராதா3ன மந்த்ரி வர்க2ம்பு2 ச2ன்னிஹிதம்பு2லகு2 இவ்வார்ஷிக தி2னம்பு2லு க2ட2பி ஸரத்ச2மயம்பு2ன வித்2விஷத் ச2ம்ஹாரம் பு2னகு விஜயம்பு2 சேயு மனுடயு, அத்தெறங்கு2 ராஜு2ன கெறிங்கி2ஞ்சி தத்ச2ம்மதம்பு2ன நில்செனந்த IV—75

## வர்ஷா கால வர்ணனமு

உ. கர்கஸு2டண்ட கோர்வ குத2கம்பு2லு வா:பதி கூர்சினட்லு அய்யர்குடு2 தானு கூர்சி மறியாச2லிலாதி3ப சிஹ்ன வாஹதம் போ்கல க2ங்க2னாதடெ2லமின் மகரச்2தி1தி கன்னனீர்ஷ்ய,தா கர்கடகச்து1 ட2ய்யெனன, கர்கடகச்2தி1தி காஞ்செ
அத்தறின் IV—76

* *நீ என்ன சொன்னாய்"* வருக! என்று அடுத்தவனை அணுகி அவனையும் தோற்றோடச் செய்து அவ்வந்தணன் (யாமுனர்) அனைவரையும் வென்றான். IV—72

இவ்விதம் வென்று திருமாலே பரதத்துவம் என்று விசிட்டாத்துவிதமே மதம் என்று நிறுவிட. IV—73

அச்சமயம் அவ்விதம் எதிரிலிருந்த அரச மரத்திலிருந்து "ஓ! மன்ன! இதுவே மெய்ப்பொருள்! நாராயணனே பரம் பொருள்! அவனைப் போற்றுவாயாக!, என்று ஒரு சொல் கேட்கப்பட்டது. IV—74

அச்சொற்களைக் கேட்டு, வருத்தமுடன் அங்கு கூடியபுற மதத்தார் (பாசண்டர்) தலைகுனிந்தவாறு வெளியேறினர். அவ்வரசன் அவனது (யாமுனர்) பெருமைகளையுணர்ந்து மகிழ்ந்து, சாட்டாங்கமாக வணங்கி மகிழ்ச்சி, வியப்பு ஆகிய உணர்ச்சிகள் பொங்கும் இதயத்துடன். திருமால் அடித்தாமரைகட்கு பக்தியுடையவனாகி, பேறு பெற்றவனாகி, பாண்டிய மண்டலத்திற்கு மருமகனே பட்டத்துக் குரியவனாதலினால்; தகுந்தவன் என பிரம்மச்சாரியான அவனுக்கு (யாமுனருக்கு) தன் சிறிய தங்கையைக் கொடுத்துத் திருமணம் செய்வித்து, தட்சணையாக அம்மகாத்மாவுக்கு தாரை வார்த்து பாதி நாடு தந்து, இளவரசாக்கி, வேதவேதாங்கங்களைக் கற்ற அவன் அதர்வணாவதமும், கற்றவன் என்பதுணர்ந்து, அந்த வேதத்தில் தெய்வீகமான மந்திரதந்திரங்கள் உடைமையும் அறிந்து அம்மகாத்மாவுக்கு முன்னறிவித்து அரிய பகைவரை அடக்குமாறு போருக்குச் செல்லுமாறு கட்டளையிட அந்த யாமுனரும் இசைந்துபுறப்பட முனைய, அவனது புரோகிதன், முதன்மந்திரி ஆகியோர் மழைக்காலம் வருவதால் அதன் பிறகு சரத்காலத்தில் பகைவரை யடக்கச் செல்க எனக் கூறவும் அதை அரசனுக்கு அறிவித்து அவன் இசைவு பெற்று அங்கேயே இருந்தான். அவ்வளவில் IV—75

## மழைக்காலம்

சூரியன், தான் கடுமையானவன் எனக் கூறுவதனைச் சகிக்காமல் தானும் வருணனைப்போல நீரினைச் சேமிக்கும் எண்ணம் உடையவனாக ,நீர் நிலைகளை (ஆவியாகச்)சேமித்தும் அமையாமல், வருணன் முதலை (மகரம்) யை வாகனமாக்கியது போல தானும் நண்டினை (கர்க்கடகம்) வாகனமாக்கிறானோ என கர்க்கடக ராசியில் புகுந்தான்.

(சூரியன், வருணனைப்போல குளிர்ந்தவன் எனப் பெயர் வாங்க அவனுடன் போட்டியிட்டான் என்பது கருத்து) IV—76

---

* இப்பாடல் மூன்றாம் அத்தியாயம் 7 வது பாடலாகும்

தே. வனததி வராஹ வாஹாரி வாயுபு3க்வி
ரோதி3 வாரண வர்ஷாபு3லாதி3 தொறகெ2
எண்ட்2ரி ரவிசேர; மூட2வ யெட2கு சேரு
தரணி த3ரணின் ப்ரமோத2 ச2ந்தா3யி காடெ2 IV—77

தே. வனதி3க2மன ஜக2ர்பா3ர்க ஜனித க்ருணுலு
மறி ப்ரசூ2திகி அதனி தா3மம்பு2 சேரெ
க2னத சொச்சின இண்ட்2லணு தனுஜலுண்டி
கான்புனகு புட்டினில் சேருக்ரமமு கனமெ? IV—78

தே. உர்வி காத2ம்பி2னுல அல யும்மநீரு
தொருக2 கேகுலு கேகலு தோன சேசெ2
த்2விஜத னாரண்யக த்3வனி வினக2 சேசி2,
க2ர்ப3மு சுக1ச்யுதமு சேய கட2கெ2 னனக2 IV—79

ம. அலபர்ஜன்யுடு2 பா3னுட2ன் கொலிமிலோ அப்3ரம்பு
பென்கொப்பெரன்
சலமாக2ன் பிடு2கு2க்கு ஜாத்யபு டயச்2காந்தம்பு னத்துன்கலோ
பலசூபன், மஹிமீதி3 லோஹரஜமுல் பைபர்வெனா லேசெ வாத்
யல ப்ராக்தா2வ மஷூல்மொகி2ல் மொத2ல க்2ரத்த2ந்தை
திவின்லேசினன் IV—80

சூரியன் கர்க்கடகம் புகுந்ததுமே, காடு, (வனம்) பன்றி (வராகம்) எருமை, மயில், யானை, தவளை மன மகிழ்ச்சி யடைந்தன. ஜன்மராசியிலிருந்து மூன்றாவது ராசியில் சூரியன் புகுந்தால் உலகுக்கு மகிழ்ச்சி விளையுமன்றோ?''

(கிருஷ்ணதேவராயர் தமது சோதிட நூற்புலமை தோன்ற இப்பாடல் அமைத்துள்ளார். வனம், வராகம் முதலிய உயிர்கள் மகிழும் என்றதால் வ என்ற எழுத்துக்குரிய நட்சத்திரம்ரோகினி ஆகும் என்றும் ரோகிணி விருஷபராசி நட்சத்திரம் ஆதலின் விருஷபத்திற்கு மூன்றாவது ராசி கர்க்கடகம் என்றும் அதில் சூரியன் புகுந்ததால் மனமகிழ்ச்சி ஏற்படும் என்று கற்பனை செய்துள்ளார்.) *IV*—77

சூரியனிற் பிறந்த கதிர்களாகிய (பெண்) மக்கள் கடலினைக் கலந்து கருவுற்று மீண்டும் (மழை பொழிதலாகிய) பிரசவத்திற் காக தனது இல்லம் (பிறந்த வீடாகிய சூரிய மண்டலம்) அடைந் தனர். பெண்மக்கள் பெருமையுடன் புக்ககத்தில் இருந்து பின் பிரசவத்திற்காக தாய் வீட்டுக்கு வருவது வழக்கம் (மரபு) அல்லவா? *IV*—78

பூமியில் முகில்களின் பனிக்குடம் உடைந்த நீர் (முதல்மழை) பொழியக் கண்ட மயில்கள் தாமும் துவிஜர் (இருபிறப்பாளர்) ஆதலின் ஆரணியகம் (காட்டில் எழும் சத்தம்) படித்து கருப்பம் சுகப்பிரசவமாதற்கு முயற்சிப்பதுபோல தோன்றியது.

(பல், பறவை, அந்தணர் இரு பிறப்பாளர் என்பது கவி மரபு, பல் விழுந்து மீண்டும் முளைத்திடும் பறவை முட்டையாகி ஒரு பிறப்பும் பின் முட்டையிலிருந்து பிறப்பது ஆக இரு பிறப்பு எனப்பட்டன. அந்தணர் பிறப்பால் ஒரு பிறப்பு உபநயனத்தால் இரு பிறப்பு எனப்பட்டனர். ஈண்டு, மேகம் பெண்ணாகவும், முதல் மழை—பிரசவ காலத்தில் பனிக்குடம் உடைதலாகவும், சுகப்பிரசவத்திற்காக வேதத்தின் ஆரணியக பாகம் அந்தணர் ஓதுவது மயில் அகவுதலாகவும் கற்பனை செய்யப்பட்டுள்ளன.

ஆரணியகமந்திரம் காட்டில்தான் படிப்பது மரபு. வீட்டில் படித்தால் கருச்சிதைவு ஏற்படுமாம். பிரசவ சமயத்தில் சுகப் பிரசவத்திற்காக அந்தணர்கள் ஓதுவது மரபு. இதனை ஒட்டி இக்கற்பனை செய்துள்ளார் கவிஞர்.) *IV*—79

இந்திரன், சூரியன் எனும் உலையில், வானம் என்னும் பெரிய கொப்பரையை, நீர்நிறைக்க வேண்டி (அதிலுள்ள துரு, துளைகள் நீங்க) இடியேற்றுடன் பிறந்த அயக்காந்தம் எனும் துண்டினை வைக்க (காந்தம் இரும்பை ஈர்த்தலான்) உலகிலுள்ள இரும்புத்தூளை ஈர்த்தனவோ, எனுமாறு, கோடையில் காட்டுத் தீயால் எழுந்தமை (புகைக்கரி) சூறவளியால் மேலெழுந்து போய், முதலில் பருந்தளவு இருந்த மேகத்தை சார்ந்து பெரிய முகிலாக மாறியது. *IV*—80

தே. இலகுடி²கி² சுட்டி சுட்டி து³ம்மெத்தி எக²சி³,
போயி, தமுமுஞ்சு சு²டி² கா²லி புஷ்கரமுல
கட²லி நீரப்³ர கலப³முல் க்ராசெ², த³ரணி
அப்³ரகரி ஸிக்ஷ தி¹வி காஞ்சினட்டி கரணி IV—81

தே. க்ருத பயஃபான நவமேக³ ப்ருது¹கமுககு
ராலெ னொய்யன வட²க²ண்ட்²ல பாலபண்ட்²லு
மறி ப²லாகா த்³விஜாளி ச³ம்ப்ராப்தி கலிகெ²
பெருக³ பெருக³ங்க³ த்³வனியு க³ம்பீ³ரமய்யெ IV—82

ம. தனதோயம்பி³ன ரஸ்முலெத்த, இலவாத்யா ரேணுமூர்தின் மஹேந்
த்³ருனகுன் செப்பக², ம்ருச்சு பட்டதி² வமந்து²ன்வில் க³டிம்பன், ப³யம்
பு³ன தத்ரஸ்மி ச³ஹச்ரமுன் வெச² டி²கெ³ன் போடா²கி²வே க்ரும்மரிம்
பனனன் தா³ரலு தோசெ மிஞ்சு வெலிகி³ம்பன் மப்பு²லன் வெல்லிபை IV—83

ச. தொலிதொலி வச்சுதா³ரல எது³ர்கொனி², தத்ச¹ட தீக²சுட்டுகா²
அலமுசு, தா³த்ரி லேசி, பொலுபாரெ மலீமச² பா²ஷ்பவல்லுலத்
தொலி தொலிதா³ரகே வெறசிதோன க³னொக³மு வானகாள்ளகுன்
ப²லரிபுடா²ல யாப்³ரமுல ப³ங்கி²னெ ச²ங்கெலனூன் செனோயனன் IV—84

ச. எட²பகமுன்னு மிண்டிபயி னேதகு²லம்பு²னு லேகமுகதன்
வெட²லெடு²சோ கடோ¹ரக³ன ப்²ருந்த²மு லட்ட²முவட்ட²,
வானிமே
யிடி²ய ஜவோஷ்ம பாறெடு² ரவீந்து²ல த²ட்டபு
பண்டி²கண்ட்²லசப்
புடு²க²தி, ம்ரோசெ³ ரேவக²லு பூ³ரிப³யங்கர கர்ஜலத்தறின் IV—85

வானம் அப்போது (சரத்காலத்தில்) தான் மாபெரும் நீலக்கல் போலுதலின் அதன் பெருமைக் கேற்ப (தூய நீலம் புல்லினைக் கவர்வதியல்பாதலின்) தரும்படி நிறைந்து கவர்ந்தி மூத்ததுவோ எனுமாறு விளைந்த நெல் வயல்களில் வைக்கோற் போர்கள்மலைபோல விண்ணெட்டி உராய்ந்திடல் போல் திகழ்ந்தன.

(நீலக்கல் புல்லைக்கவரும் என்பது முன் 413வது பாடலிலும் கூறப்பட்டுள்ளது காண்க.) IV—164

சரத் காலமாகிய சனகன் வெண்டாமரையாகிய குடை ஏந்தி வேள்வி செய்யப்புகுங் காலை,பரமஹம்சர் (முனிவர்கள்-அன்னப் பறவைகள்) வந்து நிறைய கார்வண்ண இராமன் வான வில்லாகிய சிவத னுசுவை முறிக்க ஏர்ச்சாலாகிய சீதை கிடைக் காமற் மோவாளா?

(சனகனை சரத்காலத்துக்கு சிலேடை மூலம்ஒப்பிட்ட இக் கவிதை சிறிது சிக்கலானது. கார் காலம் முடிந்து சரத் காலத்தில் உழவு வேலைகள் நடைபெறுவதையும் அதனால் உழவர்கள்பயன் பெறுவதையும் கற்பனை செய்துள்ளார்) IV—165

முகில் கலைந்து வெயிற் சூடு மிகுதலின், வானில் கிளிகளின் பச்சை வண்ணம் பரவுதலும், பச்சை வண்ணக் குதிரைகளுடன் சூரியனின் தேர் அருகில் வந்ததோ என்று மக்கள் பயந்தனர்.

(சூரியனின் குதிரைகள் பச்சை வண்ணம் என்பது கவிமரபு)

IV—166

மண்ணிலிருந்து பொய்கையில் மலர்ந்த வெள்ளாம்பற்பூக்கள் (விளக்குகளாகி) விரட்டியடிக்க, விண்ணிலிருந்து சுடரும் கோள் களும் (விண்மீன்களும்) ஒளிரும் ஒளி ஓட்டிவிடவும், தேய்பிறைக் கால வலிமையின்றி, இருள், தனது கருநிறத்தை (நிற்கவேறிட மின்றி) வானக் கருமை நிறத்தோடொன்றி விட்டதோ எனுமாறு ஆகாயம் கருமைவண்ணம் மிக்கது. IV—167

க. க்ரேபு தலசிபசி[2] மேயுசு
சேபின பால்கலய எண்ட[2]சே பாந்த[1]ஜனுல்
தூ[2]பிம்பமி கஜூ ட[2]ம்பின
யாபாகா[2] யனக[2] நது[2]ல அஞ்சலு மெறசெ[2]ன் IV—168

தே. வெத[2] மொத[2]வு கூட[2] போலேனி வெச்சனிக்ரொவ்வு
கல்ப மெவட[2]சாப னெட[2]லெனோ யனக[2], எட்ட
கேலகுனு க்ருங்கி[2] தெச்சு றங்கெலு நிகு[2]ட[2]க[2]
மந்த[2]க[2]தி கு[2]ன்கெ வ்ருஷப[3]முல் மந்த[2]பிறுத[2] IV—169

தே. ஸரதி[3]ஜல மெல்ல ரித்தகா[3] குரிய, உப்பு
டொ[2]கக பேரின அத்தெல்பெ சிக்கிமீத[2]
கான னகு[2]சுன்ன த[2]ச்ச[1]தசே னனங்க[2]
பறசு ஸரத[2]ப்[3]ரமுல மேனி பாண்டு வமரெ IV—170

க. ஸரநிதி[3] முனு க்ரோலின நிர்
ப[3]ரஜலமுலு குரிசி[2], மேக[3]பா[3]வம் ப[2]றி, அக்
கரமுலு கரமுலெகா, ஜிகி
னொரிமெ, னனன் ரவியு மெறசெ[2], உடி[2]கெ[2]னுமொயிலுன்
IV—171

க. ப்ராஸிஞ்சின நீரந்தயு
போ, ஸரத[2]ப்[3]ரமுலு மகு[2]ட[2] பூரிம்பக[2], ஆ
வேஸிஞ்செ கொலங்குலனன
காஸப்ரதி பி[2]ம்ப[2] படலி கடு[2] னொப்பாரென் IV—172

கன்றுகளை நினைந்து (ஆற்றோரங்களில்) புல்மேய்ந்து கொண்டிருந்த பசுக்கள் சுரந்த பால் ஆற்று நீரோடு கலக்கவும் (தாகம் கொண்டவர்கள் பாலைச்சாப்பிட்டால் உடல் நலத்துக்கு ஊறு நேரும் ஆதலில்) வெயில்களைத்த வழிப்போக்கர்கட்கு உதவும் பொருட்டு,பிரம்மதேவன்தன் வாகனங்களாகிய அன்னங் களை (பால் பிரித்துண்டு நீர்மட்டும் இருக்கு மாறு செய்ய வேண்டி) அனுப்பினானோ எனுமாறு அன்னங்கள் ஆறுகளில் நிறைந்திருந்தன. IV—168

பருவத்திலுள்ள (புணர்ச்சிக்கு ஏற்ற காலமுடைய) பசுக்க ளின் கூடப்போக முடியாத தாபத்தினால் கொழுப்பு கரைந்து, கழுத்தை வளைத்து முயன்று கனைப்பொலி எழுப்பிய முழக்கங் களோடு காளைகள் மந்தையின் பின்னர் மந்தகதியில் சென்றன.

(கொழுத்த காளைகள் உடல் சுமையால் பசுக்களோடு விரைந்து செல்ல முடியாமல் மெல்லச் செல்லும், பருவப்பசுக் களும் வேட்கை மீறினும் பிடிகூடாமல் விரைந்து முன்செல்லும், அதைத் தொடரகாளை முயன்று கனைத்தவாறு மெல்லாப்பின் தொடரும் என்பது கருத்து) IV—169

கடல் நீரையெல்லாம் வெறும் வயிறாகுமாறு கீழே சொரிந்து மீந்த உப்பு வயிற்றில் சேரவும் அந்த வெண்மை நிறமே வெளியே அதன் தூய்மையால் தோன்றுகிறது எனுமாறு ஓடும் சரத்கால மேகங்களின் உடம்பில் வெண்மை மிகுந்து தோன்றியது.

(கடல்நீர் உப்பானது மேகம் அதைக் குடித்து நன்னீர் பொழி கிறது, அந்த உப்பு படிந்து மொத்தமாக மேகத்தின் வயிற்றில் உள்ளதுதான் வெண்மை நிறமாகக் காட்சி தருகிறது என்பது கருத்து[ IV—170

கடலில் முன் குடித்த நீரெல்லாம் பொழிந்து, மேகம் எனும் உருவத்தை இழந்த சூரியனின் கதிர்கள், தன் சுய உருவத்தை அடைதலின் கதிர்கள் முன்னிலும் ஒளிமிக்கதாயின. முகில்களும் உருக்கலைந்தோடின. IV—171

சரத்கால மேகங்கள், மூன் குடித்த (கடல்) நீர் எல்லாம் சொரிந்து தீர்ந்ததனால், மீண்டும் நீர் நிறைத்தற்குப் பொய்கை களுக்குட்புகுந்தனவோ எனுமாறு ஆங்குள்ள நாணற்பூக்களின் நிழல்கள் (பிரதிபிம்பங்கள்) பொய்கையிற் தோன்றின. IV—172

தே. கோலன கரித2ம்பதுலு பத்2மகளிக லொகடி
கொகடி யீனெத்த, மகரந்த2 மொலுக, அமரெ
அலஸரத்பத்2ம நிலயகு எலமிதோட2
கூவக2 னபி3ஷேகமுன கெத்து கட2வலனக2 IV—173

தே. பங்கமடு2க2ண்டி தேறின பா2வுலெல்ல
பங்கமுலெ சேசெ2 க்ரம்மற பங்கஜமுலு
க2ளித மகரந்த2யுத ரஜ: கர்த2மமுன
காரண குணம்பு2 கலுக2தே2 கார்யமுனனு IV—174

க. ஒச2கி ரக2ச்2த்யார்க்3யமுலன்
கொச2ரி ஜனுல் வார்தி3 நீரு க்ரோலிதி வீனீர்
ச2சி2கை மாகிம்மனிகள்
கிச2ருடு2க2ன் காவ அப்பகி2ஞ்செடு2 கரணின் IV—175

க. பருஷாத பதப்தம்ப2கு2
த3ரணீ பாத்ரமுன படு2ட த2ளமய்யெ சுமீ
பரிபக்வம்பை2, அனகா2
ஸரதி2ந்து 2ஜ்யோத்ச்2ன ரேல சா2ந்த்ர2தகாசெ2ன் IV—176

தே. வ்ருஷ்டி தறினிட்ட2 ஜென த்ராவ க்ரிந்த2னுண்டி2
தேட நதி2நீட தனவெண்ட தேலுமீல
தளுகுதோ நாசுலத தோசெ வெலிகி, ஜமிடி2
வெண்டி2 மீலெக்கு வெண்ட்2ருக வில்லு வோலெ IV—177

குளத்தில் பிடியும் களிறும், சிறிது மலர்ந்த தாமரை மொட்டு களை, ஒன்றற்கொன்று (உண்ணத்) தருவதற்காக ஒரே சமயம் எடுத்து (துதிக்கை நீட்டிக்)கொடுக்க, அம்மலரிலிருந்து மகரந்தம் சொரிதலும், பொய்கைத் திருமகளுக்கு அன்போடு இரட்டை யானைகள் அபிடேகத்திற்கு எடுத்த பொற்கலசங்களோ எனும் படியாக இருந்தன. IV—173

சேறு அடியிற்படிந்து தெளிந்த பொய்கைகளில் எல்லாம் மீண்டும் சேறாகும்படி பங்கயங்கள் (சேற்றிற் பிறந்த தாமரை மலர்கள்) செய்தன. தாமரையின் பூந்தேனோடு குழைந்து பூந்தாதுசேறாகி அவ்விதம் அமைந்தது. காரணத்தின் பண்புகள் காரியத்திலும் உண்டாகுமல்லவா?

(காரணமாகிய மண், பொன் முதலியவற்றின் பண்புகள் காரியமாகிய மட்குடம், 'பொற்குடத்திலும் அமைதல்போல சேற்றில் இருந்து பிறந்த தாமரை மலர் பூந்தேள், பூந்தாது கலந்து சேற்றினையே உருவாக்கின என்பது கருத்து) IV—174

அகத்தியரை (விண்மீனை) நோக்கி "கடல் நீர் குடித் தாங்கள் இக்குளநீரை பயிர்கட்காக விட்டுவைக்கவும்" எனக் கேட்டு அவரது சினப்பார்வை தலிர்க்க வணங்கிப் பணிந்தனர், எனுமாறு மக்கள் பூசனைபுரிந்தனர். IV—175

கொடும் வெயிலிற் காய்ந்த பூமியாகிய பாத்திரத்திற் பட்டத னால், இறுகிப் பரிபக்குவமடைந்தது எனுமாறு சரத்கால வெண்ணிலவு இரவுகளில் செறிவுற்று ஒளிர்ந்தது.

(காய்ந்த தோசைக் கல்லில் பட்டதும் திரவமான மாவுப் பொருளும் இறுகி திடப்பொருளாவதுபோல, நிலாவும் இறுகியது என்பது கருத்து) IV—176

மழைக்காலத்தில் இட்ட (மீன்) கருவினைக் குடிக்க, கீழிருந்து மேலே வரும் பெரிய மீன்கள், பாசிக் கொடியோடு மிதந்து பளபளப்போடு மின்னுவது, (தாசரிகள் வாசிக்கும்) குதிரைவால் மயிரில் கட்டிய வில்லில் வெள்ளியினாலான மீன் உருவங்களை யுடைய உடுக்கையினை யாட்டுவது போல இருந்தது. IV—177

க. ஹம்ச2மு க்ரௌஞ்சமு தொலிரா,
மாம்ச2ல ருசி வச்செ தானுமலயமு ஸிக1; பால்
ஹம்ச2 விறுவ, நீர்விறிசெனு,
ஹம்ச2முன கக2ச்2தி பரமஹம்சம் ப2கு2டன் IV—178

தே. க்ரௌஞ்ச மொக கொன்னி க்2ருட்டு2லுகாஞ்செ மிண்ட
அவி யஹம்ச2 ச்சதா2ச்சா1த2னானு பூ3தி
ஹம்ச2தது லய்யெ, காத2ன்ன, அருண சூட2
கு2ப்த பு3ஜகா2ஸ னாண்ட2முல் கு2றுலு காவெ? IV—179

சீ3. கலயக2·வாரிதே2வதலு காஞ்சு ச2ரோவரத2ம்ப3த2ர்பணம்
பு2லபயி த2ட்டபுன்சிலுமு போவக2 தாமலகஞ்சுகீ2ய, கா2
ப2லெ நலுவங்கலன் கலய பாயக தேலுசு பத்2மரேணுவுல்
கெலகுல பாசி2போ செலங்கி2 க்ரேங்க்ருதுலிச்செ
மராள மாலிகல் IV—180

ஹம்ச (அன்னற்பறவை)த்தினை விட பரம ஹம்சரமான அகத்தியரோ மலய (பொதிகை) மலைச் சிகரத்தின் வழியே வருகிறார் ஹம்சம்பாலும் நீரும் வேறு யிரித்திட, பரம ஹம் சரான அகத்தியர் நீரும் சேறும் வேறுபடுத்திச் சிறப்புற்றார்.

(சரத்காலத்தில் அகத்திய நட்சத்திரம் தோன்றுதலும் சேறு நீங்கி நிர் தெளிவுறுதலும் இங்கு வருணிக்கிறார்) IV—178

கிரவுஞ்ச மலைத்துளையில் செல்லும் அன்னப்பறவைகள் வானத்தில் செல்லும் வழியில் இட்ட முட்டைகளை, பிற பறவைகள் அடை காத்தலின் அன்னப்பறவைகள் உருவாகி மிகுதியாயின. அதெப்படி முடியும் என்றால் கோழி அடைகாக்க மயில் முட்டைகளிலிருந்து மயிற் குஞ்சுகள் வருவது சான்றல்லவா?

(சரத்காலத்தில் அன்னங்கள் மிகுதியாக வரும் அதன் பெருக் கத்துக்குமான சரோவரம் மட்டுமின்றி, கிரவுஞ்சமலைப் பாதை களிலும் உற்பத்தியாகியிருக்கும் என்று கற்பனை செய்யப்படு கிறது) IV—179

நீரரமகளிர்கள், காணும் பொய்கை என்னும்(கண்) ஆடியில் படிந்த களிம்பினை நீக்க, அன்னப்பறவைகள் அங்குமிங்கும் மிதந்து தேய்ப்பது (விளக்குவது) போலிருந்தது. அதனால் மாசு பறப்பது போல தாமரைப் பூந்தாது சிதறியது (தேய்க்கும் பொதெழும் சத்தம் போல) அன்னங்களின் கீச்சுக்குரல் ஒலித்தன.

(முற்காலத்தில் முகம்பார்க்கும் கண்ணாடியாக வெங்கலத் தால் செய்து கொண்டனர். அதன் களிம்பு நீக்க சாம்பலால் துலக்குவர். இங்கு பொய்கை ஆடி, அன்னங்கள் துலக்குகின்றன என்பது கற்பனை) IV—180

சீ[2]. அர்கமண்ட[2]லி கப்[3]ர மட்ட[2] மைனந்தனெ
யெறமானி மோமு பி[2]ட்டெத்தி சூசி
கு[3]மகு[3]ம த்[3]வனி கா[2]லிகு[2]ஹ சொர புரியொகிஞ்
சுகயெத்தி கனி தலஞ்சுகொனி வஞ்சி
நிஷ்புஷ்ப கேதகி நேத்ராம்பு[3] வொத்தி பே[3]
கபு டெண்கி படி[2]யசோ கர்ணமொக்கி[2]
கேககு த்[2]ரீயவனத க்[2]ரீவமை ராக யொக்
கிந்தார்சி, வாத னேமேமொ கமிசி

தே. வெட[2]லு பீ[2]றெண்ட[2]குனு ஸரத்வ்ருக்ஷ முடி[2]கி[2],
வார்ஷிகமெ பெக்கி, த்ரோடி னிர்வங்க பக்ஷ
துலனு னிஷருசு, வெர்ரிசூபுல னுரம்பு[2]
கெலகுல கனுங்கொ[2]னுசு கான கேகுலுண்டெ[2] IV—181

க. வெலுதுரச[2] லண்டி யெண்டி[2]யு
வலி, விப்பமி, செட[2]க, ஸ[1]கிகலாபமவனிவர்
திலெ பர்ஜன்யுடு[2] நடனம்
முல மெச்சி மெலுங்கு[2] காசெ[2] முத்[2]ரிஞ்செனனன் IV—182

சூரிய மண்டலத்தை முகில் மலறத்ததுமே (மயில்) இரைதேடு வதை விடுத்து, முகம்மேல் நோக்கி (மழைமுகில் வந்ததோ என்ற ஆசையுடன்) மயங்கி,

குகையில் புகுந்த காற்றினால் 'குமகும' எனும் ஓசை வரவே, (உரும்ஒலி என மயங்கி) தோகையை சிறிதே விரிக்க முயன்று (முகிலின்மைஅறிந்து) மேலே பார்த்து புரிந்துகொண்டு, (தோகையை) மடக்கிக் கொண்டு, பூக்கள் இல்லாத தாழை யினைக் கண்டு வருந்திக் கண்ணீரை அதிலேயே துடைத்துக் கொண்டு, தவளைகள் பதுங்கும் குட்டைகளின் ஓரம் செவி கொடுத்துக் கேட்டு, அகவுதற்காக மும்முறை கழுத்தை வளைத்து முயன்று'ம் குரல் வராமையின், ஏதோ சிறிது அகவி, வாயில் எதையோ கடித்துக் கொண்டு, வெயிலின் கொடுமைக்கஞ்சி நிழல் தேடி சரத்காலத்தில் பூக்கும் மரங்களை நாடாமல் மழைக் காலத்தில் பூக்கும் மரநிழலை நாடிச் சென்று அலகினால் இருபக்க இறக்கைகளையும் கொத்திச் சிலிர்த்தவாறு, வெறுமையுற்ற பார்வைகளுடன், மார்பின் இருபுறமும் பார்த்துக்கொண்டும் கானக மயில்கள் இருந்தன.

(தவளைச் சத்தம் கேட்டால் மழை வரும் ஆதலின் மயில் குட்டையில் தவளைகள் இருக்கும் குழிகளில் காதுகொடுத்து ஓசை வருகிறதா என்று காதுகளைத் தீட்டிக்காத்திருப்பதாக கற்பித்துள்ளார். மழைக்கேங்கும் மயிலின் மூலமாக மனித மனத்தின் மழைக்கேங்கும் ஏக்கத்தையும் கவிஞர் காட்டி யுள்ளார்) IV—181

நிழல் வாட்டத்தில் காய்ந்த சேறு படிந்த கூம்பிய தோகையை விரிக்காததனால் அப்படியே (சேறு) அழியாமல், தோகையுடன் மயில் இருந்தது. முன் (மழைக்காலத்தில்) இந்திரன் அதன் நடனம் கண்டு மகிழ்ந்து அளித்த பொற்கிழியின் முத்திரையோ எனு மாறு அத்தோகையில் சேறுஇருந்தது.

(பட்டுத்துணியில் பொன் நாணயங்கள் பெய்து அரக்கு முத்திரையிட்ட பொற்கிழி போல் மயில் தோகை (பீலியின் கண்கள்) நாணயங்கள் பொதிந்திருந்ததாகவும் சேறுஅரக்கு முத்திரையாகவும் இருந்தது. மழைக்காலமின்மையின் தோகை விரிக்கவில்லை. அது முத்திரை வைத்ததாலே எனுமாறு இருந்தது என்பது கருத்து) IV—182

சீ2. சக்ரச்2தனப்ரகாஸமுனனு பே1னம்பு
கொங்கி2டி2 கொனகொ2ன கோ3ள்ள கொணகி
யஸ்மனிதம்பு2லு ஹம்ச3ஹாரமுனுப
ராக2 ரேகா1ச்2வர்ண ரஸனமுக2னு
ஜலஸாடி புலினம்பு ஜக3னம்பு2பை ஜாற
வ்யச்2த வேதச2 பு3ஜ ச்2வச்2திக மிடி3,
தனிமதோ வெச்சனை தடஸர ப்ரதி2பிம்ப2
ஹாசா2ளி பா2ஷ்ப லுச்ச்1வாச3முலகு

தே. நகு2சு, செந்தொ2வகண்டனு நலிகி3 தம்மு
லண்டு கையொத்து பத2நதி னவரி, குவல
மது2லஹரி அப்2தி3 செந்தி2 பை மக2தனமுல
ஒக்கெட2ல கூடு2சு ச்2ரவந்து லுப்பு2 பெனிசெ. IV—183

## யாமுன ப்ரபு3னி தி2க் விஜயமு

வ. இட்லு ஸரத்ச2மயம் பெ2ச2ங்கி2ன அங்கீ2க்ருத க்ஷத்ர த3ர்முண்டு3 காவுன தி2க்விஜய யாத்ர த3ர்மம்ப2னி ஆனீத ப2ல ஷட்கம்பு2கா2 ஆக்ருஷ்ண சா2மந்தராட்கம்பு2கா2 வெட2லி. IV—184

க2ஜகோ3டச்2யந்த நாளீகப2ளி தத3ரணின் காத்2ரவேயாதி3
ராண்மூர்
த3ஜ ரத்ன ஸ்ரேணு லந்தர்மனுலச2வதுலை ம்ரக்க2
பாதா2ம்தகுந்த
த்3வஜ வாதாகா3த கூ3ர்ணத்2வனது3ல ஏவமுல் வாத்2யமுல்
மீறகா2தத்
த்2விஜராஜன்யுண்டு2வித்2விட்2வித2ளன மனிகா விஞ்செ
தி2க்ஜைத்ர யாத்ரன் IV—185

சக்கிரவாகம் (அன்றில்) எனும் முலை தெரியுமாறு நுரையா கிய முந்தானையைச் சரியவிட்டு நீர்க்கோழியின் மென்குரலால், முணங்கியவாறு, கற் பாறைகளாகிய கடிதடம், அன்னங்களாகிய முத்துச்சரம், பூந்தாது என்னும் தங்க அரைஞான், களுடன் நீர லையாகிய உடை, மணல்மேடுகளாகிய கடிதட மேற்பாகத்தில் சரிய, புன்னைமரங்களாகிய கரங்களால் தழுவி, மெலிந்து,வருந்தி கரையிலுள்ள நாணற்பூக்களின் நிழல்களாகிய நகைகளுடன், நெட்டுயிர்ப்போடு, செங்குவளைக் கண்களால்சினந்து, தாமரை யைத் நீண்டும் கடற்காயல் கரங்களின் பரிசத்திற்கு மகிழ்ந்து குவளைகளின் பூந்தேன் கலந்த அலைகளால் கடல் ஆகிய காதலனை, நதி மகள் முரண் புணர்ச்சியில் (பெண் ஆண்போல அமைந்தியற்றும் கலவி) மகிழ்வுறச் செய்தாள்.

(நதியின் கணவன் கடல் சரத்காலத்தில் பிரிவுற்ற நதியைப் புலந்து பின் கூடியதாகக் கற்பனை)

## ஆளவந்தார் ஆட்சியின் மாட்சி

இவ்விதமாக சரத்காலம் திகழவும், யாமுனர் (யமுனைத் துறைவன்) அரசநீதியை ஏற்றவர் ஆதலின், திக்விசயம் செய்தல் முறையெனக் கருதி ஆறங்கங்கள் சிற்றரசுகள் கூட வர பயணம் புறப்பட்டு IV184

யானை,குதிரை தேர்ப்படைகள் நிறைந்ததால் பாரம் தாங்கப் மல் நிலத்தைத் தாங்கும் ஆதிசேடனின் தலை முடியிலுள்ள மணிகள், நிலத்தில் உள்ள மணிகளோடு புதைந்து கொள்ளுமாறு சுமைமிகுந்ததாக அமைய ஈட்டியுடன் கட்டியகொடிகள், காற்ற சைத்தலால் கடல் அலை முழங்குதலைவிட படைகளின் பறை யொலி முழக்கமே பெரிதாக, படைகளுடன் யாமுனர் புறப்பட்டு திக்விஜயம் செய்து பகைவரை முறியடித்துச் சிறப்புற்றார்.

IV—185

வேள்விகள் இயற்றி, தானங்கள் அந்தந்த நாட்டு அந்தணர் கட்கு மனநிறைவுறுமாறு செய்து, செல்வச் செழிப்புடன் என்றும் கவலையின்றி, அச்சமின்றி இருந்தார். IV—186

க. ஜன்ன முலு சேசி2, தானமு
லன்நாநா தே2ஸ விப்ருலன் தனுபுசு ச2ம்
பன்னத அனிஸமு ப2ஹு போ3
கோ2ன்னதுடை2 யாத2 மறசி யுண்டெ2 அஸங்கன் IV—186

வ. மறியு அதனி ராஜ்யம்பு2ன கச2வு கறசி சேயெத்தி மொற பெட்டுட 'கருலயந்த2, அட்லட்லு வட3 மெட்ட பட்டி த்ரோயுட வெட2வெட2ன் போவு பல்லவுலன் பண்டு2வ தலண்டு2லகு, இண்டிகின் தெச்சு பண்யாங்க2னா ப்3ராதல பரிஹாச2 சேஷ்டலயந்த2; சு2ன்னமெத்துடயுன் பட்டுகாருலன் பட்டுடயு சௌ2த3 சௌ3வர்ண பூ3ஷாதி2 நிர்மாணம்பு2ல யந்த2;காசெ2 கட்டுடயு கத்தி தால்சுடயு க்ருகவாகுல கலஹம் பு2லயந்த2; அதுல்ய துலனாதி2 க3ர்ஷணாதி தோ2ஷம்பு2லு ஜாம்பூ2நத2 பரீக்ஷாது2ல யந்த2; ஏதே2னியுன் கன்னு வேயுட ம்ருத2ங்கா2தி2 வாதி2த்ரயம்பு2ல யந்த2; தா3து வாத2ம்பு2லு தறசகு2ட ஸாப்3தி2குலயந்த2; காக இதர ச்த1லம்பு2ல லேகுண்ட2 ராஜ்ய பரிபாலனம்பு2 சேயுசுண்டெ2 IV—187

தே. தத்பிதாமஹுடை2ன நாத1முனி ஸிஷ்யு
டைன ஸ்ரீபுண்ட ரீகா க்ஷுனனுகு ஸிஷ்யு
டைன ஸ்ரீராம மிஸ்ராக் யுடார்தி தனது2
பரம கு2ரு பௌத்ருனகு இட்டி பந்த3மெட்லு? IV—188

வ. யோக2 சா2ம்ராஜ்யம்பு2 மறசி சா2ம்ராஜ்யம்பு2னந் தா2ச2க் துட2ய்யெ; அட்டி மஹாத்மு வம்ஸம்பு2னன் புட்டினட்டி இதண்டி2ட்லகு2ட அதிவ்யதிக்ரமம்பு2 IV—189

மேலும் அவர் ஆட்சியில் புல் தின்று கைஎடுத்துமுறையிடுவது களிறுகள் மட்டுமே (வீரர்கள் அன்று( ஆங்காங்கிருப்ப, கழுத்தைப் பிடித்துத் தள்ளுவது, பண்டிகைகளில் எண்ணெய் தேய்த்துக் குளிக்குமாறு கணிகையரின் சகோதரர்கள் கேலியாக (நாணத் தால்) மெல்லச்செல்லும் இளைஞர்களைத்தான் (வெறுப்பால் அன்று) சுண்ணாம்பு நீற்றல், குறடுபற்றி இழுத்தல் மாளிகை வெள்ளையடிக்கவும், நகைகள் செய்யவும் மட்டுமே (குற்றவாளி களைத் தண்டித்தற்காக அன்று).

பொற்கிழி கட்டி கத்தி ஏந்துதல் கோழிகள் போரில் (சேவற் போர் (மட்டுமே மக்கட்குள் போட்டி பொறாமை சண்டை கள் இல்லை.

அளவினால் ஏற்படும் உராய்வுகள் (சிறு சண்டைகள்) பொன் உரைகல்லில் மட்டுமே. எதிலேனும் கண்வைத்தல் (பொருளை அபகரிக்க எண்ணுதல்) என்பது மிருதங்கத்தில் மட்டுமே. (மிருதங் கத்தின் ஒரு பக்கம் கருமையான கண்போன்ற தோற் பகுதிவைத் தலைக் குறிக்கும்) (பிறர் பொருளிற் கண் வைக்கமாட்டார்கள்)

தாது (வினைச்சொல்) வாதங்கள் (தாது மருந்துகள் சப்த தாதுக்கள்) எல்லாம் இலக்கணத்தில் மட்டுமே. மற்ற இடங்களில் இவை இல்லாதவாறு அரசாட்சி செய்து வந்தான். *IV*—187

அந்த யாமுனரின் பிதாமகர் (பாட்டன்)ஆகிய நாதமுனியின் சீடராகிய ஸ்ரீபுண்டரீகாட்சர் (உய்யக்கொண்டார்) உடைய நெருங்கிய சீடரான ஸ்ரீராம மிசிரர் (மணக்கால்நம்பி) "எனது பரமகுருவின் பேரருக்கு இத்தகைய பந்தம் எப்படி நேர்ந்தது?"
*IV*—188

யோக சாம்ராச்சியத்தை மறந்து லோகசாம்ராச்சியத்தில் ஈடுபட்டவாறு என்னை? அப்பெரிய மகானின் மரபில் பிறந்து இவர் இவ்விதமானது முறையன்று." *IV*—189

சீ2. வருஷ ஸைலஜ3 ரவாரி த்ரிஷவண ச்2நானம்பு2
நிஷ்ட1காவிஞ்சி, யாஹ்னிகமுதீர்சி,
ஏகாந்த கு2ஹதத்தடி குஸாச2னமுன
உண்டி2 லக்ஷ்மீஸாங்க3ரி புண்ட2ரீக
மங்குரத்புலக ஹர்ஷாஸ்ருவை த2ஹரபுஷ்
கரமுன பா5விஞ்சி, ச2வித திருக2
யக்ஜோபவீத பத்2மாக்ஷ மாலிகலதோ
யோக2 பட்டிக கூடி2 யுரமுமெறய,

தே. ஸௌரி தத்த3ரணீத்ர3 வாச்2தவ்யு கொலிசி,
ச2தியு நாலர்கஸாக மஞ்சிதமு வண்ட2,
நில்முகுந்து2ன கர்பிஞ்சி, வேல்மி தீர்சி,
இட்லு தனுயாத்ர வட2பு முன்னிதனிதாத IV—190

க. தொடி2ப2டி2, விஷயாதுரு னவி
விடு2மனியெடு2 கண்டெ, கலதெ2 வேறே பக2? நேர்
பட2ர கதா1து2ல ஒகவெம்
ப2டி2 தோபன் பலிகி மைத்ரி பா2புட யொப்புன் IV—191

க. வசு2த3ன் புத்ராதி2க து2ர்வ்
யச2னமு சை2தமுனு தண்ட்2ரி வாரிஞ்சுடகுன்
வச2பட2த2ட; மறி ராஜ்யவ்
யச2னமு வாரிம்ப எந்த வாடெ2வ்வாடு3ன் IV—192

ஆ. நல்லக்ரோல னிச்சி மெல்லனெ சிவ்வங்கி2
நோடி ஜிங்க திவியு கேரு பொத2வு
வேடகாடு2 வோலெ விஷயாளி வலனதத்
த்ருஷ்ண தீரனிச்சி த்ரிப்புடொப்பு IV—193

"இவரது பாட்டனார் ஸ்ரீமன் நாதமுனிகள்கடிகாசல நதியில் மூன்று வேளையும் குளித்து நியமநிட்டைகளைக் கடைப்பிடித்து பகல் பூசைகள் முடித்து, ஒரு குகையில் தனித்துச்சென்று தருப் பைப்புல் இருக்கையில் அமர்ந்து, திருமகள் கோள்வன் திருவடி களை, மகிழ்ச்சியுடன் புளகமுற்று கண்ணீர் மல்கச் சிந்தித்து வந் தித்து மாலையானதும், பூணூல்; தாமரைக் கொட்டை மாலை களுடன் யோக பட்டம் மார்பில் திகழ அம்மலையில் இருக்கும்சுந் தரத் தோளுடையானைச் சிந்தித்துச் சேவித்து,இல்லத்தரசி கீரை அடகு பண்ணிவிக்க குலதெய்வத்துக்கு சமர்ப்பித்து, வேள்வியி யற்றி சிறப்புற்றுதன் வாழ்நாளைக் கழித்தார். IV—190

புலனின் பங்களில் ஈடுபட்டிருப்பவனிடம் விரைவுற்று அதனை விடுமாறு கூறுவதை விட வேறுபகையுண்டோ? திறமையுடன் இன்சொற்கதைகள் மூலம் பேசி ஒரு விதமாக உணரச் செய்து, புலன் வேட்கையைப் போக்க வேண்டும். IV—191

உலகில் தந்தை, தன் மகனின் தீய நடவடிக்கைகளேயே திருத்த இயலாமற் போகும்போது, அரசபோகத்தில் மூழ்கிய மன்னனை திருத்துவது என்பது முடிக்கிற காரியமா? யாரால் எப்படி முடியும்? IV—192

இரத்தம் குடிக்கவிட்டு, மெல்ல வேங்கையின் வாயிலிருந்து மானை ஈர்த்துக் கொள்ளும் சாதுரியம் மிக்க வேட்டைக்கார னைப் போல, புலன்கள் மூலம் துய்க்கும் வேட்கைதணியச்செய்து பின் திருத்திக் கொள்வதுவே மேலாகும்.

(மானைக் கவரும் புலி சிறுத்தை முதலியன கழுத்தைக் கடித்து இரத்தம் குடிக்கும்போது அதை விரட்ட முடியாது. விரட்டினால் மானை இழுத்துக் கொண்டோடும். அல்லது எதிர் வந்து தாக்கும். ஆதலின், அது இரத்தம் குடிக்கும் அளவு விட்டு பின்விரட்டி மானை எடுத்துக் கொண்டு வரும் வேட்டைக்காரன் போல அரசின்பங்களில் மூழ்கிக் கிடப்பவனை சிறிது விட்டுக் கொடுத்து பின்னர் திருத்தவேண்டும் என்பது கருத்து) IV—193

வ. காவுன னெட்லயின இதனி னிங்க உபக்ஷேிம்பரா, து2பாயம்பு2ன சொச்சி ஒக்க ரீதின் த்ரிப்பவலயு, உர்வி ஆஹார தோ2ஷம்பு2 விஜ்ஞான நாஸனம் பு2னகு மூலகாரணம் ப2னி விசாரிஞ்சி
IV—194

க. முல்லு தலகொனனி நவகபு
பல்லவமுல தோட2 முக1தி பா3ம செவுலகுன்
பல்லேரு பூவுலகு2 புவு
லுல்லஸி2லு னவர்க ஸாக மொது2கு2க2 கொனுசுன் IV—194

தே. தெச்சி, ஒக வைஷ்ணவுடு2 கானுகிச்செ, னனுசு
பா2னச2பு பா2ட2பு2ல சேத பம்புடயுனு,
அதடு2 ப்ரியபடி2 வண்டி2ஞ்சி ஆரகி2ம்ப
தெச்சு னிச்ச கொன்னாள்ளிட்லு தெச்சுசுண்ட2 IV—196

வ. ஒக்கநாட2தண்டு போ2ஜனச2மயம்பு2ன ச2கல ஸாகா ச்2வாத2னம்பு2 சேயுசுவச்சி, தத் ஸாகம்பு2 நஞ்ஜ2சுன் தலஞ்சுகொனி, 'ஏததா2னேதயகு2 பா3க2வது போ3ஜனா னந்தரம்ப2 மம்முன் கான்பிம்பு' ட2னிபிலிகி, பாணி பாத2 ப்ரக்ஷாளனாசம னானந்தரம்ப2 கான்பிஞ்சுகொனி, நமச்2கரிஞ்சி. வச்சின ப்ரயோஜனம் படு2கு2டயு, அதண்டி2ட்லனியெ. IV—197

க. மீ பெத்த2லு கூர்சின நி
க்ஷேப மொகடி ச2ஹ்யஜாத சி2ந்து3 ஜலாந்தத்
த்2வீபமுன உண்ட2 நீகுன்
சுபங்கா2 வச்சிதினி வசு2மதீ நாதா1 IV—198

ஆதலின் "அதற்காக இதுவரை இனிமேல் பொருட்படுத் தாமல் விடவும் கூடாது. தகுந்த முறையில் உபாயத்தினால் ஒரு விதமாகத் திருப்ப வேண்டும். உலகமக்கள் உணவுக்குற்றத்தால் அறிவு மயங்குவர். உணவே உணர்வுக்கு மூலகாரணம்" என்று கருதி IV—194

முள் உருவாகாத இளம் தளிரானதும், முக்தி எனும்! பெண்ணின் காதுகளில் அணியும் நெருஞ்சிப்பூக்கள் போன்ற. பூக்களை உடைய ஆம் ஆன தூதுளைக் கீரையை நிறையக் கொண்டு வந்து IV—195

ஒரு வைணவன் கொண்டு வந்து தந்தான் என்று கூறி சமையல் அந்தணர் மூலம் கொடுத்தனுப்பவும், அவர் (யாமுனர்) பிரியமுடன் சமைத்துண்டு மகிழ்ந்தார். இவ்விதம் (மணக்கால் நம்பி) சில நாட்கள் கொண்டு வந்து தந்தார். —IV196

ஒரு நாள் அவர் (யாமுனர்) உணவுண்ணும்போது, எல்லாக் காய்கறிகளையும் உண்டவாறு அந்த (தூதுளை)க் கீரையைச் சுவைத்து நினைவு வரவே, "இதைக் கொண்டு வந்துதரும் பாகவ தரை உணவுண்டபின் எமக்குக் காண்பியும்" என்று கூறி, கைகால் கழுவி நீர் குடித்துப் பின் அவரைக்(மணக்கால் நம்பியை கண்டு, வணங்கி, "வந்த காரியம் என்ன?" என்று கேட்டதும், அவர் இவ்விதம் கூறலானார். IV—197

"அரசே! தங்கள் முன்னோர்கள் கூட்டிவைத்த புதையல் ஒன்று மேற்குமலை (சஹ்யாத்திரி) யிலிருந்து பிறந்த காவேரி யாற்றின் இடையே உள்ள தீவில் (திருவரங்கம்) உள்ளதை தங்கட்கு காட்ட வந்தேன்." IV—198

க. நாகேடிகி நிக்ஷேபமு
நாகு, நிதி3யு னாகரம்பு2 நரநாது1ல சொ2ம்
மேகான வின்னவிஞ்செத2,
ஆகர்ணிம்புமு ததீ2ய மகு2 வித3மெல்லன் IV—199

சீ2. ச்2ப1டல மணுல் க்ரால ஸாந்தமை ஸ்வேதமை
அட்டி த்ராசொக்கடி சுட்டியுண்டு2
ரக்ஷா க்2ருஹீத மன்ப்ரத1 தொல்லிகலத2தி2
பொலயத2ந்தே2 டாறு நெலலு கானி
ஏபாடி ப2லியைன சேபடு2 ப்ராணி ஹம்
சா2தி2 பூஜனமுல காச2பட2து2
தனவெலுங் கொ2கி2 நிரஞ்ஜன த்2ருஷ்டிகினெலக்ஷ்ய
மையுண்டு2 னய்யு னிந்தந்த காது2

தே. ரத்ன மொக்கடிபை னனர்க3ம்பு2மெறயு
கலது2 பத்மம்பு2 ஸஸ்க1ம்பு2; பலுகு லேடி
கக்ஷ்ய, மனந்த, மாத்2ய மேகாந்தமந்து2
பூ3ப, நீகொக்கனிகெ காக சூபராது2 IV—200

வ. அனி வின்னவிஞ்சின ச2ந்தசி2ஞ்சி, சே2னாச2மேதுண்டை2 அதண்டு2 முன்னுகா2 ஶ்ரீரங்க2ம்பு2ன கரிகி2 காவேரிசந்த்2ர புஷ்கரிணுல தீர்த2ம் பா2டி2 ரங்க2 நாது1னி சே2விஞ்சி சா2பி3ப்ராயம்பு2கா அதனின் கடாக்ஷிஞ்சின அதண் டி2ட்லனியெ IV—201

க. 'மீ பெத்த2லு கூர்சின நி
க்ஷேபம்மிதி2கொ2' ம்மடஞ்சு ஶ்ரீரங்க2 பதி
ஶ்ரீபத2யுக2மமு சூபின
ஆப்ருத்1வீபதியு ஹட1நிரச்2தப்3ரமுடை IV—202

"எனக்கு எதற்கு புதையல்"? என்று கூற வேண்டாம்! நதிகளும் கனிவளங்களும் மன்னர்கள் உடமையாதலினால் விண்ணபித்துக் கொள்கிறேன். அதன் விவரத்தைக் கேட்பாயாக. IV—199

(நிதிக்கும் கருணாநிதியாகிய திருமாலுக்கும் சிலேடை மூலம் கவிஞர் இங்கு விவரிக்கிறார்)

படத்தில் மணிகள் ஒளிரும் வெண்ணிறப் பாம்பு சாந்தமுடன் சுற்றியிருக்கும் (ஆதிசேடன் எனும் பாம்பு) அரக்கர் (யட்சர்) காத்துக்கிடப்பர். எனினோ ஆறுமாதத்துக் கொருதடவைதான் வருவான் (விபீடணன் ஆறு மாதத்துக்கொருமுறை திருவரங்கப் பெருமானை தரிசிக்க வருவான் என்பர்) ஏதாவது பலி கொடுக்க வேண்டுமே எனினோ உயிர்ப்பலி முதலிய கொலைகளை விரும் பாது (மலரிட்டு வணங்கினும் போதும்) கண்கட்கு அஞ்சனம் (மை) தீட்டித்தான் காண வேண்டும் என்பதில்லை. தன் சுய ஒளியாற் காணப்படும். (மாசற்ற ஞானத்தினால் காண முடியும்) அந்நிதி அளவற்றது. அங்கு விலைமதிப்பற்ற இரத்தினம் (கௌஸ்துப மணி மார்பில்) உள்ளது. பதுமநிதி (உந்தித்தாமரை, சங்கநிதி (கையில் சங்கு) உள்ளது. சொற்களால் என்ன பயன்) அழிவற்றதும், எல்லையற்றதும் முதலுடையதுமான அதை தனித்து உன் ஒருவனுக்கேயன்றி மன்னா! பிறருக்குக் காட்டல் கூடாது.

(புதையலை பாம்பு சுற்றியிருக்கும், அரக்கர், யட்சர் காத்திருப்பர், பலிகொடுத்தல் வேண்டும், அஞ்சனம் தீட்டிப் பார்க்க வேண்டும் என்ற ஐதீகங்களை ஒட்டி ஈண்டு திருமாலாகிய நிதியை சிலேடை மூலம் உருவகித்திருக்கும் நயம் காணப் படுகிறது.) IV—200

T 4697

என்று விண்ணப்பிக்கவும், மகிழ்ந்து, படைகளுடன் அவன் (மணக்கால் நம்பி) முன்னே வழிகாட்ட திருவரங்கம் சென்று காவேரி, சந்திரபுட்கரணிகளில் குளித்து திருவரங்கத் தம்மானைச் சேவித்து, குறிப்புடன் கடைக்கண்ணால் மணக்கால் நம்பியை மன்னன் பார்க்கவும் அவன் இவ்விதம் கூறினான். IV—201

தங்கள் முன்னோர் சேவித்த நிதியிது. கைக்கொள்க என்று திருவரங்கத்தானின் திருவடிகளைக் காட்டவும் அம்மன்னனும் (யாமுனர்) அதிர்ச்சியுடன் மயக்கம் களைந்தவனாகி IV—202

வ. க்2ருக்குன தன பூர்வ தஸ தலஞ்சி இன்னாள்ளு தன ப்ரமாத2முனகுன் பரம நிர்வேத2ன ஒந்தி2 'நிவெவ்வண்ட2?' வனுடயு, 'நேமீ பிதாமஹுண்ட2கு2நாத1முனி ப்ரஸிஷ்யுண்ட2; அய்யோகி2 வருண்டு2 பா3வி ப3வஜ்ஜன்மம் பெ2றிங்கி2 பா3க2வத வதம்சம்ப2வகு2 நீசேத இவ்விஸிஷ்டா த்2வைதம்பு ச2கல பூ3தஹிதம்பு2கா2 வெலயங்க2லயதி2 யனிநிஸ்சயிஞ்சி, நீகு த்2யம் பு2பதே2ஸிம்பு மனி, தனஸிஷ்யுட2கு2 புண்ட2ரீ காக்ஷுன குபதே2ஸிஞ்சின, அதண்டு2 போ2கா2ச2க்துண்ட2 வைன ; நின்னுபாயம்பு2ன தெலிபி, நீகுபதே2ஸிம்பு மனுடயு; பனிவிண்டி'னனின சா2ஷ்டாங்க2ம்பு2கா2 ப்ரணமில்லி, அதனி சேதன் பஞ்ச ச2ம்ச்2கார ச2ம்ச்2க்ருதுண்டை2, அந்த நிலுவக துரீயாஸ்ரமம்பு2னகு ராக2லவாடை2, ச்2கந்தா3 வாரம்பு2னகு மகி2டி2 வச்சி, குமாருனந்து2 ராஜ்ய பா3ரம்பு2 பெட்டி, பந்து3மித்ராமாத்ய ச2மேதம்ப2கு2 ப2ல சதுஷ்டயம்பு2னு ப்ரக்ருதிவர்க2ம்புனு அதனி கொப்பகி2ஞ்சி இட்லனியெ

IV—203

## ராஜநீதி

க. ஏபட்டுன விசு2வக ர
க்ஷா பருட2வு கம்மு ப்ரஜலு சக்கி விபன்னுல்
கூ2 பெட்டின வினி தீர்புமு
காபு நஷுல மீத2 விட2கு கார்ய ப3ரம்பு2ல் IV—204

தே. ராஷ்ட்ர வர்த3ன மெத2 கோரு ராஜுமேலு
ராஷ்ட்ரமுனு கோரு; தா2ன கார்யமெ யனங்க2
ராது2; ப்2ரம் ஹோத்தரமுலைன ப்ரஜல ஏக
முக1பு கோர்கி தத2ந்தராத்மு டொ2ச2க2டெ2! IV—205

ஆ. ஆஜ்ஞுவலயு ந்ருபதி காபீ3ர3பில்லாதி2
கம்பகோல நூல னாஜனு செல்லு
னண்ட; சா2ர்வ பௌ3முடை2ன பூ3பதி யாஜ்ந
கெல்லவாரு தல்லடி2ல்ல வலதெ2? IV—206

விரைந்து, தனது முன்னைய நிலையை உணர்ந்து இதுகாறும் தான் மறைந்திருந்தமைக்காக வருந்தி, "நீ யார்?" என வினவலும் "நான் தங்கள் பிதாமகர் ஸ்ரீநாதமுனிகள் சீடராகிய உய்யக் கொண்டாரின் சீடன். அந்த யோகி, எதிர்காலத்தில் தாங்கள் அவதரிப்பதுணர்ந்து, பாகவதர்களில் உயர்ந்தவனாகிய உன்னால் விசிட்டாத்துவித சித்தாந்தம் எல்லா உயிர்களும் கடைத்தேற சீர் பெற்றிலங்குமென நிச்சயித்து, உனக்கு துவயம் (மந்திரம்) உபதேசிக்குமாறு ; தனது சீடனாகிய உய்யக்கொண்டாரிடம் கூற அவர், புலனின்பத்தில் ஈடுபட்ட உன்னை உபாயத்தினால் உணர்த்துமாறு கூற நானும் வந்து அவ்விதம் செய்தேன்!" என்று கூறவும், அடி மீசை வீழ்ந்து வணங்கி, அவர் (மணக்கால் நம்பி) மூலம் பஞ்ச சமஸ்காரங்கள் பெற்று, அத்துடன் நில்லாது நாலாம் ஆசிரமத்திற்கு (துறவு) புகமுனைந்தவனாய், பாடி வீடு வந்து தன் மகனுக்கு அரசினை ஒப்படைத்து உற்றார் உறவு நட்பு மந்திரி முதலிய படை பலங்களையும் மக்களையும் ஒப்படைத்து மகனிடம் இவ்விதம் கூறலானான். IV—203

## அரசநீதி

எந்நேரத்திலும் முனைப்புடன் மக்களைப் பாதுகாக்க வேண்டும். துயருற்றவர்கள் முறையிட்டால் கேட்டு நல்ல நீதி வழங்க வேண்டும். கயவர்களிடம் அதிகாரம் தரவேண்டாம். IV—204

நாட்டு மக்களின் நன்மையை நாடும் மன்னனின் நலத்தை நாட்டு மக்களும் விழைவார்கள். அதனால் என்ன பயன் எனக் கருதல் கூடாது. அம்மக்களின் விழைவினை அவர்களில் அந்தனர் முதலிய சான்றோர் தம் ஒருமித்த விருப்பத்தை, அந்தரான்மாவாகத் திகழும் இறைவன் நிறைவேற்றுவான். IV—205

அரசனுக்கு ஆணை செலுத்துவது அவசியமாகும். இடையர், வேடர் முதலியவர்கள் கூட அம்பு நூல் இவற்றின் குறியீட்டால் ஆணை செலுத்துவர். (அப்படியிருப்ப) மன்னர் மன்னராக பேரரசின் ஆணைக்கு எல்லோரும் அஞ்சவேண்டாமா?

(காட்டில் இடையர், வேடர் முதலிய பாளையக்காரர்கள் தம் எல்லைக்குள் ஆணை செலுத்துவர். தலைவன் ஒருவனிடம் அம்பு, நூல் முதலியன ஆணையின் குறியீடாக தந்தால் அவனை மற்றவர்கள் சரண் தந்து தீங்கியற்ற மாட்டார்கள் என்பர். சாதாரண பாளையக்காரர்கட்கே அரசாணை நடக்கும் எனின் பேரரசுக்கு ஆணை செலுத்தல் வேண்டுமன்றோ?) IV—206

க. து2ர்க2மு லாப்தத்2விஜவர
வர்க2முனகெ யிம்மு; து2ர்க2 வத்தத்திகத்
யர்க3ள த3ராதி3ராஜ்ய வி
னிர்க2த சா2த்3வச3த பொட2ம நிலுபக கொலதின் IV—207

ஆ. மொத2ல பெனிசி பித2பகுரியிம்ப, எவ்வாடு2
தனது3 தொண்டி ஹீனத3ஸ தலம்ப
ட3லுகு3 கான ஸீலமரயுசு க்ரமவ்ருத்தி3
பெனிசி வேள வேள பனுலு கொனுமு IV—208

ஆ. அனபி3ஜாது கீகடாலயு, அஸ்ருது
அலுகுமானி பொ2ங்கு பலுகுவானி,
ஆததாயி, க3டு3சு2, அன்ய தே2ஸ்யு, அத3ர்மு
விடு2மு விப்ரு நேல வேடி2 தேனி IV—209

க. தக்குமு மிகு2ல பதி1ச்யுத
பக்கண வர்தி3துல, தொல்லி ப்3ரஷ்டகு2 விப்ருண்
டொ2க்கண்ட2லுக2டெ3 ப்ரோசின
கொக்கெரபை ஒக்க பூட கூடிகி காக2ன்? IV—210

கோட்டைகட்கு தன்னவர்களாகிய அந்தணர்கட்கே அதிகாரம் தருக. அவர்கள் தம் எதிரிகளை முறியடிக்கும் அளவான படைகளையே தருக. அளவுக்கதிகமான படைகளை நிறுத்தல் வேண்டாம். IV—207

முதலில் உயரச் செய்து, பின்னர் (பதவியில்) குறையச் செய்தால் யாரானாலும் தனது முன்னைய நிலையினைக் கருதாமல் (மன்னனைச்) சினப்பர். ஆகையால் அவனது நன்னடத்தையை அப்போதைக்கப்போது ஆராய்ந்து வரிசைப்படி பதவி உயர்வுகள் தந்து, காலமறிந்து செயற்படச் செய்ய வேண்டும். IV—208

உனது ஆட்சி உன்னிடமே இருக்க விரும்புவாயானால், அந்தணனே யானாலும், நற்குடிப்பிறவாதவன், வேடர்கள் சேரியில் வாழ்பவன், கல்வியறிவில்லாதவன், கொலைக்கஞ்சா தவன், கொடுமனத்தன், அயல்நாட்டான், ஒழுக்கமற்றவன் ஆகியவர்களை விலக்க வேண்டும் (தன்னருகே சேரவிடக் கூடாது) IV—209

நன்னெறி நீங்கிய, வேடருடன் வசிக்கும் தீயரை விலக்குக! முன் ஒழுக்கம்கெட்ட அந்தணன் தன்னைப் பாதுகாத்த கொக்கினை ஒருவேளைச் சோற்றுக்காகக் கொல்லவில்லையா?

(ஒரு அந்தணன் கௌதமன் எனும் பெயரினன் ஒழுக்கம் கெட்டு வேடர்களுடன் கூடி வேட்டுவச்சியை மணந்து கொண்டு, வழிப்போக்கருடன் சென்று யானைக் கூட்டத்திலகப்பட்டு தப்பித்துக்கொண்டு ஒரு ஆலமரத்தடியில் சென்றிருந்தான். அங்கே நாடீசங்கன் என்னும் கொக்கு விருந்தினனுக்கு உணவீந்து, பணமும் தந்தது. மறுநாள் பயணம் புறப்பட்ட அந்தணன் தூங்கும் கொக்கினைக் கொன்று மாமிசத்தினை எடுத்துக் கொண்டு புறப்பட்டான். நன்றி கொன்ற இவ்வந்தணன் கதை மகாபாரதம் சாந்தி பருவத்தில் வருகிறது. இவனைப்போலும் பிராமணன் உண்டு. ஆகையால் அப்படிப்பட்டவர்கள் தன்னருகே வரவிடக்கூடாது) IV—210

ச. சதி2வி அத3ர்ம3பீதி ந்ருபஸாச்த்ர விதி3ஜ்ஞுதலன்வயச்சு2டெ2
ப்ப2தி2டிகி லோனு ஏப2தி3கி பா2ஹ்யமுனை யருஜச்2 வருபுலை
மத2மறி ராஜுு ப்ரார்த1ன அமாத்யத கைகொனி தீர்சு பாறுவா
ரொத2வின அங்க2முல் மிகு2ல ஊர்ஜித மௌடகு பூட சாலதே2
IV—211

வ. அட்டி மந்த்ரி வர்க3ம்பு2 தொ2ரக தே2னி IV—212

ஸா. நீதின் தான தலஞ்சி சேயபனிகானீ காகபோனீ, ப2லவ்
ராதார்தா1ட்3யத நெம்மி னுண்ட2 கொரு ப்ரோவன்
மந்த்ரி யஞ்சுன் கு2ணா
தீதுன் கு2ம்மடி2காய யந்த யகு2முத்தெம்பை2 மனம்
பே2ர்ப, ணட்
லேதானாதனி சேதிலோ ப்2ரது2குவாடே2யௌ சுமீ மீத2டன்
IV—213

க. ஒக்கனி விரிவிகினெ தொ2ரல்
பெக்கண்ட்2ரே, ஒக்க னொகனி வெம்ப2டி2 னனுகு2ல்
பெக்கண்ட்ரு நிலுவ பனுலகு3
கக்கச2மு கு2திம்ப, பெம்பகா2 காகுண்டு2ன் IV—214

க. த3னமுக்1யமு கேவல மே
பனியுன் காதா2ச்2த1 கலிகி2 பலுவுருப்ருபு3வுல்
பனிசேயக, தத்வஸ்யம்
பு2னகு அலோபா3ந்ருஸம்ச்2யமுல் ருதமுசெலுல் IV—215

கற்று மறவழிக்கஞ்சி, அரசியல் அறிவுடையவனாகி, ஐம்பது வயதுக்குமேல், எழுபது வயதுக்குட்பட்டவனாக, அமைந்து, நோயற்ற மரபினனாகி, அகந்தையற்றவனாய், அரசன் வேண்டிய தால் அமைச்சர் பதவியை ஏற்று, காரியங்கள் நடத்தும் மந்திரி கிடைத்தால், அரசாங்கம் சிறந்து மிளிரும். இத்தகையவர் ஒரு நாள் இருந்தால் போதாதா? IV—211

அத்தகு அமைச்சர்கள் கிடைக்காவிட்டால் IV—212

அரசன் தானே அரச நீதியுணர்ந்து செயலாற்ற வேண்டும் காரியங்கள் நிறைவேறினும் நிறைவேறாவிட்டாலும் சரியே படை பலத்தாலும் செல்வவளத்தாலும் நிம்மதியாக இருக்காமல் மந்திரி என்று ஒருவனை, பண்பற்றவனை நியமித்துப் பேணினால் பூசணிக்காயளவு முத்து என்பது போல மனத்தை வருத்தம் உறச் செய்யும். அதன்பிறகு அவன் கையிற் சிக்கி (அவன் சொன்னபடி ஆடும்) வாழ்க்கையுடையவனாக நேரும்.

(முத்து சிறிதாக இருக்கும்போது அணிந்து மகிழலாம். பூசணிக்காயளவாக இருந்தால் அதை அணிந்தாலும் தாங்க முடியாது, வருத்தம் தரும். அதுபோன்றே தன்னளவு மீறும் அமைச்சினால் துயரே பெருகும் என்பது கருத்து) IV—213

ஒருவனிடமே அதிகமான பாரத்தை விரிவாக்காமல் பலரிடமும் பகிர்ந்தளிக்க வேண்டும். ஒவ்வொருவரைச் சார்ந்தும் பலர் இருப்பதால் காரியம் எளிதில் நிறைவேறும். அதிகாரத்தைக் குறைப்பதால் சிரமங்கள் மிகும், மிகுவிப்பதால் சிரமங்கள் குறையும். IV—214

பொருளால் (பணத்தால்) மட்டும் எச்செயலும் நிறைவேறி விடாது. பல குறுநில மன்னர்கள் அக்கறையுடன் செயலாற்ற வேண்டும். அவர்களை நம் வசம் இருக்குமாறு செய்ய பொருளைத் தாராளமாகத் தரவேண்டும். கொடுமை கூடாது. உண்மையும் நட்பும் இருக்க வேண்டும். IV—215

க. பா³ண்டா²கா²ர ஹயாத்²யமு
 லுண்டி²யு னனு வகு² மனுஷ்யு லொத²வமி னவியுன்
மண்ட²லி நவய னரிகொ²திகி²
யுண்டி²ன சி²ம்ஹாச²னம்பு² லுர்வின் வினமே? IV—216

தே. பா²ஹு ஜாங்க்³ரிஜ முக¹ விட²ம்ப²னகு அயின
கொலிசி மனு விப்ர த³ர்மம்பு தெலிசி²யைன
பூனி சங்கடமுலு நில்சு கான தறசு
ப்²ராம்ஹணுனி ப்ரபு³ சேயுட பதிகி ஹிதமு IV—217

உ. ஆயதிகானிகீகு மமராலயமுக்¹யமு, லாத ட²ர்த¹த்ருஷ்
ணாயுதுடை² நிஜோர்வி னகு² நஷ்டிகி
தத்த³னமுன் தொரல்சி ரா
ஜாயதனம்பு² சேர்சு; மறி யட்டித²பத்¹யமு, கான ஒண்டிகா²
டே²ய³திகாரி காவலயு, இஞ்சுக தின்னனு வாடெ² ரூபறுன்
IV—218

ச. முனுதனசீ²ம சேசி²கொனி, முல்லிடி², கு²த்த²ட வெண்டி²
சேனிமெத்
தகையி வேளு வெல்லகியு த்ரவ்வெடு² கர்ஷகுனட்லு, ஸத்ருதோ
னென²சிய யைன து²ர்க²ப²லமே கொனியைன, நிஜாத்ம
சிந்தலே
கனெக²ட²சேசி², லோனமறி கண்டக ஸோத³ன
சேயுடொப்பகு²ன் IV—219

மூலதனம் (கருவூலம்) குதிரைகள் முதலியன இருந்தும், தகுந்த மனிதர்சள் (அதிகாரிகள்) இன்மையால், அவை இழந்து நாட்டையும் இழந்து, பகை வருக்கடங்கி இருக்கும் சிம்மாசனங் கள் (சமஸ்தானங்கள்) குறித்து நாம் கேள்விப்பட்டதில்லையா? IV—216

அரசகுலத்தினர் (க்ஷத்திரியர்) வேளாண் குலத்தினர் (சூத்திரர்) முதலியவர்கள் தம்மை இகழ்வர் என்ற அச்சத் தாலும், தன் போன்ற அந்தணர்களின் தருமத்தை அறிந்தேனும், சங்கடங்கள் வரும்போது உறுதியாக நின்று சமாளிப்பர் என்ப தால், அந்தணர்களை அதிகாரிகள் ஆக்குவது மேன்மை பயக்கும். (பிரம்மனின் தலையிலிருந்து அந்தணர், தோளிலிருந்து க்ஷத்திரியர், தொடையிலிருந்து வைசியர், பாதங்களிலிருந்து சூத்திரர் (தொண்டர்) பிறந்தனர் என்று வேதம் கூறும்) IV—217

வருமான அதிகாரிக்கு, கோயில், முதலியவற்றின் நிருவாக அதிகாரம் தரக்கூடாது. அவன் தன் வருமான இழப்புக்கீடாக கோயில் சொத்து முதலியவற்றைக் கவர்ந்து அரசனுக்கும் அனுப்பிவைப்பான். அவ்விதம் செய்தாய் தீங்காகும். ஆதலின் தனியதிகாரியே கோயிலுக்கிருத்தல் வேண்டும். கோயில் சொத்தை அனுபவிப்பவன் தானே நாசம் அடைவான். IV—218

முதலில் தனது நிலத்தின் எல்லையை வரையறுத்து வேலி யிட்டு, புலம் மென்மையுற கடப்பாரையால் வேர், தூர்களை அப்புறப்படுத்தி உழுது பண்படுத்தும் உழவன் போல, மன்னன் பகைவருடன் நட்புடனோ, தன் படை வலிமையாலோ தனது நாட்டின் எல்லையைப் பத்திரப்படுத்தி, கவலையின்றி பிறகு தன் நாட்டினுள் உள்ள எதிர்ப்புகளை அடக்கி, ஆட்சியை நிலை நாட்டுவதே சிறப்பாகும், IV—219

க. மொாத2லனெ யொருத2ல கானின்
செத2ரங்கா2னாட2 காத்மசிந்திம்பு; பதி2ம்
பதி2க2 ம்ருஷயேனி மறிவிடு2
முத2ச்2துகா2 காக யுண்ட2 னொக்க மதமுனன் IV—220

க. த3ரணி னசா2த்3ய நகா2டவு
லிரவுக2 பூ3பீட2 சேயு னெறுகுல பொருகூ2ன்
னெரவகு னச்2தி1தி ஸ2ருல
கெரவுக2னிச்சுனதி3, மித1மு னெட்லயின னுருன் IV—221

வ. விஸேஷிஞ்சியு அப்பார்வதீய ப2லம்பு2 லோனன் கூட2கயுன்ன ராஜுனகு ப்ரஜா பாத3தறுக2 தெ2ட்லேனி—பெ2த2ரு வாபி வாரலன் சேகூர்சு கொனவலயு; அவிஸ்வாச2ம்பு2னு விஸ்வாச2ம்பு2னு, அலுகயு னெலமியு, அதிவைரம்பு2னு அத்யானுகூல்யம்பு2னு, அல்புலகு2ட அல்பம்பு2னனயகு; எட்லண்டேனி IV—222

ஸா. வில்லுன் தானுனு பி3ல்லுடொா2க்க ட2ருக2ன் விந்தி2ண்ட
து2க்4தா3ன்னமுன்
பி3ல்லுண்ட2ன்யுடு2 வெட்ட, நாரயுடு2கன் வீக்ஷிஞ்சி
தொா2ப்ப2ஞ்சு வா
டெ2ல்லன்வம்முக2 சேசி2 தன்னனுப ரானெந்தே2 தெக2ன்
சூட3கா2
உல்லம்பை2, 'சனனம்பு, நாரசெடு2' கா, ஊஹிஞ்சிபோ
னம்படே4 IV—223

புறங்கூறுபவனை முதலிலேயே கடிந்து பேசிவிடக் கூடாது. அவன் கூற்றை மனதில் ஆழ்ந்து சிந்தித்துப் பார்க்கவேண்டும். முற்றிலும் பொய் என்று தெரிந்தாலும் பின் அவனை விரட்டி விடாமல் தனிமைப் படுத்தி, அவன் கூற்றுக்களை மட்டும் புறக்கணிக்கவும்.

(பிறர் மறைவான செய்திகளை அறிய அத்தகையோரும் அரசனுக்குத் தேவை ஆகையால், அவனை விரட்டி விடக்கூடாது. அவன் கூற்றை முற்றிலும், ஏற்கவோ, நம்பிவிடவோ கூடாது என்பது கருத்து) IV—220

புகுதற்கரிய மலை, காடுகளைச் சேர்ந்த இடங்களில் வசிக்கும், தொல்லை தருபவர்களான வேடர், புளிஞர்களின் ஊர்களைச் சேர்ந்த இடங்களைச் சரண் புகுந்த அன்னியர் களுக்குத் தாற்காலிகமாகத் தரவும். அவர்கள் கலந்திருந்தாலும் போரிட்டாலும் இரண்டுமே நமக்கு நல்லது தான். IV—222

முக்கியமாக மலைப்பகுதியுள்ளவர்கள் தன்னோடிணையாத அரசனுக்கு மக்களால் தொல்லைகள் மிகும். எப்படியும் பயத்தைப் போக்கி அவர்களை கைவசப்படுத்திக் கொள்ள வேண்டும். நம்பிக்கையில்லாமை, நம்பிக்கை, சினம், நட்பு; மிகுபகை, மிகுந்த உறவு முதலியன அவர்கள் சிறுமதியாளர் ஆதலின் சிறிய காரணங்களிலேயே அமையும்.

(சிறிய விஷயங்களினாலேயே சினப்பர். அதே போல் சிறியவற்றினாலே மிகுந்த அன்பு பாராட்டுவர் என்பது கருத்து ) எப்படி என்றால் IV—222

ஒரு வேடன் வில்லுடன் மற்றொரு வேடன் இல்லம் சென்றான். (வந்தவனுக்கு) பாலன்னத்துடன் விருந்தளித்தான் (அடுப்பில்) பனைநார் வெந்து கொண்டிருக்கக் கண்டான். மாமிசம் என்று கருதினான். (விருந்தோம்பலை) மறந்து (அவனை தனக்கு மாமிசம் படைக்கவில்லை என்று சினந்து அவனைக் கொல்லக் கருதினான்) வழியனுப்ப வந்தவனைக் கொல்லக் கருதும் போது (விருந்தளித்த) அவன் "விடைதருக! (என் வீட்டில் வேகும்) பனைநார் முறுகிக் கெட்டுவிடும்! விரைந்தேக வேண்டும்", எனவும் (மாமிசமல்ல என்று உணர்ந்து தெளிந்தவனாக (கொல்லாது) செல்ல விடுத்தான் (முன்னைய கருத்துக்கு உதாரணம்) V—223

க. ஆபால கூடனே நிஜ
மேபாடியு தப்ப ராடி2ரே; நெரசு2ன கொந்
தேபாடி கன்ன நலுகு2து2
ரீபனி யெந்தனக வெட2கு3டெத2 ஆடவிகுல் IV—224

தே. ஆடவிக வஸ்ய கலன ச2த்யமுன, வைரி,
மனுஜபதி மைத்ரி தூ2த ச2ம்மான முனனு,
கூர்மி த2றி ப்3ருதி கால்வுரகுனு, ச2பாரி
தோஷிகபு சே2வ எலமி ரௌதுலகு கலுகு2 IV—225

க. மேலகு2 கோ3டகமுனு ஸூண்
டா2லம்பு2னு ஆப்த சு2ப3டுனகெ யிம்மு; தறின்
மேலகு2 மெலபுன மந்து2ர
பாலிம்புமு; தொ2ரல பாலு பறுபகு மெபுடு2ன் IV—226

தே. கார்ய மொக்கடு2 கனின மாத்ச2ர்யமுனஒ
கண்டு2 காத2னி க1ண்டி2ஞ்சு; கன்னெறிங்கி2
இருவரனு காத2னக கொல்வு விரிசி3, மீத2
அல்ல வாடெ2ன்னின2தி சேயனகு2 ஸூப3ம்பு IV—227

க. பக2வெலி கொனி, லோத2ச்2யுல
சிகி2ரிம்பக2 சேசி2 ந்ருபதி சிக்குவட2 பனுல்
தெகி2 சேயக, தாரே தி3க்
குக2 அட2கு ரஸங்க அல்லுகொனி து2ச்ச3சிவுல் IV—228

காட்டாள்கள், பால் சோற்றுக்கே, படைத்தவர்களிடம் நன்றியுடன் சத்தியம் தவறாமல் நடந்து கொள்வர். அது போன்ற ஒரு சிறிய தவறு கண்டாலும் அதைப் பெரிது படுத்தி சினந்து விடுவார்கள்.

(மிகச் சிறு காரணங்களிலும் அன்பும் பகையும் கொள் வார்கள் என்பது கருத்து) IV—224

வாய்மை தவறாமை காட்டாள்களை வசமாக்க உதவும். பகையரசரின் தூதர்களைக் கௌரவிப்பதனால் அவர்தம் நட்பு உருவாகும். சரியான சமயத்தில் சம்பளம் கொடுப்பதால் காலாட்படை வசமாகும். குதிரை வீரர்களை பரிசுகள் தருவதால் பற்றுடன் இருப்பர். IV—225

மேலான குதிரை, யானைகளை உனக்கு வேண்டியவர் களிடமே தருக. குதிரை லாயம் முதலியன விழிப்போடு பாதுகாக்கவும். அதிகாரிகள் வசம் அப்பொறுப்பினை ஒப்படைக்க வேண்டாம். IV—226

ஒரு காரியத்தை ஒருவன் சொன்னால் அவன் மீது பொறா மையினால் மற்றொருவன் அதனை மறுத்துரைப்பான். இருவர் கூற்றையும் கண்டிக்காமல் ஏற்றுக் கொண்டு, பின், அவை முடிந்ததும், முதலில் சொன்னவன் கூற்று சரியானதாயின் அதன்படி செய்தால் நலமாகும். IV—227

தீய அமைச்சர்கள், வெளிப்பகைவர்களைத் தூண்டியும், உட்பகையாகிய திருடர். கொள்ளையடிப்பவர்களை அடக்காமல் வளரவிட்டும், அரசனைச் சிக்க வைத்து தம்மை விட்டால் வேறு கதியில்லை எனுமாறு ஆட்டிப்படைக்க முயல்வார்கள். IV—228

க. இப்பிந்து ராத்ம வஸ¬லகு
தப்பிந்துரு பருல, கார்சி தப்பிந்துரு'ரா
ஜிப்பகி[2]த்தி[2] வாடெ[2]' யனிவே
செப்பின பெரவாரு நம்மி சேரகயுண்ட[2]ன் IV—229

ஆ. வாடி[2]பொத[2]லு ஜட[1]ர வைஸ்வாநருடு[3] கப[1]
ப்ரமுக[1] தோ[2]ஷயுக்தி ப[2]லிமி செடி[2]ன
வெலி மஹொஷத[3]ம்பு[2] ப[2]லமிச்சுக[2]தி, ப்ரதி
சேய, வாரிமத[2]மு செறுசு சுண்டு[2] IV—230

வ. வாரிமிகி[2]லி ப்ரதி சேயனெட் லண்டேனி IV—231

க. ப[3]ண்டா[2]ரமுதோ ஹயமத[2]
ஸ¬ண்டா[2]ல க[3]டாளி தனது[2] சொ[2]ம்மை பாகா[2]
னுண்டி[2]ன, னாதட[2] வாயதெ[2]
பண்டி[2]துடுனு பி[2]ருது[2]னைன பதிகினி ப[2]யலை IV—232

க. கடு[2]புன ஒககடி[2]தறிகி[2]ன
செட[2]சூசுடெ காக பதிகி செலியுண் கலடே[2]?
ஒடி[2] த[2]ண்ட[2] விடு[2]வ செல்லுனே?
நட[2]பவலயு நோ்சினட்லு நம்மகயெ க்ருபன் IV—233

தனக்கு வேண்டியவர்கட்குத் தருவார்கள்; பிறருக்கு உதவ மாட்டார்கள். அரசன் வாக்கை நிறைவேற்றாமல் தவறும்படி செய்வர். (அதற்குக் காரணம்) அரசன்தான் என நம்பும்படி செய்வர். பிறரை அரசனிடம் அணுகமுடியாதபடி செய்வர். IV—229

கூர்மையுடைய ஜடராக்கினி (வயிற்றில் சீரணிக்க உதவும் வெம்மையுடைய தீ) கபம், பித்தம், வாயு முதலிய குற்றங்களால் வலிமை கெட்டு மந்தமுற்றால் புறமான பெரு மருந்துகளால் மீண்டும் வலிமை (ஆரோக்கியம்) பெறுவது போல, தீய அமைச்சர்களை அடக்க புதியவனை நியமித்தால் அவன் அவர்கள் செருக்கினை அடக்குவான். IV—230

அந்த தீயவர்களை அடக்குவது எப்படி எனின். IV—231

நிதி (கருவூலம்)—யானை குதிரைப் படைகள், தனது சுவாதீனத்தில் இருந்தால், அறிவாளியும் வீரமும் உடைய மன்னனுக்கு தீயவர்களால் ஆகும் தொந்தரவுகள் தானாக நீங்கிவிடும்.

(நிதி, பாதுகாப்பு இரண்டும் அரசன் வசம் இருக்கவேண்டும். கல்வி, சுகாதாரம் போன்ற பிற துறைகள் பிற அமைச்சரிடம் இருக்கலாம் என்பது கருத்து) IV—232

வயிற்றுக்கு (உண்டிக்கு) ஒரு கவளம் குறைந்தாலும் (அரசனைக்) கெடுக்கப் பார்ப்பார்களே அன்றி அரசனுக்கு (உண்மையான) நண்பனும் இருக்கிறானா? (இல்லை), ஆதலின்; தரமாட்டேன் என்று கூறி, விட்டு விடவும் முடியாது. திறமையுடன் அவர்கள் (ஏதாவது தந்து திருப்திப் படுத்தியவாறும்) நம்பாமலும் நடத்த வேண்டும். IV—233

ச. ஒகடிகி ரோயகுண்ட கனுமுன்னவியுன் த்$^{2}$ருபது$^{2}$ண்டு$^{2}$
மாரணேஷ்
டிகி பசி$^{2}$ சூபி வேட$^{2}$முனிசி$^{2}$ம்ஹு டொ$^{2}$கண்டு$^{2}$
தமன்னவேல்சுபண்
டொ$^{2}$கட$^{2}$ பவித்ர பூ$^{3}$மி கனியொல்லகயே சன
தாக்$^{2}$ரஹிஞ்செ ரோ
யகனியெ,தான அட்லெறுக$^{2}$னௌ சனு சர்வமுகான
ஸக்யமே IV—234

க. வீடெ$^{2}$ட$^{2}$ருன கீடெ$^{2}$ன்னின
வாட$^{2}$னி, ஜயமைன, ஹிம்ச$^{2}$ வத$^{2}$லி கொனுமுஸ்ரீ
போடி$^{2}$ மஹி யேமி கொர ப$^{2}$ல்
வாடி$^{2}$ செடி$^{2}$ன, அட்டித$^{2}$யகு வைரியு கம்முன் IV—235

ஒரு செயலில் வெறுப்படையாமல் ஈடுபடுவதைக் கண்டு, பிற செயலிலும் ஈடுபடுவான் என்பதை அறிந்து கொள்க; துருபதன் துரோணனைக் கொல்வதற்காக ஒரு யாகம் செய்யுமாறும் இலட்சம் பசுக்கள் காணிக்கை தருவதாகவும் கூறவும், அதற்கு முனிவன் (உபயாஜன்) தான் செய்ய விரும்பவில்லை என்றும் எனது அண்ணன் (யாஜன்) செய்வான்! ஒரு பழம் புனிதமற்ற இடத்தில் கிடந்ததைக் கண்டு நான் வேண்டாது செல்ல அவன் அதனை எடுத்துண்டான்! வெறுப்புறவில்லை! ஆதலில் அவன் செய்வான் என்பதை உணர முடியும் என்றும் கூறினான். இது போல் ஒருவனின் செயல் (நடத்தை) மூலம் அவனது இயல்பை உணர்ந்து கொள்ள வேண்டுமேயன்றி எல்லா நிகழ்ச்சிகளையும் கண்டு தெளிய முடியுமோ?

(துரோணன் துருபதனின் ஒரு சாலை மாணாக்கன் என்பதாலும் தான் கற்கும் காலை பின்னாளில் தான் அரசனானதும் பாதியரசு தருவதாக துருபதன் கூறியதாலும் தான் வறுமையுற்றபோது குழந்தைக்காக பால் வேண்டி சில பசுக்களை யாசிப்பதற்காக துருபதனிடம் சென்றான். துருபதன் அடையாளம் தெரியாதவனாக பொய்யாக நடந்தான். அதனால் சினமுற்ற துரோணன் பின்னாளில் அத்தினாபுரம் வந்து கௌரவ பாண்டவர்கட்கு ஆசிரியனாக அமைந்தான். அருச்சுனனைப் பயிற்றுவித்து துருபதனை தன் தேர்க்காலில் இழுத்துவரச் செய்தான், இந்த அவமானம் தாங்காத துருபதன் யாகம் செய்து துரோணனைக் கொல்லும் மகனைப் பெற விரும்பினான். அருச்சுனனை மணக்கும் மகளைப் பெற விரும்பினான். அந்த யாகம் செய்ய 'உபயாஜன்' எனும் முனிவனை வேண்ட அவன் மறுத்து தன் அண்ணன் 'யாஜன்' அக்காரியம் செய்வான் என்றும் புனிதமற்ற இடத்தில் உள்ள பழத்தைத் தான் வெறுத்தும் அவன் அதை நயந்து எடுத்ததால் இதை உணர்வதாகவும் கூறினான். இக்கதை மகாபாரதம் ஆதிபருவத்தில் வருகிறது.

சாதாரணமான பழம் எடுத்த நிகழ்ச்சி மூலம் இந்த சகோதரர்களின் இயல்பு புலப்படுவது போல ஒரு மனிதனின் நடத்தையை சாதாரண நிகழ்ச்சி மூலமே முன்னறிந்து அவர்களை கணிக்க வேண்டும் என்பது கருத்து) IV—234

'இவன் இக்கட்டான சூழ்நிலையில் கேடு நினைத்தவன்' என்று இருந்தாலும் நீ அந்த இடரிலிருந்து நீங்கி வெற்றி பெற்ற பின் அவனைத் துன்புறுத்த வேண்டாம். அவன் செல்வத்தை மட்டும் கவர்ந்து கொள்க! பாம்பின் கோரைப் பற்களைப் பிடுங்கி விட்டால் அது என்ன செய்ய இயலும்? அதுபோல அவன் செருக்கடங்கிக் கிடப்பான். தனனைக் கொல்லாது விட்டதற்காக நன்றியுடன் நட்பும் பூணமுயல்வான். IV—235

தே. தே2ஸவைஸால்ய மர்த1சி2த்தி3 கினிமூல
மில யொகிந்தயைன, குண்ட2கால்வலு ரசிஞ்சி
நயமு பேத2கு னரி கோருனனு ஒ3சங்கி2
ப்ரப2ல சேசி2ன அர்த1த2ர்மமுலு பெருகு2 IV—236

தே. ப்ரஜ னவசி2 சன்ன பிலுவ கப்பகு2ல கொலுசு
நம்மி, இண்ட்2லிந்த3னம்பு2லு காயெ, னனொடி2
கலனினக்கைன அதி3காரிகல ந்ருபதிகி
ஏடு2தீ2வுலு கொன்ன ச2ம்ருத்தி3லேது2 IV—237

உரவெளசாக2ம்பு2 போக3ம்பு2ப3யமு ஒகபாலுக்2ர
சேனாவனார்த1ம்
பி2ருவால் நிண்டா2ரு ப2ண்டா2ரிலு சொர ஒகபாலிட்லுகா2
நாய மொப்பன்
சரத்2ருஷ்டின் வைரிபக்ஷ க்ஷணமு ச2சிவ முக1ய
ச்2வபக்ஷக்ஷணம்பு2ன்
த3ரணீ நாது1ண்டொ2னர்பன்தகு3 தக2து2மைந்த2ச்2கராளி
நிஜோர்வின் IV—238

க. லாலனனாரக்ஷுல க2மி
னேலி, தெலிசி2 ம்ருச்சு, னாஜ்ஞுயிட2 கதடு2 செறம்
போ2, லாதினிட2, னயஸ மெம்
தே லேவதெ2 ஸலைப்ருது1 வனிஞ்ஞ்யாயமுன் IV—239

T 4697



நாட்டின் விரிவே பொருட்பேற்றுக்கு மூலமாகும். நிலம் கொஞ்சமாக இருந்தாலும், குளம், கால்வாய்கள் உருவாக்கி, ஏழைகளிடம் வரி, பணமேல். தானியமோ நியாயப்படி சிரமப் படுத்தாமல் வசூலித்து அவர்களை வளம் உறும்படி செய்தால் அரசுக்கு அறமும் பொருளும் வளரும். IV—236

மக்கள், வறுமையால் வாடி (உழவை விடுத்து) அயலிடங் கட்குச் சென்றால், அவர்களை மீண்டும் அழைத்து வந்து குடி யேற்றி வைக்காமல், அந்த மக்களின் பசுக்களையும் தானியங் களையும் விற்று, வீடுகள் விறகுக் காகும் என்று எண்ணும் போர்க்களத்து நரி போன்ற அதிகாரிகளை உடைய அரசன், ஏழு தீவுகளையாண்டாலும் செல்வவளம் உற மாட்டான். IV—237

அரசன், தனது வருமானத்தில் மிகுந்த கொடைக்கும் தன் அனுபவத்திற்கும் ஆகிய இரண்டுக்கும் ஒரு பங்கும்; படைபலம் பெருக்கி அதனைக் காப்பாற்ற இருபங்கும், கருவூலத்தில் சேமிக்க ஒரு பங்கும் ஆக (நாற்பங்காக்கி) வைத்துக் கொள்ள வேண்டும். ஒற்றர்கள் மூலமாக பகைவரின் நட்பினரைக் கண் காணிப்பதோடு தன் அங்கங்களான அமைச்சு, முதலியவர்களின் இரகசிய நடவடிக்கைகளையும் கண்காணித்து வரவேண்டும். தன் நாட்டில் உள்ள திருடர்கள் முதலிய தீயரைத் தண்டிக்க வேண்டும். IV—238

பரிசில்களை ஈந்து காவலர்களைப் பேணி, அவர்கள் மூலம் திருடர்களைத் தெரிந்து உடனே தண்டித்து விட வேண்டும். தாமதப்படுத்தினால் அவன் தப்பித்துக் கொண்டு ஓடிவிட்டால் அவனுக்குப் பதில் ஒருவனைப் பிடித்து வைத்திருப்பார்கள். அவனை அரசன் அறியாது தண்டித்து இகழ் அடைய நேரும். கழுவேற்றிய பெரிய செட்டி நியாயம்தான் நடக்கும்.

(கழுவிலேற்றிய பெரிய செட்டி நியாயம் ஆனது. ஒரு மூட அரசனிடம் ஒருவன் தான் கட்டிய மண்வீடு மழையில் கரைந்து சுவர் இடிந்து விட்டதால் தனக்கு நஷ்டம் ஏற்பட்டதென்றும் அவரைத் தண்டிக்கவேண்டும் என்றும் முறையிட்டான். மன்னன் காரணம் யார் என விசாரித்தான். மழைக்குக் காரணம் மேகம், மேகத்துக்கு காரணம் குயவன் இட்ட புகை, புகைக்குக் காரணம் குயவன், குயவன் சூளை வைக்கக் காரணம் யார் என விசாரித் தான். மழைக்குக் காரணம் மேகம், மேகத்துக்குக் காரணம் குயுவன் இட்ட வுகை, புகைக்கு காரணம் குயவன். குயவன் சூளை வைக்கக் காரணம் திருமண விழாச் சட்டிகள் செய்ததால் திருமண மாப்பிள்ளை, என்று கடைசியில் மாப்பிள்ளை தலையில் வீழ்ந்தது. அவனைக் கழுவில் ஏற்றுமாறு அரசன் கூறினான். அவனைக் கழுவில் ஏற்றச் சென்ற போது அவன் நான் ஒல்லியாக இருக்கிறேன். கழுமரம் பருத்துள்ளதால் அதற்கேற்ற ஆளை ஏற்றுங்கள் என்றான். அரசனும் ஏற்று அங்கே வேடிக்கை பார்க்க வந்த பருத்த உடலையுடைய செட்டி ஒருவனை கழுவி லேற்றினான் என்று கதை. இதை 'சூலப்ருது வணிக நியாயம்' என வடமொழி நியாயம் (பழமொழி) கூறும். இக்கதையை இச் செய்யுளில் பயன்படுத்துகிறார் கவிஞர். தொல்காப்பிய உரை யில் இதுபோல வேறொரு கதை வருவது ஒப்பிட்டுணரத்தக்கது) IV—239

ச. எறுக2னகு2ன் ச்2வஸக்தி அவனீஸ¬டு நாலுகு2பாள்ள மூடு2பா
ள்ளெருக2க மோசினட்டி பனிகிஷ்ட சு2ஹ்ருத்ததி தெல்ப
னொக்கபா
லெறுக2 னகு2ன் நயாட்3யமதி, இட்லு நிராக்2ரஹ¬டை2ன
சேயுனெ
த்தறி விபது2க்2ர த2ண்ட2 பரதந்த்ருடு2 காக சிரம்பு2
ராஜ்யமுன் IV—240

தே. கன்னொகடி நித்2ரவோ பெறகண்ட ஜாக2
ரம்பு2 காவிஞ்சு பூ3ருஹாக்2ரம்பு2 மீதி2
யச்ச1 ப3ல்லம்பு2 க2தி போ3க2 மனுப3விஞ்சு
னெட2னு ப2ஹிரந்தரருலபை த்2ருஷ்டிவலயு IV—241

உ. அக்ஷர பக்ஷபாதமுன அர்த1மு ஊள்ளனொச2ங்க2 உப்பு2னன்
பிக்ஷ¬ ஜடாத3ராதி2குலு பி3ன்ன நிஜவ்ரது லௌது2ரைன து2ர்
பி3க்ஷருஜா ஸிஸ¬ச்யுதுலு பெக்ககு2 ப3க்தியசாலு, கானதத்
ப்ரக்ஷ¬ பி3தத்வ மேயக3மு தார்பது2 ஸங்கதலங்கு2
மிய்யெட2ன் IV—242

க. முனுகவாரத்ரய விஜ்ஞா
பனகோர்வுமு வத்1ய கோடிபட்டுன செத2ரன்
தன கப்புடெ2 கீட2கு2னனு
ஜனமுன் பட்டுடகு முனுமே ஸச்2த்ரம சாலுன் IV—243

அரசன், அரசியல் குறித்துத் தெரிய வேண்டியவற்றில் நாலில் மூன்று பங்குதானே சுயமாகக் கற்றுத் தெளிந்திருக்க வேண்டும். தனக்குத் தெரியாத ஒரு பங்கு மட்டுமே நண்பர்கள், பெரியோர்கள் அறிவுறுத்தத் தெரிந்து கொள்ள வேண்டும். இவ்விதம் இருந்து, தற்செருக்கின்றி, இருந்தால் இடையூறுகள் யாதுமின்றி நெடுநாள் ஆட்சி புரிவான். IV—240

ஒரு கண்ணால் தூங்கி, மற்றொரு கண்ணால் விழிப்புடன் இருக்கும் மரத்தின் உச்சியில் உள்ள கரடியைப் போல, இன்பம் துய்க்கும் போதுகூட வெளிப்பகை, உட்பகைகளின் மேல் ஒரு கண் வைத்திருக்க வேண்டும் ( விழிப்புடனிருக்க வேண்டும் )
IV—241

கல்வியின் பால் மதிப்பால் கண்ணோட்டமுடன் பொருளும் ஊர்களும் தரின் செருக்கடைந்து துறவிகளும், ஆண்டிகள் முதலானோர் தம் விரதங்களைக் கைவிட்டு போகங்களில் மூழ்குவர். அதனால், பஞ்சமும், நோயும், கருக்கலைப்புகளும் (குழந்தைச் சாவுகளும்) மிகும். அவர்களை பக்தி செய்தாற் போதும் அதனால் அவர்கள் சினப்பினும் எத்தகைய பாவமும் நேராது. இது குறித்து ஐயமோ, பாவமோ வேண்டாம்.
IV—242

முதலில் மூன்று தவணைகள் கொலைக்குரியாரை மன்னித்து முறைகேட்டு நீதி வழங்க வாய்ப்பளிக்கவும். தப்பித்துக்கொண்டு போனால் அபாயம் எனக் கருதும் கொடியவனை பிடிக்கும் முன்பே ஒறுப்பதே போதும். IV—243

க. ஸௌராலாபமுலகு அதி
ஸௌருடு³ தானய்யு ந்ருபதி சோ³கோர்வதகு²ன்
வாருப்பு² து²ரந்துன, நிஜ
ஸௌரத தொ²ரலந்து² கனுடகூ² கார்யமிலன் *IV*—244

ஸா. ரேவுல்மாவு மதங்க²ஜம்பு²னு மணிஸ்ரீ க¹ண்ட² முக்தா²தி²யுன்
ரா, வாணிஜ்யமு பெஞ்சி ஏலக²னக²ன் வர்ஷம்பு
டெவ்வன்ருஜன்
ஹாவள்ளன் தி²தி²னன்ய பூ³ப்ரஜல ராஜாயாயிஜா த்யௌசிதின்
ப்ரோவங்கா² தகு² தோட தொ²ட்டி² கனுலாப்துல் சூட²
பம்பன்தகு²ன் IV—245

ஆ. ஹதனு வச்சுதா²க அபராதி³பை ரோவி
மாகி² செறுப வலயுஹதனு வேசி,
லக்ஷ்யசி²த்தி³ தா²க லாவுன ஸரமாகி²
காட² விடு²சு ச³ம்பகாடு² வோலெ V—246

ஸா. போவன் போலுலகு³ப்ரயாணத தி²னம்பு²ல் கொன்னி,
ஒண்டொண்டநோ
காவைரி க்ஷிதி, கம்பு²வில் வறத ராகா² நில்சு ஜாலுன் ப²லென்
த்ரோவன் சை²ன்யமு கூட; வைரி ப²லசா²ந் த்²ருடை²ன
பூஜாது²லுன்
போவன்போலு சரோக்தி சேதனச²தே²போ காவரிம்பன்
தகு²ன் *VI*—247

அரசன், தான் பெருவீரனாயினும் கூட தன் கீழுள்ள வீரர் களின் தற்புகழ்ச்சிகளை வெறுக்காமல் விரும்பிக் கேட்க வேண்டும். கேட்டால் அவர்கள் உற்சாகம் அடைவார்கள். (இல்லாவிட்டால் உற்சாகம்குன்றுவர்) தனது வீரத்தை வீரர்கள் மூலமே கண்டு செயலாற்ற வேண்டும்.

(ஈண்டு வீரர்கள் என்பது தன் கீழ் உள்ள அதிகாரிகள், தளபதிகள், சிற்றரசர்களைக் குறித்து வந்துள்ள சொல் ஆகும்.) IV—244

அரசன், பிற நாட்டிலிருந்துவரும் யானை, குதிரை, மணிகள் அகில் (சந்தனம்) முத்து முதலியவற்றை இறக்கிமதி செய்து, துறைமுகங்களை வளர்ச்சியுறச் செய்து வாணிபத்தை வளர்க்க வேண்டும், பிற நாட்டிலிருந்து மழையின்மை, நோய், இடையூறு களால் வரும் மக்களை அவரவர் தகுதிக்கேற்ப ஏற்றுப் பேணுதல் வேண்டும். பூங்கா, பசுமந்தைகள், கனிச்சுரங்கங்கள் முதலிய வற்றை தன்னவர்கள் மேற்பார்வையிடுமாறு பார்த்துக் கொள்ள வேண்டும். IV—245

சரியான சமயம் வாய்க்கும் வரை, குற்றவாளியின் மேல் சினத்தை அடக்கி வைத்திருந்து சமயம் வந்ததுமே, குறி வாய்த்த தும் தன் வலிமையைப் பிரயோகித்து அம்பினை எய்யும் வில்லாளியைப் போல, அவனைத் தண்டிக்க வேண்டும். IV—246

தீய பகைவர் நாட்டின்மேல் சிறு பயணம் புறப்பட்டு சில நாட்கள் இருந்து, வெள்ளம் வரவும் கிடங்குத் தண்ணீர்கூடி அலைத்துச் செல்வதுபோல, மேலும் படைகள் வந்து சேர்ந்ததும் மீண்டும் பயணம் புறப்பட வேண்டும். பகையரசன் வலிவுடையவ ரானால் அவன் செய்யும் விருந்தோம்பலுக்கு மகிழ்ந்து தன் வழிச் செல்ல வேண்டும். ஒற்றர்கள் மூலம் வலிவற்றவன் என்பது தெரிந்தால் அந்நாட்டை முற்றுகையிட வேண்டும். IV—247

ச. த்2ரவிணமு நொவ்வ, கொண்ட, னொற
த்2ராப2லதோனிடு2சுண்ட, பூ3மிகொ2ங்
தவலிகி விச்சுசுண்ட ப்ரத1மாப்தத சூட2க ஸங்கனுண்ட, லோ
பொவயு ந்ருபாளிகை அப3யமுன் மணிபூ3ஷலு கு2ப்திபம்பி, பூ3
த3வுட2ரியந்தி2ட2ந்தகு2 பி3தம், த2யனம் தி3வி மான்புகோ
தகு2ன் IV—248

க. அஹிதுடு2 வேடி2ன, ஏலெடு2
மஹி ச2க2மேனிச்சி, தெக2னி மைத்ரி கொனி, விபு3ன்
ட2ஹிப3யமு மான்பிகோ தகு2
அஹிப3யமு மஹிப3யமு கண்டெ அதி3கமு காதே2 IV—249

ச. பலுகுலு வேயு னேமிடிகி? பார்தி1வுடா2த்ம பு3ஜாப்3ருத க்ஷமா
தலமுன கு2ட்டுகீடு2 ப2ஹுதா3 யரயிஞ்சி, அடஞ்சி சஞ்சலா
க்ஷல க2மிலோ மெலங்கு2 புருஷுண்டு2னுபோலெ
அஸங்க நிஞ்சுசுன்
மெலக2ட2யேனி, ராஜ்யப1லமேயதி2? ராஜ்யமு
து2:க1லப்2திகே? IV—250

தே. பெ2த2ரி சேரனி ப2லியுனி பி2கி2ய பட்ட
கதனி மைவடி2னே வச்சி ஹத்த சேத
க்ரமமு, பெனகெ2டு ப2லுமீனு த்ராடசேது2
ஒட்டு2 கா2லம்பு வேடகாடு2பம காடெ2? IV—251

மக்கள் வருந்துமாறு வரி (பொருள்) வாங்குதல் கயவர்களுடன் ஆலோசனை புரிதல், தனது நிலத்தை பிறர் கவர அனுமதித்தல், முன்னைய நட்பினைக் கருதாது ஐயுறுதல்முதலியவற்றால் அரசன் மேல் அவநம்பிக்கை ஏற்படும். அத்தகு அரசனிடம் உள்ள அமைச்சு, அதிகாரிகள் உட்குமைந்து இருப்பர். அத்தகையோரிடம் சரணளித்தும், ஆடைகள் தந்தும் இரகசியமாக வசம் செய்து கொண்டு, பகைவரிடம் வேற்றுமையை உருவாக்கவேண்டும். முன்கூறிய குற்றங்கள் தன்னிடம் இல்லாதபடி பார்த்துக் கொள்ள வேண்டும். IV—248

பகைவன் தன் நாட்டில் உரிமை கொண்டாடினால்தான் ஆளும் நிலத்தில் பாதியேயானாலும் கொடுத்து, இடையறா நட்புப் பூண்டு வெளிப்பகையை நீக்கிக்கொள்ள வேண்டும். அதன்பின் உட்பகையை நீக்க வேண்டும். உட்பகை பாம்பினை விட பயங்கரமானதன்றோ? IV—249

பலப்படப் பேசுவானேன் (ஆயிரம் சொற்கள் கூறுவானேன்) அரசன் தான் ஆளும் நாட்டில், உட்பகைவரை பலவிதத்தும் ஆராய்ந்து தேடிப் பிடித்தழிக்க வேண்டும். தாமரைக் கண்களையுடை மங்கையரின் நடுவே உள்ள ஆண் மகன்போல (மனமகிழ்ச்சியுடன்) அச்சமின்றி வாழான் என்றால் அரசாட்சியால் என்ன பயன்? துன்பங்களை அனுபவிக்கவா அரசாள்வது? (அச்சமின்றி மகிழ்வுடனிருக்க உட்பகையை நீக்கிக் கொள்ள வேண்டும் என்பது கருத்து) IV—250

அஞ்சித் தன்னருகே வராத வலிமை மிக்க எதிரியை இறுகப் பிடிக்காமல், அவனாகவேவரும்வகையில் வளைத்துப் போடுவதே தகுந்ததாகும். பிணங்கித் துள்ளும் பெரிய மீனை கரையிலிருக்கும் தூண்டில்காரன் கயிற்றால் வசம் பார்த்துச் சுண்டியிழுக்கும் முறையே உவமையாகும்.

(பெரிய மீன் தூண்டியில் பட்டு கீழே இழுக்கும் போது தூண்டில்காரன் அதன் போக்குக்கு விட்டு மீன் தானாக மேலே வரும்போது சுண்டி இழுத்துக் கொள்வான். இல்லாவிட்டால் தூண்டிற் கயிறு அறுந்து விடும். மீன் தப்பிவிடும். அதுபோல பகைவனும் தானாகவே மாட்டிக் கொண்டு தன் வசம் வரும் போது சமயமறிந்து அடக்க வேண்டும் என்பது கருத்து.)
IV—251

சீ². து³ண்ட² பாருஷ்யம்பு², கொண்டெ²ம்பு²ன னதர்க,
மரிச²ந்தி³ கெட²யீக மரல படு²ட,
அவலி தப்பென்னி கன்ன விதே²ஸ்யு செறசுட
ப்ரதிப்ரவர்தகுன கேர்பட²க³ சேத,
ஜனு அவிஸ்வாச³ம்பு² கனுகொ²னி மெலகு²ட
விஸ்வச²னீயுனி வேர்பறசுட,
மோமோட மந்த்ரம்பு¹ தோ மிக்கி லிடு²கொண்ட
மந்த்ர பே³த்தகு ஆஜ்ஞு மறசியுண்ட,
தே. விந்தபுட்டின கனுகல்கி² சிந்த சேய
குண்ட. மான்யுல பட்டுன ஒக்க சூபெ
சூட²குண்ட விஹீனுல கூடு²கொண்ட,
வ்யச²னியை யுண்ட, சலமுண்ட, வலது²பதிகி IV—252

க. த்ரிவிதோ³த்பாதமு லொதவின,
அவனி விபு³டு² விடு²வவலயு அதி³கத்²ரவ்யம்
ப²வனீ சு²ரமுக¹ சு²ரமுக¹
பவனசக¹முக¹முல பு³க்தி ப²லிஹோமவிதி³ன் IV—253

உ. ச்²ப¹ர்த³ பரச்²பரம்பு² தொ²ரபட்டுன யோது³னிபட்டுனன்
ந்ருபுல்
வர்த³ன மொந்த² சேயதகு²; வாரி ஹிதாஹிதசர்யலொந்த² வந்
தர்தி³; மிதோ¹வ்யதாவஹ ஹித ப்ரத¹மான ச²மானதா ப்ரதா¹
தூ³ர்த³ரதாது²லன் தகி²லி த்ரோஹபுசிந்த தலம்பரேமியுன்
IV—254

ச. த³ரணிபு டெ²ந்து²னே தக²து² தாசன, ஊறட
கொக்கனின் தகு²ன்
தொ²ர னொனரிஞ்சிபம்ப, னரி து²ர்ப லுசே பெட² டா²த
ட²ர்த¹ பூ³
கரிதுரக²ர்தி³ லேக கொறகா² ட²டு
சேயத் விஜான்யுட²ல்ககுன்
நெரவகு² ஆதடு²ன் வலயு, நிண்டி²ன து²ர்க ப²லோர்வி
யீதகு²ன் IV—255

கொடிய தண்டனை, புறஞ்சொல் கூறியவர் கூற்றினை ஆராய்ந்து பாராமை, பகைவர்சமாதானத்துக்கு வரும்போது இடந்தராமல் முரண்படுதல், அயல்நாட்டிலிருந்து தன்னைச் சரண்புகுந்தாரைக் காட்டிக் கொடுத்தல், தன்னை எதிர்க்கும் முதலமைச்சர் முதலானவர்கட்குத் தெரியும்படியாகச் செயல் புரிதல், நம்பிக்கைக்குரிய ரல்லாத மக்களிடம் கலந்துறவாடல் நம்பிக்கைக் குரியவரை வேறுபடுத்தி விலக்குதல், மந்திரா லோசனையில் கண்ணோட்டம் மிகுதல், மந்திராலோசனையை வெளிப்படுத்தியவர்களை தண்டிக்காதிருத்தல்புதுமைகள் நிகழ்ந் தால் ஆராய்ந்து பார்த்து முடிவினைச் செய்யாமை, பெரியோர் களை மதித்து வணங்கி ஒரு பார்வையேனும் பாராமை, தீயோர் நட்பு, (பெண்,கள், வேட்டை முதலிய) விசனங்களில் மூழ்கிடுதல், பொறாமைப்படுதல் ஆகிய (குற்றங்களை) அரசன் கைவிட வேண்டும். IV—252

மூன்றுவகை உற்பாதங்கள் (பஞ்சம், மழையின்மை, இயற்கைச் சீற்றங்கள் முதலிய விண், மண், தேவர்களால் எனும் மூவகை விபத்துக்கள்) நிகழ்ந்தால் அரசன், பிராமணர்கட்கு அன்னதானம், தேவர்கட்கு யாகம், அக்கினி ஹோமம் முதலியன செய்வதற்கு பெருஞ்செல்வம் செலவிடவேண்டும். IV—253

அரசன், தனது அதிகாரிகள், வீரர்களுக்கிடையே போட்டிகள் உருவாக்க வேண்டும். அதனால் ஒருவருக்கொருவர் போட்டி மனப்பான்மையால் இரகசியங்களை வெளிப்படுத்துவர் போட்டி போட்டுக் கொண்டு அரசனுக்கு நலன் விளைவிப்பார்கள்.

IV—254

அரசன் எங்கும் தானாகச் செல்லக்கூடாது. தனக்குப் பதிலாக ஒருவனை அனுப்ப வேண்டும். அவன் வலிவுடன் இல்லா விட்டால் பகைவர் அஞ்சமாட்டார்கள். ஆதலின் அவனுக்கு பொருள், நிலம், யானை, குதிரைகள் நிறையத் தரவேண்டும். அந்தணனை நியமித்தால் நல்லது. எதிர்க்க மாட்டான். மற்றவர் களும் வேண்டியதுதான். கோட்டை, படைபலம் உடைய நிலத்தைத் தரவேண்டும். IV—255

க. அட2வுலு க2டி2 தே2ஸமுலவி
த2ட2முலுகா பெம்பு மாத்ம த3ரணீச்2த1லிகின்
நடு2முலவி பொள்ளு பொள்ளுக2
பொடி2பிம்புமு த2ச்2யு பா2த3 பொந்த2கு யுண்ட2ன் IV—256

ச. க்ஷம கு2ருமன்னெபுன் க2ஹனசாரி ஜனப்பெ2ட2
தோ2ஷத்2ருஷ்டி குட்2
யமு கடு2க2ங்க2 பூன்கி தெக2த2ல்கி2ன ச2ர்வமு;
பா2ஸ2 வீகி2வஸ்
யமுக2 னொனர்ப தா2டி1ககு2 னெள க2டி2கொலலலகுன்
ஸதாபரா
த3முனு ச2ஹச்2ரத2ண்ட2மு அதர்க்யமு ச2ர்வமு ஏலுவானிகின்
IV—257

தே. சி2ந்து2ர மஹாஸ்வ முக்1யமுல் சேர்கு தெள2ல
தீ2வி வணிஜாலகூள்ளு சத்க்2ருஹமுலு புரி
கொலுவு தேஜம்பு2 வெலமேலு கலுக2 ப்ராத
வாரிகா2 சேயுஅரி னவி சேரகுண்ட2 IV—258

தே. க2டி2 ந்ருபுலராயபா2குல யெட2 கொலுவுன
ச2ரச2 ச2ல்லாபமுலு ராஜு ச2லுபவலயு
கார்ய க1ட்2க2மு லனுசருல் கான பலுக
வலயு; அவி மைத்ரி தா தேல பலுகவலயு IV—259

எல்லைப்புறக் காடுகளை நெருக்கமாக வளர்க்கவும், உன் நாட்டுக்குள்ளே இருக்கும் சிறு காடுகளை, திருடர்கள் தொல்லைகள் நேராதவாறு துண்டு துண்டாக அழித்து விடவும். IV—256

புகுதற்கரிய காடுகள் (மன்னியம்) தன்னில் வசிக்கும் காட்டு மக்களிடம் தப்புகளை ஆராய்வது மண் குடிலை நீரால் கழுவுவது போலாகும். ஆதலின் அவர்களைபரிசில்கள் தந்தும், உண்மையான நட்புடனும் நடந்துகொள்ள வேண்டும். எதிரிகள் மேல்படை எடுக்கும் போது துணையாவார்கள். எல்லைப்புறக்கொள்ளைகட்கு உதவுவார்கள்· நூறு குற்றங்களும், ஆயிரம் தண்டனைகளையும் எல்லாம் பரிபாலிக்கும் அரசன் பொருட்படுத்தக் கூடாது.

(குற்றம்புரியும் இயல்புடைய காட்டு மக்களின் மேல் கடுமையான குற்றச்சட்டத்தைப் பிரயோகித்து அவர்கள் வெறுப்பைச் சம்பாதிக்கக் கூடாது அவர்கள் போக்கறிந்து நிதானமாக தண்டித்து ஆள வேண்டும் என்றும் அரசன் ஆட்சியில் குற்றங்களும்› தண்டனைகளும் இயல்பாதலின் பெரிது படுத்திக்கொள்ள வேண்டாம் என்றும் கூறுகிறார்) IV—257

யானை, குதிரைகளைக் கொண்டு வரும் தொலைதூரதீவுகளிலிருந்து வரும் வணிகர்கட்கு, ஊர்கள், நகரில் நல்ல வீடுகள், தரல், கொலுவில் தரிசனம் தருதல், பரிசுகள், நல்ல விலை தருதல் முதலியவற்றால் பழமை பாராட்டும் நட்பினனாக்கிக் கொள்ள வேண்டும். (யானை குதிரைகள்) பகைவர்க்குக் கிட்டாதவாறு பார்த்துக்கொள்ள வேண்டும். IV—258

எல்லைப்புறத் தரசர்களின் தூதர்களிடம் கொலுவிருக்கும் போது அரசன் சரசசல்லாபங்கள் (இனிமையான பேச்சுக்கள்) செய்ய வேண்டும். தனது அதிகாரிகள் அவர்கட்கு முன் எல்லைப்புற விவகாரங்களைப் பற்றி கடுமையாக விவாதிக்க வேண்டும். எனினும் தான் மட்டும் மென்மையாக நட்புடன் இருப்பதாக (நடித்து தன்னதிகாரிகட்குசமாதானம் செய்து) பேச வேண்டும். IV—259

தே. தாநவம்பு2க2 தொ2ர கேயுவானி மந்த்ர
முனகு வேக2மெ லோ சேயசனது2 வாடு2
க்ரொத்த மன்னன ரஹி அனுகு2லகு செப்ப
னயின அதி3 செடு2, மடிவாடு2 அட2கு2கான IV—260

சீ2. ஹிதப2ஹுஸ்ருத த3ர்மரத ஸுரதா ச்2வபூர்
வதல மன்த்2விஜுல து2ர்க2முலு நிலபி,
புலிஜுன்னு மொத2லுகா2 புருஷாயு ஷாவதி3
கந்து2ண்ட2 ச2வரணல் பொங்து2 பறிசி,
சீமந்தயைனனு சா2மந்தகோடிகி
மிதமு தப்பக யுண்ட2 க்ஷிதுலொச2ங்கி2
யாயாதி3க வ்யயா அதி3கம்பு2னுன் ப்ரஜா
விருஜம்பு2 காக2 ப2ண்ட2ருவு கூர்சி

தே. க்ஷீண ரிபு தா3த்ரி சர த்2ருஷ்டி சேதசூசி,
ப2கஹட1 க2தி க்2ரஹிஞ்சி, தாப்ரஜயு நொவ்வ
கய பக2ற கா2த்ரமுலனெ சீகாகு பறுசு
ந்ருபதி டெ2ந்தா2ன சேயிடி2 நித்2ரபோவு IV—261

க. எச்சோ க2ஜ கோட3ட க்ரய
தச்சர்வண சு3ப3ட ஜீவித த்2விஜ சு2ரபூ
ஜோச்ச நிஜபோ3க2முல ககு2
வெச்சமு வெச்சம்பு2 காது2 வித்தம்பு2னகுன் IV—262

ஆ. ப்ரதின வலது2 வைரிபட்டுன ந்ருபதிகி,
த2ண்டு2 வெட2ல தீறகுண்டு2 தீறு
காக உண்டி2 உண்டி2 காலாந்தரமுனனெள
கார்ய காடொ2 யங்ககாடொ ந்ருபுடு2 IV—263

புதிய அதிகாரிகளையும் மந்திராலோசனையில் விரைந்து இடம்தரக் கூடாது. அவன் செருக்கினால் தன் நண்பர்களிடம் பெருமை பேசும்போது உண்மையைச் சொல்லிவிட அதனால் காரியமும் கெடும். அவனும் அதனால் கேடுறுவான். IV—260

தனது நலம் நாடுவோர், அறிஞர்கள், நன்னெறியாளர்கள், வீரர்கள் மரபுரிமையான செல்வத்துடன் வாழ்வோர் ஆகிய அந்தணர்களை கோட்டைக் கதிபதிகளாக நியமித்தும், புலிப்பால் வேண்டினும் கிடைக்குமாறு நூற்றாண்டு வாழும் நிறைசெல்வ வளங்கள் சேர்த்தும், எறும்பள வாயினும் ஏற்றத்தாழ்வின்றிநிலம் பகிர்த்தளித்து சிற்றரசர்களைப் பேணியும் வருமானம் அதிகமாகவும் செலவு குறைவாகவும் அமைய மக்களைத்துன்புறுத்தாதவாறு கருவூலத்தைச் சேர்த்தும், வலி விழக்கும் பகைவர் நிலங்களை ஒற்றர்கள் எனும் கண்கள் மூலம் பார்த்து கொக்கினைப் போல சமயமறிந்து கவர்ந்து தானும் துன்புறாமல் தன் மக்களும் துன்புறாமல் காப்பாற்றி, பகைவர்கள் அஞ்சும்படியாகத் திகழ்கின்ற அரசன் மார்பில்கைவைத்து நிம்மதியாகத் தூங்குவான்.
IV—261

யானை, குதிரைகளை விலைக்கு வாங்கவும், அவற்றை மேய்த்தற்காகவும், வீரர்களது சம்பளத்திற்காகவும், அறிஞர்களைப் போற்றவும், கடவுளை வணங்கவும், தான் அனுபவிப்பதற்கும் ஆகும் செலவு செலவல்ல என்றும், அரசன் தனது செல்வத்தை இவற்றுக்காகத் தாராளமாகச் செலவளிக்கலாம்.
IV—262

அரசனின், எதிரிகள் மேல்சபதம் செய்தல் கூடாது. படையெடுப்பில் வெற்றி கிட்டலாம். கிட்டாமலும் போகலாம். பின் நாளாவட்டத்தில் வெற்றியாகலாம். ஆதலின் காரியத்தில் நாட்டமிருக்க வேண்டுமின்றி கலகத்தில் நாட்டம் இருத்தல் கூடாது. IV—263

க. போரானி பட்ல பொடு2சுட
வைரிப2லமு திருக2 ஜயமொ ச்2வர்க2மொயகு2; நா
நாரூப யந்த்ரத த்ப்ரா
காராது2ய பட்ல ப்ரஜனெ கவியிம்ப ணகு2ன் IV—264

ச. மனமுன கொண்டு2 ரெண்டு2 மறுமந்த்ரமுலன் ச2ரிபோவ
செப்பினன்
ஜனபது லாதனின் பிலுவ சா2கு2து2; ராக2தி சா2ரெ பில்சுனச்
சனுவுனகே த3னாதி2கொனி ச2ங்க2தி காணிவி க்ரொவ்வி
சேயசெப்
பு;ந்ருபதி தத்ப2ஹிஸ் சரிதமுன் ஜருசே பரிகிம்பகா2 தகு2ன்
IV—265

க. க2டி2வாடு2 செடு2னயே தகு2
செட2 சேயுட; செட2த2யேனி செல்மியெ தகு2;பை
க2டி2வாடே2 பனிககு2 தன
க2டி2வாட2ரியைன, தனகெக2டி2 காவப2டு2ன் IV—266

தே. ராஷ்ட்ர மெரியிம்பு கொனுமு து2ர்க2முலு, தத2வ
ரோத3மக2பட்ட2 புட்டிண்டு ரூடி3 நெரபு,
பருச2முலு தத்ரிபுல ராயபா2ரு லெது2ட
பலுககுமு; சந்தி யொகவேள வலசி2யுண்டு2 IV—267

(பகைவர் மேற்படை எடுக்கும்போது) தப்பிச் சொல்ல முடியாத இடங்களில், பகைவரைச் செலுத்தி, அவர்கள் (வேறு வழியின்றி) வெற்றியோ, வீரமரணமோ என்றுபோரிடும்போது (தீவிரமுனைப்புடன் போரிடுவார்கள் ஆதலின் தனது படைக் கருவிகளைப் பயன்படுத்தி தான் செல்லாமல், தன் படைகளைச் செலுத்திப்போரிடவேண்டும். IV—164

இரகசிய ஆலோசனைகளில் ஓரிரண்டுமுறை சரியான யோசனைகள் சொல்லி ஒருவனை மனதுக்குப் பிடித்துவிட்டால் அரசர்கள் அவனையே மீண்டும் மீண்டும் அழைக்கத் தொடங்குவர். அப்படி அடிக்கடி அழைக்கும் செல்வாக்கினைப் பார்த்து மக்களும் அவனிடம் பணம் (லஞ்சம்) தந்து தகாத காரியங்களையும் நிறைவேற்றுமாறு செய்விப்பர். அவனும் செருக்குற்று செய்யும்படி செய்யுவான். அரசன் அத்தகையனின் வெளி நடவடிக்கைகளை (லஞ்சம் பெற்றுச் செல்கின்றனர் என்று) ஒற்றர் மூலம் ஆராய்ந்து பார்த்தறியவேண்டும். IV—265

எல்லைப்புறத்தரசன் கெடுவான் என்றறிந்தால் கேடுறச் செய்ய வேண்டும். கேடுறான் என்றறிந்தால் நட்பாடலே நல்லது. அவனுக்கடுத்துள்ள எல்லைப்புறத்தவனே நமக்கு உதவுவான். இவன் அவனோடு போரிட்டால் நம் எல்லைக்குக் காவலாக அமைவான் (பகைவனுக்குப் பகைவன் நண்பனாதலின் நமக்கு உதவிபுரிவான்.) IV—266

பகை நாட்டைப் பாழ்ப்படுத்துக! கோட்டைகளை வசப் படுத்துக. அவர்களது அந்தப்புர மகளிர் அகப்பட்டுக் கொண்டால் அவர்களது பிறந்தகம் போல் மரியாதையுடன் நடத்துக. பகையரசர்களின் தூதுவர்கள் முன்பாக கொடுஞ் சொல்கூறவேண்டாம். ஒருவேளை அவர்களோடு சந்தி (அமைதி யுடன் படிக்கைகள்) செய்து கொள்ள நேரலாம். IV—227

ஆ. ஆபி3சாரி க2னகராம்பு2 தூ2ஷித ருங்னி
ரந்தராத்2ரி க2ஹனத2ந்து ரோக்2ர
கீகடோர்வி மேருகி2ரி ச2மார்த1மு வச்சு
னேனி சொரகு பம்பு மிடு2மு கொனக2 *IV*—**268**

க. ராணிம்ப பல்கி தனபனி
ஜாணகொனு, கொலுசு ச2ந்தச2பு தறி, தொலகுன்2
த்ராண செட2 கவுடு1 மானிபி;
நாணெ மெறுக2 ப2ச்சு காக2 நரபதிகி தகு2ன் *IV*—**269**

சீ2. தஜ்ஜரு மண்ட2லி கூர்சி, தா3துவுல் தெலிசி2, ஹே
மாது2ல கொனி, ப்ரக்ருத்யனுகு2ணால்ப
ஜீவனாஹ்ருதுலசே செலகி2 மஹாப2லோத்2
ரேகம்பு2 மர்த3ன ரித்த சேசி2
ச்2நேஹார்த்2நட2கு2சு அஸேஷம்பு2 போஷிஞ்சி
நரவர்ணமுல தப்பு ச2ரணு லுடி2பி,
ச2தத த்2விஜ ப்ரதிஷ்டா1 ஸாலியை ப2லி
யிஞ்ச பட்டுலு ப2லியிஞ்சி, பலுச

தே. சேயுபட்டுலு பலுசகா2 சேசி2 தேஜ
மெச2க2 ஸோத3ன மறவக எச3க2வலயு
சா2ங்க2 ராஜ்ய மொகெத்துக2 ச்2வாங்க2ராஜ்ய
மொக்க யெத்துக2 ந்ருபதி ஆயுஷ்ய பரத *IV*—**270**

அபிசாரம் (பில்லிசூனியம் முதலிய மந்திர தந்திரப் பிரயோகங்கள்) நஞ்சுகலந்த நீர், முதலியவற்றால் கூடியதும் நிரந்தர நோய்களையுடையதும், மலை, காடுகள் நிறைந்ததும், கொடிய மிலேச்சர்களால் நிறைந்தது மான பூமிக்குள் மேருமலை யளவு பொன் கிடைத்தாலும் புகல் வேண்டாம். அந்நிலத்தைக் கைப்பற்றி வேண்டின் படைகளை மட்டும் அனுப்ப வேண்டும்.
IV—268

இனிமையாகப் பேசி தன் காரியத்தை நிறைவேற்றிக் கொண்டு, மகிழ்ச்சியான நேரங்களில் திறமையுடன் பழகிக் காரியம் நடக்காதெனின் விலகிச்செல்லும் வஞ்சக மனிதனின் நாணயத்தை (இந்நாணயம், செல்லுமா செல்லாதா என்று அறியும்) வியாபாரியைப் போல அரசனும் அறிந்திருக்க வேண்டும். IV—269

அறிந்த ஞானிகளை அழைத்து, தாதுக்களை அறிந்து தங்கம் முதலியன ஏற்று, இயல்புக்கேற்றபடி அளவறிந்து நடந்து, அன்புடன் உடல் நலனும் மக்கள் நலனும் பேணி, தன்னுடல் ஒரு பங்கும் அரசியல் ஒரு பங்குமாகச் சமமாக மதித்து நீண்ட ஆயுளுடன் அரசன் வாழவேண்டும்.

(இந்த பாடல் சிலேடை மூலம் உடலுக்கும் அரசியலுக்கும் உவமை காட்டி அமைந்தது. அதன் பொருள்) அரசன் தன் வாழ்நாளில் நலமுடன் அரசாள, அறிந்தவர்கள் மூலம் தன் நாட்டில் தங்கம் முதலிய கனிவளங்கள் (தாதுக்கள்) இருப்பிடம் அறிந்து அதை எடுத்தும், மக்கள் வருமானத்தில் சிறிதளவே வரியாகப் பெற்றும், செருக்குடன் அநீதிபுரிபவர்களைத் தண்டனை மூலம் அடக்கியும், அருளோடும், எல்லோரையும் பேணி, சமூக நீதிகளைக் குலையாமல் பாதுகாத்து, அந்தணர்களை கௌரவித்தும், மக்கள் குறைந்த இடங்களில் மக்களை குடியமர்த்தியும், இடமில்லாதவர்கட்கு இடம் தந்தும், தீய பகைவரை அழித்தும், வளமோடு தன்னுடல்போல நாட்டையும் காக்க வேண்டும் என்பது ஒரு பொருள்.)

[அரசன் தன் ஆயுளை நீட்டிக்க விரும்பி தாதுக்களை அறிந்து, வைத்தியர்கள் மூலம் தங்கப்பற்பம் முதலியவை ஏற்றும், உடல் முழுதும் பேணி பருத்திருக்க வேண்டிய மார்பு, தோள்களை பருக்குமாறும் மெலிந்திருக்க வேண்டிய இடை, வயிறுகளை மெலியுமாறு உடற்பயிற்சிகள் செய்தும், உடலை சுத்தம் செய்து கொண்டு தன் உடலை தனது நாடு போலவே காக்க வேண்டும் என்பது ஒரு பொருள்.) IV—270

சீ2. சௌ2 க1ஸாயனிக பி3ஷக்பூர்வகமு கல்ய
வேள கார்தாந்திக த்2விஜுல கோ2ஷ்டி1,
ஜாமுவோவ அமாத்ய சா2மந்த பூர்வகம்
ப2ர்தா1ர்ஜனச்த1 காயச்2த1 கோ2ஷ்டி1,
தி2னமத்3யமமுன மர்த2ன மல்ல பூர்வகம்
ப2கு3சூ2த2சூ2 பக்ருன் ம்ருக2யு கோ2ஷ்டி1,
அபராஹ்ணமுன தே2வதார்சனா பூர்வகம்
பா2ர்ய த3ர்மா தி3க்ருத்2யதுல கோஷ்டி1,

தே. பு3க்திமீத2 விதூ2ஷக பூர்வகமு பு
ராண கவி கோ2ஷ்டி1 சாரபூர்வகமு ச2ஞ்ஜ
ஜாமு கா2யக கோஷ்டி1 நிஸன் சு2ஷுப்தி
பூர்வகமு ப்ரேயசீ1 கோ2ஷ்டி1 பொச2கு2 பதிகி IV—271

க. ஹிதுலு ஹிதா ஹிதுலு ச2தா2
ஹிதுலுனுனை ராஜுனெட2ல னிடுத்ரி வித3முனன்
க்ஷிதி னனுசரு லுந்து2ரு ச2ந்
ததமுன்; மறிவாரி தெல்பெத3ன் வினுமனகா3 IV—272

ச. ஹி துலு பி3ஷக்க2ரஹஜ்ஞு பு2த3ப்2ருந்த2 கவீந்த்2ர
புரோஹிதுல் ஹிதா
ஹிதுலு த3னார்ஜனாதி ந்ருபக்ருத்ய நியுக்துலு வெண்டி
கேவலா
ஹிதுலு தஸாவஸார்பித ச2ம்ருத்த3 ரமாஹரணே
ச்சு1லௌடனா
ஹிதமுனு அட்லகா சதுர வ்ருத்தி சரிஞ்சுட நீதி றேனிகின்
IV—273

ஆ. பாத்ரபூ3து லெச்ச2 பரிகிஞ்சி, அதட்டு2
க2கயு ஒகடு2 செப்பகயு முனுபுக2
பனச2 பண்ட்2லு தி2கி2ன பரிக2 ச்2வப்னமு கன்ன
நெறிக2, ஒச2கி2 வெறகு2 பறுசு டொப்பு IV—274

அரசன் அதிகாலையில், நலமாகத் தூங்கினாயா எனக் கேட்கும் மருத்துவர், சோதிடர் முதலிய அந்தணர்களோடு பேசிக் கலந்திருக்க வேண்டும். பின் விடிந்த பிறகு ஒரு நாழிகை கழித்து, மந்திரிகள், அதிகாரிகளோடு பேசி, அரசாங்க வரவு செலவுகளைப் பரிசீலிக்க வேண்டும். பின் நடுப்பகலில் உடலைப் பிடித்துவிடச் செய்யும் (மர்த்தனம்—மசாஜ்) மல்லர்களோடும், சமையற்காரர்களோடும், வேட்டைக்காரர்களோடும், கலந்து பேசி, உடற்பயிற்சி, விளையாட்டு, உணவு முதலியனவற்றைப் பற்றி கலந்தாய்தல் வேண்டும். பிற்பகலில் கடவுளை வணங்கி, அறிஞர் அந்தணர்களுடன் பேசி மகிழ வேண்டும். மாலை, உண்ட பின் விதூசகனுடன், கவிஞர்களுடனும் பேசிமகிழ்ந்தும் பின் முன்னிரவில் ஒற்றர்களுடன் பேசிவிட்டு இன்னிசைப் பாடகர் களுடன் கூட இருந்து இசை கேட்டு மகிழ வேண்டும். இரவில் நல்ல தூக்கமும், காதலியருடன் கலந்தின்புறுதலும் இருக்க வேண்டும். IV—271

நண்பர், நட்பும் பகையும் உடையவர், பகைவர் என மூன்று விதமாக சேவகர்கள் அரசனிடம் என்றும் இருப்பார்கள். அவர் களைப் பற்றிச் சொல்லுகிறேன். கேட்பாயாக! IV—272

அரசனுக்கு மருத்துவன், சோதிடன், அறிஞர், கவிஞன், புரோகிதன், முதலியவர்கள் அரசனின் நலமே நாடும் நட்பினரா வார். நட்பும் பகையும் உடையவர்கள் வரி வசூலிக்கும் அதிகாரிகள், முதலியவர்கள் ஆவார்கள். (இவர்கள் தமது பணம் வகையில் புரியும் குற்றங்களைக் கண்டு அரசன் தண்டிப்பானோ எனப் பகைமையுணர்வும் கூடக் கலந்திருப்பர்) பறிமுதல் செய்யப் பட்ட செல்வத்தினையுடையவர்கள் பகைவர் ஆவர். (பறிமுதல் செய்த பணம், சொத்துக்களை மீட்டுப்பெற விழைந்து பகைமை பாராட்டுவர்) ஆதலின் இந்த மூவகையினரிடமும் தான் பகைமை பாராட்டுவது வெளித் தெரியாமல் சாதுரியமாகவும் நீதியுடனும் நட்பினருடன் நட்புடனும் பகைவரிடம் பகையாகவும் நடந்து கொள்ள வேண்டும். IV—273

தகுதியுடையவர்களை நன்காராய்ந்து, அவர்கள் கேட்கு முன்பே, ஒருவர் சொல்லும் முன்பே, பலாப்பழம் காய்த்துத் தொங்குவதுபோல, கனவுகண்டாற்போல, நிறையத் தந்து வியப்பில் ஆழ்த்த வேண்டும்.

(பலா, பூக்காது காய்த்தலின், காய்க்கும் எனும் பூவாகிய முன்னறிவிப்பின்றி திடீரெனப் பிஞ்சுகள் விடும். அதுபோல அரசன் முன்னறிவிப்பின்றி பரிசுகள் தந்து வியப்பில் ஆழ்த்த வேண்டும் என்பது கருத்து)

"அபிகம்ய க்ருதே தானம் த்ரேதாஸு ஆஹூய தீயதே
த்வாபரே

யாசமானாய சேவயா தீயதே கலெள,''

பராசரஸ்மிருதி

(கிருதயுகத்தில் தானே சென்று கொடுத்தார்கள். திரேதா யுகத்தில் அழைத்துக் கொடுத்தார்கள். துவாபரத்தில் கேட்டுக் கொடுத்தார்கள். கலியுகத்திலோ தொண்டு செய்தால் கொடுத் தார்கள்'' என்பது சுலோகம்.) IV—274

க. பித்ரு தே2வக்ரிய லனு விதி3
பித்ருக்ரியலெ சூ2க்ஷமலகு2ட பித்ருப3க்துட2வை
ஸ்ருதி ஸ்லத பஸ்ஸாந்தாச்
யுத ப3க்துல கொச2கி3 பனுபுமுன்னத க2திகின் IV—275

க. தா2னமு த்3விஜரக்ஷணகுனு
ஜ்ஞானமு நிஜரக்ஷணகுக2 ஸரணமு சொருமெந்
தே நாராயணு, ராஜ்யாந்
தே நரகம் த்3ருவ'மடண்ட தீறுனெ யொண்டன் IV—276

தே. ஆலி பதிப3க்தி, ச்2த்ரீபும்ச2பாளி வாவி,
யதி வஸித்வமு, தி2கு2 ஜாதுலக்2ரஜாதி
னனுச2ரிஞ்சுட, ஹிதல்ருத்தி அதி3பு பனிகி
ப்3ருத்யு டொ2த2வுட2 ந்ருபத2ண்ட2 பீ3தி சும்மு IV—277

ஆ. சம்பி தா3ர்மிகுண்டு2, சதி பொங்தி2 மஹிப்2ரம்ஹ
சாரி, பொ2ங்கி ச2த்யஸாலி, ஆர
கி2ஞ்சி ச2து2பவாசி2, கேடிஞ்சி ஸாருடு2
சிந்தி2 த3னியு, னகு2 விசித்ர ச2ரணி IV—278

பிதுர்பூசை, தேவபூசைகளில், பெற்றோர்க்கியற்றும் கடனே சிறந்ததாதலின், பெற்றோரிடம் பக்தியுடையவனாகி, கற்றடங்கிய ஒழுக்க சீலர்கட்கும் வைணவ பக்தர்கட்டும் தானம் தந்து பிதுருக்களை நற்கதிக்கு உய்ப்பாயாக. IV—275

தானம், அறிஞர்களைக் காப்பாற்றவும், ஞானம் தன்னைக் காப்பாற்றவும் ஆமென்றுணர்ந்து, ஸ்ரீமந் நாராயணனைச் சரண் புகுக 'ராஜ்யாந்தே நரகம் த்ருவம்' (அரசாட்சியின் முடிவில் நரகம் நிச்சயம்) எனும்பழமொழி யோர்ந்து அவனைச் சரண்புகுவதன்றி வேறு வழியில்லை. IV—276

மனைவியின் பதிபக்தி, ஆண்பெண்களின் ஒழுக்க மரியாதைகள், துறவிகளின் புலன் அடக்கம், கீழ் சாதியினர் மேல் சாதியனரை மதித்து நடத்தல், சேவகர்கள் அரசகாரியங்களில் நன்னடத்தையுடனிருத்தல், எல்லாம் அரசனின் தண்டனைக்கு அஞ்சித்தான் என்பதை உணர்தல் வேண்டும்.
IV—277

அரசன் விசித்திரமான முறையில் (கயவர்களை) கொன்று தருமவான் ஆகவும், மனைவியை (பருவகாலங்களில் மட்டும்) கலந்தின்புற்று பிரம்மச் சாரியாகவும், பிறர்நலத்துக்காகப்) பொய் சொல்லி சத்தியவான் ஆகவும்.* (ஒரு நாளுக்கிரு முறை மட்டும்) உணவுண்டும் உபவாசியாகவும், (பெரியார்களிடம் மதித்து) விலகிச் சென்று வீரனாகவும், (நல்லோர்க்குத் தானம் செய்வதில் செலவழித்துச்) செல்வந்தனாகவும், திகழ வேண்டும். IV—278

---

* பொய்மையும் வாய்மை இடத்த புரைதீர்ந்த
நன்மை பயக்கு மெனின்—குறள்

ஆ. ப்ரணிதி3 ச2வ ,ர க்2ருஹியு, பா3விது3டு3 ப்ரணி
த்2யந்தரா விது3ண்டு3 ணகு2; அதண்டு2
லிங்க2மாத்ர க்ருஸ"டு2 லிப்சா2திக2 த்2ரவ்ய
தா2ன த3னியு காகதறிய டொ2கடு2 IV—279

க. தனுப்2ருஸ த2மனஜ சு2க்ருதமு
த3னத3த்தின கொனக3 வலயு தத்தத்2ருதுகமர்
த்2ன மஜ்ஜன போ3ஜன லே
பன வச2ன ப்ரச2வ வஹன பரதன் பதிகின் IV—280

க. நாநாவித3 ஷாட2ப2முல
னானு ந்ருபாஹாரமெபுடு2, அபராஹ்ணமுனன்
கானி மறி ஸ"த்த3 கோஷ்ட1த
கானி தமின் பு3க்தியெபுடு3 கடு பத்1ய மகு2ன்
IV—281

க. வினு, வர்க2 ச2மத ந்ருபுடு3ன்
னனு, த3ர்மாம்ஸம்பெ3 ஹெச்செனா பெறமடி2கெத்
தின நீருனு தெகி2 அலரா
ஜனபு மடி2கி எக்கினட்டு சனுமுத2 மந்த2ன் IV—282

க. வெலயிஞ்சுனட்டி யொகமணி
வெலு காஸன் கொ3னுமு, த3ரணி வெண்டி2 சு2வேஷா
ஜ்வலதமு வலதே2 வாச2ர
முல மனுல விபூ3ஷணமுலு பூ3பதி தால்பன்? IV—283

ஒற்றன், அரசன் உள்ள ஊரில் இருப்பவனாகவும், பல்வேறு மொழிகள் தெரிந்தவனாகவும், பிற நாட்டு ஒற்றர்களை அறிந்தவனாகவும் அடையாளம் காணும் சின்னம் எதுவும் அற்றவனாகவும், பல்வேறு வேடதாரியாகவும், இருக்க வேண்டும். இப்படி இல்லாதவன் ஒற்றனாக வரமாட்டான். IV—279

அரசன், அந்தந்தக் காலத்திற்கேற்றவாறு, உடலைப் பிடித்து விடுதல், குளிப்பு, உணவு, மெய்ப்பூச்சு, உடை, மலர்கள் தரித்து இவற்றில் ஆர்வமுடன் இருந்து, உடலை வருத்தி மெலியச் செய்வதால் (உபவாசங்களினால்) ஏற்படும் புண்ணியத்தை பொருட் கொடையாலே பெற்று உய்தல் வேண்டும்.

(தவம் செய்தல் வேண்டா தானம் செய்தல் வேண்டும் என்பது கருத்து) IV—280

எப்போதும் பல்வேறு சுவைகளையுடைய உணவும் அரசனுக்கு இருத்தல் வேண்டும். நடுப்பகல் கழிந்ததும் உண்ண வேண்டும். பசித்துச் சாப்பிடவேண்டுமேயன்றி சுவை விருப்பிற்காக உண்ணுதல் கூடாது. இது உடல் நலத்துக்குரியதாகும்.
IV—281

(அறம் பொருள் இன்பம் எனும்) முப்பாலிலும் சமமாக முயன்று அரசன் இருந்தாலும் அறத்துக்காக அதிகம் செலவானாலும், அதுவே சிறப்புடையதாகும். பிற வயல்கட்குப் பாய்ச்சிய நீர்கரையுடைந்து செந்நெல் வயலில் பாய்ந்தது போல அது மகிழ்தற்குரியதாகும். IV—282

ஒளிதரும், சிறப்பினையும் நல்கும் ஒரு இரத்தினத்தை அரசன் புகழ்மிகுமாறு அணிய வேண்டும். வாரந்தோறும் கிழமைக்கேற்ற மணிகளையும் அணிந்து அரசன் ஒளிர்தல் வேண்டும்.

(தோற்றப் பொலிவுக்கும், செல்வச் செழிப்புக்குமடையாளமாகவும் மிகச் சிறந்த வைரம், முத்து முதலிய மணிகளை அணிய வேண்டும் என்பது கருத்து. ஆங்கில அரசாட்சியின் மாண்பின் குறியீடாக, மணிமுடியில் 'கோஹினூர்' வைரம் பிரகாசித்தது குறிப்பிடத்தக்கது). IV—283

க. சேயுனதி2 ராஜ்யமட, அக2
மேயவதி3க2 னீகு2வார மேமன சனதா2
ம்னாயம்பு2 அஸக்யானு
ஷ்டே1யமு செப்பது2 ச்2வஸக்தி சேயக3 செப்புன் IV—284

வ. மனு த2ண்டத3ராது2லு விஸேஷிஞ்சி தோ2ஷம் பெ2றிங்கி2
த2ண்டி2ஞ்சியெ த3ர்மவருலன பரகி2ரி; ப்ரஜாபாலனம்பு2
பனிகா2 ப்ரஜாநாது1ண்டு2 ப2ஹுமுக1ம்பு2லன் புட்டிம்பன்
புட்டி விராட்ச2ம்ராட் ப்ரப்3ருதி வேதோ2தி3த ஸப்2த2
வாச்யுண்டை2 தே2வச2த்2ருஸண்ட2கு2 மூர்தா3பி3ஷிக்துடு2
சோ2கோர்சி இலகு அகு2 அலஜள்ளு தீர்சினன் காக ஜன்மம்பு2
ச2ப1லம்ப2கு2னெ; கேவலேந்த்2ரிய ப்ரீதி ப2ந்தீ2க்ருத
பரகளத்ர பதி1கபரிஷத்ப்ரஹரண ப்ராப்த வித்தம்முல பாடச்சர
ப்ரபு3லகுஜருக2தே2? இந்த லாம்பட்ய மேமிபனி யனி அவனி-
யேட2னவன வைமுக்1யம்பு2 செல்ல தெ2ட்லனின தொல்லி
க்ருதயுக2ம்பு2ன க்ருத வீர்ய நந்த2னுண்ட2கு2 ச2ஹச்2ர
பா2ஹுண் டா2த்மீய தோ2ச்ச்2தம்ப3 ச2ம்ப்3ருதயகு2 ஈ
விஸ்வம்ப3ர ஏத்2வீபம்பு2ன ஏநாட ஏவீட ஏத்ரோவ ஏக்ரேவ
ஏவேள எவ்வ டே2மி சேயன் தலஞ்சு அப்புட2ந்த2ந்து2 அசி2
முச2ல சாபாதி2 ஸச்2த்ராச்2த்ர தா3ரியை தோசி ஆஜ்ஞயிடு2;
அட்லாஜ்ஞ யிட2 அந்திமம்ப2கு2 ஈயுக2ம்பு2ன யுகா2னு
சா2ரம்பு2கா2 மித சா2ரம்ப2கு2 ராஜலோகம்பு2னகு ஸக்யம்பு2
காது2கதா2? ஒக்க ராஜலோகம்பு2னகன னேல? இக்காலம்
பு2னந்த2லி பூ3சு2ருலகு அக்காலம்பு2னந்த2லி பூ3மிதி2விஜுலகு
கலஸக்தி யுன்னதெ2? ஒக்க பா2ட2பு2ண்டு2 கட2லிநீரு
க்2ருக்கன் கொனியெ, ஒக்க விப்ருடு3 ச்2ருஷ்ட ச்2ருஷ்டிகி
ப்ரதி ச்2ரஷ்ட யய்யெ, ஒக்க ப்2ராம்ஹணுண்டு2 ப்2ரம்ஹ
த2ண்ட2ம்பு2ன ப்2ரம்ஹாச்2த்ரம்பு2 வாரிஞ்செ, அட்டி
யனுஷ்டா1னம்பு2 மாகு லேதிந்தே2மி ப்ரயோஜனம்ப2னி
ஸக்த்யனுஷ்டா1னம்பு2 வீரிகி விடு2வ வச்சுனே? வீரிதருல
குபாச2னீயுலு காகபோயிரெ? காவுன சா2வதா3னுண்ட2வை
ஸக்திகொலதி ஸ்ருதத்ருஷ்டம்பு2 லுபேக்ஷிம்பக ரக்ஷண
ஸிக்ஷணம்பு2 லாசரிஞ்சுசு அஸக்யம்புன காாத ஸரணாகத
ரக்ஷகுண்டகு2 புண்டரீகாக்ஷு மீத பா3ரமபிடி2 அனஹங்-
க்ரிதி ப்ரவர்தில்ல எல்ல ச மசி த்து லு கரச் த1ம்பு லகு2, அதி2
அட்லுண்டே2, அடலயின பட்டப த்து3ண்ட கு ராஜு
த3ர்மம்பு னந்த2 த்2ருஷ்டியிடி நடு வவலயு; வருண வைஸ்ர-
வண வாயு வைஸ்வானர வாச வாது ல ஜ மம்பு லுனு ப2ஹு
ப3வாரப் த3 க்ரியா லப் த3மபு ல பூ பு3வசச் வராது லகு2
இஜ்ஜக ம்பு லுனு த3ர்ம ப்ரதிஷ்டி தம்பு லு காவுன ததா சரண
சணுணட-வை ருணத்ரயம்பு னு ஈகி ச மானுலந்து த்தம
ஸ்லோகுண்ட2வை ராஜ்ய பரிபாலனம்பு சேயுமனி அபி3ஷிக்
துன்சேசெ2, 'இதி மதீய ப2க்தி ப்ரபா3வம்' ப-னி அம்பு2ஜாலய
கானதிச்செ IV—285

செய்வது அரசியலாம் பாவத்திலிருந்து எப்படி நீங்குவது எனக் கருதவேண்டாம். வேதம் கூட செயற்படுத்த இயலாத வற்றைக் கட்டளை இடாது தன் ஆற்றலுக்கேற்ற அளவே செய்யுமாறு கூறும். IV—284

மனு, யமதருமன் முதலானோர் சிறப்பாக குற்றங்களை அறிந்து தண்டித்ததால்தான் தேவாம்ச தருமவான்களாகப் புகழ் பெற்றனர். பிரமன் தேவாம்சமாகப் பிறப்பித்து, மக்களை ஆட்சி செய்து விராட், சம்ராட் முதலிய வேதங் கூறிய சொற்களுக்குரியவனாக, தேவர்கட்கிணையாக அரசனை உருவாக்கினான் அரசன், சிரமங்களைப் பொறுத்து உலகிலுள்ள இடையூறுகளை நீக்காவிட்டால் பிறவிப்பயனுண்டாகுமோ? புலனின்பங்களில் சிக்குண்டு பிறன்மனை வழிப்பறிகளில் கிடைத்த பணத்தால் மகிழும் திருடர் தலைவர்களும் இருப்ப தில்லையா? இந்த மோகம் (அரசியலில் ஆர்வம்) ஏன் என வெறுப்பது கூடாது. பூமியை ஆள்வதில் பொறுப்பின்மை கூடாது. எப்படி எனின், முன்பு கிருதயுகத்தில் கிருதவீரியன் மகனான 'ஆயிரந்தோளுடையான் எனும் அரசன் தனது தோளில் நிலத்தைத் தாங்கியவனாக எந்தத் தீவில், எந்த நாளில், எந்த நகரில், எந்த வழியில், எந்தச் செயலில் எந்த நேரத்தில் யார் எதைச் செய்ய விழைவார்களோ அறிந்து கொண்டு, கத்தி, உலக்கை, வில் முதலிய சஸ்திர அஸ்திரங் களால் தண்டித்து கோலோச்சிப் புகழ் பெற்றான். இறுதி பூமி யாகிய கலியுகத்தில் அதுபோல ஆணையிட இயலுமா? வேள்விக் கேற்ற வலிமையுடைய இக்கால மன்னர்களால் இயலாதல்லவா? என்று கருதற்க. அரசர்க்கு மட்டுமே யன்றி அந்தணர்கட்கும் முன்னைய வலிமையில்லையன்றோ! கடல் நீரைக் கைப்பிடியில் அடக்கிக் குடித்தான் அகத்தியன். பிரம்மனின் சிருட்டிக்குப் பிரதிசிருட்டி செய்தான் விசுவாமித்திரன்.

பிரம்மாத்திரத்தை தனது யோகதண்டத்தினால் தடுத்தான் வசிட்டன். இத்தகைய தவ வலிமை தமக்கில்லை என அந்தணர் கள் தம் கடமையை ஆற்றலுக்கேற்பச் செய்வதைச் தவிர்த்தார் களா? அவர்களை நாம் போற்றவில்லையா? ஆதலின் அரசர்களும் விழிப்போடிருந்து ஆற்றலுக்கேற்ப, கண்டதும் கேட்டதும் அலட்சியப்படுத்தாமல் தீயோரைத் தண்டித்து நல்லோரைப் பாராட்டியும் அரசாண்டு தீனர்களைப் பாதுகாக்கும் ஸ்ரீமந் நாராயணனைச் சரண்புகுந்து அடக்கமுடன் இருந்தால் எல்லா நலன்களும் எய்தலாம். பட்டம் ஏற்ற மன்னன் தருமத்தையே மனத்துட் கொண்டு அதன்படி நடக்கவேண்டும். தேவர்களும், சுவர்க்கங்களும் தருமத்தை அடிப்படையாகக் கொண்டிருப்பத னால் அற வழி நடந்து, கடமைகளைச் செய்து, எல்லோரினும் மேன்மை பெற்றவனாக இலங்கி அரசாட்சி நடத்தவேண்டும்.

இவ்வாறு ஆளவந்தார் தன் மகனிடம் கூறி ஆட்சியை ஒப்படைத்தான் இது எனது பக்தனின் பிரபாவம் என்று இவ்வாறு தாமரையில் உறையும் திருமகளிடம் இறைவன் உரை செய்தான். IV—285

## ஆஸ்வாசா3ந்தமு

ஸா. து2ந்2வா3ம்போ3தி3 மஹாக்2ருஹோத்சு2க, சு2தா3ந்தோ3
ப்2ருந்த2 சூடா2மணீ
ருக்2தா3ராஸப2லீ க்ருதாங்க்3ரியுக3, காருண்யாம்பு2
சி2ந்தூ3ப3வத்
த்2ருக்2தா3மா, த்3ருதமந்த1, சி2ந்து3ரவரார்தி க்ஷேபிதோ2ஸ்
சக்ர, ஸ்ரீ
முக்2தா3லாபரசா2த2ரா, க்ருதபலான்மூர்ச1
ச்2வனோத்2யத்2த3ரா IV—286

க. கரத்3ருதத2ராரி விதரண
பரிபாலித தொண்ட2மான் ந்ருபாலக, புனருத்
தரித நர நப்த்ரு பா2லக,
ஸரணாக2த சே2வதீ3, பு3ஜங்கா2 ஸரதீ3 IV—287

குண்ட2லித்2விஷது2த2க்2ர கேதன, கோ2த்ர பி3த்து3ரும
ஹாரிதோ2
ஸ்சண்டி2 மோத்புல கீக்ருதாங்க3க ச2த்ய, தௌ2த்ய
குருக்த வாக்
பண்டி3தத்வ, யஸோ விதீ3க்ருத பாண்ட2வேய, கபர்தி2 கோ
த2ண்ட2 க1ண்ட2ன பாடவாஞ்ச து2தா2ர தா2ர ச2மாக2மா
IV—288

ஸா. இதி2சி2ம்ஹாசல த2ம்ப2கேச2ரி பதா2பீ3ஷ்டார்ச
னாபுண்யலப்
த3து2ருட்டங்கண பொட்டுனூரி விஜயச்2ம் போ3பலோட்டங்
கிதாங்
கத்2ருடே3ஷ்டாக்ஷர க்ருஷ்ணராய ந்ருபச2 ம்ஜ்ஞாச்2ம
த்க்ருதாமுக்தமால்
யத2னாஸ்வாச2 வரம்பு நாலவதி2 ஹ்ருத்2யம்பை3 மஹின்
பொல்பகுன் IV—289

சதுர்தா1ஸ்வாச2மு ச2மாப்தமு

பாற் கடலில்லத்தில் பற்றுடையவனே! வணங்கும் தேவர் களின் மணி முடிகளின் ஒளிபட்டுப் பிரகாசிக்கும் பாதங்களை யுடையவனே! கடலளவு கருணை வெள்ளம் ததும்பும் கண்களை யுடையனே! மந்தரமலையைத் தாங்கியவனே! யானையின் துயர் தீர்த்த சக்கிராயுத முடையவனே, திருமகளின் இன்சொற் களைக் கேட்பதில் ஆர்வமுடையவனே! சங்கத்தை முழக்கி அரக்கர்களை மயக்கம் உறச் செய்பவனே. IV—286

கைகளில் தாங்கிய சங்கு சக்கரங்களால் தொண்டைமான் மன்னனைக் காப்பாற்றினாய்! கருவிலிருந்த அருச்சுனனின் பேரனைக் காத்து உயிர் தந்தவனே, சரண்புக்கவரைக் காப்பவனே! பாம்புகளை உண்ணும் கருடனை வாகனமாக உடையவனே? IV—287

கருடக் கொடியுடையவனே! இந்திரனின் பாரிசாத மரத்தைப் பெயர்த்துக் கொண்டு வந்து சத்திய பாமாவை மகிழச் செய்தவனே. தூது நடந்து சொற்சாதுரியங்களைக் காட்டியவனே! தருமன் புகழ் பெறச் செய்தவனே! வில்லை ஒடித்து இல்லாளை ஏற்ற நல்லவனே! * IV—288

இது, சிம்மாசல நரசிம்ம சுவாமியின் பாதங்களை வணங்கிய புண்ணியத்தால் கிடைத்த வெற்றியாய பொட்டனூரு எனு மிடத்தில் மெய்க்கிர்த்தியை தூணில் வரைந்த சாசனமுடைய கிருஷ்ண தேவராயரால் இயற்றப்பட்ட ஆமுக்த மால்யத எனும் நூலில் நான்காவது அத்தியாயம் ஆக இனிது மிளிர்கிறது.
IV—289

---

* இந்த விளிகள் அடுத்த அத்தியாயத்தில் கேட்பாயாக எனும் சொல்லில் அவாய் நிலையால் பயனிலையாக முடிவுறும்;

# அமுக்த மால்யத

## பஞ்சமாஸ்வாச$^{2}$மு

க. ஶ்ரீநீளா ஜாம்ப$^{2}$வதீ
மரளச$^{2}$ தாமரச$^{2}$ விஹரமாண மிளிந்தா$^{2}$
பா$^{3}$ ந$^{2}$த்$^{2}$யுத$^{3}$ய களிந்தா$^{2}$
நாநாங்க்$^{3}$ரி ஸிரோ க்ஷ ஸேஷநக$^{2}$ ஹர்யக்ஷா IV—1

வ. அவத$^{3}$ரிம்பு மவ்விஷ்ணு சித்துண்டு$^{2}$ IV—2

ஒகநாடா$^{2}$ ம்ராங்குரௌக$^{3}$ம் பு$^{2}$ரு குசு$^{2}$குமட$^{2}$ங்
கோ$^{2}$த$^{2}$ரக்ஷோணிதல்ப
ப்ரகாரம்பை$^{2}$ காங்க்ஷசேமுன்பதுல பத$^{2}$ரி பை ப்ரௌடி$^{3}$
வாடிஞ்சி நிட்டூர்
ர்பெகதொ$^{2}$ட்டன் ட$^{2}$ச்சி$^{2}$ வீராயித மறிமறி தாரெட்ல
முன்னட்ல யௌ நா
யிகலன் கந்த$^{2}$ர்பு டோட$^{2}$மி பெ$^{2}$றிகி$^{2}$ தறிமி வீபேசெ$^{2}$னா
னன்டு தோடன்

# ஆமுக்த மால்யத

## ஐந்தாம் அத்தியாயம்

திருமகள், நீளாதேவி (நப்பின்னை) ஜாமபவதி ஆகிய தேவியரின் மனத்தாமரையில் வண்டென உறைபவனே! களிந்த மலையிலிருந்து வரும் யமுனை நதிபோல கருவண்ண எழில் பொங்கும் அழகனே! எல்லையற்ற பாதங்களும் தலைகளும் கண்களும் உடையவனே! சேடமலையில் வாழ் சிங்கமே! (சேடமலை திருமலை) V—1

கேட்பாயாக! அந்த விட்டுசித்தன் (பெரியாழ்வார்) V - 2

மாந்தளிர்கள் நிறைந்த பூம்புதர்களிடையே, படுக்கையமைத்துக் காதலர் மேலமர்ந்து காதலுணர்வுமிக்க காரிகையார் கலந்தின்புற்றுக் களைத்து நெட்டுயிர்ப்பு மிகவே மீண்டும் தாம் முன்போலவே (கீழே) அமர்ந்து கலவிப்போரில் தோற்கவே அதைக் கண்ட மன்மதன் அவரை விரட்டியெறிந்த(வாள் வீச்சுக்) காயமோ எனும்படியாக முதுகில் ஒட்டிய மாந்தளிர்கள் தோன்றும் பூந்தோட்டத்தில் ஒரு நாள். * V—3

---

* இளவேனிற் காலத்தில் மாந்தளிர்கள் சிந்திக் கிடந்த பூந்தோட்டத்தில் பெண்கள் காதலுணர்வுமிக்கவர்கள் தாமே ஆண்போலப் பாவித்துக் கலவி செய்தனர் என்ற இந்த வருணனை கிருஷ்ண தேவராயர் ஆண்டாளின் அறிமுகத்துக்கு முன்பு வைத்துள்ளார். இதில் தொனியிருப்பதாக நான் கருதுகிறேன். வேதம் வேங்கட்ராய சாஸ்திரியோ, வாவிள்ள ராமசாமி சாஸ்திரியோ இப்படி தொனி இருப்பதாக சிந்திக்கவில்லைதான்! என்னும் பூந்தோட்டத்தை வருணிக்காமல் காம உணர்வு மிக்க காதலர்களை ஏன் வருணித்தார்? என்பது ஆராய்வுக்குரியது.

## கோ²தா²தே²வி

உ. விங்க²ட²மைன² யொக்க² வனவீதி¹ கனுங்கொ¹ன
நீட³சு²ன்னபுள்
ரங்கு²டரங்கு² பச்சலயரங் க²யிபோ வெலித²ம்மி பா²விகின்
செங்க²ட னுல்லசி²ல்லு துலசீ²வனசீ²ம ஸுபா³ங்கி³ ஒக்க பா²
லங் குருவிந்த² கந்த²ள த²ள ப்ரதிமாங்க³ரி
கரோத²ராத³ரன் *V*—4

ச. கனுகொ²னி விச்²மயம் பொ²தவங்கா² கதி²யன்
சனிசௌ²கு மார்யமுன்
தனுருசியுன் சுலக்ஷண விதானமு தேஜமு செல்வு கொந்த சே²
பனிமிஷ த்²ருஷ்டி சூசி யஹஹா? யன பத்யுன கம்முகுந்து டே
தனயக² நாகு நீஸிஸுவு தா க்ருப சேசெ²னடஞ்சு
ஹ்ருஷ்டுடை² V—5

க. கொனிபோயி த³ர்மகே²ஹினி
கனுரக்தி னொச²ங்க² பொங்கி² யாயமயுனு சே
புஜ்ஜச்²தன்யம்பு²ன லலி
பெனிசென் கோ²மொப்ப இட்லு பெருக² க்ரமமுனன் V—6

சீ². வாதெற தொண்டி கைவடி² மாடலாட²து²
குடிலவ்ருத்தி வஹிஞ்செ குந்தலமுலு,
அக்ஷுலு சி²ருலுரா னறகண்ட கனுகொ²னெ,
ஆடி²ஞ்செ பொ²மகொனி ஆனனம்பு²,
ச²னுகொ²மல்னெக²ய வக்ஷ முபேக்ஷ கட²கொத்தெ,
பாணிபாத²மு லெர்ரவாற தொட²கெ²
சா²ரெகு மத்³யம்பு² தா²ரித்²ர்யமுலெ செப்பெ,
றொச்சோர்வ கிடுலோக² சொச்செ மேனு

தே. வட்டி கா²ம்பீ³ர்ய மொக்கடு² பெட்டுகொனியெ,
நாபி³ நானாடி கீக²தி நாடி ப்ரியமு
சவுக யைனட்டி இச்சட சனது²நிலுவ,
அனுசு ஜாறின கரணி பா²ல்யம்பு² ஜாறெ, *V*—7

ஒரு படைவீரன் தோற்றால் அந்தப் படைத் தலைவனே அந்த வீரனின் முதுகில் அடித்து இழிவுபடுத்துவான் வாள் வீசித்தாக்கி அவமானப்படுத்துவான். என்பது மரபு. அது போலவே கலவிப் போரில் இந்த நங்கை தோற்று 'புருஷாயத கேளி' யிலிருந்து மீண்டும் பழைய நிலைக்கு வந்ததால் மன்மதன் தோற்றவரை வாளால் வீசி காயம் உண்டாக்கினான். அந்த காயம் தான் எனுமாறு மாந்தளிர் முதுகில்பட்டிருந்தது என்று கற்பனை செய்யப்பட்டுள்ளது. V—3

அகன்ற ஒரு காட்டுப்பாதையில் மர நிழல்பட்டு மரகதத் திண்ணைபோல் தோன்றும், வெண்பளிங்குத் திண்ணையில் வெண்தாமரைப் பொய்கைக்கருகில், துளசி வனத்தில், மங்கள கரமான இலட்சணங்களோடு கூடிய பதுமராகப் (செம்மணி) பாளங்கள் போன்ற சேவடிகள், உள்ளங்கை, இதழ்களை யுடைய ஒரு பெண் குழந்தையைக் கண்டான். V—4

கண்டு, வியப்புற்று, அருகணைந்து, மென்மை, மேனிஎழில் சுபலட்சணங்களையும், கண்ணிமைக்காது சிறிது நேரம் பார்த்து, "ஆகா! குழந்தையற்ற எனக்குத் திருமாலே மகளாக இக்குழந்தையைத் தந்தருள் கூர்ந்தான்" என்று கூறி மகிழ்ந்த வனாக. V—5

கொண்டுபோய், தன் இல்லக்கிழத்தியினிடம் அன்போடு தந்திடவும், அவளும் சுரந்த தன் முலைப்பாலுடன் செல்லமாக வளர்த்தாள். இப்படி வளர்ந்து வரும் நாளில் V—6

உதடுகள் (வாய்த்திரை)* முன்போல விரைந்து பேச வில்லை. கூந்தல் வளைந்து நெளிந்து இயன்றன. கண்கள் செல்வம் சேர்ந்ததால் அரைவிழியோடு கண்டன. முகம் புருவங்கள் நெரித்து, விளையாடக் கற்றன. முலைகள் வளர்ந்த மார்பானது குழந்தைமையை அலட்சியப்படுத்தியது. பாதங் களும் கைகளும் சிவந்தன. இடை வறுமைப்பட்டது. உடல் பயிர்ப்பினை உற்றது. உந்தி வெறும் ஆழத்தைக் காட்டியது. இவ்விதமாக நாள்தோறும் முன்னைய அன்புகுறைந்து விடலாலே இங்கிருக்கக் கூடாது என்று குழந்தைமையானது அகன்றது. (குழந்தைமை நீங்கிக் கோதைகுமரியானாள் என்பதுகருத்து) V—7

---

* உதடுகட்கு தெலுங்கில்' 'வாதெற' எனும் அழகிய சொல் உண்டு. வாய்த்திரை என்பது பொருள்.

ஸா. ஹேமாபா2ங்க2 விபா3த3ராருணிம வக்த்ரேந்த்2ரு
ப்ரபா3ஸீல தத்
பா3மாரத்னமு பொந்த2த2ய்யெ முனுதத்தத்2வர்ண
யுக்தாக்1யலன்
ஸ்யாமாங்கம்ப2ளி க2ர்வ தூ3ர்வஹகச ச்சா1யாச்ச1டன்
காஞ்செனௌ
காமுன்னூர்வி 'ஸிரவப்ரதா3ன' மனுவாக்யம் பெ2ம்மெயின்
தப்புனே V—8

க. ஆயத பு3ஜைக சக்ருண்
டா2 யது2பதி தொா2ம்மி கெ2லுவ நட2சு மருனிகா
லாயச2 சக்ர பரம்பர
லோயன உங்க2ரபு குருலு யுவதிகி அமருன் *V—9*

தே. ச2கல சீ2மந்தினீ லோக ச2மதிஸாயி
பா3க்2யவர்ணா வளுலு வ்ராசெ2 பத்2மக2ர்பு3
ட2னக2 கர்பூரதிலக ரஜோவதா2த
பா1லமுன குந்தல ஸ்ரேணி பட2தி கலரு V—10

ஸா. சை2ரந்த்3ருல் பயிகெத்தி கஜ்ஜலமு பக்ஷமஸ்ரேணிகன்
தீர்பவா
லாருன் கன்னுல மீது2சூசு தறி பா1லாஞ்ச ச்சதுர்தீ1 நிஸா
ச்2பா1ரேந்து2ன் கனெ வக்த்ர மக்கனுடகா2 பர்வேந்து2
டா2த்மப்ரபா3
சோருண்டு2ண்ட2க2 தன்னு தத்க2தவிபா3 சோரம் ப2னுன்
லோகமுல் V—11

அவளுக்கு முதலிலிருந்து இருக்கிற மேனியின் பொன் வண்ணத்தினாலோ, இதழின் செம்மையாலோ, முகமதியின் வெண்ணில வொளியினாலோ பெயர் அமையவில்லை.

(பொன் மேனியள், செவ்விதழினள் என்றில்லாமல்)அவளது கருங்கூந்தலின் வண்ணத்தால் மாமை நிறத்தினாள் (சியாமங்கி) என்ற பெயரை அடைந்தனள், உடலில் தலையே பிரதான மானது எனும் பழஞ்சொல் சரியானதுதான், தலை முடிக் கூந்தல்தானே பெயரிட வைத்துள்ளது.

(வடமொழியில் சியாமளா என்றால் இளம் பருவப்பெண் என்று பொருள், இச்சொல்லைக் கொண்டு சியாமளா (மாமை நிறம்) எனும் பண்புக்கு கூந்தலைக் காரணம் காட்டி கற்பனை செய்யப்பட்டுள்ளது) V—8

(இக் கோதை திருமாலை மயக்கிடற்குள்ளாள் ஆதலின்) ஒரே சக்கிர த்தினையுடைய கண்ணனை, கைகலப்புப் போரில் வெல்வதற்காக முயலும் மன்மதனுடைய உருக்குச் சக்க்ரங் களோ(இரும்பு வளையங்கள்) எனுமாறு. அந் நங்கையின் சுருண்ட கூந்தல் அமைந்தது,

(மோதிரங்கள் போல சுருள் சுருளாகப் படியும் கூந்தல் உருக்காலான சக்கிரங்களாக உவமை கூறப்பட்டுள்ளது) V—9

கருப்பூரத்திலகத்தினால் வெண்மை ஒளி படிந்த அவள் நுதலில் படிந்த கருங்கூந்தல், பிரம்ம தேவன் இவள் எல்லாப் பெண்டிர்கட்கும்(சீமந்தனி) மேலாக செல்வ வளத்துடன் திகழ்வாள் என்று எழுதிய எழுத்துக்களின் வரிசை போலத் தோன்றியது.

(பிரம்மன் நெற்றியில் எழுதுவதாக ஐதீகம், தலைஎழுத்து என்பர். வெள்ளைக்காகிதத்தில் கருப்புமையால் எழுதிய எழுத்துக்கள் போல கற்பூர திலகமிட்ட நெற்றியில் சுருண்ட கூந்தல் படிந்தது என்பது கருத்து) V-10

ஒப்பனை செய்யும் தோழியர், கோதையின் முகத்தை மேல்நிமிர்த்திக் கண்கட்கு மை தீட்டும்போது கண்கள் தோழியரின் முகமாகிய நாலாம் நாள் சந்திரனைக் கண்டது. அதனால் இவள் முகஎழிலை சந்திரன் கவர்ந்திட மக்கள், சந்திரனின் எழில் தான் இவள் கவர்ந்தாள் என்று கூறுவர்.

(நாலாம் நாள் சந்திரனைக் காணல் நன்றல்ல எனும் ஐதீகத்தை ஒட்டிக் கற்பனை செய்யப்பட்டுள்ளது) V—11

ச. கனுக2வ தன்னு கெ2ல்வக2 ம்ருக2ம்ப2ல சூ2டு2னகிந்து2 ரேது நே
னனி ருசிதக்கதத் பரிமளட்3யதலேமி அதண்டு2 கொ2ங்க,தா4
னினுப சனன் 'பக2ன் தனது கெத்துட பொ2ட்டிடு2 கொண்டகாகவா
ச2னக?'யனன் மொக2ம்ப2மரு சானகு ப1ாலமு பச்சி கச்2தூரின் V—12

தே. கடி2தி2விலு சேதி2 கு2றி கீலகறசி நிலுபு
மருனி குவலய ஸரமு கம்பமுல போலு
தார கட2கண்டிபை சா2ரெ சேரிசேரி
வேக2 மகு2ட2 ச2லஜ்ஜ த்2ருக் விப்3ரமமுலு V—13

தே. நவ வயச்சீ2து3 மத2முசே ஸ்வரண கூப
முல படெ2டு2 ஸங்க நலுவ சாபலமு லுடு2க2
னிடி2யெ ஸ்ருங்க1ல லன காடுகிடி2ன தீ2ர்க3
பக்ஷ்ம ரேக1ல கனுதோ2யி பட2தி கொனரு V—14

கண்ணிணை(மதியிலுள்ள) கஸ்தூரிமானை வெல்ல, அப்பழி தீர்க்க வேண்டி அந்தமான், மதியைத் தூண்டவும், சந்திரனும் முகத்திற்குத் தோற்று முகத்தின் மணம் தனக்கில்லை, ஒளி தான் உண்டு எனப்பின் வாங்கவும்' கஸ்தூரிமான் மணம் தர சந்திரனையடையவும். அந்த மானின் மீது பகைபூண்ட அந்த நங்கை (பகைவரின் குருதியால் திலகமிட்டுப் பழி தீர்ப்பது போல்) மானின் குருதியால் திலகமிட்டாளேயன்றி மணம்பெறு தற்கன்று எனுமாறு பச்சைக் கஸ்தூரி திலகமிட்டாள்.

(கஸ்தூரி மானின் அண்டகோசத்திலுள்ள சுரப்பியால் கஸ்தூரிஎனும் மணப்பொருள் வெளிப்படும். அதைத் திலகமிட மரபு. இங்கு மான்கண்ணை வென்ற மங்கையின் முகலம் மதியையும் வென்று விட்டதாம். மானின் மீது பழி தீர்க்கவே திலகமிட்டாள் என்பது கற்பனை)

கஸ்தூரிமான் சந்திரனுக்கு மணம் தந்ததாகவும்.

அதனால் பகைபூண்ட நங்கை, கஸ்தூரியின் இரத்தத்தால் திலகமிட்டுப் பழி தீர்த்தால் என்பது கருத்து) V—12

கருவிழிகள் கடைக்கண்களில் அடிக்கடி சென்று மீண்டும் விரைந்து வருவதாகி நாணோடு கூடிய அவளது பார்வைகள், மன்மதன்; வில்லில் குறி வைத்து நாணிற்பூட்டிய கருங்குவளை மலர்களோ எனுமாறு இருந்தன. V—13

புது இளமையாகிய மதுவின் மயக்கத்தால் கருவிழிகள் ஓடி காதுகளாகிய கிணற்றில் வீழ்ந்து விடுமோ என்றஞ்சிய பிரமன் அதைத் தடுக்க வைத்த தளைகளோ (சங்கிலி) எனுமாறு மை தீட்டிய கண்ணிணையில் பொருத்தி எழிலூட்டின.

(மதங்கொண்ட யானைகள் கிணற்றில்விழுந்து விடாமல் சங்கிலியாற் பிணைத்தற் போல கருவிழிகள் செவியாகிய கிணற்றில் விழாது தடுக்க இமையாகிய சங்கிலியைப் பிணைத்த தாகக் கற்பனை) V—14

ச. அனயமு ராக$^{2}$மொப்ப ச$^{2}$ஹஜானன சந்த்$^{3}$ர கடாக்ஷ பங்க்தி பர்
வினனக$^{3}$ ஸங்க கர்ண மனுஸ்ரீ மறுபெட்டு செலங்கி$^{2}$
செண்டுகொட்
டனவனி பட்ட$^{2}$ கம்ம மகு$^{2}$ட$^{2}$ன் கொனுனந்தகு
அம்ச$^{2}$பானி அங்
க$^{2}$னயிடி$^{2}$ தா$^{2}$சு பேர பெர கர்ணமு கம்ம பயின்
தளுக்கனன் V—15

ஸா. நாசா$^{2}$ சம்பகத ச்சு$^{2}$க$^{2}$ந்த$^{3}$ மசடன் ராப்$^{3}$ருங்கமுல்
க்ரோல ச$^{2}$ந்த்
ராச$^{2}$ம்ப$^{2}$ந்தி$^{2}$யு பல்குசோ அலமு வக்த்ரம் பே$^{2}$லனா நேடிகந்
தே$^{2}$சௌ$^{2}$ரப்$^{3}$யமு லேது$^{2}$ குந்த$^{2}$முலு காவே த$^{2}$ந்தமுல்?
கானீ கா
டா$^{2}$ச$^{2}$க்தின் ப்ரதிபி$^{2}$ம்ப$^{2}$ த$^{2}$ம்ப$^{3}$முன ஏலாவ்ரால
தஜ்ஜாதிகின் V—16

தே. ஸங்க$^{1}$ சா$^{2}$ம்யம்பு$^{2}$ ராமுன்னு ஜலஜப$^{3}$வுடு$^{2}$
ச$^{2}$ரசி$^{2}$ருஹ பத்ர நேத்ர கந்த$^{3}$ர யொளர்செ,
ஜவ்வனமு வச்சி வெண்டி$^{2}$ சா$^{2}$க்ஷாத்கரிஞ்சு
ஸங்க$^{1}$முன சேசெ$^{2}$ நுனு க$^{2}$ந்த$^{3}$ சா$^{2}$ர சர்ச V—17

க. கமல த$^{2}$ளே க்ஷண ச$^{2}$ங்கீ$^{2}$
தமுன நெக$^{2}$டு$^{2}$ மந்த்$^{2}$ர மத்$^{3}$யதார த்ரிச்$^{2}$
தா$^{1}$னமுலகு தீர்சின ரேக$^{1}$ல
க்ரமமகு$^{2}$ ரேகா$^{1}$ த்ரயமுன கண்ட$^{1}$ப$^{2}$ம்ருன் V—18

(உலகில் சுமங்கிலியான சகோதரியின அணிகளற்ற வெறும் காதினைச் சகோதரன் பார்ப்பது பாவம் என்பது மரபு ஆதலின்) அவள் காதுகள் ஶ்ரீ(திரு) எனும் (தெலுங்கு) எழுத்தைப் போன்றிருக்கும், திருமகள், கூடப்பிறந்த சந்திரன் ஆகிய முகம் பந்தாடும்போது காதணி கீழே வீழ்ந்துவிட்டதால் அக்காதினை பார்க்கக் கூடாது என்று தலையைத் தோளோடு சேர்த்து மறைத்து காதணியுடைய பக்கத்தைக் காட்டவே கம்மல்கள் தளதளக்க பந்தாடி மகிழ்ந்தாள். V—15

சம்பகப்பூப் போன்ற நாசியை வண்டுகள் முகர அஞ்சினும் அவள் பேசும் போது வண்டுகள் மொய்க்கும், அவள் வாயில் எந்த மணம்தான் இல்லை? அவளது முல்லைப்பூ போன்ற பற்களில் பிரதிபலிக்கும் தம் உருவைக் கண்டு வண்டுகள் மயங்கி மொய்த்துக் கிடக்கும். V—16

சங்கினைப் போல முன்பு பிரமன் அத் தாமரைக் கண்ணி னாளின் கழுத்தினைப் படைத்தான். இளமை வந்ததும் மீண்டும் மென் சந்தளப் பூச்சென, அதன் (உருவத்தோடு) வண்ணமும் சேர்ந்து எழில் பெற்றது. V—17

தாமரை இதழ்போன்ற கண்ணை உடைய அவளது சங்கீதத்தில் திகழும், மந்திர, மத்திய தாரம் எனும் மூன்று சுரங்களின் இருப்பிட எல்லைகளை வரைந்து காட்டியது போல அவள் கழுத்தில் வரைகள் மூன்றும் திகழ்ந்தன. V—18

தே. லலன ம்ருது2பா2ஹு யுக2பி2ச2லத கட2கி2
பி2ச2லதாஞீல னெல்லனு வெச2 ஹரிஞ்செ,
மறி ஹரிம்பங்க2 அவி நெறி விறிகி2 காதெ2
சா2ரெ தனுயாத்ர தந்துல ஜரபுசுண்டு2 V—19

ம. தளுகொத்துன் பு3ஜகீர்தி வஜ்ரக்3ருணி சூ2த்ர ச்2யூத
ஹாரச்2பு1ரத்
களிகா சித்ர குசத்2வயோ பரிக2ளாத3ச்ச2வல்ப விச்2தாா தைர்
க்3ய லச2த்திர்யகு2ர ச்2தடம் ப2னு விவாஹாஞ்சன்
மனோஜாதபா
டல த2ப்த ச்ச1த2போ2ட2பா2 சிகமு த2ண்ட2ல் வோலெ
கேள்ளிந்திகின் V—20

ச. ஒத2வெடு2 ஜவ்வனம்பு2 வெலிகொத்தக2 பய்யெத2
சிக்கு2கூடிபி2ட்
டது2மக2 லேதலௌட தி3க2 நாககு மீறனு லேக, வக்ஷபுன்
சது2முன ப்ரக்கலன் மெறசி2 சப்படலை மறிலாவுகூட2 பை
பொத2லெ னனங்க2 பிச்கடிலெ பொல்துக சன்னுலு
நாடு காடிகின் V—21

தே. த்3ருத ரக்ஷ3த்தம ஸாப மொக்கிந்த விடி2சி
விடி2சி கட2கேக2 அப்புட2ப்புட2 கலிபெடு2
சக்ர யுக2மென றொம்மெல்ல ஆக்ரமிஞ்செ
கொமிரெ சன்னுலு லேகப்பு கொனலனமர V—22

நங்கையின் மெல்லிய தோளிணைகளாகிய தாமரைத் தண்டுகள், தாமரைத் தண்டின் திருவினை (அழகினை) கவர்ந்து கொண்டன. அதனால் திருவிழந்த தாமரைத்தண்டு நெறிமுறிந்து (செல்வத்தோடு கூடிய தன் வாழ்க்கை நெறி கெட்டு) வறுமைப் பட்டதால் தன் தேகயாத்திரை (உடல் ஓம்பும் வாழ்க்கை) நூல் நூற்பதால் கழித்துக் கொண்டிருந்தது.

(வறுமையுற்றார் நூல் நூற்றுப் பிழைப்பர். அதுபோல் தாமரைத் தண்டின் திரு (அழகு) வினை நங்கையின் தோள்கள் கவர்ந்து கொண்டதால் வறுமையுற்றதாம். நூல் நூற்று வாழ்ந்ததாம். தாமரைத் தண்டினை முறித்தால் நூல் வரும். அதனை நூல் நூற்பதாக கற்பனை செய்யப்பட்டுள்ளது.)
V—19

அந்நங்கையின் கழுத்துக்குக் கீழும் முலையிணைக்கு மேலும் அகன்று நீண்டு குறுக்காக உள்ள மார்பில் திகழும் பூமாலை யில், தோள் வளையிலுள்ள மணிகள் பிரதிபலித்து, மன்மதன், ரதிதேவிக்கு திருமண காலத்தில் சூட்டிய நெற்றிச் சுட்டியோ எனுமாறு திகழ்ந்தது. V—20

அவளுக்கு இளமை உருவாகி உடலினின்றும் ததும்பி வெளிப் போதலும், முந்தானையும் வெட்கமும் அதனை உள்ளுக் கனுப்பி அழுத்தவும், (இளமை எனும் எழிற்சாறு) முதிர்ச்சி யுறாத இளம்பாகமாதலின் வெளிப்படவும் இயலாது. உட் புகவும் இயலாது. பிதுங்கி மார்பிடத்தில் இருபுறமும் அடங்கிக் கிடக்கவும் பின் நாட்படவும் வலிமையுற்று வளர்ச்சியுற்றதென நங்கையில் நகில்கள் (முலைகள்) ஒளிர்ந்தன.

(உடலிலிருந்து வெளிப்பட்ட இளமை எழிலும் நாணமும், முந்தானைகளால் உள்ளே அடக்கப்படவும், உள்ளும் புக இயலாது. வெளிப்படவும் இயலாது. அங்கேயே பிதுங்கிக் கிடந்தது போல முலைகள், பருத்துச் செழித்தன என்பது கருத்து) குரும்பை முலையுடன் கூடவே நாணம் கூடுதலும், தாவணியில் மறைத்தலும் ஈண்டு கூறப்பட்டது) V—21

இராமனது சாபம் கொஞ்சம் கொஞ்சமாக தீர்ந்து விடவும் இறுதியில் இணைந்த சக்கரவாகப் பறவை (அன்றில்) இணை போல மார்பு முழுவதையும் கவர்ந்து கொண்ட முலை யிணைகள் இணைந்து கொண்டன. அப்பறவைகள் மூக்குப் போல முலைக் கண்கள் இளங்கருப்புடன் திகழ்ந்தன.

(இராமன் சீதையின் பிரிவில் துயருற்றபோது சக்கிரவாகப் பறவைகள் களித்தின்புறக் கண்டு, சினந்து பிரிவுறும்படி சபித்த தாக ஒரு கதை இங்கு கூறப்பட்டுள்ளது. எந்த சாபமும் இரண் டாயிரம் ஆண்டுகளுக்குள் கொஞ்சம் கொஞ்சமாக தீர்ந்து விடும் என்பது ஐதீகம், அதன்படி பிரிந்து தனித்தனியாக இருந்த முலைகள், வளர்ந்து செறிந்து ஒன்று கூடின என்றும் அவை சக்கரவாகப்பறவைகள் போன்றுள்ளன என்றும் கூறப்பட்டுள் ளன.)
V—22



G 4697

க. தாரெட்லட்லுக$^{2}$ தம்முன்
சேரின முத்தெம்பு ச$^{2}$ருல சேடி$^{2}$ய சன்னுல்
லோரெண்ட லுடி$^{2}$பெ, க$^{3}$னமகு
வாரு நிஜார்ஜவமு சேருவாரிகினீரே? V—23

தே. விரஹிததி மீத$^{2}$ கோபானமருடு$^{2}$ திவிய
வேக$^{2}$மை பைடி$^{2}$ யொறதோன விச$^{2}$ர குட்லு
து$^{2}$ணிசி$^{2}$ பை$^{2}$டிகி அசி$^{2}$தா$^{3}$ர தோசெனைக$^{2}$
கனகுருசி மத்$^{3}$யலத நாரு காந்த கலரு V—24

க. அண்ட$^{2}$ஜ கா$^{3}$மினி யூருபு
பிண்டு$^{2}$ வலபுலான நாபி$^{3}$பி$^{2}$லமு வெட$^{2}$லிசன்
கொண்ட$^{2}$ல நடு$^{2}$முக$^{2}$ ப்ராகெடு$^{2}$
குண்ட$^{2}$லியோ அனக$^{2}$ நாரு கொமரொப்பாருன் V—25

க. அங்க$^{2}$ன நிலிசின பா$^{3}$ஹுவு
லுங் கௌனுனு ஏறுபறுசு லோகமுனகுரத்
னாங்க$^{2}$த$^{2}$ காஞ்சீ பே$^{3}$த$^{2}$மு
லுங் கௌவுல நடு$^{3}$மி உனிகியுன் நூகா$^{2}$ருன் V—26

க. தனு மத்$^{3}$ய வளீப$^{3}$ங்க$^{2}$மு
லனுகூர்பக$^{2}$ அவியு தத்குலமுல யகு$^{2}$ட கந்
துனி யிடி$^{2}$ன பத்தி ரேகன
சனு னொட்டா$^{3}$னமுன கொனு சாமகு னமருன் V—27

தாம் எப்படியோ அப்படியே தம்மைச் சேர்ந்த முத்துச்சரத்தையும் அவள் முலைகள், இரு பக்கத்தையும் இணைவித்து ஒன்றாக்கின. பெரியவர்கள் தம்மைச் சார்ந்தோர்க்கும் தமது ஒழுக்கத்தை ஈவார்கள் அன்றோ?"

(முத்து மாலையின் இருவடங்களும் முலைகள் மேல் நில்லாது முலைச் சந்தின் ஒன்று கூடி இணைவது இயல்பு. அதனை, எப்படி முலைகள் இரண்டும் ஒன்றோடொன்று செறிந்து கொண்டனவோ அதுபோல முத்துமாலையின் இரு பக்க வடங்களையும் ஒன்றாக ஆக்கின. சான்றோர்களைச் சேர்ந்தவர்களும் சான்றோர் பண்புகளை அடைவார்கள் என்ற கருத்தினை மெய்ப்பிப்பது போலுள்ளது என்பது கருத்து.) V—23

*

பிரிவின் மெலிந்த பெண்டிர் மீது சினந்து மன்மதன் விரைந்து பொன்னுறையுடன் கூடிய வாளினை எறியவும், உறையின் தையல் அறுந்து வாள்தோன்றியது போல பொன்னெழில் இடையூடாக மயிரொழுங்கு (வளி) தோன்றியது.

(பொன்னுறை வயிறாகவும், தையல் பிரிந்து நடுவே தோன்றும் வாள் மயிர் ஒழுங்காகவும் உவமிக்கப்பட்டது.) V—24

அன்னமென்னடையாளின் உயிர்ப்புக் காற்றினை அவாவி, உந்திப்புற்றிலிருந்து புறப்பட்டு வந்து முலைக்குவடுகளின் ஊடு போந்தூரும் பாம்போ எனுமாறு அவளது மயிரொழுங்கு எழில் பெற்றிலங்கியது. V—25

நங்கை நிற்கும்போது அவளது மென்தோளும் இடையும் உலகினர் காணுமாறு மணிகள் மிடைந்ததோள் வளையும், மேகலையும் அணிவதாலும், மயிரொழுங்கு அமைந்ததாலுமே தோன்றின.

(காணரிய இடையும், மென்தோளும் அணிகள் அணிவதால் இருப்பது புலப்பட்டது என்பது கருத்து.) V—26

உடல்நடுவிலுள்ள (வயிற்றிலுள்ள) மும்மடிப்புகள் எனும் தங்கத் துண்டுகளை பற்றவைத்திணைக்க அதே சாதியைச் சார்ந்த தங்கத்தகடு மன்மதன் வைத்தான் எனுமாறு ஒட்டியாணம் அவளுக்கு எழிலூட்டியது.

(பொற்கொல்லர் தங்கத்தை இணைக்க தங்கத்தகட்டினை பயன்படுத்துவதுபோல, மன்மதன் எனும் பொற்கொல்லன், அவளது வயிற்று மடிப்புகள் (வளி) எனும் துண்டுகளை இணைக்கும் தங்கத்தகடு ஆக ஒட்டியாணம் இருந்தது என்பது கருத்து.) V—27

க. லே கௌ தீக2 நிதம்ப2மு
வ்ரேகு2ன த்ரெம்புடயு கனி விரிஞ்சி பி3கி2ம்பன்
லோகி3முடி3 யிடி2யெ வத2லுக2
னா கோகச்3தனி க2பீ3ர நாபி3 செலங்கு2ன் V—28

க. வெலதி3 கடிபேர இலனொக
புலினமு டி3க2ப2டி2யெ சி2ந்து3புலினபு பங்க்தின்
நலுவ யதி2வட2க2 காதே2
தெலியுட கந்த2ஞ்சபத2மு திரமுக2 நிலிபென் V—29

தே. கத2ளி திவியுஞ்செ னாக்2ராங்க்3ரிகம்பு2 தொட2ல
பெனுபு னெட்லன்ன பொரல சோ2த2ன னட2ஞ்சு
கொன்ன யாதோ2க பாடுனு கொப்புவிப்ப
மெறயு கோ2ர்ம்ருச் ஈலுனு கெம்பு கு றுலு காவெ V—30

தே. வசு2த3லோ எட்டிஸ்ரீ கல வாரினேனி
கரப2முலு தாச்3யமுலு சேயு ச2ரசி2ஜாக்ஷி
யூருவுல கெட்லடன்ன பைதாருமோசு
கொ2டு2கு2லுனு அல்ல கலஸமுல் கு2றுலு காவெ V—31

மெல்லிடையாகிய கொடி, நிதம்பம் (புட்டம்) ஆகிய பாரத்தால் அறுந்துவிழக்கண்ட பிரம்ம தேவன், அதை இறக்கிவிட, தளர்வாக முடிச்சுப் போட்டானோ எனுமாறு சக்கிரவாகப் பறவை போன்ற முலைகளையுடைய அவளது ஆழமான உந்தி அமைந்திருந்தது.

(பிரம்மனின் கயிற்றுமுடிச்சுப் போல உந்தி இருந்தது என்ற உவமை நயம் சிறப்புறுகிறது.) V—28

நங்கையின் நிதம்பம் எனும் பெயரில் ஒரு மணல் திட்டு—நதிக்கரை மணல் திட்டுகளிலிருந்து தப்பி வந்துவிட்டது. அந்தக் கணக்கு தெரியவே பிரம்மன் மணல் திட்டில் அன்னத்தின் அடிகளாகிய குறியை இட்டான்.

(ஒரு பொருள் காணாவிட்டால் தெரிவதற்காக, கணக்கு அறிய குறியிடுவது வழக்கம். மணல் திட்டு ஒன்று நங்கையின் நிதம்பமாகி காணாமற்போனது. பிரம்மன் மற்ற திட்டுக்களை கணக்கிட அன்னத்தின் அடியாகிய + என்ற குறியை இட்டு வைத்தான் என்பது கருத்து.) V—29

வாழை நங்கையின் தொடையழகின் வளத்தினைத் திருடிக் கொண்டது. எப்படி என்றால்,

(திருடனின் உடைகளைச் சோதிப்பதுபோல) மட்டையுரித்தால் உள்ளே பசு வால்போன்ற (மேலே அகன்று கீழே குறுகிய) தண்டும்.

பூவினையுரித்தால் உள்ள நகம் போன்ற மொட்டுக்களும் (பூமுகைகள் திருடர்களின் ஒருவகைக் கருவி போலுள்ளது) அதன் சிகப்பும் (பத்மராகக் கற்கள் எனும் நவமணிகளும்) திருடியதின் அடையாளங்களாகத் திகழ்கின்றன. V—30

உலகிலுள்ள எப்படிப்பட்ட செல்வமிக்கவர்களானாலும் அவளது தொடைகளுக்கு அடிமை செய்பவர்களாகத்தான் ஆவார்கள். செல்வமிக்க பெண்களின் அங்கையின் குடையும் பூரண கும்பமும் ரேகைகளாக அமைந்திருப்பது அடையாளமாகும்.

(அடிமைகள் பிரபுவுக்கு குடைபித்து, பூரண கலசம் பிடித்து வரவேற்பது போல—அவள் எழிலுக்கு தோற்ற பிற பெண்டிர் தம் கரங்கள் குடை, கலச ரேகைகளால் அடிமையாகின்றன என்பது கருத்து.) V—31

க. வலராஜு குடும்ப2மு அத
க்க2லமுக2 போஷிஞ்சு நலம க2ர்ப3மு லய்யென்
பொலதுக ஜங்க3 லதி ஸ்யா
மல மஞ்ஜீரச்2த1 நிபி2ட2 மரகத காந்தின் V—32

தே. உவித2 நித்த2ம்பு ஜங்க3ல ச2வது கோரி
கலம க2ர்ப3ம்பு2 லட2சு லோகண் டகமுலு,
சாதுருல மிஞ்சி மறி தி2வச2 க்ரமமுன
நிலுவ கவி பா2ஹிரமுலைன தலலு வஞ்சு V—33

ச. இலகல வச்2து ச2ந்ததுல கெல்லனு க2ச்சிடு2 மாச்2வபா3வ பா
டல ருசி கேமொ வேறயொக டா2லிக வச்சுனெ? லக்கநீடமம்
மலமின தெ2ந்த முச்2த3யிதி2 அஞ்சு பதா2ப்2ஜமு
லங்குளீ முக1ம்
பு2லனகு2 ணட்லு மிஞ்சு நக1முல் மெறயன் கொமராரு
ணிந்திகின் V—34

க. லலனோபரிபத2 கச்ச1ப
முலு ப2லிமிமெயின் க2ஜப்ரபூ3த க2தி ஸ்ரீ
விலச2னமு கொனக2 காதே2
கலிகெ2ன் க2ஜ கச்ச1போக்2ர கலஹம்பு2ர்வின் V—35

நங்கையின் கணுக்கால் சிலம்பிலுள்ள மரகதப் பச்சையின் ஒளியால் பசுமை படர்ந்து மன்மதனின் குடும்பத்தைச் செழிப்பாகப் பேணும் செஞ்சாலிப் பொதிபோல இருந்தது.

(நெற்பொதி (கதிர்விடுமுன் உள்ள கருநிலை) கணுக்காலுக்கு உவமை கூறப்பட்டது.) V—32

நங்கையின், மென்மையான, கணுக்காலின், இணையாக வேண்டிய நெற்பொதி, தம்முன்னே முள்ளினை திறமையுடன் அடக்கி வைத்திருந்தது. பின்னர் நாட்படவும் அடங்காது அவை (முள்) வெளிப்படவே (நாணத்தால்) தலை குனிந்தன.

(முதலில் நெற்பொதி இணையாக இருந்தாலும் நாட்படவும் முள்வெளிப்படல், நிறமாற்றம், ஆகியவையால் இணையாக முடியவில்லை. அதனால் நாணுற்று தலை கவிழ்ந்தது. நெற் கதிர்கள் முற்றியதும் தலை கவிழ்தலை நாணுற்றதாக பல கவிஞர்கள் கூறியுள்ளனர். அறிவு நிறைந்ததும் தலை நிமிர்ந்த செருக்கு நீங்கி தலை கவிழ்ந்து அடக்கம் ஏற்படுவதாகவும் கவிஞர்கள் வருணிப்பர்.) V—33

"உலகிலுள்ள பொருட்களுக்கெல்லாம் செல்வண்ணம்பூசும் இயல்பினராகிய எம்மீது இனிவேறு செம்பஞ்சுக் குழம்பு (அரத்தகம்) பூசுவானேன்? பேதைமை யல்லவா?" என்று அவளது பாதங்கள், முகமாகிய விரல்களினால் நகமாகிய பற்களைக் காட்டிச் சிரிப்பது போல, நங்கை எழில் மிக்கிருந்தாள்.

(வெண்பற்களாகிய நகங்களிலும் செம்பஞ்சுக் குழம்பு பூசும் போது செம்மை படியுமே எனினும், வெற்றிலை போட்ட பற்களோடு சிரித்தன என்று கொள்க.) V—34

நங்கையின் முழங்கால் ஆமையோடு போல இருக்கும். அவள் நடையோ பிடிநடையாகும். ஆமைக்கும் பிடிக்கும் (யானைக்கும்) ஏற்பட்ட போராட்டம் எனப்படும் பழமொழி இவளால்தான் ஏற்பட்டது.

(கஜகச்சப (யானை, ஆமை) கலஹ நியாயம் எனும் வடமொழிப் பழமொழியைக் கருத்துட்கொண்டு இக்கவிதை உள்ளது யானைக்கும் முதலைக்கும் ஏற்பட்ட போராட்டக்கதை தான் பிரசித்தம் யானை, ஆமை கலகக்கதை தெரியவில்லை. V—35

தே. தருணி தனுகாந்தி யெது2ட நூதன ஹரித்2ர
துலகு ராலேக அத்யந்த மலினயய்யெ
ஔடகா2 ராத்ரியன நிஸயன தமிச்2ர
யன நிஸீதி1னியன க்ஷப யனக2 பரகெ2 V—36

சீ2. அய்யிந்து2 வத2ன த3ராங்கன காவுன
பராங்மைத்ரி பொருகு2ல பா3க2வதுல
க்ருஹமுலந்து2 மராளி கைகாவளீ ஹரி
ணீ மனோஜ்ஞா ச்2ரக்2ணீ ச2மர்க்1ய
லமர ஜனிஞ்சி வயச்யலை நாக2க
ன்யலு புத்ரிகா விவாஹ முலயந்து2
பாடு2 பத்2மாலயா பரிணயாமேய கே2
யமுல அனந்து கல்யாணகு2ணமு
தே. அத்2பு3தம் பொப்ப வினிவினி அதனிகவயு
பு2த்தி3 ப்ராக் ஜன்ம ச2ம்ச்2காரமுன ஜனிம்ப,
த2தவதாரானுமேய கதா சு2தா3னு
கலித லீலானு க்ருதுல வர்திலுசுனுண்டி2 V—37

சீ2. தம தண்ட்2ரி ஸ்ரீஸ த2த்த ஸ்ரீலு க்2ருஹமுன
த்ரவ்வி தண்ட2 முலய்யு தனது2 தொண்டி
ச்2ரக்2வி நிர்மாண தா2ச்2யம் ப2னுத் சே2கத
ஜரபுசு ப்ரஜ்ஞ வைஷ்ணவ புராண
ச2ம்ஹிதா வ்யாக்1யா ரசன ப்ரொத்து2 க2டு2புசு
கட்டெடு2 கம்ம செங்க2லுவ விருல
தோமாலெ லலகலு து2வ்வி கந்துனகுபா2
ர்ஹ நிப2த்த3 கே1டகம் ப2னக2 நீல
தே. வ்ருஷகுத்2ரேக1 னெட2ம கொக்கிந்த யொறக2
இடி2ன த3ம்மில்ல வலயம்பு2 அடு2கு2னந்து2
கொந்த சே2பர்தி1 கீலிஞ்சி கூபவாரி
நீட2 வீக்ஷிஞ்சி க்ரம்மற கூட2னுனுசு V—38

மங்கையின் மேனி எழிலுக்கெதிரே, புது மஞ்சள் துலைக்கு வர முடியாமல் (இணையாகாமல்) மிகுந்த மாசுற்றது. அதனால் தான் அதற்கு இரா, அல், என்பனை போன்ற இரவின் பெயர் களையுற்று கரைந்து இராமலே, இல்லாது போனது.

(மஞ்சள் நாட்படின் மேல்தோல் கருவண்ணம் உறும், மாசுறு வதாக கற்பனை செய்யப்பட்டது. மஞ்சளுக்கு வடமொழியில் இரவின் பெயர்கள் எல்லாம் பரியாய பதங்களாகும். ராத்ரி, நிச, தமிஸ்ர, நிஸீதினி, க்ஷப என்பன இரவின் பெயர்கள். கரைதல், கெடுதல், தேய்தல், என்ற பொருளின் அடியாக இச்சொற்கள் அமைந்தன. அவளது உடல்பொன் வண்ணம் கண்ட மஞ்சள் தோற்று கரைந்து இல்லாது போயிற்று என்பது கருத்து.) IV—36

அந்த மதிமுகத்தினள், பூமி தவியாதலின் அவளுடைய முன்னைய தோழியரான நாகக்கன்னிகள், அவளை இணை பிரியாதிருக்க வேண்டி, பக்கத்து வீடுகளில் வைணவர்களின் மகளிர்களாகப் பிறந்து, மராளிகா (அன்னம்) ஏகாவளி (ஒற்றை வட முத்துமாலை) மனோக்ஞா (மனதை அறிபவள்) ஸ்ரக்விணீ (பூமாலை யுடையவள்) என்ற பெயர்களுடன் தோழியராகத் திகழ்ந்தனர். அவர்கள் பொம்மைக் கல்யாணம் முதலிய விளையாட்டுக்களில் லட்சுமி தேவி திருமண வைபவக் கதைப் பாட்டுக்களைக் கேட்டுக்கேட்டு, வியப்புற்று, திருமாலின் திருவிளையாடல்களில், ஈடுபட்டு அவனையே மணம் புரிய வேண்டுமென முன்பிறவி. வாசனையால், ஆசையுற்று அவனது திரு அவதாரக் கதைகளை மீண்டும் மீண்டும் கேட்டின்புற்று மகிழ்ந்தாள். IV—37

தனது தந்தை (பெரியாழ்வார்) திருமால் தந்த செல்வச் செழிப்பு மிக்கிருந்தும் தனது முன்னைய மாலை தொடுத்துச் சேவகம் புரிதலை விடாது ஆர்வமுடன் இருந்தமையால், திருமாலின் திருவிளையாடல்களையும், வைணவபுராணங்களை யும் வியாக்கியானம் செய்து கொண்டும், நூல்கள் இயற்றிக் கொண்டும் இருப்ப, அவர் கட்டிய மணமிகு செங்கழுநீர், பூக்களை யுடைய தோமாலையை, கூந்தல் சீவி, மன்மதனுக்கு மயிற்பீலியால் இயற்றிய முடி (கேடகம்) போல, கருவண்ணக் காளை மாட்டின் திமில்போல சிறிதே இடப்பக்கம் சாய்ந்த கொண்டையினடியில் விருப்புடன் சேர்த்து (கூந்தலில் பூமாலை சூடி) கிணற்று நீரில் (தன்னெழில்) கண்டு மீண்டும் பூக்குடலை யில் வைப்பாள். IV—38

உ. ஆநவலா யலந்தி பசு2பாடி2, து2கூலமு தால்சி, கு2ப்ப2சன்
கோனல தாவுலுப்பதில குங்கும தேடலநிக்கு2 தேரக2
ப்ரானன நாயி3 தீர்சி, பித்ருப2த்த3 லதாந்தமு லர்தி1
கொப்புனன்
பூனி யொகிந்த சே2புனிசி புச்சி செலின்கனி வெச்சனூர்சுசுன்
V—39

க. மீ பாடி2ன ஹரிசந்த2மு
லேபாடி2க2 தலப வச்சு? இதடே2ச2துலன்
காபாடி2ன வாட2னுகை2
த்ரோபாடி2ன தன்னுவலசி, தொய்யனுலாரா? V—40

தே. தானு சு2ரமௌனி ந்ருபதனுல் தால்கி யகட
காமினீததி உடி2கிஞ்சுகண்டெ அட்டெ
க2ண்டெ2யுனு அல்ல தா2ச2ரிகாடு கிரியு
ஹரியுனை போவுடய மஞ்சிதூ2னுயுக2ம்பு2 V—41

க. ஆதனுவுல லேருகதா2
நாதுலு; மறிகாக கலிகி2னன் வக2 திர்யக்
ஜாதிகி னீ ஜாதிகிகல
யீதீவ்ரத கலதெ2? எறுக2 கிட்லேலண்டின்? V—42

தே. 'ஆத்மவத் ச2ர்வபூ3தானி' யனுட பொங்கெ?
முத்தி2யல கைன வலவந்த முச்சடலனு
ஆடபாடல கதல கொந்தட2கு2கானி
நோருலேனி ஜந்துவுலகெ நொப்பி க3னமு V—43

அந்நங்கை (கோதை) சிறிது மஞ்சள் பூசிக்குளித்து கூறை (சேலை) யுடுத்தி, முலைக்குவட்டில் மணம் மிகுமாறு குங்குமச் சாறு பூசி, கற்பூரத் திலகமிட்டு, தந்தை கட்டிய பூமாலையை விருப்புடன் கூந்தலில் சூடி, சிறிது நேரம் வைத்திருந்து, மீண்டும் களைந்து வைத்துவிட்டு தோழிகளைப் பார்த்து வெய்துயிர்ப் பாள். IV—39

"நீங்கள் பாடிய திருமாலின் நடவடிக்கைகளை எந்த முறையில் சேர்க்க முடியும்? தன்னை நாடிய நங்கையரையே அருள் செய்யாதவன். எந்தப் பெண்ணைத்தான் காப்பாற்றி னான். IV—40

அவன் தேவன், (வாமனன்) முனிவன் (பரசுராமன்) அரசன் (ஸ்ரீராமன்) ஆகிய உடலைத் தாங்கி பெண்களை வெய்துயிர்க்கச் செய்ததைவிட அதற்குமுன் எடுத்த பிறவிகளாகிய, மீன், ஆமை பன்றி, சிங்கமாகிய உருவிலிருந்தாலே நல்லதாயிருந்திருக்கும்.

(பெண்களுக்கு விரகதாபத்துயர் தராத முன்னைய பிறவி களில் மட்டும் பிறந்திருந்தால் நன்றாயிருக்கும் என்பது கருத்து) VI—41

அந்த (மீன், ஆமை, பன்றி, சிங்க)ப் பிறவிகளில் பெண்கள் காதலிக்க வில்லையல்லவா? நல்லதாகப் போயிற்று. ஒருவேளை காதலித்தாலும் விலங்குகட்கு மனிதர்கட்டுள்ள வேட்கை இராதல்லவா? (ஏன் இராது?) தெரியாமல் ஏன் இப்படிச் சொன்னேன். IV—42

"ஆத்மவத் சர்வபூதானி" (தன்னைப் போலவே எல்லா உயிர்களும்) என்பது பொய்தான். மனிதப்பெண்களாவது ஆடல் பாடல்களிலும், சரச சல்லாபங்களிலும், கதைகளிலும் கொஞ்சமாவது விரகதாபத்தை அடக்கிக்கொள்ளலாம். வாயில்லா உயிர்களுக்கு நோயும் அதிகம்தான்.

(தன்போலவே பிற உயிர்களையும் கருதுவது எப்படி? மனிதர்கள் வாயிருப்பதால் பேசி மகிழ்ந்து ஆற்றியிருக்க முடியும். வாயற்ற விலங்குப் பிறவிகளில் எப்படி விரகதாபத்தை அடக்க முடியும் என்பது கருத்து) IV—43

ம. த[3]ரபை ஈதடு[3] பூர்வகல்பமுல ச[2]க்த ச்[2]த்ரீ விஸாலாம்ப[2] காம
புரு ஹ ஸ்ரேணி ஜலம்பு[2]மை புலகலுன் பூரிஞ்சுசுன் வேசுது[2]ர்
ப[3]ர கர்மம் ப[2]லமங்க[2] வச்சு ஜலஜத்வ ச்[2]தப்[2]த[3] ரோமத்வ கே
ச[2]ரிதல் பூ[3]ர்யவதார த[2]ம்ப[3]முன ஆச்சா[1]தி[3]ஞ்சு தா
ப்ரௌடி[2]மன் V—44

க. அனிமிஷ முனி மனுஜாதி[3]ப
ஜனனம்பு[2]ல ஈதடெ[2]ட்லு ஜலஜாக்ஷத கூர்
சின வாரினேசெ த[2]யலே
கனின வினுடு[2] மீது[3]பாட லந்த[2] தெலிபெத[2]ன் V—45

ச. மொத[2]ல உபேந்த்[2]ருடை[2] இதட[2]மோக[3] ஹதின் [3]ப்ருகு[2]
பத்னித்ருஞ்சி, அம்
முது[3]ச[2]லி 'கே[2]ஹினீ விரஹமுன் தனயட்லன பொந்து[3]'
மன்ன, நா
கதி[2]யுனு தே[2]வகார்யமுன கய்யெடு[2] னஞ்சு வஹிஞ்சி,
த்ரோசு லா
கெ[2]த[2]வடுவெய்யு லச்சி ம[2]திகென்னடு[2] பாயனி ஜாலி நிம்படே[2]
V—46

ம. ப்ரளயார்கோக்[2]ர குடார கோணமு ந்ருபத்ரை வித்[3]வத்
பீடி[1]காக்
க்[1]யல த்ரிச்[2]தா[1]னமு லேடு[2]மார்லு வருச[2]ன் க[3]ட்டிஞ்சு
தோ[2]ஸ்ஸக்தி கீர்
ர்திலசத்[2]வல்லகி ம்ரோயு ரக்தயயி யெந்தே வஸ்யயௌபூ[3]ச[2]தீ
திலகம்பு[2]ன் து[2]த[3] த்ரோப கஸ்யபுன கார்தின்[2] பிட்ட[2]யை
போவதே[2] V—47

T. 4697

இவன் முன்பிறவிகளில், காதலித்த கன்னியரின் கமலக் கண்களில் நீரை வரவழைத்தும், அவர்கள் உடலில் புளகம் உருமாறும் செய்த வினைப்பயனால் தான், பின்னர், நீரில் கிடக்கும் மீன், ஆமையாகவும், புளகம் போன்ற மயிர்சிலிர்க்கும் பன்றி, சிங்கமாகவும் பிறந்தான். எனினும் அந்த உண்மையை மறைத்து திறமையாக இருக்கிறான். IV—44

தேவன், முனிவன், அரசனாகப் பிறந்த பிறவிகளில் இவன் தாமரைக் கண்ணாரைத் தண்ணளியின்றித் தவிக்கச் செய்தான் என்றேனே அதனை உங்கள் பாடல்களிலிருந்தே தெரிவிக் கிறேன். IV—45

முதலில் விஷ்ணுமூர்த்தியாக, இவன், பிருகு முனிவரின் மனைவியைக் கொன்று, அந்தக் கிழவன் (பிருகுமுனி) தன்னைப் போல மனைவியைப் பிரிந்து வருந்துவாயாக எனச் சாபமிட எனக்கு அதுவும் தேவகாரியமாகட்டும்'' என்று கூறி வாமனனாகி (பிரம்மச்சாரியாகி) திருமகளைப் பிரிவுத்துயரில் ஆழ்த்தினான் அல்லவா?

(இராமாயணம் உத்தர காண்டத்தில் பிருகு முனிவன் சாபக் கதை வருகிறது. பிருகு முனிவனின் மனைவி அசுரர்களுக்கு அபயமளித்துக் காப்பாற்றியதால் அவளை, விஷ்ணு கொன்ற தாகக் கதை.) IV—46

பிரளயகாலச் சூரியனைப் போன்ற கூரிய கோடாரி (பரசு) யாகிய வீணைத் தண்டினால், பகைவன், பகைவனின் நண்பன், நண்பனின் பகைவன் எனும் முத்திறத்துப் பகைவர்களின் சிம்மாசனங்களாகிய (மந்திர மத்திய தாரங்கள்) கட்டைகளில் ஏழு தடவை (ஏழு சுரங்களில்) வாசித்து, தன் தோள் வலி காட்டிய புகழ் எனும் வீணையை மீட்டிய போது, விழைந்து வந்த பூமியாகிய கற்பின் செல்வியைத் துறந்து காசியப முனிவனின் மகளாகிடச் செய்யவில்லையா?

(''பரசுராமன், தன் தந்தையைக் கொன்ற கார்த்த வீரியார்ச் சுனனின் மக்கள் மீது வஞ்சினம் பூண்டு ஏழு தடவை பூமியை வலம் வந்து, க்ஷத்திரியர்களைக் கொன்று அந்தக் குருதியினால் சமந்த பஞ்சகம், எனும் மடுவை உருவாக்கி பித்ரு தர்ப்பணம் செய்தான். அவன் உலகை வென்றும், காசியபன் எனும் முனிவன் யாசித்ததுமே அந்த உலக முழுதுமே தானம் செய்து விட்டான். உலகம் காசியபன் மகள் ஆயிற்று. ஆதலில் காசினி என்று பூமிக்குப் பெயர் உண்டாயிற்று பரசுராமன் தான் வென்ற பூமியை ஆளாமல் துறந்தான் என்பதால் இப்பிறவியிலும் திருமகள் (பூமி) எனும் பெண்ணுக்கு அருள் செய்யவில்லை என்பது கருத்து.) IV—47

ம. தன சௌ2ந்த2ர்யமு செப்பகா2 கரகி2ப த்2மாகாந்த ரப்பிஞ்சி
மோ
ஹன கஞ்ஜம்பு2ன வைசி திய்ய மிடு நெய்யம் பொ2ப்ப
பைகொன்ன மீ
றிங்ருஸம் ச2த்வமுனன் தொறங்2கி சனிவெர்ரின் சேசெ2,
காகுத்ச்2து1டை2
ன நிலிம்பாரி2விதா2ரி சந்த2முலு டெ2ந்தானன் விசாரிம்புடா2
V—48

சா. செலுவமு தால்சி தன்கவய சேரின ராகி2ணி ராவண2ச்வச2ன்
நலுவுரு நவ்வ அத்தெற கொ2னர்பக யேலின, விய்யமை
அதண்
ட2லுக2ட2, சீ2த கிட்டிதலபாத்ம தலம்பக யாயமன் வ்ருத
கல ஹமுனன் தனுந்தொறகு2 காககு நாககு லோனு சேயடே2
V—49

பொ. பீ1ட்கார ச்2ரபத2ச்2ரமை பெத2வி கம்பிம்பன், மொறல்
கிட்டி ப்ரா
வ்ருட் காலாம் பு2த2 க2ர்ஜ கெ2ல்வக2, வலச்ச்1ரீகண்ட2
ஸாக1ாசிதத்
விட் கும்பீ2நஸரேக1 கே2லசிலதா த்3ருத்2 பா2ஹு வேஷ்டிம்ப
முன்
ராட்கண்டி1ரவமை ஒனர்செ வடி2 சோ2னா லண்டகோ3ணாச்
சி1த3ன் V—50

தே. ஒல்ல பொம்மன்ன போதெ2, தானுல்ல ச2முல
னேப? அ2தி ரக்கசி2ய யௌட எக்கெ2? வலசி
ச்2த்ரீலு தலவம்ப தானவச்செ, அதி2 சால
காடதா2னி ப2ஜீது சேயக வலயுனெ? V—51

தனது அழகினைச் சொல்லக் கேட்டு, மனமுருகி, திருமகள் (ராஜ்யலட்சுமி) அழைத்துத் தாமரைப் படுக்கையில் இன்ப முடைய அன்போடு கூடி இணைய வரும்போது, கொடுமையாகத் துறந்து சென்று அவளைப் பித்துறச் செய்த காருத்தனாகிய இராமனின் நடவடிக்கைகளை உள்ளத்தில் ஆராய்ந்து பாருங்கள்.

(இராமன், அரசு ஆகிய திருமகளைத் துறந்து பட்டம் ஏற்காமல் காட்டுக்குச் சென்று அவளை பிரிவுத் துயரில் ஆழ்த்தினான் என்பது கருத்து.) IV—48

அழகிய உருவந்தாங்கி, தன்னை நாடிக் காதலித்து வந்த இராவணனின் தங்கை (சூர்ப்பநகை) யை, நாலுபேர் நகைக்கும் படியாக அவ்விதம் (மூக்கரிந்த செயல்) செய்யாமல், ஏற்றுக் கொண்டிருந்தால், சம்பந்தியாகி, அந்த இராவணனும் சினந்து சீதையைச் சிறை வைக்கமாட்டான். வீணாகப் பகை மூளச் செய்து தனக்கும், சீதைக்கும் இராவணனுக்கும், சூர்ப்பணகைக் கும் கேடுண்டாக்கிக் கொண்டானல்லவா?

(சூர்ப்பணகையை ஏற்றிருந்தால் இத்துணைத் துன்பம் வராது என்றும்' நயந்து வந்த பெண்ணைக் கொடுமைப்படுத்து வது நியாயமா? என்றும் கேட்கிறாள் கோதை! பெண்கள் உணர்வறிந்த பெண்ணுக்குத்தானே இரக்கம் அதிகம்.) IV—49

ஓவென்றலறிச் செங்குருதி ஒழுக, உதடுகள் துடிக்க, முகில் முழக்கம் என முறையிட்டவாறு, கொடி போன்ற வாள் ஏந்திய சந்தன மரக்கிளை போன்ற தோள்களைத் தடுக்க பாம்பு போன்ற தன் கரங்களைச் சுற்றிய சூர்ப்பணகையை சிங்க மொத்த அவன் மூக்கரிந்து கொடுமைப் படுத்தவில்லையா?

(மூக்கரிந்தது இலக்குவனே எனினும் பொறுப்பாளி இராமனாதலின் இராமன் மேலேற்றிக் கூறப்பட்டது. கோயில் கட்டுதல் சிற்பியேயாயினும் அரசன் கோயில் கட்டினான் என்பது போல) IV—50

வேண்டாம் போ என்றால் போக மாட்டாளா? அவள் அரக்கி என்பதால் பரிகாசம் செய்து அலைக்கழித்தல் முறையோ? பெண் குலமே நாணுமாறு அவளாகவே வந்தாள்! அது போதாதென்று பெண்ணைக் கேவலப் படுத்த வேண்டுமா? V—51

ம. தனுனண்டன் ச[1]துலெளட கோரு முனிப்[3]ருந்த[3]ம்பு[2]ன் ததா[2]பாதி[2]ப
த்[2]வன க்ஷோத[2]மு கல்[2]கியுன், பெறஜனின் தாவல்லவ ச்[2]த்ரீலுகா[2]
ஜனனம்ப[2]ந்த[2]க[3] சே[2]சி கூடி[2]யு, னுநாசக்தாத்மலன் காந்தி[2]னீ
தனயப்ரேரண பாசெ[3] போ[3]ஜபுர யாத்ராத[2]ம்ப[3] ச[2]ம்ரம்[3]பியை V—52

ச. ஹதலனொானர்செ மோஹிதலனல்ல யயோமு[1]கி ணாபுலச்[2]த்ய பூ[3]
சு[2]தனு விருபலெளட ஊனுசோ, முச[2]லின் பெனுனிட்ட தாடிமை
யதிவ ரமிஞ்செ தாமுச[2]லியய்யு, ரஹின் மறுகு[2]ஜ்ஜா ப்ரேஷ்யகை
த்[3]ருதிசெடி[2] யுக்[2]ரசே[2]னுனகு ப்ரேஷ்யத ஒந்தி[2]யு தி[2]த்தி[2] யேலடே V—53

தே. தனகு அந்த[2]று கூர்ப ப்[2]ருந்தா[2] வனமுன
ஒகதெ ரதிதேல்செ, காக ஒண்டொ[2]கதெ ப்ரேல்சி
யந்த ராத[3]கு மேலுவாடை[2] முராரி
எல்ல ச[2]துலகு எதனுடு[2]கே யிட[2]ண்டெ[2] V—54

வ. அனி யிட்லு த்ரபாப[3]ரம்பு[2]ன உபாலம்ப[3] த[3]ம்ப[3]ம்பு[2]கா[2] சேயு புனஃபுனச்[2]மரணம்பு[2]ன அந்தஃகரண ராக[2]ம்பு[2] தேடபட[2]ன் தெலி[2]சிபோ[2]டு லீ போ[2]டி கைடபா[3]ரி யெட[2] நாடுகொன்ன கன்னெ கூர்மி லஜ்ஜா வஸம்வதி[2]யை வெலிவிரியங்கா[2]னீக-புடபாக நிகாஸம்[2]பகு[2] காக சீகாகுப[2]டி னாடு[2] நாடிகி அகு[2]-சுன்னட்லே க்[2]ட[2]கிட நகு[2]சுன்ன தி[2]ந்த இய்யிந்தி யெரவு மான்சி மனலனு கு[2]ட்டெறுங்க[2]னீயனி இங்[2]கிதம் பெ[2]றுக பறுசுகொனி சிந்தாபனோத[2]னம்பு[2] சேயகுன்னன் ப்ரமாத[2]ம்-ப[2]னி நவ்வுசு நர்மக[2]ர்ப[3]ம்பு[2]கா[2] இட்லனிரி. V—55

தன்னைத் தழுவப் பெண்ணாகப் பிறக்க விரும்பிய முனிவர் களை, தன் பாதத்துக்குள் (பொண்ணாக்கும்) ஆற்றல் இருந்தும் கூட, மற்றொரு பிறவியில் (கண்ணன் ஆகி) ஆயர் மகளிராகப் பிறக்கச் செய்து இணைந்தும், அக்குருரவன் தூண்டுதலால், அந்நங்கையரைப் பிரிந்து மதுராபுரிக்குச் சென்று விடவில்லையா?

(ஆடவர் பெண்மை அவாவுறும் அழகன் என்று கம்பனும் இராமனைக் குறிப்பிடுவான். முனிவர்கள் பரம்பொருளைப் பெண் கோலத்தில் சுவைக்க விரும்பி ஆயர் மகளிராகப் பிறந்தனர் என்று பாகவதக் கதை கூறுகிறது.) V—52

அயோமுகி, சூர்ப்பணகை ஆகியவர்களை அரக்கியர் அழகற்ற வர்கள் என நயவாது தண்டித்தான் என்றால் பலராமனாகி, தன்னை விட வயதில் மூத்த பனைமரம் போன்றுயர்ந்த ரேவதியைத் தான் கிழவனாகி இணையவில்லையா? கண்ணன் ஆகி, கூனியாகிய (குப்ஜா எனும்) வேலைக்காரியை விரும்பி உக்கிரசேனனிடம் தான் சேவகனாகி, கூனலைத் திருத்தி ஏற்றுக் கொள்ளவில்லையா?

(அழகு, இளமை இல்லாவிட்டாலும் அன்பிருந்தால் ஏற்றுக் கொள்வர் என்றும், அரக்கியர்பால் அன்பின்மையால் அவன் அவர்களை ஏற்றுக் கொள்ளவில்லை என்றும் கருத்து)

(கிழவன் என்பது உரிமையுடையவன் என்ற பொருளிலும் கொள்க.) V—53

முராரி, (கண்ணன்) பிருந்தாவனத்தில் தன்னை எல்லோரும் காதலித்திருந்தாலும் சிலரைப் புணர்ந்தும் சிலரை விரகதாபத் தால் வருத்தியும் ராதையிடம் மட்டும் ஈடுபாட்டுடன் இருந்து எல்லாப் பெண்டிரையும் மனவருத்தம் செய்யவில்லையா? V—54

என்று, இவ்விதமாக, நாணம் மிகுதியினால் நிந்திப்பது போல மீண்டும் மீண்டும் நினைந்து திருமாலைப் பற்றிப் பேசவும், தோழியர் அவளது உட்கரந்துறையும் காதலையுணர்ந்து கொண்டு "இந்தத் தோழி திருமாலிடம் ஈடுபட்ட கன்னிக் காதலுடையவளாய் நாணத்தால் வெளிப்படக் காட்டாமல், புடமிட்ட பொன் போல, உள்ளம் வெதும்பி, சிக்குற்று, நாள் தோறும் சிரித்தவாறே சங்கடப்பட்டுக் கொண்டிருக்கிறாள். இந்நங்கையின் தனிமை (மறைவான உணர்வுகளை) நீக்கி நம்மோடிணைந்து கலந்துறவாடச் செய்து, நம்மிடம் மறைக்கும் மனக் கருத்தினை (இங்கிதம்) தானே தெரிவிக்கும்படி செய்து கவலையை நீக்காவிட்டால் மோசம் நேரும்'' என்று சிரித்தவாறு குறிப்போடிவ்வாறு கூறினர். V—55

உ. எவ்வரு அட்லபோ நெரசு லென்னக மானரு ப்ராண ப3ர்தலன்

த2வ்வுல னுன்ன காக கதனன், மறிவாரலு வஸ்யுலைன தா

ரெவ்வரி னொல்ல கொக்கடயி இந்த2ருடு2

சந்த்2ருட2டண்ட்3ரு, போ2டி தா

னிவ்வல தேரகத்தெயகு2 னிட்டிவி னீதல வேகெ2னே செலீ

V—56

க. அனுடயு எலநகவட2சுசு

கனலிஞ்கக தெச்கி யெளடு3 கறசுசு அய்யங்

க2னலன் கந்து2க நிகரமு

கொனி வ்ரேயுசு கெலனு சூசுகொனுசுன் பலிகென் V—57

க. விடு2வக மீகா2னமு சொ2க2

சி2டு2டயு, மறிபாடு3 ட2னுட யெக்கே2? பாசெ2ம்

ப3டி2கி2ன வாரே பேத2லெ?

கொடி2மெலு க2ட்டகுடி அதுனி கொனி பனி ஏலா? V—58

ஸா. போனிண்ட2ன்ன, வயச்3ய லிட்லனி, ரகு3ம்போ3 நிக்க

மிங்கிப்புடே2

கானம்மிங்கொக கொந்த சே2படிகி3 கானீ, ச2கீ1 யெல்லியே

கானீ நீநுடி2 தன்மனோஜ்ஞ கு3ணமுல்கானீ, தத3ங்யாயமுல்

கானீ, சிந்தி2ன சிந்த நீ கதனிபை காகெவ்வரின்

தேல்செதே2? V—59

எல்லோரும் இப்படித்தான், உயிர்த்துணைவர்கள் நெடுந் தொலை பிரிந்திருந்தார்கள் என்றால், பிரிவுத் துயரால் வெய்துயிர்த்து குற்றங்கூறாமலிருக்க மாட்டார்கள். பின் அவர்கள் தம் வசப்படினோ, யாரையும் பொருட்படுத்தாமல் அவர்களோடிணைந்து இந்திரன் சந்திரன் என்று புகழ்வார்கள். அதன் பிறகு இணைவித்த தோழியரும் பயனற்றவர்களாக நினைப்பார்கள். இத்தகைய நிலை உன் தலையிலும் விடிந்தது போலும். V—56

எனலும், இளநகை யரும்ப, வெளிக்காட்டாதடக்கி, சிறிது சினம் வரவழைத்துக் கொண்டு, கீழுதட்டைக் கடித்துக்கொண்டு, அத்தோழியரை பந்தினால் மெல்ல வீசி எறிந்து, அக்கம்பக்கம் பார்த்தவாறு மெதுவாகச் சொன்னாள். V—57

இடைவிடாத உங்கள் பாட்டு அழகாக இருந்ததினால்; மீண்டும் பாடச் சொன்னேனே யன்றி வேறல்ல. இது தவறா? பாயசம் மீண்டும் கேட்டால் ஏழைகளாகி விடுவரே? பழி தூற்றா தீர்கள். அவனோடெனக்கென்ன வேலை?

(விருந்தில் பாயசம் மீண்டும் வேண்டினால் அவர்கள் ஏழைகள் தான் என்பதில்லை. செல்வந்தரும் சுவைத்துக் கேட்கலாம் என்ற பழமொழியைக் கூறி இசைக்கு மயங்கினேனேயன்றி இறைவனை நாடவில்லை என்றாள் கோதை) V—58

அந்தப் பேச்சை விடுங்கள் என்று கோதை கூற தோழியர், இவ்விதம் கூறலானார்கள். "ஆகட்டும், நீ சொல்வது உண்மை தான்! இனிமேலேப் போதாவது, இனிக்கொஞ்சநேரம் கழித்தாவது, நாளையேனும், நீ அவனுடைய குணங்களையோ, குற்றங்களையோ சொன்னால் அப்போது சொல்லுகிறோம்? உன் மனம் அவனிடம் ஈடுபட்டிருப்பதை மறைத்து எங்களை ஏமாற்றப் பார்க்கிறாயா? V—59

சீ[2]. நக[1]மு கோ[1]ஜ்ஜி[1]த பராங்முக[2]முக்த பா[2]ஷ்பாம்பு[3]
படிம தீ[2]பபு சிடசிடலு தெலுப,
பொரி உபாம் ஸா[3]த்ச்[3]ருஷ்ட பூ[1]த்க்ருதுல் க்ருஸமத்[3]ய
பார்ஸ்வ முஹு:. ப்ரகம்பமுலு தெலுப,
ஒத[2]வெடு[2] கா[2]த்[2]க[2]த்[3]ய மதி[3]ரிபாடுன பல்க
ரிம்ப புட்டெடு[2] கேரிந்த தெலுப
வலவந்த விசு[2]வு காந்தல புட்டு தூ[2]ஷிஞ்சு
காரணம்பு[2]ல தொண்டி கதலு தெலுப,

தே. அலத பானுபுபை பொரலாட தெலுப
தெகு[2]வ லோலோனனே நவ்வு நக[2]வு தெலுப,
கலக மாமீதி[2] பனிலேனி கச[2]ரு தெலுப
பொலதி ரேலு நீயுன்கியே புலுகு[2] காதெ[2] V—60

ச. எறுக[2]ருகா[2] யொக யத்[2]பு[3]தமு! ஈசெலிதீ[2]ர்கி[3]க தீர்த[1]மாட[2]னா
யறுததகி[2]ல்சி போவு தனஹாரமு; போயின நேனு போவுது[2]ன்
மறவகவென்ட போவஜல மக்[2]னத னெளனதி[2]சு[2]ன்ன;
மைன தா
கறகறி பெட்டி சொ[2]ம்மடு[2]கு[2] கானி நிஜார்தி'யெறுங்யக[2]
தே[2]மியுன் V—61

ச. அனின மராளிபல்கு, வினவாஹரிணீ, யொகநாடு[2] கச்[2]துரின்
கொனியிடு[2] பொ[2]ட்டு நாகனுசுகூர்மி ஒச[2]ங்கி[2]ன?
பெட்டுசுண்ட[2], சுர்
ரனுசு மொக[2]ம்பு[2] வ்ரேசி[2]னடுலெளதன யூர்புல
னிங்கியிங்கி போ
யினபலு பே[2]ண்ட்லு கோ[2]ரகொனி யெத்தனெ பட்டெனு
மாடி மாடிகின் V—62

நீ முகத்தைத் திருப்பிக் கொண்டு (பிறரறியாது) நகநுனியால் துடைத்தெறிந்த கண்ணீர்த் துளிகள், விளக்குச் சுடரில்பட்டு சடசட என்ற ஓசை எழுப்ப நீ அழுவதைத் தெரிவிக்கவும்,

மிகுந்த வருத்தமுடன் மறைவாக (உஸ் என்று) வாயால் நெட்டுயிர்த்தல், மெல்லிய இடையின் பக்கங்கள் அடிக்கடி அசைவதால் தெரிவிக்கவும்,

(நாங்கள் பேச்சுக் கொடுக்கும்போது) திடுக்கிட்டு தழுதழுத்த குரலைச் சரி செய்ய நீ முயலும் முயற்சியே நின் நிலையை வெளிப்படுத்தவும்,

(பெண்ணாகப் பிறந்ததே தவறு என்று) பெண்பிறவியை விரகத்துயரால் நிந்திக்கும் உன் நடவடிக்கைகளே உன் துயரை எடுத்துக் காட்டவும், பிரிவாற்றாது படுக்கையில் புரளுவதே துயிலின்மையை புலப்படுத்த, துணிவு (இறந்து விடுவோமா என்ற மனத்துணிவு) உள்ளுக்குள்ளேயே நீ சிரித்துக் கொள்வதே புலப்படுத்த, எங்கள் மேல் (தோழியர்பால்) காரணமில்லாமல் கோபித்துக்கொள்வது உன் மனக்கலக்கத்தை உணர்த்த, நங்காய்! நீ இரவில் படும் அவத்தையைக் காட்டும் அடையாளங்கள் அல்லவா?'' V—60

(ஒருதோழி சொல்கிறாள்)

"ஒரு அற்புதம் உங்களுக்குத் தெரியாதல்லவா? இந்தத் தோழி (கோதை) பொய்கையில் குளிக்கப்போகும்போது தன் முத்து மாலையை என்னிடம் ஒப்படைத்தாள். நானும் அவளுடன் சென்று மறந்துபோய் கூடவே குளிக்க நீரில் இறங்கினேன் (விரகதாபத்தால் முன்பே பொரிந்திருந்த முத்துமாலை)

நீரில் பட்டதும் சுண்ணாம்பாகிவிட்டது. அவளோ வற்புறுத்தி தனது நகையைத் (முத்துமாலை) தருமாறு கேட்கிறாள்! கேட்கிறாளேயன்றி தன் நிலைமையை சிறிதும் உணர்ந்ததாகத் தெரியவில்லை. V—61

எனவும், மராளிகா எனும் தோழி சொல்வாள் ''கேட்டாயா ஹரிணீ! ஒரு நாள் கஸ்தூரி எடுத்துக்கொண்டு போய் எனக்கு பொட்டுவை என்று அன்புடன் (கோதையை) கேட்கவும் அவள் பொட்டிட முனைந்தாள். சுரீர் என்று முகத்தில் சுட்டதுபோல அவள் நெட்டுயிர்ப்புக்காற்றினால் கஸ்தூரி காய்ந்துபோகவும், அதை நகத்தால் சுரண்டி எடுக்கவும், மீண்டும் வைக்கவும், காய்ந்ததைச் சுரண்டவுமே நேரம் சரியாகப் போய்விட்டது. V—62

ம. அனினன் ச்2ரக்2விணி பல்கெ, தன்னு செலுலாரா;
நேலதாடோ2ல சிக்
க்கன சூபன் தெகி3வ்ரால தீ2னி சனுவ்ரேகம்பே3 க்ரியன்
தால்துனே
யனி பட்டந் தி2னமத்3ய மார்கருசி ஸீர்யன்
மஞ்ஜருல்வோணிவா.
டி2ன பாலிண்ட்லனு பெ3ண்டு2 பொ3ம்ம க2தினுண்டெ2ன்
ச3ந்தி2டன் சுல்கனை V—63

வ. அனிதன யவச்2த3 தோபனாடி2ன அனாத2ரயுன் போலெ வாரல கிட்லனியெ V—64

க. ஆர்பக2 தீர்பக3 மிக்கிலி
நேர்புகல வயச்2ய லட்லு நெலதலு மீமீ
நேர்புன பலிகெத2ரக்கற
யேர்பட2 மீ கீ விசார மேடிகி செபுட2 V—65

வ. அனி மேலம்பு2 சேசி1கொனி தேலிபோ பலிகி புடபாக ப்ரகாரம்ப2கு2 வியோக3 த2வது3 ப3ரம்ப2வ்வதூ3ரத்னம் ப2ட2ஞ்சிகொனி யுண்டி3யு உண்ட2லேக நிஸா ச2மயம்பு2ல ஒக்கொக மாடு தனலோன V—66

சீ2. அபி3னவ குவலய ஸ்யாம கோமலமைன
டா2மூபு மகர குண்ட2லமு தால்ப,
நிச்2து லாச்யஸ்ரீ வய ச்2தம்ப3 நிக்ஷிப்த
னிம்ப2ச்ச1த2 ப்3ரூவு நிக்க சு2ந்த,
பருவம்பு மங்கென விரிவம்பு நரவம்பு
வாதெற சந்த்2ரம்பு வானகுரிய,
அட்ட2ம்பு மெறுகு2 வாலா ரு கன்2கவசூட்2கி
ஸ்ரவண குண்ட2ல காந்தி ச2வதுகாக2,

தே. ச2ப்தபு3வனாங்க2 னானுரஞ்ஜனகு ச2ப்த
வித3 பரீவாஹமுக2 கா2ன சு2த3வெலார்சு
மாட்2கி வேணுவுபை வ்ரேளளு மார்சிமார்சி
மருலு கொலிபிதெ, கோ2விந்த2 மந்த2ச2துல V—67

எனவும், சிரக்வினி எனும் தோழி சொன்னாள். "தோழியரே! நான் இவளை பூங்கொடி ஊஞ்சலில் ஊக்கும்போது, இவளது முலைப் பாரத்தினால் பூங்கொடி அறுந்து வீழின் எவ்விதம் தாங்குவது என்று ஐயுற்று கைலாகில் இவளைத் தூக்கிப் பார்க்கவே நடுப்பகலில் வாடிய தட்டைப்பொம்மை போல எளிதாக (இலேசாக) என் கைகளில் இருந்தாள்". V—63

என்றிவ்வாறு தன் நிலைமை தோன்றும் படியாகக் கூறவும், அவற்றைப் பொருட்படுத்தாதவள்போல அவர்களிடம் இவ்விதம் கூறினாள். V—64

"ஆற்று விக்கவும், தீர்த்துவிடவும் மிகுதிறமையுடைய தோழிகள் போல நீங்கள் ஏதேதோ பேசுகிறீர்கள்! என்மீது எவ்வளவோ அக்கறை இருப்பது போலக் காட்டுகிறீர்கள்! உங்களுக்கேன் இந்தக் கவலை எல்லாம்? V—65

என்று பரிகாசம் செய்துகொண்டு, மறக்கடித்துப் பேசி புடமிட்டதுபோல விரகத்துயரால் வெய்துயிர்த்து, அந்நங்கையர் திலகம், அடக்கியும் அடக்க முடியாமல் இரவில் ஒவ்வொரு சமயம் தனக்குள் இவ்விதம் கூறிக்கொள்வாள். V—66

புதிதாக அலர்ந்த வேளை மலர் போன்ற கருவண்ணமுடைய மென்மையான இடது தோளில் மகர குண்டலம் தொட்டுக் கிடக்க,

இணையற்ற முகத்தெழில் எனும் திருவார்ந்த இளமையை நிலைநிறுத்தும் வேப்பிலையோ என புருவத்தைச் சிறிதே கோட்டியும்,

பருவத்தலர்ந்த பந்தூகம் (உச்சிதிலகம்†) போன்ற இதழ்கள் சிந்தூர மழை பொழிய, ஒளி பொருந்திய கண்ணிணைகளின் பார்வை, காதிலணிந்த குண்டலங்களின் ஒளியோடிணைய, ஏழு உலகங்களிலுள்ள மகளிரையும் மகிழ்விக்கும் ஏழுவிதமான (சப்தசுரங்களாகிய) மதகுகள் மூலம் அமுதம் பொழிவித்திடல் போல குழல்மேல் விரல்களை மாற்றி மாற்றி வைத்து (ஊதி) ஆய்ச்சியரை மயக்க முறச்செய்தனையோ? V—67

---

† Dopahariya Pentapetas phoenicia, என்னும் தாவர மலர்

உ. அக்கட ராத3 நீகு தக2வா மக2வாரல அத்தமாமலன்
தக்கி முகுந்த2 வேணு கலநாத2புடிலகு லேடி மொத்தமை
த்ரெக்கொனு காகமை நடி2கிரேல ருதெ2ஞ்சின கோ2பி
காவளின்
பொக்கக2 சேசி2 தத்ருசிர போ3க2மு கு2த்தக2 நீவ
கைகொனன் V—68

உ. அக்கமலா க்ஷுடொ2க்கதெ நிஜாம்ச2முனந்தி2டி2
குஞ்ஜபுஞ்ஜபுன்
சக்கிகி கொஞ்சுபோவ பெற சானலினாத்மஜவெண்ட
வ்ரேகு2நன்
மிக்கிலி டி2க்கு2 பாத2ச2ரணின் சனி ரோயு2துரட்டெ1
ரோ2சி தா
ரக்கட2 காஞ்சுடேமி வலத2ா ய3பிமான மொகிந்த இந்திகின்
V—69

ச. இலுகலனைன வெல்வட2னி ஈலுவுடாண்ட்2ரகு தாபிகத்தெவை
யுலு கெட2லிஞ்சி ஸௌரி தனுயோக2பு வாசவிகூபி மீத2 பெல்
லலமு வியோக2 வஹ்னி ப3வத2ந்தர சை2கதபங்க்தி
பொந்தவன்
தல பொரலிஞ்சி தௌது2 ஸமனச்2 வசவுக்2ரமயூக1 நந்த2னீ
V–70

வ. அனி யொண்டி பாடுனன் தனலோனன்பலுகு பலுகு லாலிஞ்சி
பொஞ்சியுன்ன வயச்2ய லாச்2யம்பு2 லபஹாச்2ய சந்த்2ரிகா
துந்தி2லம்பு2லுகா2 தோசி 'பா3ம யேமேமி? நீமனம் பெ2றிங்-கி
யே கதா2 முனுமுன்ன யதனி மாடலு மானலே வண்டி'மனி
மூத2லிஞ்சினன் கிஞ்சி த2வனதானனயை நெம்மொக2ம்பு2
வெலவெல பாடு லேநக2வுன அட2ஞ்சி மறி மொறங்க2 அனுவு
-பட2க யந்த2ம்பு2 கூடு2கொனி வாரிகிட்லனியெ V—71

அந்தோ ராதையே! உனக்குத் தகுந்ததுதானா? (முறையா) கணவரையும் மாமன்மாமியரையும் விடுத்து (ஏமாற்றி வந்து) முகுந்தனின் வேணுகானம் (குழலிசை) ஆகிய வீளைக்கு (விளிக்கும் ஓசை) ஆட்பட்டு, மான்களின் கூட்டம் போல வந்து, (நிராசையுற்று) விரகதாபத்தால் வெந்து, பயந்து, இரவில் வந்த ஆய்ச்சியர்களை வருத்தமுறச் செய்து, நீ ஒருத்திமட்டும் அவன் நலம் முழுமையும் குத்தகைக்கு எடுத்தாற் போல் இன்பத்தில் திளைத்தாயே! (இது நியாயமாகுமா?) V—68

அக்கமலக் கண்ணன், ஒருத்தியைத் தன் தோளில் ஏற்றிக் கொண்டு பூம் புதர்க்காட்டிற்கொண்டு போகவும், பிற நங்கையர் எல்லாம், யமுனைக் கரையில், சுமையால் மிகவும் அழுத்திய அடிச்சுவடுகளைப் பின்பற்றித் தேடிச் செல்வர். சென்று தேடி அங்கே எதைக் காணப்போகிறார்கள்? பெண் களுக்குத் தன்மானம் வேண்டாமோ? V—69

வீட்டை விட்டுக் கனவிலும் வெளியேறாத கற்புடைய மகளிரைக் கூட்டி விடுபவளாக, அச்சத்தை நீக்கி, கண்ணனின் கலவி இன்பச் சுவையைக் காட்டி, பிறகு, அவர்கள் விரகதாபத் தால் உன்னுடைய மணல் திட்டுகளில் வருத்தத்தால் புரளச் செய்தனை! கொடுங்கதிர்க்கற்றையுடையவனின் மகள் அல்லவா நீ!

(கொடுங்கதிர்களையுடைய சூரியனின் மகள் யமுனை! யமனின் சகோதரியுமாவாள்! ஆதலின் மரபு வழிப்பட்ட கொடுமை உனக்கும் ஏற்பட்டது என்பது குறிப்பு. உள்ளச் சூட்டைவிட மணல்திட்டுச் சூடு குறைந்தது ஆதலின் அதில் துன்பத்தால் புரண்டனர் என்றும் குறிப்புள்ளது) V—70

என்று தனித்துத் தனக்குள் சொல்லிக்கொள்ளும் சொற் களைக் கேட்ட அருகிலிருந்த தோழியர் முகத்தில் ஏளனச் சிரிப்பு எனும் நிலவொளி கால, வெளிப்பட்டு, நங்காய்,! என்னென்ன உன் மனமறிந்துதானே முதன் முதலிலேயே அவனைப் பற்றிய பேச்சுக்களைவிட இயலாது என்று சொன்னோம் என்று நினைவூட்டவும், சிறிது தலை கவழ்ந்த வளாக, முகம் வெளுப்ப குறு நகையடக்கிக்கொண்டு, இனியும் மறைக்க முடியாமற் போகவே, அவர்களோடு கலந்து இவ்வாறு கூறினாள். V—72

தே. 'நாடு2 மனமுன்ன னெட்லொ பூபோ2டு2லார!'
யனின, வாரலு மகு2ட2 ஆயமகு னனிரி,
'யிந்தி, நாடு2ண்ட2 கெந்து2 போயிதிவி நீ?'வ
டன்ன அச்செருவடி2 வாரி கதிவ பலிகெ V—72

தே. 'ச2கியலார, த்ரைகாலிக ஜ்ஞானவந்து
லைன ருஷுலட்ல பலிகெத2 ரந்த யெறுக
யெத2 கலிகெ2னேனி யெறி2கிம்பு டே2னு மொத2ல
னெவ்வதெ' முன்ன; மறிவாரு இட்டு லனிரி V—73

ம. தி2விஜ த்2ருப்ரச2வம்பு2 காஞ்சின ச2பத்னின்சூசி
சூபோப, கின்
தவுஜில்கு2ம்ப2னியந்த சேசி, மதினீர்ஷ்யாக்ரோத3முல்
ச2ந்த2டி2ம்
ப,விரிம்போ2க, த்2ருமம்பு2 கைகொனி பதின்மந்தன்ன
ம்ரானெல்ல தே
னவ3திம் பெ2ட்டின ச2த்ய நீவஹஹ காவா பா3மினீ'
நாவுடு2ன் V—74

வ. க்2ரக்குனன் ப்ரத்யுத்பன்ன விஜ்ஞானயை, க்2குஹ தீ2பிகா
ரோபணம்பு2னன் க்2ருஹக2த பதா2ர்த1ம்பு2 லொக்கமாடெ
த்2ருக்கோ2சரம்பு2 லகு2னட்லு, ஜன்மாந்தரம்பு2ன அய்யனந்
-துனி தோடி2 க்ரீடா3 ப்ரபஞ்சம்பு2 ச2த்2யச்ச3மநு பூதம்பை2ன
தெறங்கு2னன் தோசின V—75

"மலரன்ன மங்கையரே! அன்று நாம் இருந்திருந்தால் எப்படியிருப்போம்?" எனலும் அவர்கள் பதிலுக்கு அவளிடம் கூறினர். "நங்காய் அன்று நீ இல்லாமல் எங்கே போய் விட்டாய்?" என்றலும் வியப்புடன் கோதை கூறினாள். V—72

"தோழியரே! முக்காலமும் உணர்ந்த முனிவர்கள் போலச் சொல்கிறீர்கள்! அத்தகைய ஞானம் உங்களுக்கிருந்தால் சொல்லுங்கள், முதலில் நான் யாராக இருந்தேன்?" எனவும், அவர்கள் மீண்டும் இவ்விதப் கூறலானார்கள். V—73

"செம்மலர்க் கண்ணினாய்! வானுலகப் (பாரிவிதப்) பூவை சக்களத்தி (ருக்மணி)யிடம் தந்ததைக் கண்டு, பொறுக்காமல், சிறிய செய்தியைப் பெரியதாக்கி, சினமும் பொறாமையும் கொண்டு, பூவோடு போகாமல் மரத்தையே கொண்டு வருமாறு கணவனை ஏவி, மருந்தென மரமே கொண்டு வருமாறு போல கெடுவைத்துத் தருவித்த அப்போதைய சத்தியபாமையல்லவா நீ"

(மருந்து கொண்டு வரச்சொல்லின் மரத்தையே கொண்டு வருமாறு என்பது பழமொழி. அனுமன் மருந்துக்காக மலையையே கொணர்ந்தது போல என்பது குறிப்பு. செம்மலர்க் கண்ணினாய்! என்பதில் சினந்ததால் (செம்மை படர்ந்த கண் என்று குறிப்பால் சத்திய பாமையே நீ என்ற கருத்தை விளக்கும்)
V—74

திடீரென (உடனே) உதித்த ஞானம் உடையவளாய், வீட்டில் விளக்கேற்றியதும் வீட்டிலுள்ள பொருள்கள் எல்லாம் உடனே புலப்படுவது போல, முற் பிறவியில் கண்ணனோடு விளையாடிக் களித்த இனிய அனுபவங்கள் அப்போது துய்த்தாற் போலத் தோன்றவும், V—75

உ. வாலிக கன்னுலன் பொட2மு வாரி ச3கஜ்ஜல மாஸ்ரிதஸ்ரவோ
கோ2ளகமை தத2ந்திகபு குந்தலவல்லிகி தல்லிதோடு3கா2
மைலவலின்னனல் நிகு2டு3மை புலகல் நிகு2ட2ன்
ஸ்லதா1ங்கி2யை
சோ2லின சூசி டெ3ந்த2முலு சுர்ரன ஹாயனி
போ2டுலர்மிலின் V—76

உ. எந்தகு தெச்செனே ச2ரசி3ஜே க்ஷண செய்த2முலிந்து மீத3ஜன்
மாந்தர வர்தனம்பு3 ஹ்ருத2யம்பு2ன கித்தறினெச்சரிஞ்சி கோ3
ரந்தலு கொண்ட2 லந்த லகு2னட்லுக3 சேசி2தி, மஞ்சு
கூபிகோத்2
வாந்த ச2தாளவ்ருந்த ம்ருது2வாத ஹிமாம்பு2 கணாளி
தேர்சினன் V—77

க. தெலி3சி கனுதெறசி வெண்டி2யு
ஜலஜேக்ஷண தன் முகுந்த2 சரண ச்2ம்ருதி நிஸ்
சலத கனிமொகி3சிமறி யஸ்
ருலு றெப்பல த்ரோவ தெறசி சூசி ச3கு1ல தோன் V—78

க. மீரெவ்வரனுடயுனு, ஸ்ருஸ்
கா3ரிணி மேமுரக2கன் யகல, மிந்தகுமுன்
தா3ருணி கேதெஞ்சிதி மன
ணாராமல கௌ3கிலிஞ்சி யார்தின் பலிகென் V—79

பரந்த கண்களில் தோன்றிய கண்ணீர், (கண்ணீல் தீட்டிய) மையோடு கலந்து, செவித்துளையில் நிறைந்து, அருகிலுள்ள கூந்தலுக்குத் தாய்ப் போலப் பேணவும் ஏலவள்ளி போன்ற தன் மேனியில் பூ மொட்டுகள் போலப் புளகமுற்று, தளர்ந்த மேனியளாய், மயங்கிவிழவும், தோழியர் கண்டு மனம் பதைத்து "ஆ! என்றலறியபடி அன்போடு அருகணைந்தனர்.

(கண்ணீர் கருமையினால் கருங்குழலுக்கு மேலும் கரு வண்ணம் பூசி, தாய்போலப் பேணியது என்பது குறிப்பு) V—76

"தாமரைக் கண்ணினாளின் செயல்கள் எந்த அளவுக்குக் கொண்டு போய் விட்டது பார்த்தீர்களா? அதோடு நிற்காது இவளது முற்பிறவியைப் பற்றிய செய்திகளைக் கூறி நகத் தளவினை மலையளவாக்கி (கடுகினைமலையாக்கி) விட்டோம். என்று கூறி குவளையுமிழ்ந்த நீரோடு பனைமடல் வீசிறியோடு விசிறி மென்மையான பனித்துளிகள் பெய்து ஆற்றுவிக்கவும்.
V—77

உணர்வு வரவும், கண் திறந்து, மீண்டும் தாமரைக் கண் களையுடைய கோதை, கண்ணனின் திருவடிகளை நினைந்து அசைவற்று, கண்களை மூடி, மீண்டும் கண்ணீர் நிறைந்து இமைகளைத் தள்ளி கண் திறந்து பார்த்துத் தோழியரிடம் கூறினாள். V—78

"நீங்கள் யார்?" எனலும்" அழகிய நங்காய், நாங்கள் நாகக்கன்னியர், முன்பே பூலோகத்திற்கு வந்தோம்" என்றனர் எனலும் அந் நங்கையரைத் தழுவிக்கொண்டு ஆர்வமுடன் கூறினாள். V—79

உ. அட்டி முராரி கப்புட$^{2}$னுகை$^{3}$, மறி யீகலிவேள க்ரம்மறன்
புட்டி வியோக$^{2}$ வேத$^{2}$னல பொக்கெடு$^{2}$ ஈதுனுவேல?
தண்ட்$^{2}$ரிதா
ணிட்டகு$^{2}$ நன்னுனிங்கொகனி கிய்யக தொல்தன, யோக$^{2}$
ஸக்தி போ
பெ$^{2}$ட்டெத$^{2}$ தீ$^{2}$ணி, வெண்டி$^{2}$யு உபேந்த்$^{3}$ரபதா$^{2}$ம்புருஹம்பெ$^{2}$
பட்டெத$^{2}$ன் V—80

க. அதி$^{3}$ யொண்டெ$^{3}$ ப$^{3}$க்தி, யெவ்வதெ
னெ$^{3}$த விஸ்லேஷைக பீ$^{2}$ருவ்ருத்தி ப்ரியலா
ப$^{3}$ த$^{2}$ஸன்மெயி தொர$^{3}$கிஞ்சின
ஹத$^{3}$னன யதி$^{3}$காக யுன்னயவி வைஸிகமுல் V—81

தே. அனின வாரலு பல்கி 'ராயது$^{2}$வதம்ச$^{2}$
மெந்து$^{3}$ ஜன்னாடு$^{2}$? வினுரங்க$^{3}$மந்த$^{2}$ நில்செ
வேக$^{2}$பாடேல? யதட$^{2}$ நீ விபு$^{3}$ட$^{2}$கு$^{2}$டகு
அர்சனாது$^{2}$ல இவ்வீடி ஹரிப$^{3}$ஜிம்பு V—82

ச. அலுககு' மன்ன தேறெ; மறி யந்தடனுண்டி$^{2}$யு வேள
வேள நெச்
செலு லிடு தெல்வுலன் மகு$^{2}$ட$^{3}$ சிந்தல ச$^{2}$ந்தமச$^{3}$ம்பு$^{2}$
லன் ச$^{2}$மா
கலிதத மிஞ்செ சொ$^{2}$ம்மிட$^{2}$னி கார்ஸ்ய முனன்
ஹ்ருத$^{1}$ யம்பு$^{3}$னன் ச$^{2}$தா$^{2}$
பலபல காக$^{2}$ நீலமுல ப$^{2}$ன்ன ச$^{2}$ரம்ப$^{2}$யி நிர்மலாங் கி$^{2}$கின்
V—83

தே. எலசி$^{3}$ யே ப்ரொத்து$^{3}$ கசு$^{2}$வொந்தனீக மருடு$^{3}$
கலஹமுன கங்க காட$^{2}$யி காலு த்ரவ்வ
பாண்டு$^{2}$ ப$^{2}$ ஹ$^{\text{-}}$ள க்ஷபா பரம்பரலு வெட$^{2}$ல
கிண்டிலோ ணேது$^{2}$முல்லய்யெ இந்து$^{2}$ முகிகி V—84

"அத்தகைய முராரி (கண்ணன்)க்கு அப்போது காதலியாக இருந்து, பின் இக் கலிகாலத்தில் மீண்டும் பிறந்து பிரிவுத்துயரில் வருந்தும் இந்த உடல் எதற்காக? இத்தகைய என்னை எனது தந்தை இன்னொருவனுக்குத் தருவதற்கு முன்பே யோகசக்தியால் உடலை மாய்த்துக் கொள்கிறேன்! மீண்டும் கண்ணனின் பாத தாமரைகளைப் பற்றுவேன்". V—80

எவள் காதலனைப் பிரியும் துயரினுக்குஞ்சி உடனே உடலைத் துறப்பாளோ, அவளது மனமே தூயபக்தியுடையதாகும். மற்றதெல்லாம் வஞ்சக முடையதுதான். V—81

என்று (கோமுத) கூறவும், அவர்கள் கூறினர். 'அந்தக் கண்ணன் எங்கேபோய்விட்டான்?" கேள்; திருவரங்கத்தில்தான் இருக்கிறான்! விரைவெதற்கு? அவனே உன் கணவனாவதற்கு அர்ச்சனைகள் முதலியவற்றால், இந்த (திருவில்லிபுத்தூர்) ஊரிலுள்ள அரி (வடபெருங்கோயிலுடையான்)யினைப் பூசிப்பாயாக!" V—82

"அஞ்சேல்" எனவும், மனம் தெளிந்தாள். பின், அதிலிருந்து, அடிக்கடி தோழியர் கூறும் தெளிவுரைகளாகிய வெண் (முத்துக்களும்) கவலைகளாகிய கரு (நீலமணி)களும் கலந்து நகையணியாத மெலிவுற்ற அவள் இதயத்தில் இடை இடை மணிகோத்த பன்னசரம்போல இருந்தது.

(தெளிவுரைகள் முத்துக்கள், கவலை நீலமணிகளாகி, இதயத்தில் பிரதிபலித்தது என்பது கருத்து) V—83

காத்திருந்து எப்போதும் கண்ணுறங்கவிடாமல், மன்மதன், சண்டைக் கிழுத்தவாறிருக்க, வெண்ணிற (வளர்பிறை) கருநிற (தேய்பிறை) இரவுகளாகிய முள்ளம் பன்றியின் முள் வீட்டில் வைத்தாற்போல மதிமுகத்தினளுக்காயிற்று.

(முள்ளம் பன்றி முள் வீட்டில் இருந்தால் கலகம் வரும் என்பது ஐதீகம். அந்த முள் கருப்பும் வெளுப்பும் ஆமாறு போல வளர்பிறை தேய்பிறைகளாகிய இரவுகள் முள்போல குத்தவைத்து மன்மதன் போரிட்டான் என்பது கருத்து) V—84

ம. தலிருன் கைது2வு ஜோது2 னானதி வதூ2தை3ர்யம்பு
பென்கோட கந்
த2ளிதா ஹர்முக1யந்த்ர காருட2லுகன் நாநாடிகின்
த்ரெள்ள கோ
மல மார்தண்ட2 மரீசி2 தீபகளிகோஷ்மம் சூடி2 யேயுந்த2ளத்
த2ள பாதோ'ரு ஹ லோஹ நாள குஹரோத்2யச்சஞ்ச
ரீ காஸ்மமுல் V—85

தே. சு2ருசிரவிதான த2ம்ப3 கௌசு2ம் ப2தா3ரி
துஹின தா3ராக்2ருஹாங்கி2 பிந்து2வுலு செத2ர
பொந்த க3டயந்த்ர ச2ரமு த்ரிப்புசு ஜபிஞ்சு
மகு2வ த்3ருதி தூல மத்3யா ஹ்ன மந்த்ரவாதி V—86

உ. தாமரசா2ப்த தாம்ரமு'கி த2ம்ஷ்ட்ரித விச்2பு'ட மல்லிஹல்லக
ச்2தோம ரஜஸ் சடாங் க2க மது3த்2யுதி தார வியத்ரு
சங்க்ரமோ
த்தா2ம பித்ரு ப்ரசூ2 ப்லவ2கி தை2ன்ய ருதோத்த'
ரதர் ங்க2 போத சிந்
தாமய நித்2ரலன் பொலசி2 தாபமு சேய தொட2ங்கெ2
இந்தி கின் V—87

வ. இத்தெறங்கு2ன ச2கல காலம்பு2ல னாரடம்பு2ணகு ஊரட
கான குண்டி2யு அப்புண்ட2ரீகாக்ஷி யந்து2ண்டு2 அப்புண்ட2
ரீகாக்ஷ2 னாராத2னம்பு2ன ஆ ராதா3 ரமணுன் க்ரம்மற செந்த2
டெ2ந்த2ம்பு2னன் தலஞ்சி V—88

தளிர்களே ஆயுதமாக உடைய மன்மதனின் ஆணையால், காலை எனும் பீரங்கி வீரன், நங்கையின் உறுதியாகிய பெருங் கோட்டையை வீழ்த்த, நாள் தோறும் சினத்துடன் மென்மை யான சூரியனின் இளங்கதிராகிய வத்தியின் சுடர்பட்டு விரிந்த தாமரைத் தண்டாகிய இருப்புக் குழா (பீரங்கி)யின் துளை நின்று புறப்பட்ட கருவண்டுகளாகிய குண்டுகளைப் பிரயோகித் தான்.

(மாலையில் தாமரை மலருட் புகுந்த கருவண்டுகள் இதழ் மூடப்பட்டபின், காலையில் கதிர்பட விரிந்ததும் இதழ் விரிய வெளியேறியது. பீரங்கியிலிருந்து புறப்பட்ட இரும்புக்குண்டு களாக உவமிக்கப்பட்ட நயம் பாராட்டற்பாலது) V—85

நங்கையின் உறுதியைக் கெடுக்க, அருகில் நடுப்பகல் என்னும் மந்திரவாதி, பனி நீர்த்துளிகள் சிந்தும் இல்லத்தில் காவித் துகில் போர்த்த விதானத்தின் கீழ் அமர்ந்து குடயந்திர ஏற்றம் ஆகிய மாலையை உருட்டினான்,

(குடங்களைச் சக்கரத்தில் கட்டி ஏற்றமாக இறைக்க ஒன்று கீழே நீர் மொண்டு கொண்டும் ஒன்று மேலே நீரைச் சிந்திக் கொண்டும் இருக்கும் வகையிலமைந்த கமலையாகும். இது இன்றும் வடநாட்டில் கிணற்றில் நீர் இறைக்கப் பயன்படுத்தக் காணலாம். இது ஜபமாலை உருட்டுவதாக உவமிக்கப்பட்டது. பிறரை அழிக்க 'அபிசாரஹோமம்' செய்வது போல நங்கையின் உறுதியைக் குலைக்க, நடுப்பகல் முயன்றது என்பது கருத்து)V—86

தாமரை கேள்வனாகிய சூரியனாகிய முகமுடையதும் மல்லிகை மலர்கள் ஆகிய பல்லினையுடையதும், குவளை மலர்ப் பூந்தாதாகிய மேனி வண்ணமுடையதும், தேன்வண்ணத்தாரகை களாகிய கண்களையுடையதும் ஆகாய மரத்தில் திரியும் மாலை யாகிய பெண் குரங்கு குட்டிகளாகிய சக்கரவாகங்களின் கீச்சுக் குரலோடு கூடியதாக—அந்த நங்கையின் கவலையாகிய இரவு களில் (கனவில்) தோன்றி வருத்தியது.

(கனவில் குரங்கு தென்படுவது தீது என்பது ஐதீகம் மாலையே குரங்காகக் காணப்பட்டதாகக் கற்பனை.) V—87

இவ்விதம் காலை, நடுப்பகல், மாலை ஆகிய வேளைகளிலும் வருந்தி, ஆற்ற மாட்டாது. அந்நங்கை, அங்கிருக்கும் திருமாலை மீண்டும் அடைய மனத்துட்கருதினாள். V—88

சீ². பத்²மாச்²ய ப்ரதி²தின ப்ரத்யூஷ முனுமெனள
நியதி மேல்கனி, ச²கீ' சயமும் ரோல
ஹேம பாத்ரிக ஹரித்ராமல க்யாதி²க
ச்² நானீய வச்²து வ்ரஜம்பு² கொனுசு,
தௌ³தாம் ஸுகம்புலு தடி²யொத்துலுனு தேர
அத்தஃப'தம்பு'ன அரிகி², நிஜக்²ரு
ஹாராம தீர்கி³க னனு ச²ம்ஹித த்²ராவி
டா³ம்னாயயை ச்²நான மாசரிஞ்சி,
தே. பர்ஜனீ லேஸ பூர்ண சௌ²பா³க்ய தாங்க²
தூ³தி சகசக லீரெண்டு³ தோட² மாறு
மலய நிடு வெண்ட்ரு கல கு²ம்பு மலசி வைசி
வேக² வெட வெட தடியொத்தி வித்யுதமுக² V—89

உ. குந்த²ரதாக்²ர நென்னொச²ல கு² ம்மடி²கி²ஞ்ஜ தெறங்கு² பாண்டு² ம்ருத்
த் பி²ந்து²வு தீர்சி, செந்திரமு பேசக ஸீர் ஷமுபை ப²லன் கடிந்
ஜந்து²ர காவி ஜீப²மர சல்லனி ரேயிடி தட்டுபுன்களின்
விந்து²ல தேல்ப,நூனெமுடி² வெணட்²ருகலன் த²டி²தாவு லீனக²ன் V—90

தே. போ²டி கட்டின செங்க²ல்வ பூவுடெத்து
தருபரிண தோரு கத ளி மஞ்ஜரியு கொனுடு²
போயி, கு²டி² நம்பி² விஜனம்பு² சேய ஜொச்சி
ம்ரொக்கி வேதி³க பலுவன்னெ ம்ருக்கு² பெட்டி V—91

தே. கபில க²வி ச²ர்பி ப்ருது² தீ²ப களிக தீர்சி
த்²வய முதோ வக்ஷமுன கல்வ த ண்ட² சேர்சி
அக² ருதூ² பம்புலிடி² சர்கராஜ்ய யுக்த
ஹ்ருத்²ய கத²ளீப²லாளி நைவேத் ய மொச கி² V—92

தாமரை முகத்தினளாகிய கோதை, தினந்தோறும் விடியற் காலையில் மௌனமாகக் கடவுளை வணங்கி எழுந்து, தோழியர் தங்கப்பாத்திரத்தில் மஞ்சளும், நெல்லிக்காய் முதலியவையும் குளித்தற்குரிய பொருட்களைத் தரவும், துவைத்த துகிலும், கூந்தல் உலர்த்தத் துணியும் எடுத்துக் கொண்டுபோய், வீட்டரு கிலுள்ள தோட்டக்கிணற்றிற்குச் சென்று திவ்விய பிரபந்தப் பாடலைப் பாடியவாறு குளித்தெழுந்து, மஞ்சள் பூசிய எழில் மேனி அசைவின் ஒளி வீச்சுகள், இளங்கதிர் வெயிலுக்கு மாறு கொள்ள, (போட்டிடபோட) நீண்ட கூந்தலைப் பின்னுக்கு முடித்து விரைந்து ஈரம்புலர்த்தி நியமப்படியே V—89

முல்லை முகை வென்ற பல்லினளாகிய கோதை, நெற்றியில் பூசணிவிதை போல திருமண் (நாமக்கட்டி) திலகம் தீட்டி யானையின் மத்தகத்தில் சிந்தூரம் போல நிதம்பங்களில் செவ் வண்ணப் பட்டாடையுடுத்தி இருந்தாள். குளிர்ந்த இரவில் பூசிய புனுகின் மணத்திற்கு வண்டுகள் வந்து விருந்தயர கூந்தல் ஈரம் மணம் பரப்பிட V—90

கோயிலுக்குச் சென்று, தான் கட்டிய செங்கழுநீர் பூமாலையும், மரத்தில் பழுத்த கதலிப் பழக்குலையும் கொண்டு சென்று, நம்பி (பூசாரி) மக்களை விலக்கி வழி செய்யப்போந்து, திருமாலை வணங்கி வழிபட்டு, கருவறைத் திண்ணையில் பல் வண்ணக் கோலமிட்டு V—91

காராம்பசுவின் நெய் பெய்த பெரிய விளக்கில் சுடரேற்றி துவய மந்திரத்தை உச்சரித்தவாறு திருமார்பிற் சாற்றி, அகில் புகையிட்டு, சர்க்கரை, நெய் கலந்த வாழைப்பழத்தை நைவேத்தியம் (படையல்) சமர்ப்பித்து. V—92

---

* அதிகாலையில தாமரை மலர்ாதா தலின செங்கழுநீர்ப் பூமாலை கொண்டு சென்றாள்.

க. க்ண்டி2த பூகீ3 நாக3ர
க'ண்ட2ம்பு2லு க2னஸஸாங்க க,ண்ட2 ம் பு2லசே
ஹிண்டி2தமகு2 தாம்பூ2லமு
க'ண்ட ச்'தி'ர ப3க்தி ஒச2கி2 கதலி செலுலதோன் V—93

தே. செலுவ க2ர்ப3 க்2ருஹ ப்ர த2க்ஷிணமு சேசி2
வினதயை மௌளி ஸட' கோபமுனு த3ரிஞ்சி
சரண தீர்த1மு கொனி தத்ப்ரசா2த2லப்2த3
மைன மால்யமு தால்சி கே2ஹமுன கருகு2 V—94

க. ப்ரதி தி2னமு னிட்லுசனி யச்
யுத பூஜ யொனர்சி வச்சி சு2த2திவியோகச்
யுத தை3ர்ய யகு2சு அய்யது2
பதி கு2ணமுலு த்2ரவிட3 பா3ஷ பாடு2 சுனுண்டு2ன் V—95

## வச2ந்தர் துவு

தே. மொத2ல ஆமுக்தமால்யத2 மத2னதாப
தரணி பெனுவெட்ட வேகி2ன த2க்ஷிணாஸ
மத்க்ருதோஷ்மகு துத3முட்ட மாடு2னனுசு
தொலகெ2னன உத்தராஸகு தொலகெ2 தரணி V—96

ச. தெலியக2 வச்செ னட்டி தறி திக்2மகருண்டு2 த3னாதி3பாஸகை
தொலகி2ன காரணம் ப2திவ து2ர்வஹ தீ4ர்க3வியோக2
வஹ்னிபெல்
வலமின தத்தி2ஸன்தகி2லி னட்டி தனுஷ்ம க3னீப5வன்மஹா
ஜலமய ஸங்கர ஸ்வஸ2ர ஸைலமு கோனல சல்வ தீர்சு கோன்
V—97

நறுக்கிய பாக்கும், இஞ்சித் துண்டுகளும், கற்பூரத் துண்டு களும் கலந்த தாம்பூலம் (வெற்றிலை) மிகுந்த பக்தியுடன் சமர்ப்பித்து, தோழிகளுடன் புறப்பட்டு V—93

நங்கை, கருப்பகிரகத்தைப் பிரதட்சிணம் செய்து (வலம் வந்து) வணங்கி தலையில் சடகோபம் (சடாரி) தரித்து, சரண தீர்த்தம் பெற்றுக் கொண்டு, பிரசாதமாகக் கிடைத்த பூமாலையை அணிந்து கொண்டு, இல்லத்திற்குச் செல்வாள். V—94

அச்சுதன் (வடபெருங்கோயிலுடையான்) திருவடிகளைத் தினந்தோறும் பூசை செய்து வந்து, பிரிவாற்றாமையாலே உறுதி யிழந்தவளாகி, அப்பெருமானின் குணங்களை தமிழ் மொழியில் (த்ரவிடபாஷை) பாடிக் கொண்டிருப்பாள். V—95

## இளவேனில்

ஏற்கனவே சூடிக் கொடுத்தவளின் (ஆமுக்த மால்யத) காதல் வெம்மையாகிய கதிரவனால் சுட்டெரிக்கப்பட்டு வெப் புற்ற தென்திசையை எனது சூடும் கூடினால் முழுவதுமே கரிந்துவிடுமென்று விலகிக்கொண்டானோ எனுமாறு வடதிசை நோக்கிக் கதிரவன் புறப்பட்டான்.

(தட்சிணாயனம் விட்டு உத்தராயணம் நோக்கி (மகர சங்கி ராந்தியன்று) சூரியன் வடக்கு முகபாகப் புறப்படுதல் இயல்பு) V—96

கொடுங்கதிர்களையுடைய கதிரவன் அப்போது குபேரனின் (வடக்குத்) திசைக்குச் சென்றதன் காரணம் தெரிந்துவிட்டது. நங்கையின் தாங்கரிய வீரகதாபத்தின் தீச்சுட்ட தென்திசையில் இருந்ததால் உண்டான தன் மேனிச் சூட்டினைத் தணிக்க வேண்டி, கனவுருவடைந்த தண்ணீராகிய சிவபிரானின் மாம னாகிய இமயமலைச் சாரலில் குளிர்மையுற்று உய்வதற்காகத் தான். V—97

தே. கினிசி2 வலறேடு2 த2ண்டெட2த்த கேதுவகு2ட
மீனமில தோசு டுசிதம்ப2, மேஷ, மேமி
பனியனக2 னேல? விரஹாக்1ய பாந்த1யுவதி
தா2ஹமுன கக்கி2ராக2 தத்தடி2யு ராதெ2 V—98

ச. ப்ரியபரிரம்ப3ண த்3ரடி3ம பெல்லிக னாமனிவச்சி சேயுகா
வ்யயமனிசீ2துனந்த2 செலுவல் பெத2வுல் தடு2பங்க2 வச்செ தா
ரயமுன பேர்சி யா ருதுவு ரா சலிவிச்சி தொறங்கி2 ரய்யவச்2
த; யுசிதமே கதா2 'விபதி2 தை3ர்ய' மனன் சனுமாடயிந்தகுன்
V—99

உ. ச்2ருஷ்ட ப2ஹ2வ்ரணம்ப2யின சீ3துனகல்கி நிஜோஷ்ட1
பல்லவோ
ச்சி1ஷ்டமு கொன்ன திம்மது3வி சீ2யனகிந்துலு மோவி
தன்மதூ3
ச்சி1ஷ்டமு கொன்னயொச்செ மறசேசி2ன வாருக்ருதம்
பெ2றிங்கி2வி
ச்2பஷ்டமுகா2 ஒனர்சிரி வச2ந்துன கூறட தோ2ஹத2ம்பு2லன்ள்
V—100

ம. முனுபே சந்த்2ர ப2லம்பு2 கல்கி2மலயம்புன் கம்மலே கா2ட்2புதே
ருன ஏதெஞ்சு லதாந்த பாணுனகு சூர்யுண்டு2ன் மஹின்
க் ரொத்த கா2
அனு கூலிஞ்செ ஜலம் பு2னன் விரஹிணீ ப்ராணாப
ஹாரம்பு2 சே
யன யூஹிஞ்சு விதா3த க்ருத்யமதி2 யேலா மானு
எப்பட்டுனன் V—101

மன்மதன் சினந்து (விரகமுற்ற நங்கையர்மேல்) படை எடுத்து வரும்போது அவன் கொடியில் உள்ள மீன் (மீன ராசி) வருவது சரிதான். மேடம் (ஆடு) (மேஷ ராசி) எதற்காக, வந்தது என்று கூறுவானேன்? தலைவனைப் பிரிந்து வாடும் நங்கையரின் வருத்தும் தீ (அக்னி) வரும்போது அதன் வாகனமும் (ஆடு) வராமல் இருக்குமா?

(உத்தராயணத்தில் சூரியன் மீனராசி, மேடராசிகளில் சஞ்சரித்தலைக் குறிப்பிடப்பட்டுள்ளது) V—98

காதலரை இறுகத் தழுவுதல் இனிமேல் அவ்வளவாக (வசந்த காலம் வருவதால்) இராது என்று குளிர் காலத்திலேயே பயந்து உதடுகளை நக்கிய நங்கையர்கள் முன், வசந்த பருவம் விரைந்து வந்தது. குளிர் தீர்ந்து முன்னைய நிலைமைகளைத் துறந்தனர். ஆபத்துக் காலத்தில் தைரியமாக இருக்க வேண்டும் என்ற முதுரை பொருத்தமேயல்லவா?

(உதடுகளை நாக்கால் நக்குதல் பயத்தாலும் ஏற்படும் குளிர் காலத்தில் பனியால் உதடுகள் பிளவுறுவதாலும் ஏற்படும். இவ் விரண்டினையும் இலக்கணையாலும் சிலேடையாகவும் உணர்த்தப் பட்டுள்ளது. நங்கையர் பயந்தபடியே வசந்தகாலம் வந்தாலும் உறுதியோடு சமாளித்துக் கொண்டனர் என்பது கருத்து) V—99

பல காயங்களை (உதடுகளில்) உண்டாக்கிய குளிர்காலத்தில் தாம் எச்சிற்படுத்திய தேனையே உண்ட தேனீக்களின் எச்சி லாகிய மெழுகினை (தம் உதடுகளில்) பூசியதால் ஏற்பட்ட அவமானத்தை இந்த வசந்தம் தீர்த்தது என்ற நன்றிப் பெருக் கால் அந்நங்கையர் இலவேனிலானுக்கு ஒய்வளித்து தாமே பூக்கள் மலர ஊக்கமூட்டும் (தோகத) செயல்கள் செய்தார்கள்.

(உதட்டுப் பிளவுக்குத் தேன் மெழுகினைப் பூசுதல் மரபு. அதனால் பெண்கள் இழிவுற்றனராம். அதைத் தவிர்த்தது இளவேனில். ஆதலால் நன்றியுடன் வசந்தனின் வேலைகளில் தாமும் பங்கு கொண்டு வேலைப் பளுவைக் குறைத்தனராம். உதைத்தலால் அசோகு, உமிழ்தலால் மகிழும், பார்த்தலால் மாவும் தளிர்த்துப் பூக்கும் என்பது வடமொழி இலக்கிய மரபு. V—100

ஏற்கனவே சந்திரனின் பலத்தோடு (கிரககதியால் சந்திர பலம்) மலய மலையின் மணம்படு இளங்காற்று எனும் தேரில், ஏறிவரும் மன்மதனுக்கு, கதிரவன் கூட புதிதாகத் துணை நின்றான். பிரிந்த தலைவியரின் உயிர்கவர நினைக்கும் விதியின் செயல் நிறைவேறாமல் போகுமா? V—101

---

சூடாமணிப் பாடலும் இக்கருத்தைக் கூறும்.†

†ஏடவிழ் மகிழ்சுவைக்க எழிற்பாலை நண்புகூடப்
பாடலம் நிந்திக்கத் தேம்படிமுல்லை நகைக்கப் புன்னை
ஆட, நீள்குரா அணைக்க, அசோகுதைத்திட வாசந்தி
பாட மாப்பார்க்க வார்சண்பக நிழற்படத் தளிர்க்கும்
—சூடாமணி நிகண்டு 12—109

க. மலய கடகோடஜ ச்$^{2}$ தி'த
கலஸி சு$^{2}$த சே$^{3}$வனிட்டு கனெனொ ததா$^{2}$ஸா
னிலுட$^{2}$னக$^{3}$ அலச$^{3}$வ்ருத்தின
மெலகு$^{2}$சு னாபோஸ நிஞ்செ மிஹிகா ஜல தி$^{3}$ன் V—102

க. மலயதரு ங்யாய ம யில
கல தருவுல கெல்ல சேயகா$^{2}$ வலசெ சுமீ
யலரிஞ்சு நெபம்பு$^{2}$ன பரி
மளித முலு அனக$^{2}$ அசடி மாருத மொல செ$^{2}$ன் V—103

உ. குப்பஸமுல் வத$^{2}$ல்சி, வலி கு$^{2}$ப்பல னொத்திலி
ஹத்தி வேகு$^{2}$ ஜா
மிப்பல லர்சு கா$^{2}$ட்$^{2}$புல கதீஸு, க்ரமம்பு$^{2}$ ன க$^{3}$ர்ம ஸங்கமை
உப்பதிலங்க$^{2}$ தோ$^{2}$ம தெர லுப்பர மெத்திரி தக்கீருஷ்மமுல்
டெ$^{2}$ப்பரமைன லோஹ ஸக ட ப்ரகடகரணம் பு$^{2}$ காமினுல்
V—104

ம. அருணாம்ஸுண்டு$^{2}$ ஹிமர்துவன் ரஜனி டலை க்ருங்கி
புஷ்பர்து வா
ச$^{2}$ர கல்யோதி$^{2}$ துடெள$^{2}$ சுமுன்னயி டு$^{2}$டன்
ஸ்யாமாகு சா லேப சங்
கர சா$^{2}$ந்த்$^{2}$ ராக்னி ஸிகாருணப்ரப$^{3}$ கொனென்
காகுன்ன காலஜ்ஞுப
த்ரி ருதம் பெ$^{2}$ட்லு செலங்கு மானகுபித ச்$^{2}$த்ரீ கர்ண
த$^{2}$ம்போளியை —105

மலய (பொதிகைமலைச்) சாரலில் தவக்குடியில் வாழும் குடமுனியினிடம் பணிவிடை புரிந்து கற்றானோ எனுமாறு தென்றல் காற்று மெதுவாகத் தவழ்ந்து பனிக்கடலைப் பருகியது.

(குடமுனி (அகத்தியன்) கடலைக் குடித்த கதை பிரசித்தம். அவனிடம் கற்றதனால் குளிர்கடலைக் குடித்துக் குளிர்மை யுற்றதென்பது கருத்து). V—102

பொதிகைச் சந்தனமரத்தின் பரிமளச் சிறப்பினை மற்றுள்ள எல்லா மரங்கட்கும் உருவாக்க வேண்டுமென்றுதான் போலும் மலர்விக்கும் சாக்கில் மணமுண்டாக்கியது எனுமாறு அங்கு தென்றல் வீசியது. V—103

இரவிக்கையவிழ்த்து, ஒருக்களித்துக் காதலரைத்தழுவியவாறு தமது செறிமுலைகள் அவர்களது மார்பில் ஒற்றப்படுத்திருந்த காதலியர், சிறிது நேரம் கழித்து வியர்வை படிந்ததென ஐயுற்று விடியலில் இலுப்பைப் பூக்களை மலரச் செய்து வரும் தென்றற் காற்று வீசவும், கொசுவலையை மேலே எடுத்துக் கட்டினார்கள். வெம்மை மிகவே இரும்படுப்பின் கணப்பினைத் தூண்டாமல் விட்டு விட்டனர். V—10

செங்கதிர்களையுடைய கதிரவன், பனிக்காலம் எனும் இரவில் மெலிந்து மறைந்து, இளவேனிற்காலமாகிய பகலின் விடியலில் எழுந்து, மங்கையரின் கொங்கைகளிற் பூச்சாக இட்ட குங்குமமாகிய செம்மையை (முன் ஒப்படைத்த பொருளை மீண்டும்) பெற்றுக் கொண்டான். இல்லாவிட்டால் காலக்கணித மறியும் கோழி (குயில்)யின் குரல், புலர்ந்த மகளிரின் செவிகட்கு இடியாகத் தோன்றுமா?

(பனிக்காலம் (ஹேமந்த சிசிரருதுக்கள்) இரவாகும். வசந்தம் பகல். பகலில் எழுந்த சூரியன் செம்மை ஏற்றான். அது முன்பே பெண்களின் முலைக்குவட்டில் பூசிய குங்குமமாக உருவகப்படுத்தப்பட்டுள்ளது. சூரியன் இரவில் தன் சூட்டினை அக்னியிடம் தருவான். மறுநாள் பெறுவான் என்பது மரபு. இங்கு அக்னிகை எனும் குங்குமப்பூ அக்னியாகும். அதனிடம் செம்மையுளது. முலையில் வெம்மையும் குங்குமச் செம்மையும் இருத்தலின் சூரியன் ஒப்படைத்ததாகக் கற்பனை செய்யப் பட்டது. விடிந்ததும் கோழி கூவும். அதுபோல வசந்தமாகிய விடியலில் கோழி போலக் காலக் கணிதமறிந்து வசந்தத்தில் கூவும் குயிலின் குரலிசையும் அமைந்தது. புலவி கொண்ட மகளிர் கோழியின் குரல் கேட்டதும் இடி முழக்கம்போல பொழுது வீணே கழிந்ததே விடிந்து விட்டதே என்று வருத்தம் செய்வது போல, குயிலின் இசையும் பிரிந்த தலைவியரை வருத்தமுறச் செய்யும். பருவங்களை ஒரே நாளாகக் கற்பனை செய்யப்பட்டது) V—105

தே. ம்ருக²மதா² லேபமுனு மானிரக"ரு கலன
சன்னு க²வ மீ²தி கொப்பிரி பன்ன ச²ரமு;
ஒண்டி குரு வேரு போசகு கண்ட²கிம்ப
ரைரி துறிமெடு² ச²ரபுவ்வுல ந் த²திவலு V—106

ச. சிலுவ சு²தா ரசா த²ரல செல்வபு புக்கிடி தாவி தீயனை
வலபுலனந்து¹ தத்ப்ரியுல வக்த்ர விஷ ஜ்வலனோஷ்ம
னொர்ரனை,
வெலுவடி² தத்கு²ண த்²விதய வேத³ சுமீயனம்ரானு பட்டுடல்
தலிருலு புட்டுடல் கலுக³ தார்கொனெ சந்த²ன ஸைலவாதமுல்
V—107

ம, மத³ன ச்²யந்த²னதா ச்²வவ்ருத்திதெலிபெங், பாடீர
பூ³ப்³ருத்²வலன்
ம்ருது² வாதம்ப²தி பக்வபாத²ப லதாவ்ருந்தாவளீமூல ரந்த்³
ரத²ளத்பங்கஜ கர்ணிகா க²ண ஹரித்²ராப³ங்க² பா³ பா³ சு²ர
ச்ச¹தனச்ச¹த்ம விவர்தி காஞ்சன கனச்சக்ரச்ச³டா சீத்க்ருதின்
V—108

வ. தத²னந்தரம்ப² V—109

கஸ்தூரிப் பூச்சை விடுத்து சந்தனம் பூசினர். முலையிணைகளில் முத்துமாலை அணிந்தனர். செருகிய சரப்பூமாலையில் ஒரு நன்னாரிவேரினை ஏற்றுக் கொண்டார்கள்.

(இளவேனிற் தொடக்கமாதலின் சம சீதோஷ்ணமான பொருள்களை ஏற்றனர் என்பது கருத்து). V—106

பெண் பாம்புகளின் அமுத ரச இதழிலிருந் தூறிய வாய் மணத்தால் இனிமையுடையதாகியும், நயந்த காதலராகிய ஆண் பாம்புகளின் நச்சுப் பற்களின் வெம்மை படிந்த காரமுடியதாகியும் கலந்து சந்தனப் பொதிகைத் தென்றல், புறப்பட்டு வீசுவதால் மரங்களில் வற்றலாகி (இலைகள் உதிர்தலும்)யும் தளிர்கள் தளிர்த்தும் இருகுணங்களையும் கொண்டதாக இருந்தது.

(ஆண் பாம்பின் நச்சுக்காற்றால் மரங்களில் இலைகள் உதிர்தலும், பெண் பாம்பின் அமுதக் காற்றால் தளிர்கள் தளிர்த்தலும் ஆகிய இரு பண்புகளையும் கொண்டதாகத் தென்றல் காற்று வீசியது). V—107

சந்தன (பொதிகை) மலையிலிருந்து திரியும் மெல்லிய தென்றற்காற்று, பழுத்த மரஞ் செடி கொடிகளிலிருந்து காம் புதிர்ந்து வீழ்ந்த இலை (சருகு)கள்—தாமரைப் பொகுட்டில் உடையதும், முறித்த மஞ்சட் காம்பினுடையதுமான மஞ்சள் வண்ணமுடைய தங்கச் சக்கரங்கள் ஆகிப் பொலியும் தேரில் கிறு கிறு என்ற ஒலியுடன் செல்வதால் மன்மதனின் தேர் என்பது உண்மை எனத் தெரிந்தது.

(தென்றல் மன்மதனின் தேர் என்பது கவி மரபு. மன்மதன் திருமகளின் மகன் அல்லவா? தங்கத்தேராகத் தானே இருக்க வேண்டும். தங்கத்தேரின் தங்கச் சக்கிரங்களே உதிர்ந்த மஞ்சள் இலைகள் என்பது கற்பனை) V—108

அதன்பிறகு V—109

சீ4. க்ஷ்மா வஸாரக்தராங்கவ, மரண்யானீம
தூ3தி2தாருணிமா, வல்யுரக2ரச2னி
கோத் க2தி, தருக2ருத்மத் க2ருத் க2ணமு, க்ரீ
டா2 ஹார்ய ஜீமூத ரோஹிதம்பு2
நவமிளிந்த4 ப்2ராஹ2ண கனிமந்த்ரண ஸோப3
னாக்ஷதப்ரதிதி, வாயச2 விப3க்த
பரப்3ருதௌக3 ப்ராப்த பத்ரிக, மாலதீ
த்ராசா2 மயாவ ஹார்த்2ர க்ஷதஜமு

தே. ப்ரமத2வன வனதே2வதா ச2முத2யாங்க2
ராக2 மினஜ ஹரிஜ்ஜக2த்ப்ராண ஸாண
கஷண த2ளித த2ளாந்த ச2ங்க்ராந்த காந்தி
க3னமணிஸலாக, சிகு2ராகு கலயபொலிசெ V—110

தே. ஸரநிது3ல மா3க்யமுலு தீறெ மருனகட்டி
யடருன ஜயிந்துமனி கதா2 யத்2தி2னாளி
க்ரூரதி1தி க்ருஷ்ண ரஜனி தத்வைரி கனியு,
பெத்த2லிவுராகு பட்டென பெட்டு வடி2ரி V—111

தே. அவனி னபுடு2 நவோதி2துண்டை2னயட்டி
மருனகுன் குசுமர்துவன்மந்த்ரசா2னி
பொ2ட்டு2 கோசி2ன கொட2வலி வோலெவிரஹி
தா2ரகம்ப3ய்யெ கிம்ஸுக கோ2ரகம்பு2 V—112

பூமி என்னும் பிடி (யானை)யின் மேல்போர்த்திய சிகப்புக் கம்பளமாகவும், பெருங்காடு எனும் நங்கையின் மதுமாதம் (வசந்தம்) எனும் மதுவுண்டதால் ஏற்பட்ட செம்மையாகவும், கொடிகள் என்னும் பாம்புகளின் நாக்காகவும், மரங்கள் எனும் கருடனின் இறகாகவும், செய்குன்றமாகிய மேகத்தின் படிந்த வான வில்லாகவும்,

புதிதாக வந்த தும்பிகள் எனும் விருந்தாளிகளை அழைக்கும் மங்கள (அட்சதை) மஞ்சளரிசியாகவும், காகத்திடமிருந்து பிரிந்த குயில்களின் பிரிவுப் பத்திரிக்கைகளாகவும், மாலதி (சாதி மல்லிகை)யை அச்சுறுத்தும் நோயான பச்சை இரத்தமும், வன தேவதைகள் பூசிய குங்குமமாகவும், தென்றல் காற்று எனும் சாணையிற்பிடித்ததால் உராய்ந்து பழுத்த இலைகள் எனும் மேற் செதில்கள் உதிர்ந்து, ஒளி வீசும் பதுராகம் (செம்மணி) ஆகவும், தளிர்கள் எங்கும் தளிர்த்திருந்தன. V—110

முல்லைப் பூக்கள் அம்பறாத்தூணியில் தீர்ந்துவிட்டன மன்மதனை இச்சமயத்தில் வெல்லலாம் எனக் கருதிய பெரியோர்கள், கொடிய பலிகள் தரும் நாட்களான தேய்பிறை இரவில் (சிவராத்திரியில்) மன்மதன் பகைவனான சிவனை வணங்கியும், தளிர்கள் எனும் பட்டாக்கத்தியால் அடிக்கப் பட்டார்கள்.

(மன்மதனுக்கு மலரம்புகளில் மாசி மாதம் மிகுதியும் பூக்கும் முல்லைப் பூக்கள் சித்திரை மாதத்தில் தீர்ந்துவிட்டதால், அவன் தூணியில் முல்லைகள் இல்லை. இதுதான் சமயம் என்று மன்மதனை வெல்ல பெரியோர்கள் முயன்றனர். மன்மதனின் பகைவன் சிவன் ஆதலின் வழிபட்டனர். எனினும் மன்மதன் அம்புகள் இல்லாவிட்டாலும் தளிர்கள் எனும் கத்தியால் அவர் களை வீழ்த்தினான். என்பது கருத்து) V—111

பூமியில் அப்போது புதிதாகப் பிறந்த மன்மதன் எனும் குழந்தைகளுக்கு, வசந்த காலம் எனும் மருத்துவச்சி கொப்பூழ்க் கோடியறுத்த பண்ணரிவாள் போன்ற புரசம் பூமொட்டுகள், பிரிந்திருப்பவர்களின், நெஞ்சங்களையும் அரிந்தன. V—112

ச. கு2சுமமுலெல்ல காமினுல கொப்புல னுண்ட2 னடுண்ட2
லேமி சி2
க்கெ2ச2க2க2 வங்கி2னட்லு ஜனியிஞ்செ நனல்மறிவங்கி2,
ஜீவிதே
ஸச2மிதி கொம்முலன் கரசிசல்லகுச க்ஷணிகாங்க2ராக2மௌ
டச2தெ2 யடஞ்சு ராகி2லின யட்டுலுராகி2லி விச்செ
கிம்ஸுகின் V—113

உ. நைபுணி சந்த3னாத்2ரி க2ஹனத்2ருமசௌ2ரப3 வீசிதாம்ரபர்
ணீபரிலப்2த3 மௌக்திக மணி ப்ரகரம்பு2லு தோசி த2க்ஷிணா
ஸாபவனுண்டு2 சுல்லுவெத2சல்ல ஜனிஞ்சென, காக வீனிகே
லாபொட2மங்க2 அப்பொலச2மப்புடு2 னாவனி தோசெ
க்ரொன்னனல் V—114

க. வீருத்த்2ருமி1ன மேளன
கை ரதிபதி யேயடு2ச்சி2 ஹரிதத்2யுதி பை
நாரெக2ய பொடமரிஞ்சின
நாரச2முல துத2லனங்க2 நனலவி மிஞ்சென் V—115

(பிரசவம் பார்க்கும் மருத்துவச்சி வசந்த காலம். புதிதாகப் பிறந்த குழந்தையே மன்மதன். கொப்பூழ் கொடியறுத்த பண்ணரிவாள் புரசமொட்டு. புரசமொட்டு பண்ணரிவாள் போல வளைந்திருக்கும் கொப்பழ் அறுத்ததால் இரத்தம் படிந்து சிவந்தாற்போல புரசம் பூக்கள் சிவந்திருக்கும்)

பிற எல்லா மலர்களும் நங்கையரின் கூந்தலில் இருப்ப (மணமின்மையின்) தான். மட்டும் அப்படி இருக்க முடிய வில்லையே என்ற நாணத்தால் வணங்கினாற் போல வளைந் திருந்த, புரசமொட்டுகள் எனினும், காதலர் (பீய்ச்சுங்) குழலில் (புரச மலரை அரைத்துக்) கரைத்துத் தெளித்தலால் நங்கையரின் கொங்கைகளில் சிறிது நேரமேனும் மெய்ப்பூச்சாக இருக்கும் பாக்கியம் கிடைத்ததே என்ற பெருமிதத்தில் மகிழ்ந்தனவோ எனுமாறு சிவந்து மலர்ந்து எழில் பெற்றன.

(புரசமுகை, நாணத்தால் வளைந்தாலும், வசந்தகாலத்தில் (காமன் பண்டிகையில்) செவ்வண்ண நீருக்காக புரசமலர்களை அரைத்து நீரிற் கலந்து பீய்ச்சாங்குழலால் தெளிப்பர். ஆதலின் கொங்கையிற் படிந்து, அதிக நேரம் கூந்தலில் இருப்பதைவிட சிறிது நேரம் கொங்கையில் இருப்பது சிறப்பெனக் கருதி மகிழ்ந்து மலர்ந்தன என்பது கருத்து) V—113

தென்றல் காற்றானது, சந்தனப் பொதிகை மலைக் காடு களின் மரங்களின் மணத்தில் தோய்த்து, தாமிரபரணியில் கிடைத்த முத்துக்களாகிய விதைகளை திறமையுடன், கை விதைப்பாக விதைத்திட முளைத்தது போலும், இல்லாவிட்டால் இந்த (வசந்த கால) மலர்களுக்கு உருவெழிலும் நன்மணமும், எவ்விதம் கிட்டும் எனுமாறு புதுமலர்கள் தோன்றின.

(விதைத்தல் இருவகை. கைவிதைப் பாக கைப்பிடியில் எடுத்து எறிந்து விதைத்தல் ஒருவகை. கருவியில் விதைகளைப் பெய்து துளை வழியாக ஒவ்வொன்றாக வீழச் செய்வது ஒரு வகை. கைவிதைப்பு சிறப்பென்பர். தென்றல், முத்துக்களை சந்தன மனத்தில் தோய்த்து விதைத்ததாக கற்பனை செய்யப் பட்டது) V—114

கொடிகளையும் மரங்களையும் இரட்டையராக (தம்பதிய ராக) இணைவிக்க, மன்மதன் (அம்பினை) எய்யவும். அது துளைத்து (இப்புறமிருந்து அப்புறத்திற்கு) ஊடுருவி, பசுவண்ண முடைய மேற்தோல் சிதைய முளைத்த அம்பின் முனைகளோ எனுமாறு மொட்டுக்கள் தோன்றின. V—115

ச. தன யுத2ரம்பு2னன் பொட2மி தாம்ரருசிச்ச1 டலுல்ல2சில்ல
கோல்
கொனு த3ரணீஜ சந்ததிகி கோரக த2ந்தமு லிஞ்சு2கந்த நிக்
கினயதி3 யாதி2 காகா செலகெ2ன் வனலக்ஷ்மி; கடு2ன்
செலங்க2 கா2
சனு ப்ரியுடை2ன மாத3வுனி ச2ங்க2தி மீத2ட சால கல்கு2டன்
V—116

சீ. முனு நனல்தமி பட்டி முங்கா2ள்ள, முக்குஜோ
ட2னல பீலிசி பச2ரொக்கின விடி2சி,
பருவம்பு விரி கொ2ந்து2 லரசி2, சாலை த்ரோவ
பெட்டி யீரமு லீகு2 பிண்டு2 தகி2லி
க்ரொவ்விரி தொலுத ஒக்கடு2 கனியதி2வ்ராலு
தறி தா2னி னிலபட தாகி க்ரோலி,
யாகுராலுபு க2ண்ட2ல னானெடு2 னாச2 னிந்
தடு2 கூ2தி2 ப2ங்கண்டி யங்க2லார்சி

தே. எட்டகேலகு ஒகட2ப்ப2 பொட்ட நிண்ட2
க்ரோலி ய2தி கா2லி கத2லின கூலு, நகு3சு
ப்ரமத2வனபாலிகலு வேட்2க பட்ட நகு2சு
மது3தி2னாதி2 க்ஷுதா2ப்3ரமன் மது3பசயமு V—117

வனலட்சுமி எனும் திருமகள், தன் வயிறாகிய நிலத்தில் பிறந்த மரங்கள் எனும் குழந்தைகள் தளிர்களால் செவ்வண்ணம் கொண்டிருப்ப, அவை வளரவும் மொட்டுக்கள் ஆகிய பற்கள் முளைக்கவும், இனி மாதவன் (வசந்தன்) ஆகிய காதலனைக் கலந்தின்புறலாம் என மகிழ்ச்சியாற் பொங்கினாள்.

(குழந்தைகள் பிறக்கும்போது இயல்பாக செம்மையாக இருப்பர். அதுபோல தளிர் வண்ணச் செம்மையால் மரங்கள் பிறந்த குழந்தைகள் போன்றன. பின் குழந்தைகள் வளரவும் பற்கள் தோன்றும், அதுபோல மரங்களில் மொட்டுக்கள் பற்கள் போலத் தோன்றின. பிரசவித்த பெண்டிர், தமது குழந்தைகளுக்கு பற்கள் முளைத்த பிறகு மீண்டும் புணர்ச்சிக்குத் தகுதி பெறுகின்றனர் என்பது மரபு. ஆதலின் வனலட்சுமியாகிய திருமகள், மரக்குழந்தைகட்கு மொட்டாகிய பற்கள் வரவே இனி மாதவனைக் கலந்தின்புறலாம் என மகிழ்ந்தாள் எனுமாறு வசந்த கால எழில் தோன்றியது.

குழந்தைகட்கு பற்கள் முளைத்ததும் கலவிக்குத் தாம் தகுதியுற்றோம் என பெண்டிர் மகிழ்ந்ததாக 'காதா சப்த சதி'யிலும் சில பாடல்கள் உள்ளன. சுருதி, ஸ்மிருதிகளிலும் கூறப்பட்டுள்ளது) V—116

முதலில் பூக்களை ஆர்வமுடன் முன்கால்களால் பற்றி மூக்கின் இரு துளை (தும்பிக்கை)களால் உறிஞ்சி, பச்சை வாசனையடிக்கவே விடுத்து,

பருவமலர்களின் கொத்துள்ள இடத்தை ஆராய்ந்து பூம்புதர்க்கு நிரை நிரையாகச் சென்று, நுழைந்து ஒரு தும்பி, புது மலரின் முன்பே நுழைய முயன்றபோது அதனைத் தள்ளி நிலத்தில் விழச் செய்து, தான் பூந்தேன் மாந்தி, இலைகளுதிர்ந்த துளையில், ஊறிய பசையை (மதுவெனமயங்கி) குடிக்க ஆசைப்பட்டு, காலூன்றி கால் சிக்கிக்கொள்ளவே பயந்து கூவி, எப்படியோ, ஒரு மலர் கிடைக்கவும், வயிறாரக் குடித்து, அம்மலர் காற்றில் அசையவும் தடுமாறி நிலை நிற்க, பூந்தோட்டத்தைக் காவல் காக்கும் கன்னியர் விளையாட்டாக நகைத்தவாறு பிடிக்கவும் மலரிலிருந்து கீழே விழும்.

(வசந்த காலப்பூக்களை நாடும் ஒரு தும்பியின் வருணனை இது. முதலில் படிந்த பூ பக்குவமில்லாததாதலின் விடுத்து, பருவமலரை நாடி, ஏற்கனவே படியும் தும்பியைக் கீழே தள்ளித்தான் குடித்தது. வயிறு நிறைந்த மயக்கத்தில் இருக்கும் போது கன்னியர் பிடித்தனர்) V—117

சீ. மருதூ2ட3 மல்யாஹி கர2 தூ3ம்யலனு க2ளன்
மனசி2ஜ ரத1பதா2ஞ்ஜன களிகலு
த்ராச2 த3ாவச்சிஸிரத்யக்த பா2ஷ்பமுல்
பிகபஞ்சம ச்2ரோத்2 பே3த3 வீண
லப்தா2க2 மன்மரம் தா2சா2ர ஜம்பு2வுல்
ஹிந்தோ2ள சா2 க்ஷான்முகுந்த2 ரோசு
லபி3சா2ரிகாம்ஸு கோத்2யன் நீலகு2ளிகலு
ஜாத்யனுல்ல ச2னாத்த ஸாபததுலு

தே. சைத்ர ச3ஞ்ஜீவனௌஷ3தீ ஜாதசேத
னாத்மஜனி ஹேதுதரு புனர்யாயி யுவதி
கரவிதூ3தஹச2ந்தி கேங்கா2ல சயமு
லளுல பங்க்துலு வனுல னர்ராட2 தொட2கெ2 V—118

தே. த்2விஜத காஞ்சியு மது3சே2வ விடு2வலேக
ஜாதி பா2பின தேண்ட்ல நிச்2வனமு கூடு2
கொனுட னோயன கோகில ச்2வனமு செலகெ2
தனகு மறி பஞ்சமத்வம்பு2 தப்பகுண்ட2 V—119

(வண்டுகளின் வருணனை)

காற்று கொணர்ந்த சந்தனமலை மரப்பாம்புகளின் நச்சுப் புகைபோலவும், அ க்கடி வீழும் மன்மதனின் தேர்ச்சக்கரத்தின் வண்டிமை (மசகு)த் துண்டுகள் (கவளம்) போலவும்,

(வசந்தகாலத்தைக் கண்டஞ்சி) பயந்தோடும் சிசிர (குளிர்) காலம் (நங்கை விடுத்த (கருமை தீட்டிய) கண்ணீர்த்துளிகளோ எனுமாறும்,

குயிலின் பஞ்சமசுத்தைப் பாடற்கேற்ற சின்னஞ்சிறிய வீணையோ எனுமாறும், மழைபோன்று தேன்மழை பெய்யவும் பழுத்த நாவற்கனிகளோ எனவும் மழைக்காலம் பாடப்பட்ட இந்தோளராகத்திற் கிசைந்து வந்த கார்வண்ணனாகிய திரு மாலின் மேனி எழிலோ எனுமாறும், கனவினில் குறியிடம் செல்லும் கன்னியரின் துகிலினை கருவண்ணமாக்கும் சித்த குளிகையோ எனுமாறும் சாதிமல்லிகைப் பூக்கள் (பூக்காத கால மாதலின்) வசந்த காலத்தைப் பழித்துத் தூற்றிய வசைமொழி களோ எனுமாறும்,

நங்கையர் (குளிர்காலத்தில் கணப்படுப்பில் வைத்த கரித் துண்டுகள், வசந்த காலம் வந்ததால் இனித் தேவையில்லை என்று) எறிந்ததும் ஆக் கரித்துண்டுகள், வசந்தகாலமாகிய அமுத சஞ்சீவிபட்டு, மீண்டும் உயிர்பெற்று தாம் பிறந்த இடமாகிய மரங்களை நாடிச் செல்கின்றனவோ எனுமாறும் வண்டுகளின் கூட்டம் காட்டில் அலைந்து திரிந்தன.

(இந்தோள ராகம் - வசந்த காலத் தொடக்கத்தில் பாடுதற் குரிய பண்ணாகும்.

சித்த குளிகையால் பிறரரியாது போகும் திறன் ஏற்படும். களவிற்புணரக் குறியிடம் செல்லும் கன்னியர் பிறர் காணா திருக்க இரவில் நீல வண்ண ஆடை அணிவர். சித்த குளிகை கரு நிறம் ஆக இருப்பதால் வண்டாக கற்பனை செய்யப்பட்டது. புகழ், வெண்மை, இகழ்கருமை என்பது கவிமரபு. சாதிமல்லிகை கள் சபித்தல் இகழ் ஆதலின் அவை கருமையாக உவமிக்கப் பட்டது) V—118

இரு பிறப்பினையுற்றும் மதுசேவை விடாது சாதியைவிடுத்த தேனீக்களின் இசையோடு கூடிய தாலோ என்னவோ குயிலிசை யும் பஞ்சமத்தையடைந்தது.

(இருபிறப்பு - அந்தணர், பல், பறவை மூன்றுக்கும் துவிசர் என்பதாதலின், ஈண்டு வண்டு (பறவை) ஆகிய பிராமணன், மது சேவை (தேன்-கள்) யாலே சாதியை (சாதிமல்லிகைப்பூவை) விடுத்தலால் பாவம் செய்ததாயிற்று. அந்த வண்டோடு சேர்த லினாலே குயில் பஞ்சமத்தை (பஞ்சமம் எனும் சுரத்தை) அடைந்தது. பஞ்சமம் என்பது பஞ்சமாபாதகத்தை என்பதும் குறிப்பிடும். இவை சிலேடையாகப் பொருள்பட்டன.

பிரம்ம ஹத்தி, மதுபானம், திருட்டு, குருமனைவியைப் புணரல் இந்நான்கும் மாபாதகம், இத்தகையோரிடம் சேர்வது ஐந்தாவதாகிய பஞ்சமாபாதகம் என்பது மரபு.) V—119

உ. பூசின மாவுலன் தவிலி பூவிலு ஜோது2ன கம்மெ மாத3வுண்
டே2சின ஸங்க: ஆதட2வியே கொனியே பதி1காவளீஜய
ஸ்ரீ சணுட2ய்யெ; அட்டித2; யக்ருத்யமுசே அகு2னட்டி
பீட2யுன்'
கோ2சரமௌனெ, தை2வ மனுகூலமுனை, பருமேலு தீறினன்
V—120

ம. உருஸக்தின் மது3மாச2தோ2 க்3த3 பிது2கன் ஜ்யோத்ச்2னீக2வீ
சந்த்2ரமச்2
ச்2பு1ர தூ2த3:.ப்ரவிமுக்தமைன நிபிட2 ஜ்யோத்ச்2னாபய:.
பூரமுன்
விரியன் பாறின கொ2ஜ்ஜெகல் குரிய முன்னீரைனயக்கம்ம நீ
ருரஹின் கூடி2ன னேர்பரிஞ்சு க2முலை ரேரலம்ப2
காத2ம்ப2முல் V—121

உ. தி2க்கி3னஞ்ச தூ2டு2 கொனி தீரவனே க்ஷூடிவு வங்கமீது2கா2
நக்கெ'ட2 பு1ல்ல கேச ரமுனந்து வ சி ம்பக' எக்கு நூலிநுன்
ப்ரக்க2மு னந்த னாரத மரகதசரஸ் யரவிந்த கோ'ஷ்டிகின்
வெக்க2ல மாடு2 தேணட்லு மநவிண்டிகி பூனெகு'ண
த் வயத்வமுன் V—122

ச. நிடு2த2 மதூ3ளிகல் நடு'மனே கொனி தீக2லு சா2க3 சுட்டு
கொஞ்
சட2ரி கடா2ர காசகடகாக்ருதி சு'ள்ள மெலங்கெ2 கா'டு'புல்
ஜட2க2தி னத்3வனீன பரிஷத்படு நிஸ்வ சிதானலம் பெ து3ர்
பட2 மறி சா2ர்சுலை சுரசுரன் துத2 சு ள்ளுக2
ச்2ருக்கெனோயனள் V—123

(மா என்ற சொல், குதிரை, மாமரம்எனும் இருபொருட்டும், இச்சிலேடை மூலம் வரும் கற்பனை இது.)

பூத்த மாவினை கேடுவரும் எனும் ஐயத்தால் மலரம்பின னுக்கு மாதவன் (வசந்த காலம்) விற்றனன் அவன் அதனையே கைக்கொண்டு, பிரிந்து செல்பவர்களை வெல்லும் திறமை பெற்றனன். தனக்குதெய்வம் அனுகூலமாகவும், பிறருக்கு மேன்மை குறையும்காலமாகவும் இருந்தால் கருவிகள் பழுதுறி னும் வெற்றி பெறுவது நிச்சயம் அல்லவா?

(பூத்த மா என்பது ஈண்டு நிறம் வேறுபாடுற்ற குதிரை என்பது ஒரு பொருள். குதிரையின் தோல் நிறம் வெளுப்புற்றால் அதனால் தீங்கு ஏற்படும் என்பது அசுவ சாத்திரக் கருத்து. பூத்த மாமரம் பிரிந்தவர்கட்கு துன்பந்தருவதாகும். இங்கு பூத்த மாவாகிய குதிரையை மன்மதனுக்கு வசந்தன் விற்றுவிட்டான் என்றாலும் மன்மதன் தெய்வ அருளால் அதனைக் கொண்டே வெற்றி பெற்றான் என்பது கருத்து) V—120

வசந்த காலம் எனும் பால் கறப்பவன் தன் ஆற்றல் முழுதும் காட்டி, இரவு எனும் பசுவின் சந்திரன் எனும் மடியில் கறந்த நிலவு,என்னும் அமுது பரந்து, பிச்சிப் (கொஜ்ஜக) பூக்களின் மக ரந்தமாகிய மணம் பொருந்திய நீரும் கலந்து முன்னீராகப் (கடலாக) பெருக்கெடுத்து இருக்கவும், வண்டுகள் ஆகிய அன்னங் கள் பிரித்தறிந்து உண்டன.

(அன்னம் பால் மட்டும் பிரித்தறிந்துண்ணும்வண்டுகள் நீர் மட்டும் பிரித்தறிந்துண்ணும் நிலவாகியபாலும், பூந்தேனாகிய மண நீரும் கலந்திருப்ப வண்டுகள்வேறு பிரித்துண்டன என்பது கருத்து.) V—.20

பொய்கையில் அன்னப்பறவை தாமரைத் தண்டினைத் துண் டித்து வாயிற் கவ்விக் கொண்டு, கரையில் வளைந்திருக்கும் கரும் பின் ஊடாகப் பறந்து அப்புறத்திலுள்ள மலர்ந்த புன்னை மரக் கிளையிற் சென்று வசிக்கவும், (தாமரைத் தண்டின்) நூலிழைகள் வழியாக புன்னை மரத் தேனுக்கும் பொய்கை மலர்த்தேனுக்கும் வரவும் போகவுமாக இருக்கும் வண்டுகளின் வரிசை மன்மதனின் (கரும்பு) வில்லுக்கு இரட்டை நாண் ஆகத்தோன்றியது. V—122

காற்று, நீண்ட தேன் ஒழுக்கினை (நிலத்தில் விழுமுன்பே) இடையை பெற்று, (பிசுபிசுத்துள்ள மையின்) அவை கொடிகளா கிச் சுற்றிக் கொண்டாற்போல பஞ்சள் (கோரோசனை நிறம்) வண்ணமுடையதாகி, கண்ணாடி வளைபோல நெளிந்து சுழித்துக் கொண்டிருப்ப மெதுவாக நடந்தது: பிரிவுற்ற தலைவர்களின் நெடுமூச்சுக்களாகிய தீ எதிர்படவே, கொழுந்துவிட்டெறிந்து படபடவெனப்பொறிந்து சுழிப்புற்றனவோ எனுமாறு அக்காற்று திகழ்ந்தது. V—123

ச. குரி2சின க்ரிந்தி3 புப்பொடு2ல கொஞ்சு நக2ம்பு2ல மீ2திகை
பிஸங்
க2ருசுல கொன்னி பெல்லெக2செ2 கா2ட்2புல சு2ள்பதி
மாத3வுண்டு2 ரா
நெரவுக2 பூவு சொ2ம்மிடி2 வனேந்திர பூ3மிகி வெண்டி2
மெட்ட தா2
மாரவணம்பு2 தாகொன ப்3ரமத்க2துலௌ மரசுட்டுலோ
யனன் V—124

ச. தருணுலதோ2 ஹதா2ன மது3தா3ர நனல்வகுளாளி நிம்பகா2
தருணுல மேமு காமெ யனிதத்க2தலௌ
வனதே2வதல் சு2ரன்
த3ர வகுளௌக3 மெல்லனு நனல் கன க்ராயக2 நிஞ்சு
பு2க்க2லன்
தொ2ரசெ மது3ப்பூர்ணத மதூ3கமுலன் ப்ருது1 பாண்டு2
புஷ்பமுல் V—125

ச. தருணுல கௌ2கிடன்னனுசு தம்முவ்ருதா1 விருலெத்த
சேசெ2மோ
பருலுக2 சைத்ருட2ஞ்சு தத2பா3வ மனோப3வ வஹ்னி
வெச்சி நிர்
ப3ரமது3பாளி தூ3மமு ப்ராக2பு நீறுனு தேனெ கட்டெ சா
த2ருது2க2 தால்பகா2 கொரவுலை யொறுக2ம்ப2டெ2 கொன்னி
பூ3ஜமுல் V—126

வனலட்சுமியானவள் தனக்கும் நிலமகளுக்கும் கணவனாகிய மாதவன் (வசந்தகாலம்) வருவதை உணர்ந்து, மலர்கள் என்னும் நகைகளை நிலமகளுக்கும், நிலத்தாமரை என்னும் நகைகளைத் தனக்கும் இரவலாகப் பரிமாறிக் கொள்ளத் திரியும் மரையாணித் திருகலோ.

எனுமாறு கீழே உதிர்ந்த பூ மகரந்தத் தூளை வாரி எடுத்து சுழன்றடித்த காற்று மரங்கள் மேல் பொழிந்து மஞ்சள் வண்ண முடன் சுழன்றன. V—124

நங்கையர் மகிழ மரத்தை மதுவுமிழ்ந்து பூக்கச் செய்தலைக் கண்ட வனதேவதைகள் "நாங்களும் பெண்கள்தானே" என்று எல்லா மகிழ மரங்களையும் பூத்திடச் செய்ததற்கு (தூண்டற்காக) தம் கன்னம் நிறைய மதுவைத் தேக்கி (உமிழ்தற்காக) வைத்தனரோ எனுமாறு மகரந்தம் நிறைந்த இலுப்பைப் பூக்கள் நிறைந்திருந்தன.

(இலுப்பைப் பூக்கள் வெண்ணிறமுடையவை. கள்ளிற்கு உவமையாக்கப்பட்டது.) V—125

நங்கையர் தழுவுதலால் பூக்கும் வாய்ப்பினை இழக்கச் செய்து, தம்மைப் வீணாகப் பூக்கள் சுமை தாங்கிகளாக்கி விட்டான் இந்த வசந்தன். (இளவேனிற்காலம்) என்று; தழுவு மின்பம் கிடைக்காததால் காதல் தீயில் வெந்து, வண்டுகளே புகையாக, பூந்துகளே நீறாக (சாம்பலாக) மகரந்தமே சாந்தாக கொள்ளிக்கட்டையான குரவகம் (மருதாணி) நிலத்தில் சாய்ந்தது.

(கொரவி என்ற சொல் கொள்ளிக்கட்டை என்றும் குரவக மரம் என்றும் இருபொருள் தெலுங்கு மொழியில் உண்டு. அப் பொருள் சிலேடை நயம் தோன்ற இப்பாடல் அமைந்திருக்கிறது.

கொள்ளிக்கட்டை எரிந்தால் புகையும், சாம்பலும் கட்டை நுனியில் நீர்க் கசிவாகிய சாந்தும் ஏற்படுதல் இயல்பு. வண்டுகள் கருநிறமாதலின் புகையாகவும், பூந்துகள் சாம்பல் (நீறு) ஆகவும் மகரந்தம் சாந்தாகவும் உவமிக்கப்பட்டன. மிகுதியாகப் பூத்து விட்டதால் பெண்கள் தழுவ வரவில்லை என்ற ஏக்கத்தால் காதல் வெம்மை கொண்டு மரம் எரிந்து கொள்ளிக்கட்டையாகி விட்டது என்பது கற்பனை) V—126

* மரையாணி—Screw.

ஆ. ப1ல ஸலாடுலுருல, அளுலகை தமகூடு2
செறுப, மாவுலண்டி செலுவ பிண்டு2
மகு2ட2 நனலு நிம்ப, மொக2மு கன்னுலு எர்ர
பா2றெ மிகு2ல ஸௌகு பைகமுலகு V—127

ம. அதுலப்ரேம ரசா2ர்த்2ர யோர்து ப்ரியஹாச்2ய க்ரீட2
ச2ங்கேதவஞ்
சிதயை தத் க்ஷணஜாங் க2ஜஜ்வரமிளச்சித ப்3ரமம் பூ2ன்பனா
பதினோவ்ருக்ஷம காவவெயன ச3புஷ்பம் ப2ய்யெ
கோ2க2ந்தலோ
அதடு2ன் தோசின நவ்வுடு2ன்விரிசெ2 ப்ரரந்தாசன்னமே
ருத்2ருவுன் V—128

தே. ச்2தா1ணு வொக்கண்டு2 மக2வாடு2 தலக குமிய
ப1லமொசு2 கெ2னட்டே கினியக! பத்2மவத2ன
வத2ன சூ2ர கூர்மி னொச2கனீ வலதெ2 புஷ்ப
மைன னனுமாட்2கி உமி1சின அலரெ பொக2ட2 V—129

நங்கையர் மாமரத்தை தொட்டு, பூக்கச்செய்யவே வண்டுகள் கொண்டாட, காய்கனிகள் உதிர்ந்து தம் 'உணவு கெடுதலின், கிளிகளும் குயில்களும், திண்டாடிச் சினத்தலினால் (கிளிகளின்) முகமும், (குயில்களின்) கண்ணும் மிகுதியாகச் சிவந்தன.

(வசந்த காலத்தில் கிளி (மூக்கும், குயிற்கண்ணும் அதிகம் சிவப்புறும் அதனைச் சினத்தலினால் வந்ததாகக் கற்பனை செய்யப்பட்டது) V—127

இணையற்ற காதலால் நெகிழ்ந்த ஒரு பெண், தன் காதலன் விளையாட்டாகக் குறியிடத்தில் மறைந்திருப்ப, அவனைக் காணாது காதல் வெம்மை கூர்ந்து மனக்கலக்கம் உற்று "ஓ! மரமே! என் 'காதலனைக் கண்டனையோ" என்று கேட்டதும் அந்த மலைக் கோங்குமரம், மலர்ந்தது. அவ்வளவில் அவன் காணப்படவே அவள் நகைக்கவும், அருகிலிருந்த சுரபுன்னை மரமும் மலர்களால் நிறைந்தது.

(கோங்கு பெண்கள் உரையாட மலரும். சுரபுன்னை நகைத்தலின் மலரும் என்பது கவி மரபு. குறியிடத்தில் விளையாட்டாக மறைந்திருந்த காதலனைக் காணாக்காரிகை கலக்கமுடன் மரத்தைப் பார்த்து உரையாடினாள். கோங்கு மலர்ந்துவிட்டது. கோங்கு மலர் பொன் வண்ணமுடைத்தாத லின் அம்மலரின் ஒளியால் மறைவிடத்தில் இருட்டில் இருந்த காதலன் தென்பட்டான். அது கண்டு மகிழ்ந்து நகைத்தாள். சுரபுன்னையும் மலர்ந்தன என்பது கருத்து. கோங்குமலரை சுடருக்கு உவமை கூறல் கவிமரபு) V—128

தாணு (ஸ்தாணு மரக்கட்டை-சிவன்) ஒரு ஆண் மகன் தயங்காது உமிழகிவாது பலன் (பயன்-பழம்) தந்ததாகக் கூறுவர். தாமரை முகத்தினள் வாய் மதுவினை அன்போடு தர மலராவது தராமல் இருக்கலாமோ என்று நினைந்தாற்போல (ஒருத்தி) உமிழவே வகுளம் (மகிழ்) மலர்ந்தது.

(வகுளம் உமிழ்தலால் மலரும் என்பது கவிமரபு. மரக் கட்டையே பழம் தந்தபோது - இலைகளுடன் செழித்த மரம் ஆகிய நான் மலராவது தரக் கூடாதா? என்று கருதியதாகக் குறிப்பு. தாணுவாகிய சிவனைக் கண்ணப்பனாகிய திண்ணன்—வாயால் நீரைக் கொணர்ந்து உமிழ்ந்து பூசை செய்ய சிவன் பயன் (அருள்) தந்தான் என்பது தமிழில் பெரியபுராணத்திலும் தெலுங்கில் ஸ்ரீ காளாஹஸ்தி மகாத்மியம் எனும் நூலிலும் கூறப் பட்ட கதை; இதைக் கருத்திற்கொண்டு இக்கவிதையமைந் துள்ளது. ஆண் மகன் உமிழவே பயன்தர பெண்மகள் உமிழ்த லின் மலராவது தரவேண்டும் என்று வகுளமரம் நினைத்தாகக் கற்பிக்கப்பட்டது.) V—129

தே. மது3வு காந்தல புக்கிடி மது3வு பேள்ள
ஈர்ஷ்ய, பச2ரூ3ப, பொக2ட2பைனெலய, தான
விரிசெ2 தொல்லிடி தளமுலு, விருலு ஜடி2செ2
தீ2ன, அக்கெ2ல்புனகு உப்பி2 தேடு லார்செ V—130

உ. மேகொனி தாசினன் ப்3ருகு2வு மெச்சின வானிகிமர்த்ய பா3ர்யயௌ
ஸ்ரீகி நிவாச2மை செலிமி சேயுட இட்டி ப்ரஸாந்தி கல்கெ2னோ
காகன, நாதி தன்னின விகாச2மு னொந்தி3, வனச்3தலச்2 தி1 தா
ஸோகமு சேசெ2 மெச்சுன ப்ரசூ2ன ரஜ:கனகா3பிஷேகமுன் V—131

ம. அளுலேதத்2வத2 னேந்து2ராக2 மிளனா ப்ரா து3பவத் கோரகம்
பு2ல தேனெல் சு2த3லஞ்சுரா, னொகதெ நெம்மோமெத்த சைத்ரம்பு புவ்
வுலலோ தத்கு2ணுலய்யெ க2ந்த2ப1லி புவ்வுல் புட்டி போதோ2லெனொ
ச்செல சேதை, தறசெந்து2 தல்லி ப2டி2கோல் செட்டெளட யேகாமஹின் V—132

மது என்ற பெயரையுடைய வசந்தகாலமும் மதுவென்ற கள்ளும், ஒரே பெயரைப் பெற்றதால் ஏற்பட்ட போட்டி பொறாமையாலே தத்தம் ஆற்றலைக் காட்ட முனைந்து (பெண்களின் வாயில் உள்ள மது உமிழ்வதாலும், வசந்த கால வருகையாலும்) வகுள மரங்கள் இலையுதிர்ந்து மலர் சொரிந்து நிறைந்தன. அது கண்ட தேனீக்கள் வெற்றியடைந்ததாகக் கருதி ஆரவாரம் செய்தன. V—130

முயன்று பிருகுமுனிவன் (திருமாலைக் காலால்) உதைத்த போது (சினக்காமல்) மெச்சியவர் (நாராயணன்)னுக்கு மனித மனைவி (சீதை)யாகிய திருமகளுக்கு உறைவிடமாகி (அசோக வனத்தில்) நட்புப்பூண்டதால் இத்தகைய சாந்த குணம் ஏற் பட்டதோ எனுமாறு பூங்காவிலுளள அசோகமரம் ஒரு நங்கை உதைத்தலும் மலர்ச்சியாயிற்று, மலர்த்தாது ஆகிய (பொன் நாணயங்கள்) கனகாபிஷேகம் செய்தது.

(அசோகு நங்கையர் உதைத்தலால் பூக்கும் என்பது கவி மரபு. மண் மகள் சீதையின் பொறுமை அசோகுக்கு ஏற் பட்டது என்பது கற்பனை) V—131

பொறுமைமிக்க சம்பகமரத்தில் ஒரு நங்கை முகமெடுத்துப் பார்த்தலும் அவளது முகச்சந்திரனது அமுதூறப்பிறந்த புது மலர்களில் இனிய தேன் சுவைக்கலாம். முன் போல கசப்பும் வாசனையும் இராதென்று கருதி தும்பிகள் அருகணைந்தன! அந்தோ! அம்மலர்களிலும் பழைய சம்பகத்தின் குணமே இருந்தது. கசந்து விரட்டியது. பொதுவாக தாயினைப் போலவே பிள்ளை என்பது போல தாயின் தீய குணங்கள் தாயினை ஒத்துள்ள குழந்தைகட்கும் இருக்குமல்லவா?

(சம்பகம் நங்கையர் ஏறெடுத்துப் பார்த்தலால் மலரும் என்பது கவிமரபு. தும்பிகட்கு சம்பகமலர் பகை. அதன் மணம் பிடிக்காது. (அலர்ஜி) அதன் பூந்தேனும் கசக்கும் எனினும் நங்கையின் முகச்சந்திரனால் உருவான மலர்கள் ஆதலினாலே ஒருவேளை தேன் இனிக்கும் என்ற நப்பாசையில் தும்பிகள் சென்றன. சம்பகத்தின் இயல்பான தன்மை மாறவில்லை.

முகச்சந்திரன்—தந்தையாகவும், சம்பகம் தாயாகவும் கற்பனை செய்யப்பட்டது. தாயின் குணமே பிள்ளைக்கு வந்தது என்றும் தந்தையின் குணம் அல்ல என்றும் கருத்தாகும்.)
V—132

ச. அலரெ ப்ரியாளு வோர்து ப்ரியமௌட வச2ந்தமு பாட2
அப்புட2வ்
வெலதி1 ச2பத்னி ப3க்திகினி வேல்புலு மெத்துரு கான
ராக2மன்
சலமுன தன்னு பாட2க2 வச2ந்துடு2 தாத2யசேசெ2 காக,யா
யலெ நிஜஸக்தி' னாயனுசு னாபச2கின் கொத2வெட்டெ
ஈசு3னன் V—133

தே. அத3ர சு3த3 ப்ராணி ஜத ப்ராணி யகு3சு மௌக்தி
காண்ட2 மாலிக னிடெ2னு நாசாக்2ர மௌக்தி
கம்ப2யன சாலு நனலிச்செ க2தஜரத்சு2
மம்பு வாவிலி மொக2 மூர்பு நிம்ப ளோர்து V—134

ச. க3னமகு2 ஆகுராலி, திலகம்ப2திரிக்தத னுன்ன, ஓர்து,லோ
கனிகரமுனி, கன்னுக2வ காயஜு டி2ல்லட2 யிட்ட2 தூபுலே
யனுவுக2 நிஞ்செ காக, மறியண்டக முட்டகயொக்க சேஷ்டலே
கநெக2ட2 சேசெ2னண்டயி2தி கல்லனகா2 அலரிஞ்செ சூபுலன்
V—135

தே. சா2ந்த்2ர மகரந்த2 வ்ருஷ்டி ரசா3தலம்பு2
தொரகு2 புவ்வுல பு3வியு, பூதூ3ளி நப3மு,
னீக்ரம த்ரயி மாத3வு டா2க்ரமிஞ்செ
உருவிரோசன ஜனித மஹோஷ்ம மடக2 V—136

ஒரு பெண் தனக்கு விருப்பமான வசந்த ராகத்தைப் பாடவும் (பாட்டை கேட்டலரும்) பிரியாளு எனும் மரம் பூக்கவும் அப்பெண்ணின் சக்களத்தி பொறாதையால் ''பக்தியினால் தேவர்கள் மெச்சி அருள்வார்கள் இவள் வசந்த ராகம் பாடியதால் வசந்தன் அருள் கூர்ந்து பூக்கச் செய்தானே யன்றி இவள் ஆற்றல் ஒன்றுமில்லை'' என்று குறை கூறினாள். V—133

ஒருத்தி தனது வாயால் காற்றினை ஊதவும் அவள் அணிந்திருந்த மூக்குத்தி (புல்லாக்கு)யாகிய முத்து அவளது இதழமுதால் உயிர் பெற்று தான் (முத்து) உயிர்ப் பொருள் ஆதலினால் உயிர்த்து முத்து முட்டைகள் இட்டனவோ எனுமாறு மலர்கள் உதிர்ந்த சிந்துவாரம் (தேக்கு) மீண்டும் மலர்களால் நிறைந்தது,

(சிந்துவாரம் பெண்களின் உயிர்ப்புக் காற்றால் மலரும் என்பது கவிமரபு) V—130

செறிந்திருந்த இலைகள் உதிர்ந்து திலகமரம் மிகு வறுமையுற்றதைக் கண்ட ஒருத்தி, உள்ளத்தில் இரக்கம் பூண்டு, கண்ணிணையால் கண்டாள். தொடாமலும், ஒரு செயற்பாடுமின்றி மலர்கள் பூத்துக் குலுங்குவது கண்டால், மன்மதன் ஏற்கனவே இவளிடம் ஒப்படைத்திருந்த மலரம்புகள்தான் நிறைந்துள்ளன. இல்லாவிட்டால் எப்படி பார்த்ததுமே பூக்கள் வரும். இது பொய்! என்று கூறுமாறு பார்வையாலே மலர்வித்தாள்.
(திலகம் பார்வையால் மலரும் என்பது கவி மரபு) V—135

அடிக்கடி மகரந்த மழை பெய்து பாதாளமும், உதிரும் பூக்களால் பூலோகமும், பூந்துகள் செறிந்து வானுலகும் ஆக மும்முறைகளாலும் மாதவனாகிய வசந்தன் மூவடி அளந்து சூரியனாகிய பலி சக்கரவர்த்தியின் சூடாகிய ஆற்றலினை அடங்கச் செய்தான்.

(மாதவனாகிய திருமால் மூவடியினால் மூவுலகளந்தாற் போல மாதவனாகிய வசந்தன் மூவுலகும் அளந்தான் என்பது கருத்து) V—136

ச. ஊடு[3] கொன படு[2] மதூ[3]ளிக
யோடி[2] கலகு க்ரிந்த[2] க்ரம்மியுண்டெ[2]டு[2] தேண்ட்லன்
நீட[2]லு திரி[2]கியு திருகனி
ஜாட[2] தருல் வொலிசெ! அவ்வச[2]ந்தபு வேளன் V—137

ச. ஸதத[2]ள மஞ்ஜரீ த்[3]வள சைத்ர நிஸாமல சந்த்[2]ரி கௌக்[3]முல்
த்[3]ருத வியதந்த கேளி வன வ்ரு க்ஷ லதாந்தரஜச்ச'டன் களங்
கிதகனி காமினீ கமன கேளியு போ செட[2]வான கா[2]டவீ
கதக பராக மொக்க தெ[2]ச[2] க்ரம்மி யனச்ச'த
மான்ப குண்டி[2]னன் V—138

சீ[2] ஸைத்ய பாண்டி[3] மலு துஷாராந்தமுன சேரெ
இருலு கொன் த்[2]ரா க்ஷ பந்தி[2]ருல விருல,
வலய கா[2]னமு லயுக்தல கார்ஸ்யமுன சேரெ
மலயம்பு கம்ம வீவலுல னலுல,
சௌ[2] ர போ[3]ல் லாச[2]முல் ஜாதி க்ருங்க[2]க[3] சேரெ
அலராரு கொத[2]ம க்ரோவு லனு னெலனு,
ச்[2]பு'ட ஜடா மச்[3]கரம்பு[3]லு ப்ரதிச்யுதி சேரெ
நந்த[2]ன ப்லக்ஷ ச[2]ந்ததுல வ்ருதுல,

தே. ச்[2]வ ப்[3]ருத பரப்[3]ருத வினுத ரசா[2]ல பரிஷ
த[2]ஹரஹ:க்லுப்த ப[2]ஹ ரஹ: ப்ரஹரவிஹர
மாண மான வதீ பரிம்லானி மானி
வாரி வாரிஜ வன க[2]ந்த[3]வாஹ மொலசெ V—139

உ. சா[2]ரெகு கீ[2]ரமுல் ப'ல ரசா[2]லமு ஸாக[1]லலோன த்ரிம்மரங்
கா[2] ரஹி தன் ம தூ[2]ளிககு கா[2] அளிபங்க் துலு
வெண்ட க்[2]ரும்மரங்
கா[2] ரொத[2] மிஞ்செனந்து[2] சிலுகல் வன லக்ஷ்மி யுதத்
வசச்சு[2] தா[3]ந்
தோ[3] ருசுலான கா[2] ச[2]ரபணுல் ஜனு லட்லி டி[2] பெம்பகா[2]
ப[2]லென் V—140

மகரந்த ஊற்றுக்கள் கொப்புளித்த நிலங்களில் படிந்த கருவண்டுகளின் கூட்டம், வசந்த காலத்தில் மர நிழல்கள் அசையாது நின்று விட்டன போலத் தோன்றின.

(நிழல், சூரியன் செல்லச் செல்ல தானும் அசைந்து வேறு படுவது இயல்பு. மரத்தடியில் மொய்த்த வண்டுகளின் கருவண்ணத்தால் நிழல் எப்போதும் மாறாமல் அசையாது இருப்பது போலத் தோன்றிற்று என்பது கருத்து) V—137

வெண்டாமரை மலர்களைப் பரப்பினாற் போன்ற சித்திரை மாத இரவில் பொழியும் வெண்ணிலவாகிய வெள்ளத்தில் வான் தொடும் மரங்களின் பூந்துகள் குவை சேர்ந்து சேறாகி களங்கமுறலும், மலைக் காடுகளிலுள்ள களா மரப் பூந்துகள் பட்டு தேறும்படி செய்தலாலன்றோ காதலர்கள் நிலவாகிய வெள்ளத் திம் புனல் விளையாடிக் களித்தின் புற்றனர். இல்லா விட்டால் களித்தின் புறுவது கெடும் அன்றோ?

(களாவின் பூந்துகள் நீரின் கலக்கலை நீக்கி தெளிவுறுத்தும்; தேற்றாங் கொட்டை போல என்க) V—138

பனி(க்காலம்) தீர்ந்ததும் அதன் குளிர்மையும் வெண்மையும் இருள்படு திராட்சைக் பந்தரிலும், பூக்களிலும் சார்ந்தன.

பிரிவின் மெலிந்தவர்களின் கழன்ற வளையும் கானமும், பொதிகைத் தென்றற் காற்றில் சுழலிலும், வண்டுகளின் ரீங்காரத்திலும் சேர்ந்து கொண்டன.

சாதி மல்லிகையின் மணமும் ஒளியும் புது மருதாணிப் பூக்களையும் நிலவையும் சேர்ந்தன.

நோற்றவன்கள் (துறவிகள்) விரதம் முடித்ததும் அவர்களது சடைமுடி உச்சிமர விழுதினையும், மூங்கில் தண்டம்—வேலி களையும் சார்ந்தன. மாமரங்களில் நங்கையர் வளர்த்த குயில்கள் பாடின. ஆங்கு அவர்கள் களவின்பத்தில் துய்த்த களைப்பினை நீக்கித்தாமரைப் பொய்கையில் தவழ்ந்து வரும் புதுமணத் தென்றல் வீசியது. V—139

அடிக்கடி கிளிகள் தேமாவின் கிளையில் பழங்களை கொத்திச் செல்லவும், அக்கனிரசத்தைச் சுவைக்க கருவண்டுகள் கிளிகளைத் தொடர்ந்து சென்றன. வனலட்சுமி மனிதர்களைப் போலவே கிளிகளின் இன் சொல் அமுது பருக விழைந்து (கருவண்டுகள் ஆகிய) சங்கிலியால் (கிளிகளைக்) கட்டி வளர்க் கின்றனளோ எனமாறு ஆங்கே ஓசை மிகுந்திருந்தது. V—140

சீ$^{3}$ ப்ரதி ஹந்த்ரு தாத்த கீடது சன்ன ப்$^{3}$ருங்க$^{3}$ சங்
க$^{3}$புடங்க$^{2}$முல சேத காய மெத்தி,
யமதி$^{2}$ ஸாக$^{2}$த மருத்ப்ராணியை த$^{2}$த$^{2}$ளிரங்
க ச்$^{2}$த'லாப்$^{2}$ஜினி தம்மிகன்னு தெறசி
ப்ராந்த புல்லாம்ர ச$^{2}$ம்ஸ்ரயி தச்ச'டா ஹடா
த்$^{2}$க$^{3}$தி லேசி செலி சைத்ரு ஔ$^{2}$ கிலிஞ்சி
யுரு பராக$^{3}$ பு ஸாடி உத்த$^{2}$ண்ட$^{2}$ வாப்யுத்ப
லச்ர வத்சீ து$^{3}$ ரத்யச்ர முடி$^{2}$பி,

தே க்ரம்மற பலாஸ கடத்காமுக$^{1}$முன கீர
சலித ஸாகா' ச்$^{2}$பு'டா ஸோக ஸரமு கூர்செ
தத்ரதிகி காக$^{3}$ சலிகால தன்னி மஞ்சு
பாண்டு$^{2}$ ராங்கு$^{2}$ண்டு$^{2}$ விடி$^{2}$சிபோ ப்$^{2}$ரதி$^{2}$கி மருடு$^{3}$ V—148

ச. சிகுரு பிகாளிகின் ப'லமு சில்கல கும்புன குன் மதூ$^{3}$ளிதே
டிக$^{2}$மிகி, தாவி கா$^{2}$லிகி, விடிவிட கோடிகி புவ்வுலுன், தலம்
பு$^{2}$க$^{2}$ க்ருப னீனியு ச்சு$^{2}$ரபி$^{3}$ பும்ச்$^{2}$த்வமு பாந்து'ல சோட
பூனெ; அ
ட்லகு$^{2}$ ப்ரஜ கோர்கு லிச்சு தன காத்ம தலஞ்சின
த$^{2}$ப்ப தே$^{2}$யனன் V—142

நோன்பினரைக் கெடுத்த பாவத்தால் புழுவாகப் பிறந்து, அந்நிலை மாறி வண்டுகளகக உருவெடுத்த உடலைப் பெற்று, இயமன் திசை (தெற்கு)யிலிருந்து வந்த காற்றால் உயிர்ப்பினைப் பெற்று, அந்த வண்டுகளின் நடன அரங்கமாகிய தாமரைப் பூவாகிய கண் விழித்து, ஆங்குள்ள மலர்ந்த மா மரத்தினைச் சேர்ந்து மொய்க்கும் வண்டின் ஈட்டம் திடீரென்று எழுந்து (போவதுவே) சித்திரன் (வசந்தனைத் தழுவிக் கொண்டு பூந் துகளாகிய, ஆடையினால், (நீர் மட்டத்திலிருந்து) மேலேழுந்த தண்டினையுடைய பொய்கை அல்லி மலரின் பூந்தாகிய இரதி தேவியின் கண்ணீரைத் துடைத்தவாறு, வெண்ணிறமுடைய முக்கண்ணன், இரதியின்பால் இரக்கப் பட்டு உதைத்துவிட்ட தால் பிழைத்த, மன்மதன் மீண்டும்; புரசமுகை என்னும் விற்பிடியினால் கிளிகள் அசைத்த இலைகளையுடைய அசோக மரத்தின் பூங்கணைகளைத் தொடுத்து எழுந்து நின்றான்.

(சிவனால் எரிக்கப்பட்ட மன்மதன், வண்டுகள் எனும் உடலைப் பெற்று, தென்றல் எனும் உயிர்ப்பினையுற்று தாமரை யாகிய கண் விழித்து எழுந்தான். தன் நண்பன் வசந்தனை (சைத்திரன்) தழுவிக் கொண்டான். (வண்டுகள் மொய்த்து எழுந்து வேறொரு மரத்தில் படிதலைப் தழுவுதலாக உருவகிக்கப் பட்டது)

பூந்துகள் ஆகிய ஆடையால், இரதிதேவியின் கண்ணீரைத் துடைத்தான்.

(நீர்மேல் எழுந்துள்ள அல்லி மலரின் பூந்தேன் கண்ணீ ராகவும், பூந்தேனில் படிந்த பூந்துகளால் தேன் மறைதல் துடைத்ததாகவும் கற்பனை செய்யப் பட்டது).

உயிர்பெற்ற மன்மதன் மீண்டும் அசோக மலரம்புகளைத் தொடுத்து தன் கடமை ஆற்றப் புறப்பட்டு விட்டான். பனிக் காலம், இலையுதிர்ந்து, பொலிவின்றி இருத்தல் சிவன், எரித்த மன்மதனுக்கு உருவகம். வசந்தகாலத்தில் வண்டுகள். மலர்கள், பொலிவுடன் திகழ்தல் மன்மதன் மீண்டும் உயிர் பெற்றதற்கு உருவகம். மன்மதன். நோன்பிருந்த துறவிகளை மலரம்பு எய்து கொடுமைப் படுத்தியதால் புழுவாகப் பிறந்து ண்டாகிப் பிறப்பெடுத்தான்.

என்பது தீமை புரிந்தோர் புழுவாகப் பிறப்பர் என்ற மரபினை ஒட்டி எழுந்த கற்பனை.

புழுவாகி இருந்த வண்டுகள், அந்நிலைமாறி — இறகுகள் பெற்று வானில் பறந்து திரியும் அழகினை, புழு நிலை மாறிய வண்ணத்துப் பூச்சிகள் போல இருந்து, பனிக் காலம் புழுநிலை யாகவும் வசந்த காலம் பறந்து திரியும் வண்டாகவும் உருவகித் தாற் போல தொனிப் பொருள் தருகிறது.

(அற்புதமான கற்பனை நயம் செறிந்த கவிதையிது.)

V—141

குயில்களுக்குத் தளிரும், கிளிகட்குப் பழங்களும், அளி (தேனீக்) கட்குத் தேனும், வளி (காற்று)க்கு மணமும், காதலர் கட்கு மலர்களும், அருளோடு நிறையத் தந்த வசந்தகாலம் எனும் காமதேனு, தான் கொடை தந்ததால் தன விருப்பங்கள் நிறை வேறும் என்ற கருத்தால்தான் ஆண்மையை அடைந்ததோ எனுமாறு கடுமையாக பிரிந்தவர்களை வருத்தியது. V—142

சீ. ச2ஹகார ப1லரச2 சௌ2 ரப்யமுல கூடி2
மாத்3வி மோபுல கத2ம்ப2 முக2 வலவ,
மலய ஜோத2ரத ஜம்ப3ல ப4ல த்வக்க2த
ஸ்ரீமிஞ்சு செவுல கொ2 ஜ்ஜெக2லு மெறய
ஸஸி கத2ளோ த2ர ச்ச'த2பு பாவட2 லூரு
சகசகபட்டி பாலிகி பெனங்க3
த்ரொக்கு தேண்ட்லகு காக லெக்கிம்ப செரிவின
க3ந்த3 ப1லீ பங்க்தி கப2ரு லலர,

தே. கேல கல வண்ட கபு தாவிகினி புலமின
கு3ச்2 ருணமுலு மிஞ்ச, நனல பேரெச2கு2 பவன
முலு அமேரு ரஜோ வ்ருஷ்டி பூதி2சறவ
இந்து லெண சி2ரி பூபொத2, ரிண்ட்2ல பதுல V—143

வ. அட்டி வஸந்த ச2மயம் பு2ன V—144

உ. காமினி மேக3 ரஞ்ஜி மது3க2ர்வ மட2ந்து ணட2ஞ்சு லோ நிஜ
க்ஷேமமு கோரி, பாடி2, மணி சித்ர மருத்த் ருணதா சிரத்2யுதி
ச்2தோம வலா ஹகாவலுலு தோசி, ப்ரபு'ல்ல கத2ம்ப2 கேதகோ
த்தா2ம ச2மீரணா ஹதுல தாபமுனீனொறகு3ன் விசேஷ்டதன்
V—145

தே. அதிவ பூர்ணேந்து2 பீ3தி தத2ஸ்ம ஸால
தெண்டி2 யதட2ந்து வினுமடி2 தீண்ட்2ர தோப
மிண்டி பயினுண்ட காத3னி யிண்டி பைகி
தெச்சு கொண்டி அடஞ்சு பென் றிச்ச வெட2லு V—146

தேமாவின் பழச்சாற்றின் மணத்தோடு கள் மணமும் கலந்து இதழ்களில் பரிமளிக்க சந்தனப் பூச்சினால் எலுமிச்சைத் தோலின் வண்ணத்தோடு எழில் பெற்றிலங்கும் காதுகளில் ரோஜாமலர்களை அணிந்து, கற்பூரவாழையின் உட்தண்டின் வண்ணத்தோடு மாறு கொள்ளும் பாவாடைகள், தொடைகளின் தகதகவெனும் மினுமினுப்பைப் பற்றிக் கொண்டு (அவ்வெழிலில்) தமக்கும் ஒரு பங்கு கேட்டு முரண, மிதிக்கும் தேனீக்களை விரட்ட சம்பகப் பூமாலைகள் தலை முடியில் சூடி எழில் பெற்றிலங்கிட, கைகளில் சித்திரான்ன வாசனை போக, குங்குமப் பூ பூசிக் கொண்டவாறு, பூக்கள் பாரத்தால் எழில் பெற்ற சுரபுன்னை மரங்களை தென்றல் அசைத்ததால் பூந்துகள் நீறு தனது மேனி படிய, நங்கையர், பூம்புதரிடையே தன் காதலரோடு இணைந்தின்புற்றனர். V—143

அப்போது — (அந்த வசந்த காலத்தில்) V—144

நங்கை (சூடிக்கொடுத்த நாச்சியார்); வசந்த காலத்தில் செருக்கினை அடக்குவேன் என்று கூறி, தன் நலம் நாடியவளாக "மேகரஞ்சனி" எனும் பண்ணினைப் பாடவும், பல்வண்ண மணிகளுடன் எழில்பெற்ற வானவில்லும், மின்னலும், கூடிய கார் முகில் கூட்டம் தோன்ற; மலர்ந்த கதம்ப மலர்கள், தாழம் பூக்களின் மணத்தைத் தழுவியவாறு மென்காற்று வீசவே, அதைத் தாங்க முடியாது சோர்ந்து மயங்கி வீழ்ந்தாள்.

(பிரிந்தவர்களை கதம்ப (கடம்ப) மலரும் தாழை மலரும் மிகவும் வருத்தும் என்பது கவி மரபு) V—145

நங்கை (ஆண்டாள்) முழுமதியைக் கண்டஞ்சி சந்திரகாந்தக் கல் மேடையில் படுக்கவும், அங்கு (வருத்தம்) இருமடங்காகவே வானில் இருந்த சந்திரனை வீட்டிற்குக் கொணர்ந்தேனே என்று மிகவும் பரபரப்புடன் எழுந்து செல்வாள்.

(சந்திரகாந்தக்கல் குளிர்ச்சியுடையது. அதில் சந்திரன் பிரதி பிம்பம் தோன்றும், அது கண்டு தேவி பொறுக்க இயலாமல் விண்ணில் இருந்ததை மண்ணிற்குக் கொணர்ந்தேனே என மறுகினாள் என்பது கருத்து) V—146

தே. ப்$^{3}$ரமர கீ$^{3}$திக மாய விபஞ்சி மீட,
தா$^{2}$ன ஸ்ருதி கூடி$^{2}$ மிகு$^{2}$ல தத்ரக்தி ஹெச்ச,
வே நிவாரிஞ்சி லேசி, 'தை$^{2}$விகமு எது$^{2}$ட
யுக்துலு ப$^{1}$லிம்ப' வனுசு பி$^{2}$ட்டுர்சு நவ்வு V—147

தே. வெலதி$^{2}$ கதிதாபத$^{2}$ம்ப$^{2}$ய்யெ விருலயான்பு
முனு தத$^{2}$ங்க்$^{3}$ரி ஹதாதி$^{2}$ ப$^{3}$ர்த்ச$^{2}$னலுகன்ன
தருல பொட$^{2}$மின பூறட தன கொச$^{2}$கு$^{2}$னெ,
பொஞ்சி தறிவேசி மிகு$^{2}$ல நொப்பிஞ்சுகாக? V—148

ஸா. பூஜாத$^{2}$ம்ப$^{3}$முனன் பராகு மெயின்முன் பூபோ$^{2}$டி$^{2}$ நேர்பூதி$^{2}$ சே
தோ ஜாதானலமார்ப ஸாச்$^{3}$த்ர சரணின் தூலிள் ஹரின்வ்ராசில
ஜ்ஜாஜாட்$^{2}$யா குலத்$^{2}$ருஷ்டி ப்ரத்யவயவேக்ஷன் சேயுசோ
வெண்டி$^{2}$ வ
க்ஷோ ஜாக்$^{2}$ரத்$^{2}$ரம காஞ்சி தல்லடி$^{2}$லு ஈசு$^{2}$ன் தாபமுன்
மீறக$^{2}$ன் V—149

ச. குமுத$^{2}$ச்$^{3}$ர ச்$^{2}$தட ச்$^{2}$படிககூல நவோத்பல ஸய்ய வ்ராலி, பூர்
ணிமல பிகாளி குட்டுசு$^{2}$ரு த்ரெக்கொன த$^{3}$ர்மபுதா ரவட்டுஸே
ஷமு ரெயி மல்லிகாளிருதி சக்கக சேயகயுண்ட நில்பு, னா
யம மருநாடிகின் கலுக$^{2}$ னாந்தக ளச்சு ருதி கு மபி$^{3}$தாஸ்ருவுல்
V—150

வண்டுகளின் கீதத்தை அடக்க வீணை மீட்டவே, அந்த வீணையின் இசை சுருதி கூடி வண்டிசையை இருமடங்கு சுவை கூட்டி விடவும், உடனே மீட்டுவதை நிறுத்தி "ஊழ்வலியின் முன்னர் நமது உபாயங்கள் பலிக்காது" என்று கூறி நெட்டு யிர்த்துச் சிரிப்பாள். V—147

மலர்ப்படுக்கை மங்கைக்கு மிகுந்த வெம்மையைத் தந்தது. முன் அவள் உதைத்தல் (நகைத்தல், இகழ்தல்) முதலிய அதட்டல் களால் மனம் நொந்து மரங்களில் பூத்த மலர்கள், காத்திருந்து பழிவாங்கும் சமயம் வாய்த்தது என மிகவும் வருத்துமேயன்றி ஆறுதலைத் தருமா?

(நங்கையர் உதைத்தல், இகழ்தல், உமிழ்தல், முதலிய தோகதக் (தூண்டற்) கிரியைகளினால் அவமானமுற்ற மரங் களில் பூத்த மலர்கள் ஆதலின் அவை பழிவாங்கக் காத்திருந்து இதுதான் சமயமெனப் பழி தீர்த்துக் கொண்டாற் போல மலர் களும் வெம்மை தந்தன என்பது கருத்து) V—148

அம்மலர் அன்ன மங்கை நல்லாள், பூசை புரிவதற்காக எனும் காரணம் காட்டி கவனமின்றி தன் விரக தாபத்தைத் தணிக்க வேண்டி, திருமாலின் திருவுருவத்தை திறமையுடன் சாத்திரவிதிப்படி தூரிகை கொண்டு (சித்திரம்) எழுதி, நாண முற்று, எல்லா அவயவங்களையும் வரைந்தாள். பின் அந்த தெய்வத்தின் மார்பில் இடங்கொண்ட திருமகள் உருவத்தைக் கண்டு, பொறாமையும், தாபமும் மிகவே கலக்கமுற்றாள். (சித்திரம் எழுதும்போது கவனமின்றி இருந்ததால் திருமகள் சித்திரமும் வரைந்தாள் என்றும் பின் அச்சித்திரம் கண்டு பொறாமையுற்றாள் என்றும் குறிப்பு) V—149

குமுதமலர் (வெள்ளையல்லிப்பூ)ப் பொய்கைக் கரையில் பளிங்குமேடையில் புது கழுநீர்ப்பூம் படுக்கையில் சாய்ந்து, அந்த தேவி, பௌர்ணமி, (முழு மதி உலா)யில் குயில்கள் கூவி உயிரைப் பறிக்க குற்றுயிரோடு கிடந்து தானம் செய்த புண்ணியப் பேற்றினால் பிழைத்திருந்தாள். அவ்விரவில் மல்லிகை மலர் களை நாடிய வண்டுகளின் ஓசை அவள் காதில் விழாதவாறு இரவு முழுதும் சொரிந்த கண்ணீரானது காதுகளில் தேங்கி அடைத்தது, அதனால்தான் மறுநாளும் பிழைத்திருந்தாள்.

(காதில் கண்ணீர் தேங்குவதால் ஒலிபுகாது வண்டிசை கேட்கவில்லை. அதுவும் கேட்டால் துயர் மிகுதியால் இறந் திருப்பாள் என்பது கருத்து) V—150

தே, நெலத குசகும்ப[3] யுக[2]ள முண்டி[2]யு வியோக[2]
ஜல[3]தி யீ[2]திம்ப லேத[2]ய்யெ; ச[2]கு[1]லு வஞ்சு
சுன்ன பன்னீடி வெல்லி லோகொள்ள கதன,
மும்பக[2]தி லாக[3]வமுன தேலிம்ப கலதெ[2] V—151

உ. சஞ்சல நேத்ர தால்சு ஜலஜாதம்ருணாலச[2]ரம்பு[2] வேக[2]ச[2]ள்
ளிஞ்சின பாறுதெஞ்சி கப[2]ளிஞ்சி ததூ[2]ஷ்மகு அங்க[2]லார்சு ரா
யஞ்ச குசேஷ்ட காஞ்சி யிகனைனனு கந்து[2]மொ யஞ்சு
மோமெவீ
க்ஷிஞ்சின தோ சுலேநக[2]வு சே[2]ருசு போ[2]ட்ல கொகிந்த
ப்ராணமுன் V—152

உ. ஸ்ரீபதி மீதி[2] கீ[2]த[2]முல ப்ரேம விபஞ்சிகனண்ட, பாணி ச[2]ந்
தாபமு சோ[2]கி மெட்லமயினம்பு[2] கரங்கி[2]ன டி[2]ஞ்சி பாடு[2]னா
லாபினி தால்சி பென்செமடலன் மறி தந்த்ருலு ஜஜ்ஜுகோகலா
லாபினி தா[2]ன பாடு[2]னு, க[2]ளம்பு[2]னு க[2]த்க[2]த[2]மைன,
ம்ரான்படு[2]ன் V—153

(குடங்களில் உதவியால் வெள்ளத்தில் நீந்திக் கடக்களாம். ஆனால் அக்குடங்களினுள்ளே வெள்ளம் மிகுந்தால் அவை மிதக்காது. மூழ்கடிக்கும். அதுபோல)

நங்கையின் முலைக்குடங்கள் இரண்டிருந்தும் பிரிவுத் துயராகிய கடலைக் கடக்கத் துணைபுரியவில்லை தோழியர் பெய்யும் பன்னீர் வெள்ளம் உட்புகுந்தமையால், மூழ்கடிக்காமல் எளிதாக மிதக்க செய்யுமா என்ன?

(விரகதாபம் போக்க பன்னீர் தெளித்தார்கள். அந்தப் பன்னீர் முலைக் குடத்தில் நிறைந்ததால் அதன்மூலம் துயர் வெள்ளத்தை நீந்திக் கடக்க முடியவில்லை என்பது கருத்து]
V—151

சஞ்சலிக்கும் கண்களையுடைய அந்நங்கையணிந்த தாமரைத் தண்டுகளை, விரைந்து களையவும், ஓடி வந்து மேய்ந்த அரச அன்னம், அதன் சூட்டினைப் பொறுக்காமல் (வாய் வெந்து) அலறித் தவித்திடும் அதன் சேட்டைகளை கண்டு, அவள் மெல்லச் சிரித்தாள்! அவள் நகையைக் காண்போமா? என முகத்தில் விழி வைத்து முகத்தினையே பார்த்துக் கொண்டிருந்த தோழியர்கட்கு ஒருவிதமாக உயிர் வந்தது

(விரகதாபத்தால் தாமரைத் தண்டுகள் கொதித்தன. அறியாது தின்ற அன்னங்கள் வாய்வெந்து அலறின. மரணப் படுக்கையில் இருப்பவர்கள் சிரித்தால் மீண்டும் உயிர் பிழைப்பர் என நம்பிக்கை ஏற்படும் என்பது மரபு. அன்னத்தின் நிலை கண்டு தேவி சிரித்தாள். தோழியர்கட்கும் போன உயிர் திரும்பியது. சஞ்சலநேத்திரி அலையும் (கண்களையுடையவள்) என்ற விளி பொருத்தமானது. உயிர் ஊசலாடுவது போல அவள் கண்களும் ஊசலாடின என்பது குறிப்பு) V—152

திருமகள் கேள்வன் மேல், இனிய குரலையுடைய அந்த தேவி, பாட விரும்பி, வீணையைத் தொடவும், அவள் கைச்சூடு பட்டு, படிக்கட்டின் (மெட்டு) மெழுகு கரைந்து போகவே, அதனை விடுத்து, தம்புராவை எடுத்து பாட முனையவும், மீண்டும் வியர்வையினால் தந்திகள் நனைந்து கெடவே, விடுத்துத் தானே பாடுவாள்! கழுத்து குரல்தடுமாறவே இயலாது(செய்வதறியாது) நிலை குலைந்து நிற்பாள். V—153

தே. ப்ரதி குசு2ம தல்பமுன ஜாறிபடி2ன தப்த
வலய மலினாங்க யுக2மு வர்துலத பொலிசெ
சூட2னிக மான தை3ர்யமுல் சு2ன்னலனுசு
சு2த2தி போ2ட்லகு த்ரப வ்ராசி சூபெ னனக2 V—154

உ. ஆவனஜாக்ஷி காக பொரலாட2 னலங்கி2ன சொ2ம்மு சீரலுன்2
வேவெச2னூட்2சி யூட்2சி மறிவேற வஹிஞ்சுட வாரக்லுப்தமுல்
கா வனமாலி சே2வயெட2 காங்க்ஷ னொது2ங்க2க கல்ல
தெல்விதோ
னே வலவந்த தா2க2 சரியிஞ்சின தா2க2மி சூசி நெவ்வக2ன் V—155

க. புத்ரியு தா காமினி னொக
புத்ரியு அட்லுண்டு2டகு ச2பு2த்தே2 க்ஷு தூ3னு:
பத்ரியகு2 விஷ்ணு சித்துட2
பத்ரப லேகதி2யு னே தபம்போ2 யனுசுண் V—156

ஒவ்வொரு பூம்படுக்கையிலும் நழுவிவிழுந்த சுட்ட வளையல் களின் கரிய குறிகள் இரண்டும், வட்ட வடிவமாகிக் கிடந்தது; அழகிய பற்களையுடைய நங்கை, இனி மானமும், தைரியமும் பூஜ்யம்தான் என்று வெட்கத்தால் சொல்ல முடியாமல் எழுதிக் காட்டினாளோ எனும்படியாக இருந்தது.

(பூம் படுக்கையில் கரிந்த வளையல் இரண்டும் இரு பூஜ்யங் களை (சைபர் 0) குறியாகப் பதித்தன. அவை நங்கை, மான தைரியங்கள் இன்மையை வரைந்து காட்டியது போலிருந்தது என்பது கருத்து. பூஜ்யம் (சுன்னம்) இன்மையை எண்ணிற் குறிக்கும்) V—154

அந்தத் தாமரைக் கண்ணாள், விரகதாபத்தால் புரளவும், கசங்கிய ஆடை அணிகளை, உடனுக்குடன் களைந்து வேறு வேறு அணிகள், உடைகள் அணிந்து (பகற்கால) பூசைக்களுக்காக புத்தாடையணிவது போலத் தோன்றுமாறு பகவத் பூசனையில் கவனமாக இருந்தும், பொய்யான நலன் காட்டியும் காதல் நோயை மறைத்தாலும் அது எப்படியும் வெளிப்படவே அதைக் கண்டு (விஷ்ணு சித்தர்) மனம் வருந்தினார். V—155

விஷ்ணு சித்தர், புதல்வர் பேறின்மையாலும், ஒருமகளும் இவ்விதம் இருப்பதறிந்தும், காதல் உணர்ச்சிகளை அறியாதவர் ஆகையாலே, இது ஏதோ ஒரு தவம் (விரதம்) என்று கருதினார். V—156

வ. தலபோசி2 தி2னதி2ன ப்ரவர்த3மான தனயா தலு க்2லானி கத்யந்த து2:கிதுண்டை2 தத்காரணம் பெறுங்க2க வலத2னி மௌக்2த்3யம்பு2ன வாரிஞ்சி சூசி யந்த கந்த கக்க2லம் ப2கு2டு2 கு2டி2கின் சனி பூஜாந்திம நமச்கரணாந்தரம்பு2ன, தன மனோ நிர்வேத2னம் ப2ன்னக2ரி வென்னுனகு வின்ன விம்பன் புனர்நமச்2க்ருதின் சேசி2, 'தே2வா தே2வர தா2சி2 யகு2 மதீ2ய புத்ரி யேமி கு2ரிஞ்சியோ விசித்ரம்ப2கு2 ப்ரதிசர்யன் கா3த்ர ஸோஷம்பு2 சேயுசுன்னதி2; வலதன்ன வின, த2புத்ர குண்ட2னகு2 நாகு புத்ரியையனனு, புத்ரகுண் டை2னனு தான, யேனேமி சேயுது2; மறி தன தபஸ்சர்ய தெறங்கு2 மா தபஸ்சர்ய தெறங்கு2 காது2, ஏமு ப3வத்தி2வச2 ப3வஜ்ஜனி தி2வச2 ராத்ருலந் தக்க க2ணராத்ர ஜாக2ரம்பு2 லெறுங்க2, மேமு பி2சபீஜாக்ஷ வலயம்பு2லு தக்க பி2ச2வலயம்பு2 லெறுங்க2, மேமு ப்ரசா2த2குசு2மம்பு2 செவி செருபு2ட தக்கனவி கப்புகொன அந்து2 ஸயனிம்ப னெறுங்க2, மேமு செம்பு2ல ப3வத்தீர்த1ம்பு2 க்ரோலின தானங்க2ம்பு2லு தடி2பிகொனு, மேமு சந்த்2ராயணம்பு2ல சந்த்2ர வ்ருத்தி3 படி2 கடி2 யெக்கிஞ்சின தாடி2ஞ்சு, ஏமு நிதி2 த்3யாச2 நிஸ்வாச2 நிரோத3ம்பு2 சேசினன் ததாத் த்3யான த2ஸ வெலிகி நி2கிடி2ஞ்சு, ஏமு சின்முத்2ரகை ஹ்ருத2யம்பு2னன் கேலு சேர்சினன் தா கபோலம்பு2னன் சேர்சு, வல்கலோத்த ரீயம்பு2 லேமு வஹிஞ்சினன் தா கிச2லயோத்தரீயம்பு2லு வஹிஞ்சு; ஏமு சி2தபக்ஷ நூத்னேந்து2 கீர்திஞ்சினன் தா பூர்ணேந்து னுபாலம்3பிஞ்சு; இட்லுகா2ப்ரவர் தில்லுசுன்னய2தி; இதி2 யேடிதபம் பு2ன்மாத2ம்பு2 கானோபு, எந்தப3வதீ2ய ப3க்தி கலிகி2ன மாத்2ருஸுலகு ப்ரக்ருதிச2ம்ப2ந்த3ம்பு2 விடுவ2 த2ந்தர் யாமிவி நீவெறுங்க2னியதிலேது2; தீ2னி தெறங்கெ2 றிங்கி2ம்பவே,' யனடுவு2, அனுகம்பாதிஸயம்பு2ன தத்சா1ந்த2 ச2ம்பு2னகு மந்த2ச்2மிதம்பு2சேசி2 மந்த2ரத3ருண்டி2ட்லனுயெ

(விஷ்ணுசித்தர்) நினைந்து நாள்தோறும் வளரும் மகள் உடல் மெலிவினைக் கண்டு மிகுந்த வருத்தம் அடைந்து அதன் காரணத்தை அறியாமல், வேண்டாம் என்று அறியாமையால் தடுத்துப் பார்த்தும், வரவர அதிகமாவதையறிந்து கோயிலுக்குச் சென்று, பூசை முடித்து வணங்கிய பின், தன் மன வருத்தத்தை அந்நகரத் திருமாலுக்கு (ஸ்ரீவில்லிபுத்தூர், மன்னார் சுவாமிக்கு) விண்ணப்பித்திட மீண்டும் வணங்கி, "ஓ தேவா! தங்கள் அடிமை யாகிய என்மகள் எதற்காகவோ விந்தையான விரதத்தை மேற் கொண்டு உடலை மெலிவிக்கிறாள். வேண்டாம் என்றாலும் கேட்க மாட்டாள். மகன் இல்லாத எனக்கு, மகன் ஆனாலும் மகள் ஆனாலும் அவளே தான். நான் என் செய்வேன்! மேலும், அவள் தவம் செய்யும் விதம் எங்கள் தவமுறையன்று. நாங்கள் தங்கள் தினங்கள், தங்கள் அவதார தினங்கள் தவிர பிற நாட் களில் இரவில் கண் விழித்தறியோம். நாங்கள் தாமரைக் கொட்டை அக்கமாலையன்றி தாமரைத் தண்டு மாலையை அறியோம். நாங்கள் பிரசாதமான பூக்களை காதில் செருகுவ தன்றி, பூவினாலான படுக்கையில் படுத்தறியோம். நாங்கள் தங்கள் தீர்த்தத்தைப் பருகினால், அவள் தன்னுடல் முழுதும் நனைத்துக் கொள்கிறாள். நாங்கள் சாந்திராயண விரதத்தில் கலைகட்கேற்ப (வளர்பிறையில்) கவளத்தைக் கொஞ்சங் கொஞ்சமாக அதிகமாக்கி (உண்டால்) குறைத்துக்கொண்டு வருகிறாள். நாங்கள் மூச்சை உள் வாங்கி அடக்கினால் அவள் மூச்சை (நெடு மூச்சுக்கள்) வெளியே விடுகிறாள். நாங்கள் சின் முத்திரையாக கையை இதயத்தில் சேர்த்தால் அவளோ கையைக் கன்னத்தில் வைத்திருக்கிறாள். நாங்கள் மரவுரி அணிந்தால் அவள் தளிரிலைகள் அணிகிறாள். நாங்கள் வளர்பிறை புதிய நிலவினை (பிறைச்சந்திரனை) பாராட்டினால் அவள் முழுமதி யினை இகழ்கின்றாள். இவ்விதமாக இருக்கிறாள். இது என்ன விரதமோ! பித்துற்றனள் போலும், தங்கள்பால் எத்துணை பக்தியிருந்தாலும் எங்களைப் போன்றோருக்கு பிரகிருதி சம்பந்தம் (உலகப்பற்று) விடாது. அந்தர் யாமியாகிய உனக்குத் தெரியாதது ஒன்றுமில்லை. இவளது நிலையினைத் தெரிவிக்க மாட்டாயா?" என்றார். எனலும் தயைமிகுந்து அவரது வைதீகத்தை (உலக விவகாரம் தெரியாத நிலையை)யுணர்ந்து குறுநகை புரிந்த குன்றெடுத்த மாதவன் இவ்விதம் கூறினார்.

## ஆஸ்வாசா2ந்தமு

உ. கந்த3 ர நீலவர்ண, மது3கைடப3னாக2 சு2பர்ண, யோகிஹ்ருத்
க்ரந்தி3 பி3தோ2த்த1 போ3கி2வனித ரி2வருவச்ச்1வா2ன
ச்2ரவச்சி1ர
ச்2பந்தி3 வச2ன் நிஸாபதி ரச2 ச்2ருதி து2க்2த3 பயோ3தி
வீசிகா
மந்த3ர கேளி காத2ர, சமாஸ்ரித பங்திஸிரோதி3 சோ2த2ரா
V—158

க. ப்ரபதா2 னிஸ அதிசர்யா
த்ரி பதானனவர்ய, நாகதே2வாத்2யமர
த்2விப, தா2னவா ஹிதோ தி2த
விபுலாத்மப3வா, ப3வாரி விஸ்ருதி நாமா V—159

## தோடக வ்ருத்தமு

த்2ருஹிணாண்ட2 கரண்ட2க தூ3ர்வஹக2
ர்ப3, ஹரார்ப3க தூ2பப3ர பக்வதப:
குஹனார்ப3க, வார்ப்3ருத கோனிரிஹா
ரி ஹிரண்மய ஹர்ம்ய சரிஷ்ணு பதா2 V—160

ம. இதி2 யந்ந்3ரோக்தி யதா1ர்த1 நாம யவனாச்2ருக்பூர்ண
கெம்பா2விவா
ரித2 பத்த3 த்யவரோதி3 வப்ரவலய ஸ்ரேணீ விகா3த க்ரியா
ச்2பத2 சே2னாக2ரத க்ருஷ்ணராய மஹிப்3ருத் ச2ஞ்ஜஞாச்2ம
தா2முக்த மால்
யத2 னாஸ்வாச2மு பஞ்சமம்ப2மரு ஹ்ருத்2யம்பெ2ன
பத்2யம்புலன் V—161

## ச2மாப்தமு

முகில் போன்ற நீல வண்ணனே! மது கைடபர் எனும் இராக்கதர்களாகிய நாகங்கட்டு கருடன் ஆனவனே! யோகியரின் இதய முடிச்சைப் பிளந்து எழுந்த பெண் பாம்பின் (குண்டலினி சக்தி) உயிர்ப்பினோடு கபாலத்தில் ஒழுகும் அமுததாரையாகிய பாற்கடல் அலைகளில் விளையாடும் விருப்புடையவனே பத்துத் தலை இராவணனின் சகோதரன் (விபீஷணன்) சரண் புகப் பெற்றவனே. V—158

தேவர்கள் அனைவரும் வணங்கும் பாதங்களையுடையவனே! அசுரரை அழிக்கப் பிறந்த சீதையின் கேள்வனே! பிறவிக்குப் பகையான புகழ்மிக்க பெயரையுடையவனே. V—159

எல்லா பிரம்மாண்டங்களையும் வயிற்றிலடக்கியவனே! குமரனின் தவப்பயனாக குழந்தையாக அவதரித்தவனே! நீர் நிறைந்த கோனேரியில் பொன் மண்டபத்தில் அமர்ந்தவனே!
V—160

அது. தெலுங்கு மொழியில் செம்பாவி (செங்கிணறு) என்ற இயல்பான பெயருடைய, யவனர் (துருக்கர்) களின் குருதியால் நிறைக்கப்பட்ட, மேகங்களைத் தடுக்கும் கோட்டைகளை அழித்த சேனைகட்குமுன் நடக்கும் கிருஷ்ணராய மன்னன் எனப் பெயர் பூண்ட எனது ‘ஆமுக்த மால்யத’ எனும் நூலில் ஐந்தாவது அத்தியாயம் இனிய செய்யுட்களால் அமையப்பெற்றுள்ளது.
V—161



# ஆமுக்த மால்யத2

## ஷஷ்டா1ஸ்வாச2மு

க. ஸ்ரீகாரி க்ருபார்த்2ரேக்ஷண,
வைகுண்ட1, யகுண்ட1, ப3க்திவரத2 பதா2 ப்22ஜா
ச்2தோக மரந்தா1யித க2ங்
கா2 காகோத2ர நகோ2த2யச்2த1 பதங்கா2 VI—1

வ: அவத3ரிம்பு மனந்தர வ்ருத்தாந்தம்பு2 VI—2

## மாலதா2ச2ரி

ச. கலடொக ருண்டு2 பேருகொன காளிகுலம்பு2ம2தீய ப3க்துடி2ய்
யிலமுனுவாடு2 வாமனதநே வ2சியும்பனொ புண்யபூ3மி, அந்
து2ல கொகயோஜன த்ரயபு தூ2ரபுரே வ2சிஞ்சி, ப்ராஹ்மவே
ளல சனுதெ2ஞ்சி பாடு2 மமுலாலச2 மங்களநாம கைஸிகின்
VI—3

வ. அஹரஹம்பு2 அம்மஹாத்முண்டு2 VI—4

# ஆமுக்த மால்யத

## ஆறாவது அத்தியாயம்

செல்வத்தை நல்கும் அருள் நிறைந்த கண்களையுடையவனே! வைகுண்டனே! தடையற்றவனே! பக்தர்கட் கருளும் பாதகமலங்களில் பூந்தேன் போல கங்கையையுடையவனே! வேங்கடமலையென்னும் உதயகிரியின் சூரியனே! VI—1

அடுத்துள்ள சரிதத்தைக் கேட்பாயாக VI—2

### தாசரி

பெயர் சொல்லத்தகாத குலத்தில் (பஞ்சமர் குலத்தில்) எனது பக்தன் ஒருவன் இருந்தான். அவன் முன்பு நான் வாமனாவதாரம் எடுத்த புண்ணிய பூமியினைச் (திருக்குறுங்குடியில்) சார்ந்துள்ள ஒரு யோசனைத் தூரத்திலிருக்கும் ஊரில் வசித்தவனாகி, பிரம்ம முகூர்த்தத்தில் (விடியற்காலத்தில்) வந்து கைசிகி ராகத்தில் பாடுவான். VI—3

தினந்தோறும் அம்மகாத்மா. VI—4

க. ஜாத்யுசித சரித்ரகமத்
ப்ரீத்யர்த[1]ம் பூ[2]தி[2] தனது[2] ஹ்ரு[2]த[2]யமு ஸூசிதா
நித்யம்பு[2]க[3] தத்தனு சா[2]ங்
க[2]த்யமு ம[2]சிபாத மானிகம்பை[2] யெ[2]ாதுகு[2]ன் VI—5

சீ[2]. சமுரைன தோல்குபு[2]ச[2]ம்பு[2] டெக்கியுனுனித்
தடி[2] ஸங்க[2] சக்ர குண்ட[2]லமுலமர,
தி[2]வெ தா[2]ரி கொம்மு தோல்தித்தியு ஜோட[2]ம்மு
மெட[2] மீத[2] மொகலாகு கொ[2]டு[2]கு[2] தனர
மத்பாத[2] ரக்ஷயு மாவு பென்வெறக குட்
டின யோடி திபிரி த[2]ண்டெ[2]யுனு மெறய,
சிடிதாளமுலு ச[2]ங்க புடிக ஒக்கொக மாடு
க[2]தி ரயம்பு[2]ன தாகி கல[2]சி மெரய

தே. வலுத[2] வனமால கண்டெயு மலின தனுவு
பட்டெ திருமன்னு பெ[2]த[2]ரு கெம்பு[2]ட்டு சூபு
பசு[2]பு பொடி[2] தோலு பல்லம்பு[2] எச[2]கமெச[2]க[2]
வச்சு சே[2]விம்ப சு[2]ரியாளு வைஷ்ணவுண்டு[2] VI—6

ஸா. க[2]ண்டா[2] போ[3]க[2]முலன் முத[2]ஸ்ருலஹருல் கல்பன் நுதுல் பாடி[2]யா
த[2]ண்ட[2]ன் வ்ரேகு[2]லு டி[2]ஞ்சி ப[2]க்தி ஜனி தோத்[2]யந்ததாண்ட[2] வம்பா[2]டு[2], ஆ
சண்டா[2]லேதரஸீலு டு[2]த்புலகுடை[2] சாண்டா[2]லிகன் மீடுசுன்
கு[2]ண்டு[2]ல் நீருக[2], எண்ட[2] கா[2]லி பசி[2] தாகுன்சூட[2] காப்ரா ஹ்ணமுன் VI—7

தே. அட்லு தட[2]வுக[2] கொல்சி சா[2]ஷ்டாங்க[2] மெறகி
க[2]ர்ப[3] மண்டபி கடி[2]கின கலக ஜலமு
லோனி றாதொட்டி நிண்டி[2] கா[2]லுவக[2] சாகி[2]
கு[2]டி[2]வெட[2]லி வச்சுன[2]தி ஸௌத்[2]ரு டி[2]ட[2]க[2] க்ரோலி VI—8

சாதிக்குரிய நடவடிக்கைகளை, என்பால் பக்தியினால் செய்துகொண்டு, தன் மனம் பரிசுத்தமாக அமைய, அழுக்குடையில் பொதிந்துள்ள மாணிக்கம்போல குற்றமற்றவனாக இருந்தான். VI—5

என்னெய் தோய்ந்த தோல் சட்டை, குல்லாய்களுடன் பித்தளைச் சங்கு சக்கரக் குண்டலங்கள் காதில் அமைய, விளக்குத் தூண் எனும் கருவியும் தோற்பையும் கையம்பும் கொண்டிவங்கி, கழுத்தில் தாழங்குடையுடனும் திகழ்ந்து, எனது பாதுகையும் குதிரைவால் மயிரால் புனைந்த சுரைக்காய் வீணையும் மிளிர, சிறுதாளமும் (சிங்கி) கக்கத்திலுள்ள சிறுபெட்டியும் நடைவேகத்தால் ஒவ்வொரு சமயம் உரசி கலந்தொலிப்ப, கழுத்தில் துளசிமாலையும், அழுக்குடலும், பட்டைத் திருமண்மணும், அஞ்சிய சிவந்த பார்வையும், மஞ்சல் காவியுடையும் திகழ அந்தப் பஞ்சம வைணவன் என்னைச் சேவிக்க வருவான். VI—6

சண்டாளர் (பஞ்சமர்) கள் அல்லாதவர்களின் சீலமுடன் கூடிய அவன், தன் சுமைகளை இறக்கி, பக்தியோடு கூடியவனாக ஆடிக்கொண்டும், பாடிக்கொண்டும், மழை, காற்று, வெயில், பசி என்று பாராமல் கல்லும் கரையுமாறு பறைத்தம்புராவை மீட்டியவாறு முற்பகலில் கன்னங்களில் ஆனந்தக் கண்ணீர் வழிய எனது தோத்திரங்களைப் பாடிப்பரவசமடைவான். VI—7

இவ்விதம் நெடுநெரம் சேவித்து, நெற்றி நிலந்தோய வீழ்ந்திறைஞ்சி, கருவறையிற் கழுவிய தீர்த்தம் கல்தொட்டியில் வீழ்ந்து நிறைந்து கால்வாய் வழியாக கோயிற்புறத்துப் போகவும், சூத்திரன் ஒருவன் எடுத்தூற்றத்தான் குடித்தான்.

(தான் பஞ்சமன் ஆதலின் தீண்டாது நாலாம் வருணத்தவரால் தீர்த்தம் எடுத்துத்தருமாறு பணித்து அதனைக் குடித்தான்.) VI—8

உ. ஆதடு2 முக்1ய ஜாதி க்னி ஙந்தன் பாயுசு, எண்ட2கா2லினெங்
தோதட2வுன் ப்ரசா2த2 வினியோக3மு வார்சி வசி2யிஞ்சுசுன்
த்ரிவர்
ணேதரஜாதி மெச்சி த2ய னிட்ட2 ப்ரசா2த2மு த2ண்டெ2
சா2சிஸ்ரத்
தா3திஸயம்பு2னன் வினதினந்தி2, பு3ஜிஞ்சு கெபனுன்
தத2ம்பு2வுன் VI—9

வ. இட்லு தன தி3வாகீர்தி ஜனினகு2 பரமார்தி நைச்யம்பு2 ச2கல
ஜன ஸோச்யம்பு2கா2 கு2டி2லாபரா தூபராணி கட2நிலிசி
ப2ஹிராவரண ப்ரத2 க்ஷிணம்ப2 காவிஞ்சி ப்ரொத்தெ2க்க
நிஜபக்கணம்பு2னகுன் போவுசுண்டு2, இட்லுண்டி2 ஒக்கநாடு2
*V*I—10

க. அத்த2ம ரேயத்தா ச2ரி
யத்த2ண்ட2 பி2டா2ல கா2ஹி தாலய க்ருகவா
கூத்த2ண்ட2 ரவமு வினிசனு
ப்ரொத்தா2யெ னடஞ்சு பாட2 போவுசு த்ரோவன் VI—11

ஆ. மருலு தீக3 மெட்டி யிருலன்ன னோ யனி
யெடு2 தமிச்2ர காடு2படி2 பொலம்பு2
லெல்ல திரி2கி தூர்பு தெல்ல னௌதறி ஒக்க
ஸஂன்ய க2ஹன வாடி சொச்சி சனுசு VI—12

அவன், மேல்வருணத்தாரைக் கண்டு விலகியும், வெயில் காற்றுகளில் எவ்வளவு நேரமோ காத்திருந்தும், பிரசாதம் வினியோகிக்கும்போது இருந்து, நான்காம் வருணத்தார் மெச்சிக் கொடுத்த பிரசாதத்தை, தம்புரா ஒதுக்கி, பக்தி சிரத்தைகளுடன் அடக்கத்துடன் கை ஏந்தி வாங்கி, உண்டு, தீர்த்தம் குடித்து மகிழ்வான். VI—9

இவ்விதம் தன் தாழ்ந்த பிறப்பினால் ஏற்பட்ட ஏழைமையால்படும் துன்பங்களைக் கண்டு எல்லோரும் இரக்கப்பட கோயில் வெளிப் பிராகாரத்திலுள்ள நீர் விழும் தூம்புவின் அருகில் இருந்துகொண்டு சேவித்து, வலம்வந்து, பொழுது தேறவும், தன் சேரிக்குச் செல்வான், இப்படி இருக்க ஒரு நாள். VI—10

நடு இரவில் அந்த தாசரி (தாழ்ந்த குல வைணவ பக்தன்) அவ்வருகே, பூனைபுகுந்த குடிலில் உள்ள கோழி பெருங்குரலில் கூவக்கேட்டு, (திருமாலைச் சேவிக்கும்) பொழுதாயிற்றெனக் கருதி பாடுவதற்காகச் செல்லும் வழியில். VI—11

மருட்கொடியை மிதித்து, "இருளே என்ன வென்று கேட்கும்' இருட்டில் வழிதவறி காடெல்லாம் திரிந்து கிழக்கே வெளுக்கும்போது ஒரு ஆளரவமற்ற காட்டில் புகுந்து சென்று,

(மருட்கொடியை மிதித்தால் பாதை மறந்துபோகும் என்பது மரபுவழிப்பட்ட நம்பிக்கை. இருளே என்று கூவி என்னவென்று இருள் பதில் சொல்லும் என்பது இருட்செறிவினை எதிரொலிக்கும் என்ற கருத்தில் வந்த தெலுங்கு மரபுச் சொல் ஆகும்.)
VI—12

சீ[2]. இடி[2]சி[2]ன யிடு[2]புல யெட[2]ல பொட்ரேனுத்த
ரேனுக[2] செ[2]ந்த[2] கோரிந்த[2] பொத[2]ல
கெட[2]சி[2]ன கி[2]ரிசெ[2]ல க்ரிந்த[2] லாக[2]ல க்ருச்சி[2]
யத[2]வ காபுரமுண்டு[2] னாகு[1]ததுல,
ச[2]க[2]மு து[2]ம்முன பூடி[2] சிகு[2]ரிந்த வாமுய
பெரிகி[2]ன நூதி பாதர பொ[2]றியல,
சீமலு ப்ரால்வீட[2] சிவிகின வெலுகு[2] பட்
டுன பண்டி[2] யெண்டி[2] க்ருங்கி[2]ன கு[2]னுகுல

தே. பெண்ட தொ[2]க்க[2]ள்ளலோ கடு[2] பண்டி ஸ்மஸ்ரு
சலனமுல க்ருக்கு ஜீர்ணோதுவுல பொலம்பு[2]
து[2]ண்டு[2]க[2]ல மன்ன யெளருல தூலி ராடு[2]
சிக்குனேதால பாட[2]று சீ[2]ம சனுசு VI—13

க. அபமார்க[2]த னருகு[2]சு மார்
க[2]பு தா[3]மார்கா[2]வபு கண்டகம்பு[2]ல காள்ளன்
விபரீதத னூட்[2]சுசு நே
ருபுனன் பல்லேரு லீ[3]ட்சி த்ரோயுசு சனுசுன் VI—14

ஸா. காஞ்சென் வைஷ்ணவு ட[2]ர்த[1] யோஜன ஜடா கா[3]டோத்த[1] ஸாகோ[1]ப ஸா
கா[1]ஞ்சஜ்ஜா[1]ட சரன் மருத்[2]ரய த[2]வீயஃப்ரேஷிதோ த்[2]யச்சதோ[2]
த[3]ஞசத்கீரீடக்ருத வ்ரணச்ச[1]லன லிப்யாபாதி[3] தாத்[3]வன்ய நிச்
ச[2]ஞசாராத்தமஹாப்லோபம ப[1]லச்[1]பா[1]யத்[1]வட சஷ்மாஜமுன் VI—15

இடிந்த சுவர்களில், நாயுருவி காசமரீத்தம், பூளைப்புதர் களாலும், கீழே சாய்ந்த சுவரிடுக்குகளிலும் கல்லிடுக்குகளிலும் வசிக்கும் பெருச்சாளிகளாலும், பாதி தூசியால் புதைந்த, புல் பூண்டுகளால் வாய்முடப்பெற்ற, கிணற்று வளைகளும், எறும்பு கள் அரிசியை இழுத்துக்கொண்டு போகவே சிதைந்து, காய்ந் துலர்ந்த வேலித்தட்டிகளில் உள்ள இறுங்கும், தூதுவளை குப்பை வேளைக்கீரைகளில் வயிறொட்டியவாறு மீசை அசைத் தலும் அடங்கிவிட்ட முதிய பூனைககளும், புலங்களில் வளர்ந்த சாரணத்தி, கோரை முதலானகளைகளும் நிறைந்து, ஏற்றம் கெட்டுவிடவே கல் தூண் மட்டும் மிஞ்சியதாக உள்ளதும் ஆன பாழ்ப்பட்ட நிலத்தின் வழியே சென்றவாறு. IV—13

தவறான வழியில் சென்று, வழியிலுள்ள (உத்தரேணி) முள்ளைக்கால்களினால் விபரீதமான முறையில் துடைத் தெறிந்து, நெருஞ்சி முட்களை விழிப்புடன் பிடுங்கி எறிந்து கொண்டு போனான். IV—14

அவ்வழியில் வைணவன், அரையோசனை (இரண்டு குரோஸ்) நீளமுடைய, விழுதுகள் விட்டு பல கிளைகளும் உட்கிளைகளும் உடைய ஆரமரத்தைக் கண்டான். அக்கிளை களில் உள்ள புழுக்கள் குடைந்த இலைகள் காற்றால் வீசி எறியப்பட்டு தூரத்தில் வழிப்போக்கர்கள் முன்பு வீழ்ந்து. இந்த மரத்தில் பிரம்மராட்சசு உள்ளது. அருகே வரவேண்டாம் என்று சொல்லி எச்சரிப்பதுபோல் இருந்தன. அந்த இலைகளின் புழுக்குடைந்து எழுத்துக்களாகக் காணப்பட்டன. இவ்விதம் எச்சரித்த புண்ணியப் பயனோ எனுமாறு அவ்வாலமரத்தில் பழங்கள் நிறைந்திருந்தன.

(ஆலமரம், புழுக்கள் குடைந்தது எழுத்துக்களாகத் தோன்ற இலைகள் வீசி வழிப்போக்கரை எச்சரித்தது போல இருந்தது என்றும், அந்தப் புண்ணிய பயனே பழங்கள் எனுமாறு இருந்தது என்றும் கற்பிக்கப்பட்டுள்ளது). VI—15

ஆ. காஞ்சி யாதடொ[2]க்க காலித்ரோவயு னந்த
காஞ்சி யந்து[3] தெருவு காஞ்சினதி[2]ய
பரமலப்[2]தி[3] கான த்வரிதம்பு க[2]தி அவ்வு
டாவனீஜமந்த னந்த கதி[2]சி[4] VI—16

சீ[2]. எலநீடி கபா[3]ண்ட[2] லம்பு[2]லு வோலெ மெ[2]த[2]டெ[2]ல்ல
ஜுர்ரிவைசின டொ[2]ல்லு புர்ரெ க[2]முலு,
எறசி கீ[2]றின ஜீரலேர் பட[2] துத[2]முட்ட
சீகின நுலிபச்சி கீகச[2]முலு,
தொ[2]ன தொ[2]னயனு னீகெ[2]துட்டெல ரூபேரு
பட[2]க க்ரம்பலனு வ்ரேலெடு[3] க[2]ருசு[2]லு,
தூ[2]ள்ள மக்கெக்கி மங்க[2]ள்ள திப்பலு ரேகு[2]
வடு[2]வுன கா[2]லி னாடெ[2]டு[3] வெறகலு,

தே. துனிசி[2]ன நராங்க[3]கமுல பொத்துலனு க[2]மிசி
போக யொண்டொ[2]ண்டிதோ போரி பீகுலாடு[2]
ஸ்வாபத[2]ம்பு[2]லு பத[2]ஹதி வச்சி[2]வலசு
வருகு[2]தறசகு[3] முறுத்ரோவ அரிகி[3] எது[3]ட VI—17

சீ[2]. முங்கா[2]ள்ள சாகி[2]பை ம்ருச்சுசூபுலு பர்வ
பொ[2]மிக லெத்துசு பாறிபோவு ஸுனுல,
பலல தோரணமுலு பட்டி பி[2]ட்டெக[3]ய ஸா
கா[1]தூ[3]தி னெக[2]யு கங்க[1]முல ரொத[2]ல
அட்ட[2]ம்பு[2] திரிகி[3] தலாஹதிபடி[2] ரொண்டி[2]
ஹச்[2]தம்பு[2] லிடி[2] யங்க[2]லார்சு கபுல,
ட[2]ப்பா[3]டுமை ஒக்கெட[2]லு சூ[1]பி யவிமாய
நடக[2] வேறெட[2] சூபு வ்யாப்ருதுலனு,

தே. கனி எவடொ[2] யொக்கருண்டி[2]ந்து[2] கலடு[3], வாடு[3]
நருடு[2] காடி[3]ந்த[3] னாதிகா ஹரணமுனகு
வேளயுனு காது[2], பொலகா[2]லி வீசெ தெருவு
னெட[2], வனுசு ஜாலிகொனி ச[2]ம்ஸயிஞ்சுவேள VI—18

அவன் அவ்வாலமரத்தைக் கண்டு அப்பக்கம் ஒரு ஒற்றை யடிப் பாதை செல்வதையும் கண்டு, வழி கிடைத்ததே பெரும் பாக்கியம் எனக் கருதி விரைந்து அம்மரத்தின் அருகே சென்றான்.
IV—16

இளநீர்க் குரும்பைகள்போல, மூளை எல்லாம் உறிஞ்சி எறிந்ததால் உருண்ட மண்டை ஓடுகளும், இறைச்சியைக் கீறிய கீறல்கள் தோன்றும்படியாக முழுவதும் சுவைத்துத் சுவைத்து, இளம்பச்சையூன் படிந்த எலும்புகளும், முசுமுசுவென மொய்த்த ஈக்கள் கூட்டம் உருவம் தெரியாமல் மறைத்த முள்கிளைகளில் தொங்கும் பச்சைத் தோலும், தூசி படிந்து அழுக்கடைந்து, நாவிதனின் குப்பைபோல கிளர்ந்து எழுந்து பரவும் காற்றிற் காடும் மயிர்க்குவையும், துண்டுபட்ட மனித உடலுறுப்புக்களை, கூடிவந்து கடித்து போகும்போது ஒன்றோடொன்று பிணங்கிப் போராடும் நாய்நரிக் கூட்டமும், அதன் கால்பட்டு நசுங்கி தீநாற்றம் பரப்பும் வருவல் (உப்புக் கண்டச் சதைகள்)களும், கழுகுகளும் மிகுந்திருந்த செறிந்த துர்க்கந்தமிக்க வழியே சென்று, எதிரே......(கண்டான்)
VI—17

முன்கால்களால் நீட்டி வளைந்து, மேலே திருட்டுப் பார்வைகள் செலுத்தியவாறு ஓடுகின்ற நாய்களும், புலால் தோரணங்களைப் பற்றி திடீரென பறக்கும்போது கிளையடித்துவிட இரைச்சலிட்டோடும் பருந்துகளும், (பிரம்ம ராட்சசனுக்கு) இடையே வந்ததால் உள்ளங்கையால் அடிபட்டு, இடையை இரு கரத்தாலும் பிடித்துக் கொண்டழும் குரங்குகளும், தற்செயலாக ஓரிடத்தில் காணப்பட்டு, அவ்விடத்தில் மாயமாகி வேறோரிடத்தில் காணப்படுவதாகிய நடவடிக்கைளும், பார்த்து, "யாரோ ஒருவன் (இம்மரத்தில்) இருக்கிறான் போலும். மனிதன் அல்ல, விறகு, கட்டைகள் சேகரிக்கும் வேளையும் இதுவல்ல, புலால் மணக்காற்று வீசுகிறது. வழியோ தூரமாக இருக்கிறது" என்று நினைத்து கவலையும் ஐயம் உடையவனாகியிருந்த போது

(வேதம் வெங்கட சாஸ்திரி உரையில் பெண் நாய்கள் என்று உரை கூறுவார். பெண் நாய்களே வஞ்சகம் மிக்கதாயும் துணிந்து வருபவையாகவும் இருக்கும் என்பது உரைக் குறிப்பு: மாவிலைத் தோரணம் போல, உப்புக்கண்டம் போடுவது போல புலால் துண்டுகள் தோரணமாகப் போட்டுள்ளதால் புலால் தோரணம் என வருணிக்கப்பட்டது)
VI—18

சீ2. ம்ருத மர்த்யு ரெண்டான னிட்ட2 சாலக நெத்ரு
ரஞ்ஜில்லு பெனுபொ2 ட்டு2 முஞ்ஜிவானி,
பல்லசீமல வக்ரப3ல்லாதகியு போலெ
னெர்ர து2ப்படி ஒப்பு கர்ரிவானி,
வ்யத்யச்2த ஹச்2தி மச்2தாப3 பாயகு2 க2ட்ட2
முனு தம்ஷ்ட்ரிகலு பொல்சு மொக3முவானி
கடு2துர்லனிடு2 துட்டெக3தி சொங்க2லோ பாண்டு2
ரத மிஞ்சு கபில கூர்சம்பு2 வானி;

தே. எறகு தெறுவரி கன ஸாக1 லெக்கஜாறு
ப்ரேவ் ஜந்தெ2ம்பு2 கச2ரி பை பெட்டுவானி,
வ்ரேலு ட2கு2 பொ2ஜ்ஜ பூ2ரகா2லி வானி
செம்பு2 தலவானி னவடு கசம்பு2வானி, VI—19

தே. கண்ட2கன்னுலவானி, ஆகடனு ப2ண்ட2
திட்ல பே2தாளிகலு சா2ரெ திட்டுவானி
நக9 க2ரிம வானி, அன்வர்த1 நாமு கும்ப3
ஜானு வனுனொக்க த்2விஜ நிஸாசருனி கனியெ VI—20

உ. வாடு2னு கண்கு போகுமனி வ்ராலெ மஹின் விடபாளி
நுக்கு2 கா2,
வீடு3னு முன்னு ரேபக2டி வேளகுமானிசி2யெளட, போரிலோ
வாடி2மி கொந்தகாலமில வ்ராலுட லரவரியெளட, நில்சியா
வாடி2ஸரம்பு2சே நடு2வः வாட2தி2 த்ரும்புடு வீடு2னுத்த3தின் VI—21

இறந்த மனிதப் பிணத்தை தன் கோவணம் (கௌபீனம்) ஆக கட்டப் போதாமையின் இழுத்துக்கட்டும் போது இரத்தம் பட்ட உந்தியுடைய அரைஞாண் உடையவனும் முசுறு (முயிறு) மொய்த்த அண்டிமாப் போலச் சிவந்த போர்வையைப் போர்த்திய கருமேனி உடையவனும்,

தலைகீழ் ஆக உள்ள யானைத் தலைபோல் தாடை (நாடி)யும் கோரைப் பற்களும் உடைய முகத்தினனும், குளவிகளின் நீண்ட கூட்டைப்போல் கோரோசனை வண்ணத்திலுள்ள தாடி மீசைகளையுடையவனும், இரைக்காக (தின்பதற்காக) வழிப்போக்கர் யாராவது வருகிறார்களா எனப் பார்க்க மரக்கிளையில் ஏறும் போது நழுவும் குடல்பூணூலைச் சினந்தவாறு மீண்டும் தோள்களில் சரிசெய்து வைத்துக் கொள்பவனும், தொங்கும் தொந்தியும், யானைக்காலும், வழுக்கைத் தலையும், பிடரி மயிரும் உள்ளவனும்......

(முயிறு—சிவப்பு நிறமான பெரிய எறும்பு) VI—19

சதை வளர்ந்த கண்களும், பசியினால், வேதாளங்களை (பிசாசுகளை) அடிக்கடி கெட்டவசவு (வசை)கள் வைபவனும் மலைப்பாரம் உடையவனும், முடமுழுங்கால் (கும்பஜானு) எனும் பொருத்தமானப் (காரண) பெயருடையவனுமான ஒரு பிரம்ம ராட்சசனைக் கண்டான். VI—20

அவன் (அந்த பிரம்ம ராட்சசனும்), 'பார்த்தேன்! போகாதே! என்று மரங்கள் பொடிப்பொடியாகுமாறு குதித்தான். இவனும் (வைணவ தாசரி) முன்பு இரவும் பகலும் போரில் வீரமுடன் போரிட்டவன் ஆதலினால் தைரியமாக நின்று, அந்த கூரிய அம்பினைக் கொண்டு (ராட்சசனை) அடிக்கவும், அவன் அதை (அம்பினை) முறிக்கவும் இவன் வீரமுடன் முனைத்தான்.† VI—21

---

†(முற்காலத்தில் பிணந்தின்னும் பேய்மக்கள் சிலர் இருந்தனர் என்று தமிழ், வடமொழி இலக்கியச் சான்றுகளால் தெரிகிறது)

சீ$^3$. திகி$^2$சின அடு$^2$கு$^2$லு தெமலக றொம்மப்ப
ளிஞ்சி யவ்வலிகி சண்டி$^2$ஞ்சி தா$^2$டி,
சறசின வஞ்சிஞ்சி சரம பா$^3$க$^2$முனகை
திரி$^2$கி தத்க்ரிய ககு$^2$த்$^2$ருஷ்டி நிலிபி
பைப$^2$ட்ட$^2$ ஜனுமரபட்ல கொட்டு$^2$ சுனுண்டு$^2$
பிடி$^2$கிள்ள ப$^2$லிமி லோ ப$^2$ட$^2$க நிலிசி
சொர சூட$^2$ க்ருங்கி$^2$ முஷ்டுலபி$^2$கி$^2$ கோடகா$^2$
சொரவீக திரிகெ$^2$டு$^2$ சோன திரிகி$^2$

தே. அசு$^2$ரவத$^3$ சா$^2$த$^3$னமு ரோயுனபுடு$^2$ க்$^2$ருத்தி$^2$
தாசி திரிகி$^3$ன க்ருதமுஷ்டி த$^2$ண்ட$^2$ நிலிசி
யெட$^2$ கொலதி$^2$ வென்கநடு$^2$ மொய்ய நடி$^2$சியடி$^2$சி
மத்பத$^2$ ச்$^2$ம்ருதி யாத்ம னேமறக அதடு$^2$ VI—22

தே. தாசி போசூட$^2$ தன ராக்ஷீ$^2$ சயம்பு$^2$
எல்ல சீரின டி$^2$க்கி$^2$ வாரே$^2$கு$^2$ தே$^2$ர,
போயெ னதெ$^2$ வாடு$^2$ ராரெ ராரே யடஞ்சு
பாறி வாருனு தானுனு பட்டிகொனுடு$^2$ VI—23

க. ப$^2$ம்போ$^2$ தத்தா$^2$ச$^2$ரியப்
டு$^2$ம் ப$^2$த$^2$ஹதுலனு க$^2$போணி போடுலனிருமை
லம் பொ$^2$டு$^2$சுசு பெனகு$^2$சு போ
வம்ப$^2$ட்டி வடம்பு$^2$ சேர்சி வாடி$^2$ட்லனியென் VI—24

ஸா. சா$^2$ராச்$^2$வாத$^2$ன ப்ராண பஞ்சகமு த்ருஷ்ணன்
பாசினந்தர்பணன்
மூரிம்போ$^2$ னசி$^2$த்ருஞ்சி பொங்கெ$^2$டு$^2$ ப$^3$வன்முண்ட$^2$ம்பு$^2$
தா$^3$ரோஷ்ணமிம்
பாரன் க்ரோலி பிஸாசி நீது$^2$ கறகுட்லந்தீ$^2$, னத$^2$ச்$^2$தாலகாந்
தாராந்தர் ந்ரு கபால குண்ட$^2$
விக$^2$ளன்மைரேயமுன்த்ராகெ$^2$த$^2$ன்
VI—25

(இராட்சசன்) இழுக்கவும், (தாசரி) காலடி பெயராமல் அவன் மார்பில் தட்டி, அந்தப் பக்கம் விலகி, குதித்து, அவன் அடிக்கவரவும் வஞ்சித்துப் பின் வாங்கி, அவன் மீண்டும் முனை வதைக் கண்வைத்து (எச்சரிக்கையுடன்) பார்த்து, அவன் தன் மேல் பாய முனைந்து வரவும், மார்பில் குறிவைத்தவாறுள்ள பிடிப்பின் வலிமையால் அவனுக்குப் பிடிபடாமல் நின்று, அவன் தன்மேல் பாய முனையவே தான் குனிந்து, தன் கைப்பிடியே (பாதுகாப்புக்) கோட்டையாக அவனை விடாது, திரியும் இடமெல்லாம் திரிந்து, அவன் கொல்கருவிகளைத் (கல், முதலியன) தேடும்போது அவனை நையப் புடைத்து, உதைத்து, அவன் திரும்பவுமே கைப்பிடியால் முதுகிலும் இடையிலும் குத்தி, என்மேல் பக்தியினால் ஏமாந்து விடாமல் எச்சரிக்கையாக இருந்து போரிட்டான். VI—22

தள்ளிவிட்டுப் போகப் பார்க்கவும், தனது இராட்சதக் கூட்டத்தை அவன் விளிக்கவும் அவர்களும் (மரத்திலிருந்து) இறங்கி வரவும், அதோ அவன் போனான், வாருங்கள் வாருங்கள் என்று ஓடிச் சென்று அவர்களும் தானும் (தாசரியை) பிடித்துக் கொள்ளவும். VI—23

காளையொத்த தாசரி அப்போது கால்கை உதைத்து முழங் கையால் இடித்து, இருபக்கமும் குத்திப் போரிட்டவாறு ஏக அவர்கள் பிடித்து ஆலமரத்தில் கட்டி (இராட்சசன்) இவ்விதம் கூறினான். IV—24

உன் கொழுப்பினைச் சுவைத்தின்புற்று மனநிறைவோடு மகிழ, என் பஞ்ச பிராணங்களும் தாகம் தீருமாறு கத்தியால் உன் செருக்குடைய தலையைக் கொய்து உனது முண்டத்திலிருந்து பொங்கும் சூடான இரத்தத்தை இனிது பருகி இந்தப் பிசாசி (பெண் பேய்) இரும்புக் கம்பியில் கோர்த்து நெருப்பில் வாட்டி உன் மாமிசத் துண்டுகளை எடுத்துத் தரக் கடித்து இந்த பனங் காட்டினுள்ளே இருக்கும் மண்டையோட்டு கலங்களில் உள்ள கள்ளினைக் குடிப்பேன். VI—25

க. நன்னிந்தலயிஞ்சின க[1]லு
நின்னே ருஜு[~]விதி[3] வதி[2]ந்துனே யனி யார்புல்
மின்னந்த[2]க[0] பு[2]ச[2]கொட்டுசு
அன்னீசுடு[5] தக[2]வெலுவடு[2] னவ்யக்தோக்தின் VI—26

தே. அசி[2]யு பாத்ரியு தேபஞ்சி யாந்த்ரவல்லி
கோ[2]ல கக்கெ[2]ர த்ரோய அக்குஜமு தோட[2]
ஒரகி[2] ரக்கசு[2]தோ தை[2]ன்ய விரஹிதமுக[2]
த[3]ர்ம மெறிகிங்சு சூ[2]க்தி ஆதண்டு[2] பலிகெ VI—27

ச. வினுமொகமாட ராத்ரிசர, வேகி[2]ரமேடிகி? நின் ஜயிந்துரே
யனிமிஷ[~]லைன? பா[3]ஜன க[2]தான்னம நேனிக எந்து[2]
போயெத[2]ன்?
பெனக[2]க ப்ராணரக்ஷண முபேக்ஷ யொனர்சுட பாபமிந்து[2]கை
கனலகு, நாகு மேனியெட[2] காங்க்ஷயு லேதி[2]தி[2]
போவுடேயுருன் VI—28

ஆ. ஹீனஜன்ம மறுட, யெவ்வடே[2] னொகப்ராணி
ச[2]ந்த சி[2]லுட, முக்தி பொந்த கனுட
மேலெகாதெ[2]; ஸிபி[2]ய மேல் ப[2]ந்தி காடெ;[2] ந
ஸ்வரபு தே[2]ஹ மம்மி பரமு கொனுட VI—29

ச. தெவுலயினன், க்[2]ரஹம்ப[2]யின, தேலயினன், கரமைன,
ஆத்மபெங்
தெ[2]வுலயினன், ஜலம்ப[2]யின, தெக்கலியைன, ம்ருகா[2]
க்[2]னுலைன, மேல்
தவுலயினன், வ்ரணம் ப[2]யின, த்ராசயினன், பிடு[2]கை[2]ன,
தீர்சு பே
லவதனு வூரகே செட[2] கிலன்க்ருஸ[~]னொக்கனி ப்ரோசு
டொப்பதே[2] VI—30

என்னை இவ்வளவு அலைக்கழித்த நீசனாகிய உன்னை மென்மையாகக் கொல்வேனோ (கடுமையாகச் சித்திரவதை செய்வேன்) என்று விண்ணதிர ஆர்ப்பரித்து நெட்டுயிர்த்து, அக்கடையோன் தாகம் கொண்ட தெளிவற்ற மொழிகளில், VI—26

கத்தியும், கலமும் (இரத்தம் பிடிக்கும் பாத்திரமும்) கொண்டு வருமாறு கட்டளையிட்டு, கொடிபோன்ற குடலால் பின்னிய கயிற்றினை (கோலகக்கர)* எடுத்துத் தள்ளிவிடவும் மரத்தில் சாய்ந்த (தாசரி) அந்த இராட்சசனிடம் அச்சமற்ற உறுதியான மொழிகளில் அறநெறி கூறலானான். VI—27

இரவில் திரிபவனே (இராட்சசனே) ஒரு சொல் கேட்பாயாக! விரைவு படுதல் (அவசரம்) ஏன்? உன்னை தேவர்கள் ஆனாலும் வெல்ல முடியுமா? வட்டிலில் வைத்த சோறு நான்! இனி எங்கே போய் விடுவேன்! (எனினும்) உயிரைக் காப்பாற்றப் போராடாமல் இருப்பது பாவம்! (அதனால் தான் பிணங்கிப் போராடினேன்) அதற்காகக் கோபப்பட வேண்டாம்! எனக்கு உடல் மேல் பற்றில்லை! இது (இந்த உடல்) போவதே மேலானது. VI—28

இழிந்த (சண்டாளப்) பிறப்பு அறுவது! ஏதேனும் ஒரு உயிர் மகிழ்வது, வீடுபேற்றுக்கருகே அடைவது நல்லதேயல்லவா! நிலையற்ற உடலை விற்று பரத்தை அடைந்த சிபிச் சக்கரவர்த்தி மேலான வழிகாட்டியல்லவா!

(சிபி—புறவுக்காக தன் உடல் அரிந்து துலைபுக்ககதை பிரசித்தம்) IV—29

நோயோ, பேயோ, தேனோ, வாளோ, மனக்கவலையோ, நஞ்சோ, வெள்ளமோ, கள்ளனோ, நீரோ, நெருப்போ, தீயோ, விலங்கோ, சூது வாது, மாதுகளாலோ, மண்ணிலோ, புண்ணாலோ, இடியோ, பாம்போ, ஏதேனும் ஒன்றால் எளிதில் நாசமடையும் இந்த உடல், இவ்விதம் கெடாமல் ஒரு (பசியால்) மெலிந்தவனுக்கு உதவுவதால் கெடுவது நல்லதல்லவா? VI—30

---

* கோலகக்கர—மாடுகளை லாடம் அடிக்கும்போது நான்கு கால்களையும் கட்டி வீழ்த்தப் பயன்படும் கயிற்றுக்குப் பெயர்.

வ. அதி2யட்லுண்டெ2, இங்கொக்க ஹிதம்பு3 செப்பெத2, அதி2யுனு ப்ராண ப2யமபு2ன ஆடு3 கார்யவஸம்பு மாடகா2 தெலியக, மாத்3யச்3த்1யம்பு2கா தெலிசி2, வினுமு வினகுன்ன பூ3தஹிதம்பு2 கோரி யுச்சரிஞ்சு மாடகீஸ்வருண்டை2ன மெச்சு கதா2? வ்யாக்3ர சிம்ஹ வராஹ வ்ருக ஜம்பு2காதி2 ஸராருவுலயந்தொ2க்க திர்யக்கவு காவு, தே3வயோனிவி, நீகுனு மாகும் ப2லெ கர சரண முகா1ப க3னம்பு2லு கலவு2 மாடலனு மாயட்ல யகர்தவ்யகர்தவ்யதா விசாரம்பு2லு ச3மானம்ப ஹாமறசி யண்டி; ச்2தா1வரம்பு2ல கண்டெ கீடாது2லகு, வானி கண்டெ மறி ம்ருகர2து2லகு, வானிகண்டெ மறி பஸு பதங்கா2து2லகு, வானிகண்டெனு மாகுனு, மாகண்டெனு மீகுனு, கரசரண களேப2ராதி3 பாடவம் பெ3க்குடு2, விஜ்ஞானம்பு2னு க3னம்பி3ட்டி நீகேகாந்த குத்ச3வஹம்ப3கு2 பீ2ப3த்ச2 வத்3யாவத்3ய பத்1யாபத்1ய ப3க்ஷயா ப3க்ஷ்ய பேயாபேய விவேகம்பு2லு லேகுனிகி யுக்தமே, ருசிகாது2, ஸுசிகா2தீது2ராஹாரம்; பி2தி2யு ச2கல து2ரிதா வலம்ச2யகு2 ஹிம்ச2னொன கூடு2னதி3; ஹிம்ச3 பரலோகம்புனன் கதா2 பா2த3கம்பு2, பரலோகம்பு2 ப்ராணாந்தம்பு2னன் கதா2; சிரச்3தி1ர ப்ராணுலமகு3 மாகேல ஹிம்சா3 ப3யம்ப3ன வலது2; ப்ராண ப3யம்பு2 மனுஷுல மகு3 மாகு நேடை2ன, மீகு மறுநாடை2ன அவலி நாடை2ன துத3யுகா3ந்தம்பு2னந்தை2ன நிடு2வு குறுசல எப்புடு2 தப்ப, த3ந்தவத்வம் பு2னகு தாரதம்யம் பேமி? முன்னீடனைனனு முனுங்குட2ட ச2ரியகு2ட பர்வதம்பு2னகு பரமாணுவுனகு ஏமி யந்தரம்2? மீது2 விசாரிம்ப வலவதே2? தபோலப்3த3 வராது2லன் பூர்வம்பு2னம் கீ2ர்வாணுல மத2ம் ப2ட2ஞ்சி ஹெச்சின, ஹிரண்ய கஸிபு த2ஸமுகா1து2லு ஸதச2ஹச்2ர ச3ங்க்1யாக ச3வேத்ச3ரம்பு2லு ஜீவிஞ்சியுன் பஞ்சத்வம்பு3 பொந்தி3 தாரு முன்னு ஜயிஞ்சின ஜமுசேதனே சிக்கரே? யிக்கடி2கி மீரு ப்ரப2லுலரைன அக்கடி2கி வாடு2 ப்ரப2லுண்டு2, ச2கல பூ3த தாரதம்யம்பு2னு நிஜநிஜச்3தா1ன விஸேஷம்பு2னன வச்சு, அச்சண்டா3ம்ஸு சு2துனி வீட மேர தப்பின மாகுன் தப்பனியட்ல பா3த3 மீகுன் தப்பது மீகுனா சௌ2ரி முக்1 ப2ர்ஹிர்முகு1லு ஜாதி தலபோய ப்3ராதலட்லய்யுன் பரம்பு2ன மீரு வாரு பா2த3ய பாத3 கதல னொந்து2 சுன்னாரீ தைஜச2ம்ப3கு3 தாரதம்யம்பு2னகுன் தமச்ச2த்வம்பு2லு ஹேதுவுலு, வானி காஹ்ருதுலு ஹேதுவுலு.

அது அப்படியிருக்க, இன்னொரு நல்லுரை கூறுகிறேன். அதுவும் உயிருக்கஞ்சி, காரியவாதியாகச் சொல்வதாகக் கருதாமல், நடுநிலைமையுடன் பேசுவதாகக் கருதிக் கேட்பாயாக! (நீ) கேட்கா விட்டாலும், உயிர்களின் நலம் கருதிக் கூறப்படும் சொற்களை இறைவனாவது பாராட்டுவானல்லவா? (நீ) புலி, சிங்கம், பன்றி, ஓநாய், நரி முதலான கொல் விலங்குகளில் ஒரு விலங்கன்று. நீ தெய்வப் பிறப்பினன். உனக்கும் எங்களைப் போல கை, கால், முகம் முதலிய உறுப்புக்கள் உள. பேச்சும் எங்களைப் போன்றுதான். செய்யத்தக்கன, செய்யத்தகாதன எனும் பகுத்தறிவும் எம் போன்றதே. ஆ! மறந்து சொன்னேன்! தாவரங்களைவிட புழுப்பூச்சிகட்கும், (ஊர்வன) அவற்றைவிட பறவை, விலங்குகள் (நடப்பன) ஆகியவற்றுக்கும் அவற்றைவிட எங்கட்கும், எம்மைவிட, உங்கட்கும் கைகால், உடல், திறனும், அறிவுத் திறனும், மிகுதியாகும். இத்தகைய உனக்கு, முக்கியமாக நிற்லதக்குரிய வெறுக்கத்தக்க, தக்கன, தகாதன, உண்பன, உண்ணாதன, பருகுவன, பருகாதன, எனும் விவேகம இல்லா திருப்பது பொருத்தமாகுமா? இந்தத் தீய உண்டி (நரமாமிசம்) சுவையற்றது, தூய்மையற்றது. அதுவும் எல்லாப் பாவங்களிலும் தலையாய கொலையால் வருவது.

கொலை (ப்பாவம்) பரலொகத்திலன்றோ பாதிப்பது. பரலோகம் உயிர் நீத்த பிறகன்றோ? நெடுநாள் வாழும் உயிர்களாகிய எமக்கெதற்கு (கொலைப் பாவ) அச்சம்? என்று கருத வேண்டாம்? பிராணபயம் (உயிர் நீக்கும் அச்சம்) எமக்கு (மனிதர்க்கு) இன்றென்றால் உங்கட்கு நாளையோ, நாளை மறுநாளோ, முடிவில் யுகர்ந்தத்திலோ நீண்ட, குறுகிய கால எல்லைக்குள் எப்படியும் தப்பாது. சாவு வர ஏற்றத்தாழ்வுகள் எப்படி இருந்தால் என்ன? முன்னீரில் (கடலில்) மூழ்குவதென்றான பிறகு மலையானாலென்ன? அணுவானால் என்ன? இரண்டும் ஒரே நிலை தானே! எதிர்காலத்தைப் பற்றி ஆலோசிக்க வேண்டாமா? தவத்தினால் பெற்ற வரங்களையுடைய முன்னாளில் தேவர்களின் செருக்கடக்கி உயர்ந்து நின்ற இரணியகசிபு (கனகன்) தசமுகன் (இராவணன்) முதலானவர்கள், நூறாயிரம் ஆண்டுகள் வாழ்ந்தும் முடிவில் இறந்து, தாம் வெற்றிகொண்ட யமன் கையிலேயே சிக்கிக் கொள்ளவில்லையா? இங்கு நீங்கள் வலிமைமிகுந்தோராயின், அங்கு அவன் (யமன்) வலிமைமிக்கவன். எல்லா உயிர்களின் ஏற்றத் தாழ்வுகள் அதனதன் இடச்சிறப்பினால் உருவாவதேதான். கொடுங்கதிர்க் கடவுளின் மகன் (சூரியன் மகன் யமன்) பட்டிணத்தில் எல்லை கடந்த எம்போன்றே உங்கட்கும் தண்டனை நிச்சயமாகும். நீங்களும், யமன், மற்றதேவதைகளும் குலத்தால் சகோதரர்கள் தான், எனினும் பரலோகத்தில் ஒருவரை ஒருவர் பீடிக்கின்றீர்கள். இந்த வேறுபாட்டுக்கு தமஸ், சத்துவ குணங்கள்தான் மூல காரணமாகும். அந்த குணங்கட்கு உணவே மூலக்காரணம்.

வ்யாஹ்ருதுலன் க்ரதுவுல சருபு ரோடா2 ஸா ஹூதுல்
பு3க்துலன் பவித்ருலை யமர்த்யத மீகண்டெ அதி தீ3ர்க3
காலம்பு2 வாரு ஜீவிஞ்செத2 ரப்பாவனத சூசி கதா2
சதுர்முகா1ம்ஸ ஜுண் ட3கு2 சு2தா3ம்ஸூண்டு2 கரங்கி2 கரங்கி
ச2கல ரச2முல கவதி3யகு2 சு2தா3ரச2ம்பு2ன ஆப்யாயனம்
பொ2னரிஞ்சு சுன்னவாடே2 தத2ர்த1ம்பு2 மாகுச்சரிஞ்ச ராது2
கானி வேத2ம்பு2 ப்ரத2ம களயனலுண்டு2 த்ராவுனனி செப்பு
மறியு ஆயாகள லாயா வேல்புலகுன் க்ரமம்பு2னன் செப்பு னிந்த
விசாரிஞ்சி ருசிஞ்சினட்லு நடு2வு மனின கஹகஹ நவ்வி,
யத்தோஹரிகி சு2ரத்2ரோஹி யிட்லனியெ VI—31

க. சம்பகு சது2வுல மேமுப
டி1ப்வனி ஸாச்2த்ரமுவெ? மாபடி1ம்பனி ஸ்ருதுலே?
யிம்பபவி நம்மலே? 'ப்ரத1
மாம்பிப2தே வஹ்னி' யனெடு2 மாடவு காதே2? VI—32

ம, நிலுமோஹோ மமுவாரி ப்2ராத லனுசின் நீவண்டி வாரல் சு2தா3
ஸூலபூதாஸூலு கா2ரடண்டி, ப்ரதிபத்சோ2மாம்ஸமுன்
க்ரோலு முன்
ஜ்வலனுண்டி2ண்டக னொண்டு2 நின்னடி2 கெ2த2ன்?
ச2ர்வாஸி கா4டா2 யதண்
டி2ல தந்ய்யாயம சாலு, மாகு அக3மே? வ்ருத்தா3னு
சாரம்பி2கன் VI—33

வேதமந்திரங்கள் மூலம் வேள்வியில் அழைக்கப்பட்டு சரு, புரோடாசம் (வேள்வி நெய்யன்னம்) உண்ட புனித உணவினால் தான் பவித்திரர்களாகி தேவர்கள் சாவதின்றி உங்களைவிட நெடுங்காலம் நிலைத்திருக்கின்றனர். அந்தப் புனிதத்துவத்தைக் கண்டல்லவா எப்போதும் நான்முகக் கடவுளின் அம்சமாகிய அமுதகிரணன் (சந்திரன்) கரைந்து, எல்லா ரசங்கட்கும் எல்லையாய அமுதரசத்தால் (தேவர்கட்கு) திருப்தியைத் தரு கிறான். இந்தப்பொருளை நாங்கள் சொல்லக் கூடாதென்றாலும் வேதம், முதற் கலையை அக்னி (தீக்கடவுள்) பருகுவதாகக் கூறும், மேலும் அந்தந்தக் கலைகள் அந்தந்த தேவர்கட்கு வரிசைக்கிரமமாகக்கூறும். ஆதலின் இதை எல்லாம் ஆராய்ந்து உனக்குப் பிடித்ததைச் செய்க''. என்று கூறவும், கட கடவெனச் சிரித்து அந்த தாசரிக்கு இராட்சசன் இவ்விதம் கூறினான்.

(சந்திரனின் பதினாறு கலைகளும் பல்வேறு தேவர்களின் உணவாகக் கற்பித்தல் வேத மரபாகும். தூய அமுத ரசம் உண்ட தேவர்கள் தூயராய் நெடுநாள் வாழ்வர் என்று கூறி, நரமாமிசம் உண்பது பாவம் என்று தாசரி கூறுகிறான்). VI—31

''படிப்பினால் (உபதேசங்களைக் கூறிக்)கொல்லாதே! நாங்கள் படிக்காத சாஸ்திரங்களா? நாங்கள் படிக்காத வெதங்களா? அவை யெல்லால் எமக்குப் பிடிக்கவில்லை! நம்ப மாட்டாயா?'' பிரதமாம் பிபதே வஹ்னி (முதல் பங்கை அக்னி குடிக்கிறான்) என்ற சொல் தப்பாதல்லவா?

(சந்திர கலையை ஒவ்வொரு தேவரும் பருகுவர் என்பதால், முதல்கலை அக்னிதேவனுக்கு என்ற மந்திரம் எடுத்துக்காட்டி, தேவர்கள் நிலவினைப் பருகுவதால் பிறரை அழித்து உண்டு இன்புறும் கொடியர்தாம் என்று பிரம்ம ராட்சசன் கூறுகிறான் என்பது கருத்து) VI—32

நில்! ஓகோ? எங்களை தேவர்கட்கு சகோதரர்கள் என்றா யல்லவா? அவர்கள் அமுதம் குடிப்பவர்கள், புனிதமற்றவை யுண்ண மாட்டார்கள் என்றாய்! சந்திரனின் முதற்கலை அக்னி (பிற பிறரும்) பருகுவர் என்றாய்! ஒரு செய்தி உன்னைக்கேட் கிறேன். அந்த அக்னி எல்லாம் உண்பவன் (சர்வபட்சி) உலகில் அவன் நியாயமே (முறையே) எங்கட்கும், போதும். இனி பெரிய வர்கள் ஒழுக்கப்படி நடந்துகொள்வது பாவமா?

(அக்னி தேவனுக்கு நாங்கள் (ராட்சசர்) சகோதரர்கள். அக்னி எல்லாம் உண்பவன். அவன் ஆசாரப்படி நாங்களும் (நரமாமிசம் உட்பட) எல்லாம் சாப்பிடுவோம், இது தப்பா? என்று வாதிக்கிறான் பிரம்ம ராட்சசன்) VI—33

தே. ஹரிகி ச2கு1டு2னு ரத1முனு அகு3 க2ருடு3டு2
தொ2 ரகி னம்ருதம்பு2 சு2ரலகு மரலனிச்சி
யஹ2லு கூ2டு2க2 வரமுன அடி2கி2கொனடெ2?
அம்ருதமைனனு சவுல ஜாத்யன்ன சமமெ? VI—34

ச. நிது2ரயு கூடு2போ ச2திவி நேனிட கன்னதி2யேமி? எவ்வடீ2
சது2வுல யர்த2வாத2பு ம்ருஷல் வினி பே2ல்ப2டு2, நீவுமா யெட2ன்
சது2வுல மாட லாடி2 கனஜால ஒகானொக மெச்சு னொக்க'பீ2
சதி2வின கூர விந்த சவி, சாலக2 தெம்மனுமெச்சு தக்கக2ன் VI—35

வ. அனி கீ3ஷ்பதி மதம்ப2வலம்பி2ஞ்சி2 நிஜாலாப ஹேளன பருடை2ன ரக்கசு2 குதர்கோக்துலகுன் க்ருஷ்ண ச2மரணம்பு சேசி2 இந்து2ல பொங்து2வடு 2ப்ரத்யுத்தரம்பு2லு வீனி கெலகின பு2த்தி3 க்ஷோப3ம்பு2கா2, இந்தகண்டெ ஏமி யப2த்த3ம்புலு வினம்ப2டு2னோ மீத2 கார்யம்பு2 கல மாகு தீ னி காத னன் பனி லேத2னீ யந்த2ம்பு2 கூடு கொனி ச2ந்தோ2னு வர்தன பருண்டை2, நீசச2ம்ச்ம்ருதிகி ரேசி2, தனமுகோ2ல்லாச2ம் பு2னகு ஸப்2த2ச்ச1லம்பு2ன அந்தாக2தம்பு2ன சு2க2து னிடு2கொனி நீவு ச2ர்வஜ்ஞுடவு, நேனு நருட2, ஹீன குலுண்ட2, அனப்3யச்த ஸச்த்ருண்ட நீகுத்தரம்பீ2 ஸக்துண்ட2னே, மத்வசன ச்கா லித்யம்புலு சஹிஞ்சி த2யசேசி2 நம்மி மத் ப்ரார்த1னம்பு காவிம்புமு VI—36

திருமாலுக்கு நண்பனும் வாஹனமும் (தேர்) ஆகிய கருடன், தனக்குக் கிடைத்த அமுதத்தை தேவர்கட்கு மீண்டும் தந்துவிட்டு பாம்புகளை உணவாக (சோறாக) வரம்பெற்றுக் கொள்ள வில்லையா? அமுதமாயினும் பிறவிக்கேற்ற உண்டியின் சுவைக் கீடாகுமா?

(கருடன் தேவாமிர்தத்தை விட பாம்புதான் சுவை எனக் கருதியதுபோல, (பூனைக்கு எலிதான் சுவை) தான் நரமாமிசம் சுவைப்பவன் என்று கூறி நியாயப் படுத்துகிறான் பிரம்ம ராட்சசன்) VI—34

தூக்கமும் சோறும் இன்றி படித்துக்கண்ட பயன் என்ன? இந்தப் படிப்பினால் உண்டான வாதங்களாகிய பொய்களைக் கேட்டு எவன் ஏமாறுவான்? நீ எம்மிடம் படிப்பு (சாத்திரம்)களைச் சொல்ல ஒரு பாராட்டும் கிடைக்கப் போவதில்லை. "இந்த படித்த கறி (மாமிசம்) புதிய சுவையாயுள்ளது. வேண்டுமட்டும் கொணர்க" என்ற பாராட்டு ஒன்றுதான் கிடைக்கும்.

(உன் படிப்பைப் பாராட்ட ஆள் இல்லை. உன் கறிச் சுவை யாக இருக்கும் என்று பிரம்ம ராட்சசன் கூறுகிறான்) VI—35

என்று இவ்வாறு பிரகஸ்பதி மதம் (லோகாயதவாதம்) கைக் கொண்டு தன் சொற்களைப் பரிகசிக்கும் ராட்சசனின் குதர்க்க வாதங்களைக் கேட்டு 'கிருஷ்ண கிருஷ்ண' எனக் காதுகளை மூடி இதற்கேற்ற பதில்களைச் சொல்லி இவனைக் கிளறினால்குழப்பத் தால் இதைவிட அபத்தமான சொற்களைக்கேட்க நேரும்! இனிச் செய்யவேண்டியதைச் சிந்திக்கவேண்டிய நமக்கு இதனை மறுக்க வேண்டிய தேவையுமில்லை, என்று கருதி, மனத்தெளிவுடன், அவன் விருப்பத்திற்கேற்றபடி பேச விழைந்து, மனத்துள் வெறுத் தவாறு, இருபொருள்பட மனத்துள புத்தபகவானை நினைத்துக் கொண்டே "நீ சர்வக்ஞன் (எல்லாம் அறிந்தவன்) நான் சாதாரண மனிதன். தாழ்ந்த குலத்தினன். சாத்திரங்களைக் கல்லாதவன். உனக்கு பதில் கூற இயலுமோ? ஏதோ வாய்தவறிச் சொன்ன சொற்களைப் பொறுத்து அருள் கூர்ந்து என்பால் நம்பிக்கை வைத்து எனது வேண்டுகோளை நிறைவேற்று வாயாக", IV—36

ஸா, ப்ரக்[1]யாதுண்ட[2]வு தை[2]த்யுலந்து[2] முனு, பாபைனொக்க நீகாயஸோ
பி[3]க்[1]யன் நேனுனு சேர்து மேயொச[2]கு[2] தப்பிம்பன்வ்ரதம் பொ[2]க்கடே[2]
முக்[1]யம்பை[2] யொனரிந்து தா[2]னி ச[2]ப[1]லம்பு[2]ன் சேயகா[2] லேவுகா[2]
'ச[2]க்[1]யம் சா[2]ப்த பதீன' மன்மனமித[1] ச்சா[2]ங்க[2]த்ய மூஹிஞ்சுசுன் VI—37

வ. அதி[2] யெத்தி[2] யண்டேனி VI—38

தா[2]ச[2]ரி யொட்டு வெட்டி தப்பிஞ்சுகொனி கைஸிக சே[2]வகு போவுட

க. ஈ குறக[2]டி யீகுறுகு[2]டி[2]
வைகுண்டு[1]னி பாடி[2] வத்து வ்ரதமுக[2] தத்சே[2]
வாக்ருதி கட[2]பட னஸன மு
நீகெளது[2]ன்; முக்[1]ய மிதி[2]ய நேட[2]கு[2] துத[2]குன் *VI*—39

உ. அஞ்சு அதண்டு[2] பல்க, த[2]ரஹாசத செக்கிலிகொட்டி லெச்ச[2]பண்
டி[2]ஞ்சிதிவோயி தா[2]ச[2]ரி, வனின் தெரவாடுலு கொட்டி கொட்டி மேன்
வெஞ்சி விரக்தி தா[2]ச[2]ரிவி நின்ன கதா[2]யபினாட[2]வீமமுன்
கொஞ்செமு சேசி[2] த்ராட்[2] கொறிகிகோ தலபோசெ[2]து[2] மெச்சிதினநினுன் V*I*—40

ஏற்கனெவே தைத்தியர் (இராக்கதர்) களில் நீ பிரசித்த மானவன். மேலும் உனக்கு புகழ் சேர்க்கவிரும்புகிறேன். என் உடலைத் தருவதில் தவறமாட்டேன். முக்கியமான விரதம் (நோன்பு) ஒன்றைக் கடைப்பிடித்து வருகிறேன். அதை நிறை வேற்ற மாட்டாயா? ''சக்யம் சாப்த பதீனம்'' (ஏழெட்டு நடந் தாலே நண்பன்) என்ற சொல்படி நாம் நண்பர்கள், அதைநினைத்தாவது என் கோரிக்கையை நிறைவேற்றுக! VI—37

அஃது யாதெனின் VI—38

## தாசரி குறுங்குடிக்குப் போதல்

இதற்கருகில் இத்திருக் குறுங்குடியில் உள்ள திருமாலுக்கு தினந்தோறும் விரதப்படி பாடிவருவேன். அப்பகவானுக்கு சேவை செய்துவிட்டு உனக்கு உணவாவேன், இது உறுதி! உறுதி யாக இன்று திரும்பிவந்து உணவாவேன் இதில் தவறமாட்டேன். VI—39

என்று அவன் (தாசரி) சொல்ல குறுநகையுடன் கன்னத்தில் அடித்து ''ஓ! தாசரி, நன்றாகப் பழுக்க வைக்கிறாய் (ஏமாற்று கிறாய்) காட்டில் வழிப் போக்கர்களைக் கொள்ளையடித்து உடம்பை வளர்த்து வைராக்யம் வந்து நேற்றுத்தானே தாசரி யானாய்! நீ எம்மை எளிதாக (லேசாக) நினைத்து * கம்பி நீட்டப் (தப்பித்துக்கொள்ளப்) பார்க்கிறாய். உன்னை பாராட்டு கிறேன். VI—40

* கயிற்றைக் கடிக்க பார்க்கிறாய் என்பது மூலம் பசுக்கள் கட்டிய கயிற்றைக் கடித்து அறுத்து தப்புதலைக் குறிக்கும்.

ஸா. ஏராஜ்யம்பு[2] நருண்டு[3] நோரி கடி[2]வேய நீபோ[2]த[3] மாலிஞ்சுஇங்
கே ராஜ்யம்பு[2] நருண்டு[2] பாச[2]கயி மேனீ தான யேதெஞ்சுதீ
பாரன்னே சனனீமியுன் மகி[2]டி[2] நீவாராமியுன் தெல்லமே
லாரந்துல் பலுபல்குலந்த்யகுல யேலா சிந்த லேலாவக[2]ல்
VI—41

தே. அனின செவிமுசி[3] நாராயணா யடஞ்சு
அதடு[2] நனு நம்மவே பிஸிதாஸி? ஒக்க
ஸபத[1] முன நம்முமனி வாடு[2] ச[2]ம்மதிம்ப
வேனவேல் ச[2]த்யமுலு பல்கி வினகயுன்ன VI—42

உ. 'எவ்வனி சூட்[2]கி சே[2]சி ஜனியிஞ்சு ஜக[2]ம்பு[2], வசி[2]ஞ்சு
இஜ்ஜகம்
பெ[2]வ்வனியந்து[2], டிந்து[2] மறியெவ்வனியந்தி[2]தி[2], அட்டி
விஷ்ணுதோ
இவ்வல னொக்க வேல்பு க[2]ணியிஞ்சின பாதகி னௌது[2]
நேட[2] நே
னெவ்விதி[3] னைன நின்கதி[2]யனேனி' யனன்வினி ப[2]ந்த[3]
மூட்[2]சினன் VI—43

தா[2]ச[2]ரிமரலுட

ச. அதடு[2] தத[2]ல்ப பாப ப[1]ல மந்து[2]ட சு[2]ங்கமு தீறிபோயி, தச்
ச[1]த த[3]ள பத்ர நேத்ருனகு ஜாகி[2]லி ம்ரொக்கி,
ரணத்[2]விபஞ்சியை,
ச்ஶ்ருதிகலித ப்ரப[2]ந்த[3]முல சொக்கக[2] பாடி[2] அச[2]த்யபீ[3]ப[3]ர
த்ஶ்ருத க[2]திவச்சி, ராத்ரி சருதோ வ்ரத பூர்தி க[2]தார்தி
இட்லனுன் VI—44

எந்த நாட்டுக் காரனாவது வாயிற்கு வந்த கவளத்தை உன் உபதேசம் கேட்டு விடுவானா? எந்த நாட்டுக் காரனாவது தன் சபதத்தை நிறைவேற்ற தானாக வந்து உடலைத் தருவானா? (உயிர் விடுவானா?) இனி உன்னைப் போக விடுவதோ? திரும்பி நீ வருவதோ! நடக்காதென்பது தெட்டத் தெளிவு. ஏன் வீண் விவகாரங்களும் பலப்பட பேசுவதும்? தாழ்ந்த குலத்தவனே! ஏன் ஆலோசனைகள் ஏன் கவலை? IV—41

எனலும் காதுகளைப் பொத்திக்கொண்டு "நாராயணா" என்று நாமோச் சாரணை செய்து அவன் (தாசரி) "என்னை நம் பாவிட்டால் என் சபதத்தை நம்புக" என்று ஆயிரமாயிரம் சத்தியப் பிரமாணங்கள் கூறி, அதற்கும் கேளாமல் இருக்கவும். VI—42

"இன்றே நான் எவ்விதத்தேனும் உன்னிடம் வராவிட்டால்! "எவனது பார்வையினால் உலகம் உண்டாகுமோ! எவனிடம் இவ்வுலகம் மீண்டும் அடங்குமோ அந்த திருமாலுக்கு இணையாக வேறொரு தெய்வத்தை நினைத்த பாவத்தை நான் அடைவேனாகவும்" என்று சூளுரைக்கவும் கேட்டு (இராக்கதன் தாசரியின்) கட்டுக்களை அவிழ்த்து விடவும் VI—43

## தாசரி திரும்பி வருதல்

அவன் (தாசரி) தனது பாவ எச்சமும் திருமாறு கட்டு நீங்கியவனாய்ச் சென்று, அந்த (குறுங்குடி) தாமரைக் கண்ணனாகிய திருமாலினை நிலம் வீழ்ந்து வணங்கி, இசைக்கும் வீணையுடன் இன்னிசைப் பாடல்களை சொக்குமாறு பாடி, பின்னர் பொய்க்கு அஞ்சியவனாக விரைந்தோடி வந்து, விரதம் முடித்த மகிழ்வோடு இராட்சசனிடம் இவ்விதம் கூறினான். VI—44

உ. நீசெற பாசி2போயி ரஜனீசர சக்ரிப3ஜிம்ப, முக்திபொந்
தேசெர, யேசெறன் தவுலனேனிக னுண்ட2க2சூடு2 பஞ்சுசோ
ஏசரணம்பு2 லேயுத2ர மேயுர மேஸிர மேகரம்பு2, லீ
வாசரணம்பு2 லாயுத2ர மாயுர மாஸிர மாகரம்பு2லுன் VI—45

தே. அனின தத்ச2த்யமுகு நேத்ராம்பு2 லுருல
ப்ரமத2 புலகித கா2த்ருடை2 பாறுடசு2ர
யினுனி மத்3யந் தி2னபு டெண்ட2 தனது2 பெத்த3
ப2ட்டதல மிஞ்ச ப்லவு சேர பாறுதெஞ்சி VI—46

தா2ச2ரி ப்2ரஹ்ம ரக்ஷச்சு3 னனுக்2ரஹிஞ்சுட

உ. கொண்ட2யு போலெ ப3க்தி வலகோஞ்சுனெ வாடு நிஜத்2ரும ப்3ரமீ
ஹிண்ட2ன வ்ராலுபாகலபு டேனுகு2 போலெ நொசல் தத2ங்க்3ருலந்
து2ண்ட2 ரொத2ன் மஹாகி2ருலு ஹோரன ப்ரச்2துதி வ்ராலி, த2ம்ஹ்ட்ரிகா
த2ண்ட2மு லெத்தி பட்டின பத2ம் பொ2க டொ2க்கட2 நெத்தி சேர்சுசுன் VI—47

ஸா. ஈச2ர்வம்ச2ஹ தே2வதா2னவ மஹீப்3மின்மௌனி வாசாதபஸ்
ஸ்ரீச2ாவஸ்முனே தத2ன்ய க்ருதுலன் செப்பம் ப2டு2ன் கோ3ர மௌ
ஈச2த்யம் பு2ரரீக்ருதாந்தமில னெந்தே வ்ருத்த3னை மண்டிநே
னாச2த்யம்பி2க நின்னு போலு க்ருத ச2ந்தா3 தூ3ர்வஹாவல் லேமிகிள் VI—48

"இராக்கதனே! நின் சிறை நீங்கிச் சென்று திருமாலை வணங்கியதால் முக்தி (வீடுபேறு) கிடைத்தது! இனி எந்தச் சிறை யிலும் நான் கட்டுப்பட மாட்டேன். இனி நீ என்னை அனுப்பும் போது எந்தக் கால்கள், எந்த வயிறு, எந்த மார்பு,? எந்தத்தலை, எந்தக் கைகள் இருந்தனவோ அதே கால்கள், அதே வயிறு, அதே மார்பு, அதே தலை, அதே கைகள் இருக்கின்றதை நீசரிபார்த்துக் கொள்க!"

(இராக்கதன் நம்பி விட்டதற்கு மோசம் செய்யவில்லை. அதே உறுப்புகளுடன் கொண்டுவந்து ஒப்படைத்துவிட்டேன் என்று தாசரி கூறும்போது நகைச்சுவையுணர்வுடன் சாவுக்கஞ் சாத மனத்தெளிவும் புலப்படுகிறது) VI—45

எனலும், அவனது சத்தியத்தைக் கண்டு கண்களில் கண்ணீர் உருள மகிழ்ச்சியுடன் புளகமுற்றவனாக அந்தபிரம்ம ராட்சசன், நடுப்பகல் கதிரவனின் வெயில் அவனது பெரிய வழுக்கைத் தலையில் பளபளக்க, தாசரியை அருகணைய ஓடிச் சென்று, VI—46

அவன் (இராக்கதன்) மலைபோல் பக்தியினால் வலம்வந்து, தறியைச் சுற்றிலும் சுற்றிச்சுழன்று விழும் பாகலம் எனும்நோய் கொண்ட யானைபோல, தனது நெற்றி தாசரியின் பாதத்தில் பட, குரல்முழக்கத்தால் பெருமலைகள் அதிர்ந்தெதிரொலிப்பத் துதித்தவாறு வீழ்ந்து வணங்கி, நீண்டபற்கள் ஒதுக்கி, தான் பிடித்த பாதங்கள் ஒவ்வொன்றாக தன் தலையில் வைத்துக் கொண்டு VI—47

"இந்த சகல உலகிலும் தேவர், அசுரர், மன்னர்கள், முனிவர் கள், யாவரும் சொல், செல்வம் முதலியவற்றில் சத்தியத்தை நிலை நாட்டினரேயன்றி உன்போல உடல் தருவதற்காக சத்திய விரதம்பூண்டு நிறைவேற்ற முன்வந்தார் இலர். நான் வயது முதிர்ந்தவன், இனி, உன்போல சபதம் நிறைவேற்றியவர் இல்லை என்று சபதம் செய்வேன். VI—49

ச. இதருலு நீகு ஈடெ$^{2}$மறி? யீத்$^{3}$ருதி, ஈச்$^{2}$ம்ருதி, ஈருதேரித
ச்தி$^{1}$தக$^{2}$தி ஈமுராரி பத$^{2}$ சே$^{2}$வன ஜீவனவன்மதின், ச$^{2}$மா
த்$^{2}$ருத$^{1}$கலகா$^{2}$ன சி$^{2}$ந்து$^{3}$ லஹரீப்லவன ப்லவபா$^{3}$வ பா$^{3}$ கு$^{2}$ரு
ஸ்ருதி ததப$^{2}$த்த$^{3}$ தும்பி$^{3}$கி கு$^{2}$ருங்கு$^{2}$டி$^{2}$க$^{2}$ம்பி$^{2}$
க்ருபாவலம்பி$^{2}$கின் VI—49

தே. அனின ஆதனி கௌகி$^{3}$ட உனிசி பலிகெ
வ்ரத மொனர்பிஞ்சிதனி பா$^{3}$க$^{2}$வத வதம்ச$^{2}$
'மோயி ரஜனீசரேந்த்$^{3}$ர நீயுரு க்ருபாக
டாக்ஷமுன சேசி$^{2}$ த$^{3}$ன்யுட$^{2}$னைதி னனகு$^{3}$ VI—50

உ. பா$^{2}$ச$^{2}$லு ப$^{2}$ண்டி$^{2}$ கண்ட்$^{2}$லு, மறிப்ராணப$^{3}$யம்பு$^{2}$னலக்ஷ
சேசினன்
க்$^{2}$ராசமு க்ருச்ச$^{1}$ரலப்$^{2}$த$^{3}$ முடு$^{2}$கன் வசமே? யிதி நீக செல்லெ
னோ
பூ$^{3}$சு$^{2}$ரவம்ஸ்ய, புண்யஜன புண்யஜனாங்கமு தாவகீனமே
போ ச$^{2}$மகூரெடி$^{2}$ன் குலமு பொத்துன தை$^{2}$த்யுலசெல்ல
அங்கதன் VI—51

ச. கடு$^{2}$பு மஹாக்ஷ$^{2}$த$^{3}$ன்னகனகம்ப$^{2}$ட$^{2}$னச் க்$^{2}$ருத க்ருத்யு
சேயபோ
விடி$^{2}$சிதி, வேமு ஜாத்யமுக$^{2}$ வேத$^{3}$ விதி$^{3}$ஞ்சின கூடு$^{2}$மீகு, நீ
யெட$^{2}$ னொககீடு$^{2}$ கல்க$^{2}$, தி$^{2}$க னேமனினன் மறிநீகுனான சூ$^{2}$
பட$^{2}$லிக தீற இத்தனுவு பாரண சேயுமு மைத்ரி கல்கி$^{2}$னன்
VI—52

மேலும், பண்ணார்ந்த இன்னிசைப் பாடலாகிய கடலலைகளில் நீந்தும் மிதவையாகிய சுரை (வீணை) யமைய, திருக்குறுங்குடி நம்பியின் அருளே பற்றுக் கோடாகக் கொண்டு, பிறவிக் கடல் கடந்து விட்ட உனது உறுதி, உனது ஞானம், உனது சத்திய விரதம், முதலியவற்றில் உனக்கிணையாவார் பிறருளரோ?
VI—49

(இராக்கதன் இவ்வாறு) கூறுதலும் அவனை, பாகவதோத்தமனாகிய அந்த தாசரி தழுவியவாறு "ஓ! இராட்சசனே! பாவமற்றவனே! உன் கடைக்கண் பார்வையால் பாக்கியசாலியானேனே! என் விரதம் நிறைவேற்றுவித்தாய்! VI—50

சபதங்கள் வண்டிச்சக்கரம் போல நிலையற்றவை, நம்பமுடியாது. பிராணபயத்தால் இலட்சம் சத்தியம் செய்தாலும் கிடைத்த உணவை விட்டுக்கொடுக்க உனக்குத்தான் முடிந்தது! அந்தணர் குலத்துதித்தவனே! புண்ணியஜனம் என ராட்சசனை அழைப்பது உன்னால்தான் பொருள் படைத்ததாகியது. உன் மூலம் உன் இருகுலத்துக்கும் புகழ்வாய்ந்தது.

(தீய பாம்புக்கு நல்லபாம்பு என்று பெயர் வாய்த்தாற்போல தீயோராகிய இராக்கதருக்கு "புண்யஜனர்" என்று இடக்கரடக்கராக ஒரு பெயர் உண்டு. அதனை இராக்கதன் அருள் சேர்ந்ததால் அது பொருள் உடையதாயிற்று என்பது கருத்து) இருகுலம், அந்தணர் குலம், இராக்கதர் குலம் ஆகும், இவன் பிரம்ம ராட்சசன் ஆதலினால் இருகுலம் எனப்பட்டது. VI—51

க. ஈமாடன் பொரபொச்செமு
லேமிகி ஈஸ்வருட2 கரி நிலிம்பவிரோ3தீ
நாமெயி மேதோ3மய த்2ருப்
தாமிஷமுலு மெச3வு' மன்ன அதட2னுனார்தின் VI—53

ஸா. எட்டு? யிட்டகு2னய்ய பல்கத2யலே கின்னாள்ளு நீகூடெ2 யீ
பொட்டம் பெ2ட்டி மஹாக3லப்2தி3 தனுவுன் போஷிஞ்சி
என்னாள்ளகே
னெட்டே னொகதபச்2வி யொக்க வ்ரதி ராடே2, சூட2டே2
தத்க்ருபன்
புட்டுன்னீகெ2த2 தீ2னி னானொத2வி, யோ புண்யாத்ம
யிட்லண்டிவே? VI—54

க. மீவண்டி பா3க2வதுலுன்
பாவனுலுக3 சேயரேனி மறி க2தியே2தீ
மாவண்டி வாரிகிக மா
யேவமு வெனுகடி2தி சூட2 கீக்ஷிம்பு க்ருபன் VI—55

தே. ச்2வ3திதி யைனனு த்2விஜுதின்ன ஸச்2த்ரமைன
ச2ரியகா காஞ்சனம சேயு பருச2வேதி2
ஈயசா2தா3ரண ந்யாய மென்ன வலதெ2
மாத்2ருஸுல சோட கதி2யு ப3வாத்2ருஸுலகு VI—56

வயிறு பெரும்பசியினின்று கபகபவென்றெரிந்தும் என் கடன் நிறைவேற்ற வேண்டிப் போகவிடுத்தனை! உங்கட்கியல் பான உணவாக இறைவனால் நாங்கள் (மனிதர்கள்) ஏற்படுத்தப்பட் டுள்ளோம். ஆதலின் (நீ என்னை உண்பதால்) எனக்கொருபாவ மும் இல்லை சூளுரைக்கிறேன். மறுக்காமல் என்பால் நட்புடன் இருப்பாயானால் என் உடலை உன் களைப்பு நீங்க உண்டு மகிழ் வாயாக'' VI—52

இச்சொற்கள் வஞ்சனையின்றி மனதாரச் சொல்கிறேன். என்பதற்கு பகவானே சாட்சி! ஓ ராட்சசனே! என் உடலினுள்ள கொழுப்புநிறைந்த புலாலினை உண்பாயாக" என்றதும் அவன் வருத்தத்தோடு (இரக்கமுடன்) கூறினான். VI—53



"என்ன சொன்னாய்? இப்படி அருளின்றிப் பேசலாமா? இத் தனை நாளும் இந்தச் சோறே (நரமாமிசம்) இந்த வயிற்றில் வைத்து, பெரும்பாவத்தை அடைந்து, உடலை வளர்த்து, எப் போதாயினும் எப்படியாயினும் ஒரு முனிவரோ, ஒரு நோன்பின ரோவந்து என்னைக் காண மாட்டாரா? அவர் அருளால் இந்தப் பிறவி நீப்பேனாகவும் என்று நினைத்துக் கொண்டிருந்த என்னி டம் ஓ! புண்ணியாத்மாவே இப்படிக் கூறலாமா? VI—54

தங்களைப்போன்ற பாகவதர்ர்கள், எம்மைக் கடைத்தேற் றாவிட்டால் பின் வேறு கதியுண்டோ? எம்மைப் போன்றவர்க்கு கதி நீங்கள் தான்! எமது (முன்னைய) இழிபினைக் கருதாமல், அருள் செய்வாயாக. VI—55

கோடாலியாயினும், அந்தணனைக் கொன்ற கொலைவாள் எனினும், பருசவேதியானது தங்கமாக மாற்றும். அந்த நியாயப் படி தங்களை அணுகிய எங்களைப் போன்றோரையும் அருள் செய்ய வேண்டாவோ? VI—56

தே. அனின தே2ஹார்பணமு ஒல்ல கார்தி பலுகு
க்ருபணத கதட2பி3ப்ராய மெத்தி2யனின,
'இத்து தனுவண்ட யனுகம்பயே? மதா3த்ம
கச2டு பா2புடயே யனுகம்ப கா2க VI—57

ஸா. க3ண்டாகர்ணுனி மிஞ்சுகர்மமொகொ நாகர்மம்பு2?
மௌனீந்த்2ருலங்
து2ண்டல் சே2யடெ2? மான்பி யீடெ2 ப3க2வந்துண்ட2ட்டிஸ்ரீ
யட்டிஸ்ரீ
கண்டென் பா5க்2யவந்துண்டு2 மிஞ்ச னொச2ங்க3ங்கா2
லேடெ2? யாமேலு நா
கண்டிம்பன்மறி ராதெ2? பூஜனமு காதா2 ப்ராணி
மேலிசக்ரிகின் VI—58

வ. அனின வினி மாதங்கு2ண் டா2 தெறங்கே2 தெறங்கை2ன
ச2ங்க2தம்ப2கு2 னனின ஆதண் 'டே2னொக்க ப்2ரஹ்ம
ராக்ஷசு2ண்ட2, கும்ப3ஜானு ச2ம்ஜ்ஞு2ண்ட2, உக்2ர
கர்முண்ட2னை யீ ன்யக்2ரோத3ம் பா2ஸ்ரயிஞ்சி வஞ்சனம்
ப2தி3க பஞ்சஜன சர்வணம்பு2 சேயுசுண்டு2து2, பூர்வம்பு2ன
சோ2மஸர்மயனு பூ3ப2ர்ஹிர்முகு1ண்ட2, ப்ராக்ஜனி
த்2விஜு2ண்ட2 கான த2யனீயுண்ட2ன; ஒக்க து2ஷ்கர்மம்
பு2னனிட்லைதி; நீவு கைட பா3ரின் பாடி2ன நேடிபாட ப1லம்பு2
ச3ஜலம்பு3கா2 நா கிச்சிதேனி பீ3ப3த்ச2குத் தா2ர்ஹம்ப2கு
ஈஜன்மம்பு2 வேகு2, நீகுனார்த ரக்ஷணம்பு2னனகு2 சு2க்ருதம்
ப2னந்தம்பு2 சி2த்தி3ஞ்சு, அத்யந்த த3ர்மசா2த3னம்ப2கு2
இம்மேனு இல்லு சேரு'னனின, அம்மேனி மாடலகு கலகல
நவ்வி அவ்விஷ்ணு தா2சு2ண்டி2ட்லனியெ VI—59

க. இடுவண்டிவி யிட கெக்குடு2
இட தி2கு2டு2வி யொந்த2 னென்னியே னிதி2யுனு ஒக்
கடி, யொகநாடி2த காதொ2க
த்ருடி கீ2த ப1லம்பு2 எச2கு2து2னெ யிம்மெயிகின்? VI—60

எனவும், உடல் தருவதை வேண்டாமென்று வருந்திக் கூறும் எளியதன்மையைக் கண்டு ''உன் கருத்து யாவும்'' என் ஆன்மாவின் கசடு (குற்றம்) நீக்குவதுதான் அருளாகுமன்றி உடலைத் தருகிறேன் என்று கூறுவது அருளாகுமா? VI—57

கண்டாகருணனை விடவா கொடுஞ்செயல் புரிந்தேன்? அவனையே திருமால் திருத்திச் செல்வமளித்து முக்தி தரவில்லையா இதைவிட பக்தர்கள் அதிகம் தர இயலுமன்றோ! அத்தகைய நலம் எனக்குத் தரக்கூடாதா? உயிர்கட்கு நலம் செய்வதுவே திருமாலுக்குப் பூசை செய்வதாகாதா? VI—58

எனக்கேட்ட தாசரி, அது பொருந்துவதே என்று கூறலும், அந்த ராக்கதன் ''நான் ஒரு பிரம்மராட்சசன், கும்பஜானு எனும் பெயருடையவன், கொடுஞ்செயல்புரிந்தவனாக, இந்த ஆலமரத்தையடைந்து, வஞ்சமாக மனிதர்களைத் தின்று கொண்டிருந்தேன். முற்பிறப்பில் சோமசர்மா எனும் பிராமணன் ஆக இருந்தேன் சென்றபிறப்பில் பிராமணனாக இருந்தமையால் அருளுக்குரியவன். ஒரு தீய செயலால் இவ்விதம் ஆனேன். நீ திருமாலுக்குப் பாடிய பாசுரங்களில் புண்ணியப் பயனை நீரோடுவார்த்துக் கொடுப்பாயேயானால் எனது இழிந்த பிறவி நீங்கும். உனக்கு துயருற்றோரைக் காத்த புண்ணியம் கிடைக்கும். எல்லா அறக் கருவியாகிய இவ்வுடலும் வீடடையும்'' எனலும் அந்த உடல் குறித்த சொற்கட்கு கலகலவெனச் சிரித்து அந்த தாசரி இவ்விதம் கூறினான். VI—59

இதுபோன்ற உடல்கள் மேற்பிறப்பும் கீழ்ப்பிறப்புமாக எத்தனையோ எடுத்திருப்பதில் இப்போதையதொன்று. இத்தகு இழிந்த உடலுக்காக ஒரு நாளையதன்று ஒருகண நேரம் பாடிய பயனைக் கூடத் தர இசையேன்! VI—60

சீ2. தி2க்பால தனுவெத்தி திரிபதனுவு தோன
யென்னி மார்லெத்த மீயேனுநீவு?
கேச2ரி தனுவெத்தி கீடதனுவு தோன
யென்னி மார்லெத்தமீயேனு நீவு?
மாதங்க2 தனுவெத்தி மஶக தனுவு தோன
யென்னி மார்லெத்த மீயேனு நீவு?
த3ரணீஸ தனுவெத்தி தா2ச2தனுவு தோன
யென்னி மார்லெத்த மீயேனு நீவு?

தே. சோ2மயாஜுல மென்னி மார்ல்கா2மு, ஸ்வபச
க1க்குலுல மென்னி மாறுலு காமு, பாமு
கா2முலமு, என்னிமாறுலு காமு வெண்டி2
கம்ச2ரிபு ப3க்துல மொகண்டெ2 காமு காளி VI—61

ஆ. ஊத நீரு செலதி2 நேதமுடாயிடி
தூ2தி2 யெண்ட2 பசு2பு தொ2ர்ரி யக்க
ரம்பு2மேனு, தீ2னிரஹி புண்ய மம்முட
கப்புரம்பு2 வெட்டி யுப்பு கொனுட VI—62

வ. அனின த2னுஜுண்டி2ட்லனியெ VI—63

க. 'ச2ங்கீ2த ப1லம்பு2ன கோ
ச2ங்கீ2 ச2க2மைன த2யபொச2க2 நீவே; மீன்
ம்ரிங்கி2ன க்2ருக்கன் வாரிதி3
கிங் கொறதயெ? கொத2யெ விஷ்ணுகீர்தன'கனினன் VI—64

திசைக்கதிபதியாக உடலெடுத்துப் பின் இரந்துண்ணும் வசைக்கதிபதியாக எத்தனை பிறப்பெடுக்கவில்லை நீயும் நானும்? சிங்க உடலெடுத்தும் சிறு புழு உடலாகியும் எத்தனை பிறப் பெடுக்கவில்லை நீயும் நானும்? குஞ்சர (யானை) உடலெடுத்தும் கொசு உடலெடுத்தும் எத்துணை பிறப்பெடுக்கவில்லை நீயும் நானும்? அரச உடலெடுத்தும் அடிமை உடலெடுத்தும் எத்தனை பிறப்பெடுக்கவில்லை நீயும் நானும்? வேள்வியந்தணர்களாகப் பிறந்தோம்! சண்டாளர்களாகப் பிறந்தோம்! பாம்பு, பேய், பிசாசு என்று எத்தனை பிறப்புகள் எடுக்காதிருந்தோம்! திருமாலடியாராகும் பிறப்பு எடுக்கவில்லையேயன்றி எல்லாப் பிறப்பும் பிறந்திளைத்தோமன்றோ?

(திருமாலடியாராய்ப் பிறந்ததால் பிறவி நீங்கி மோட்சம் பெறும் வாய்ப்புளதாதலின் அப்பிறப்பே சிறந்ததென்பது கருத்து) VI—61

இவ்வுடல் வலைப்பெட்டியிற் பெய்த நீர், சிலந்தி வலையால் முடிந்த மூட்டை இலவம்பஞ்சு. மரத்தில் புழுத்துளைத்த எழுத்து வெயிலில் வைத்த மஞ்சள், போன்றது. இதனை நம்பி புண்ணியத்தை விற்பது கற்பூரத்தை விற்று உப்பை வாங்கினாற் போலத்தான்.

(மீன் பிடிக்கும் வலைப்பெட்டியில் நீர் தங்காது. அதுபோல நிலையற்றது உடல். சிலந்திவலை நிலையற்றது. வெயிலில் மஞ்சள் பிரகாசிக்காது. புழு துளைத்த எழுத்து புரியாதது எனும் உவமைகள் நிலையாமை, சிறப்பின்மைகளைக் குறித்து வந்தன) VI—62

என்று கூறவும் இராக்கதன் இவ்விதம் கூறினான் VI—63

சங்கீதப் பயனில் ஓ! தாசரி! பாதியாகிலும் அருள் கூர்ந்து ஈவாயாக! மீன் குடித்த ஒரு மடக்கு நீரால் கடல் குறைவு படுமா? திருமாலைப் பாடிய புண்ணியம் (ஒரு சிறிதீவதால்) குறைவுறாது. VI—64

ஸ்ா. ஏலா னொஞ்செத² தே²ஹ மிட்லடி³கி²? யெந்தே பா²ச² மேன²ம்ப²லம்

போ² லீலாவடுகீ²த கீர்தன ப¹லம்போ², நீயெட²ன்முன்னு பா தாளப்ரஸ்னலு மானி மேன்கொனுமு; பே²தாளச்சலோக்தின் ருஷன் தூலிம்பன் தலதேனி புட்டுமறி நூதுல் த்ரவ்வ பே²தாளமுல் VI—65

வ. அனின ச²ாலகடங்கடேயுண்டு² சா²ல கடகடம்ப²டி², கார்யேச்ச¹ன் கண்ணீரு க்²ருக்கு கொனி 'கடகடா! கைட பா³ரி கனுங்கு²லகு² டி²ங்க²ரீலு த²யாளுவுலு காவலவதே²? தொல்லி த²ர்ஸன ப்ரவர்தகுண்டை² வையாசி²கம்பு²லகு² சூ²த்ரம்பு²லு விவரிஞ்சி விஷ்டரஸ்ருவு அத்²வைத வைஸி ஷ்ட்யம்பு² ப்ரதிஷ்டி¹ஞ்சின லக்ஷ்மணாக்¹ய யோ²கீந்த்²ருண்டு²; சிரகால சே²வா ச²ந்து²ஷ்டுடை² நிஜதே²ஸிகுண்ட²கு²பூர்ண²ா ஹ்வயுண்ட²னதி³காருல கீகு மனி விதி³யுக்தம்பு²கா² தனகு ப்ரசா²தி²ஞ்சின கீ²தா சரமார்த¹ம்பு² க்ருபாதரங்கி²துண்டை² ரங்கே²ஸதா³ம தா²மோத²ரநாம சாமீகர கோ²புரம் பெ²க்கி, யுச்சைச்ச்²வனம் புன² உச்சரிஞ்சின கு²ருண்ட²லிகி²ன 'தே²வா! தே²வர யாஜ்ஞு மீறி யேனொக்கருண்ட² ரௌர வம்பு²ன படு²ட மேலோ? பா³க²வத பரிஷத்துனகு பரமபதமகு² படு²ட மேலோ? யனி விதர்கிஞ்சி நீவுச்சரிஞ்சுடகா² உச்சரிஞ்சிதி'னனி தத பி³னந்தி துண்ட²ய்யெ அதண்ட² நிஜச்ச²த்ர ச²தரம்பு னகு ப்ரத்யஹம்பு னு கல்யம்பு ன மூல்யம் பொல்லக கவயம்பு சமபிஞ்சி வேடி ன வல்லவீ வலலவுலகு பரம பதம்பு ப்ரசா தி ஞ்செ, அதண்ட பந்த¹முந்துண்டய்யு அவதாராநதரம்பு ன, காலாந்தரம்பு ன சங்கசிக ஜ்ஞானுலை விஷயபநலகு நநலகுன் பரமுனந்தலி தீபோதவ சுந்தர ஜாமாத்ரு நாமம்புன னர்சிராதி கதி விஸதீகரிஞ்செ; அதண்ட² இடமீத² யாத வகிரி டெங்கணம்பு பாஷண்ட² ச²ங்குலம்புகா² வச்சினத²ச்ச்யுதிகி ஸட¹கோப ச²மாக்¹ய ச²ம்ப³விஞ்சி நீரந்த்³ர வாத²ம்பு²ன அந்த்³ராதி² விஷய வித்²வஜ்ஜனம்பு²ல அதோ³க்ஷஜ விஜயவாத² பி³க்ஷு வேடி² தி²க்²விஜயம்பு² சேசி² க²ருட² குத²ர குஹா கண்ட¹ ந்ருகண்டி¹ ரவம்பு² குஹனாத்ரி த²ண்டி²யை ப்²ருசீ² குசு²ம்பா³ம்ப² ராம்ப³ஃ குண்டி²க லொச²ங்க² அங்கீ

உடலை விடுத்து புண்ணியம் கேட்டு ஏன் தொந்தரவு செய்கிறாய்? என்னை விடுவித்தபோது உடலுக்காகச் சூளுரைத்தேனா? திருமாலை (வாமனனை) பாடிய பயனுக்காகச் சூளுரைத்தேனா? பாதாளம் மட்டும் பாயும்படியான (கடினமான) கேள்விகளை விடுத்து உடலைக் கைக்கொள்க. கிணறு வெட்டப் பூதம் புறப்பட்ட கதையாக நீ நினைத்த காரியம் மட்டும் கைகூடாது.



எனலும், இராக்கதன், மிக வருந்தி, காரியத்தில் ஆர்வமுடன் கண்ணீரை அடக்கிக் கொண்டு, ''அந்தோ! திருமால் அடியார்கள் அருளுடையவர்கள் ஆக இருக்க வேண்டாமா? முன்பு தரிசனப் பிரவர்த்தகராக பிரம்ம சாத்திரங்கட்கு வியாக்கியானம் எழுதத் திருமாலின் விசிஷ்டாத்துவித சித்தாந்தத்தை நிலை நிறுத்திய ஸ்ரீராமானுஜ முனிவரர், நெடுநாட் பணிவிடை செய்தமையால் மகிழ்ந்த பெரிய நம்பி (திருக்கோட்டியூர் நம்பி) எனும் ஆசிரியர், தகுதியிலார்க்குக் கூற வேண்டாம் என்று கூறி முறைப்படி தனக்கருளிய கீதையின் சரமசுலோகப் பொருளை, இரக்கம் மிக்கவராக அரங்கநாதனின் தாமோதரம் எனும் தங்கக் கோபுரத்திலேறி நின்று, பெருங்குரலில் அம்மந்திரப் பொருளை அறிவிக்க, ஆசாரியர் சினந்து கூறவும் ''தேவரீர்! தேவரீருடைய ஆணையை மீறியதால் நான் ஒருவன் மட்டுமே ரௌரவ நரகில் வீழ்தல் நன்றோ! பாகவதர் கூட்டத்திற்கு பரமபதம் காட்டுவித்தல் நன்றோ என ஆராய்ந்து தாங்கள் கூறியதாகவே கருதிக் கூறினேன்'' என்று கூறி பாராட்டப் பெற்றார். அவர் தனது சீடர்கட்கு நாள்தோறும் காலையில் விலைபெறாமல் பாலும் தயிரும் தந்து வேண்டிய இடையர் தம்பதிகட்கு பரமபதம் அருளினார். அவ்வுடையவரே முக்தி பெற்றும் மற்றொரு பிறப்பில் அஞ்ஞானிகட்கு வீடு பேற்றின் சுவை தெரியுமாறு சுந்தர ஜாமாத்ரு (அழகிய மாப்பிள்ளை) என்ற பெயரில் அர்ச்சிராதி மார்க்கங்களைப் பற்றி விளக்கினார். அவரே எதிர்காலத்தில் யாதகிரி (திரு நாராயணபுரம்) பகுதியில் பாசண்டி (பிறமதத்தினர்) மிகுதியாகவே அவர்களை ஒழித்துக்கட்ட சடகோபர் (ஆதிவண் சடகோப ஜீயர்) எனும் பெயரில் பிறந்து இடையறாத பிரசாரத்தால் ஆந்திர நாடு முதலிய இடங்களில் அறிஞர்கட்கு பகவத் விஷயமாகிய வாதங்களை இரந்து கேட்டு திக்விஜயம் செய்து கருடாசல குகையில (அஹோபிலத்தில்) நரசிங்க சுவாமியே கபடசன்னியாசியாக வந்து கமண்டலமும் கஷாயமும் திரிதண்டியும் அருளப் பெற்று சன்னியாச ஆசிரமத்தை ஏற்று பதஞ்சலி, கணாதர், அக்கபாதர், பாதராயணர் (வியாசர்) கபிலர் ஜைமினி ஆகியோரின் அறுவகைத் தரிசனங்களின் தத்துவங்களை மடத்திலுள்ள அந்தணருள்ளிட்ட சீடர்கள் அனைவர்க்கும் போதித்து, துறவிகட்கு எடுத்துக்காட்டாக நின்று தன்னை அடைந்த உலகிலுள்ள மக்கள் இதயமெல்லாம் திருமகளும் திருமாலும் உறைவிடமாகச் செய்து, காமக் குரோதங்களாகிய முள்ளினைத் துடைத்து பரிசுத்தமாக்கி பக்தியைப் போதித்து உலகைப் புனிதப்படுத்துவார். மேலும், ஹயக்கிரீவரை ஆராதனை செய்யும் வெங்கடேசன் (வேதாந்த தேசிகர்) எனும் இன்னொரு ஞானி, திருமா

க்ருதாந்திமாஸ்ரமுண்டை3 ப1ணிப கணபு3 க3க்ஷபாத2 பா2த2ராயண கபில ஜைமினி ஸாச2னம்பு2லு மட1 மஹானச2 மஹீசு2ருலு முன்னுகா2 எந்தேவாசி3 அந்தேவாசு2லகு தெலிவி பறுபன் பரமஹம் சா2னுஷ்டா1ன பரகாஷ்ட1யை, பத2யுக2 ப்ரச2ன்ன பு3வன ப்ரபஞ்ச பஞ்ச ஜன ஹ்ருத2ய ப3வனம்பு2லன் பத்2மாபத்2மாக்ஷுலு பல்லேர்லு துடி2சி பாடெ2க்க ப3க்தி போ2தி3ஞ்சி பூ3தலம்பு3 பாவனம்பு2 சேயன் கலவாடு3, மறியு ஹயவத2ன பதா2 ராத3குண்டை2 வேங்கடே ஸுண்ட2னு இங்கொக்க மனீஷி மது3மத7னமத ப்ரதிபாத2கம்ப2கு2 ப்ரப2ந்த3 ஸதம்பு3 ரசிஞ்சி ஸிலோஞ்ச1 வர்தனம்பு2னன் தபம்பு2 சேயன் தனகு ஜரச்ச1தன ஸாக தா2னம்பு3 சேயு னக2ச்2த்யோர்வீருஹம் பு2னகு நிர்வாணம் பொ2ச2ங்கன் கலண் டி2ட்டி யேஷ்யம்பு2லு மதீ2ய தி1வ்ய போ2த3னம்பு2ன எறிங்கி2யுந்து2, ஏதாத்2ருஸம் ப2கு த்ரைகாலிக ஜ்ஞானம்பு2 கலிமி கிம்மேனு மானநீயம்பு2 கதா2 யண்டேனி யதி2ஜாத்யம்பு2 தக்க தபச்2 சத்ய ஸம த2மாதி3 லாப்3த2ம்பு காது; நிஷாதி3 ப3விஷ்யத2ர்த1ம்பு2லு செப்பு சுன்ன2தி அதி3ஸுசியே? கென் ஸிகம்பு2 ட2ப்ப2 கா2டி க2ப்பு2லுகு9 கௌ2ளி கனுன்பெ2ண்டி பைடி2கண்டி லோனகு2 திர்யக்குலு பா3வி ப்ரயோஜன சூ2சகம்பு2லை யுன்னயவி; அவிதபச்2விலே! அட்ல மாவிஜ்ஞானம்பு2னு; எட்லனின, னாஸ்திக்யம்பு2 வலன ஸாச்த்ரம்பு2லெட2 அதீ3தி போ2த3ம்பு2லு தக்க ஆசரன2 ப்ரசாரம்பு2லு லேமி த3ர்மம்பு2 தூ2ரம்ப2தி நிமித்தம்2பு2கா2 இத்தெறங் கெ2றுங்க2க ப3வோத்தாரகம்பு2 காது2 காப2ட்டி யிவ்விருப விக்2ரஹம் ப2னுக்2ரஹம்பு2ன உடி2பி க்ருதார்து1ன் சேயுமனி பாத2ம்பு9ல வ்ராலி பாடன் பாதிகபாலேனி யீவே யனின, அதண்ட2தி2யுனு ஈலேனன்ன போனிம்மீ ப்ரபா3த ச2மயம்பு2னன் பாடி2ன சரம கீ2தம்பை2ன இச்சி ப்ரபன்னுண்ட2னகு2 நன்னவி பன்னுன் சேயுமனி லேவகுன்னன் பரம த2யார்த்ருண்னட2, யட்ல கானிம்மு லெம்மனின யதனி லேவனெத்தி, யத்தனுப்ராப்தி ப்ரகாரம்பு2 ச2விச்2தரம்பு2கா2 செப்புமனின அவத3ரிம்புமனி அப்பொல திண்டி2 து:கா1ர் துண்டை2 யிட்லனியெ

வின் மதத்தினை விளக்கிக் கூறும் நூறு நூல்களை யாத்து, உஞ்ச விருத்தி செய்யும் துறவியாகி தவமியற்றி தனக்கு முதிர்ந்த இலைகள் தந்து அகத்திமரத்துக்கு வீடு பேரளிப்பான்.

இத்தகைய எதிர்கால சோதிடங்கள் (ஹேஷ்யம்) எனது திவ்விய ஞானத்தால் அறிந்திருப்பேன்.*

இத்தகைய முக்காலமும் உணர்ந்த ஞானம் இருத்தலினால் இந்த உடல் பாராட்டத் தகுந்ததல்லவா எனலாம். இது பிறப்பால் வந்ததன்று. சமம், தமம் முதலிய சாதனையால் வந்த தன்று. குறத்தி குறி சொல்கிறாள். அவள் புனிதமானவளா? ஆந்தை, காட்டுக்கோழி, பல்லி, கரிச்சான் குருவி, தங்கக்கண் குருவி முதலிய விலங்கு பறவைகள் கூட சகுனம் கூறுகிறது. அவை யெல்லாம் எதிர்கால சூசனைகள் செய்வதால் தவசியர் ஆவரோ! அவற்றைப் போன்றுதான் எமது விஞ்ஞானமும். எப்படி என்றால் நாத்திகத்தினால் (இறை நம்பிக்கையின்மையால்) சாத்திரங்களைக் கற்றதன்றி அதன்படி நிற்றல் என்பதில்லை. பிறரையும் கற்பித்து ஒழுக்கமாக நடக்குமாறு செய்ததுமில்லை. ஆதலின் அறநெறி எமக்கு வெகுதூரம். ஆதலின் பிறவி நீத்தல் இயலாது. ஆதலின் மாசற்ற புனித உடலாலன்றி மோட்சம் கிடைக்காது. ஆகையினால் இந்த குரூபமான உடலை நீங்கி, புனிதனாவதற்கு அருள் செய்வாயாக'' என்று பாதங்களில் வீழ்ந்து பாடிய பாட்டில் புண்ணியம் கால்பங்காவது தருக என்றும், அவன் அதையும் மறுக்கவே, ''சரி! இன்று காலையில் பாடிய கடைசிப் பாட்டின் பயனாவது தருக'' என்று மன்றாடிக் கேட்கவே மனமிரங்கி, ''அப்படியே யாகட்டும்'' என்று கூறி அவன் அவனை எழுமாறு செய்து, இந்த உடல் கிடைத்த விதம் யாது என விளக்கமாகக் கூறுக எனலும், கேட்பாயாக என்று அப்புலாலுண்போன் (இராட்சசன்) துக்கத்துடன் இவ்விதம் கூறினான். VI—66

---

* பிரம்மராட்சசன் கதை புராணத்திலுள்ளது. அவன் கூறுவதாகபிற்கால ராமானுஜர், ஆதிவண் சடகோபர்(அகோபில மட முதலாம் ஜீயர்) வேதாந்த தேசிகர் வரலாறு கூறுவது கால முரண் ஆகும். ஆதலின் பிரம்மராட்சசன் எதிர்கால ஞானம் உடையவனாக கூறியதாகக் கவிஞர் அமைதி கூறியுள்ளார்.

குறிப்பு :- வேதம் வெங்கட்ராய சாஸ்திரி அவர்கள் விளக்க வுரை நூலில் இத்துடன் ஆறாம் அத்தியாயம் முடிகிறது. அடுத்து ஏழாம் அத்தியாயம் வருகிறது. சில பிரதிகளில் இவ்விதம் உள்ளனவாம் வாவிள்ள ராமஸ்வாமி சாஸ்திரி விளக்கவுரை நூலில் இத்துடன் முடியாமல் தொடர்ந்து நூலிறுதிவரையும் ஆறாம் அத்தியாயம் என்றே குறிப்பிடப்பட்டுள்ளது. ஆறாவது 65 ஏழாவது 73 பாடல்கள் இருப்பதாகக் கூறுவதைவிட 139 பாடல்களுடைய ஒரே அத்தியாயமாக கொள்வதே பொருத்தம் என்று வாவிள்ள கூறுவது சரியாகவே தோன்றுகிறது. எனினும் வேதம் வெங்கட்ராய சாஸ்திரியாரைப் பின்பற்றி ஆறாவது அத்தியாயம் ஏழாவது அத்தியாயம் என்றே பாகுபடுத்தி யுள்ளோம். மொ—ர்

## ஆஸ்வாசா2ந்தமு

ம. அஜ சௌர்யாப ஹ்ருதாத்ம தோக ச2முதா2யா3பீரகாந்தா மணீ
வ்ரஜ கோ2ராஜி மன:ப்ரமோத2கர தத்வத்ப்ராப்தரூபானு ரூ
பஜனி ப்ராப3வ, த்ரைாணி ஜோத2ர கினத்பா2ணாக்2னி
வ்ருத்திப்ரகோ
பஜலாசா2ர, ச2ரோஜ பா2ந்தவ ஸஸிப்ராஞ்சத்
விஸாலாம் ப2கா VI—67

க. அனவரத நவரதாத்2ருத
வினுத ப்ரேமாத்த வல்லவீ ஜனஜாலா,
மனன பர மௌனி மானச்
வன வ2சித்ரு மராளவர, சு2வாசி3த மூர்தீ VI—68

உத் சா2ஹ நலமுகா1தி சக்வர்தி நாத1 வன2 சமர்பிதாத்
யலகு2 மகுட முக்1ய ஹாத்2யுபாயனா, யனாவிரா
ஜில சு2ராரி ஹரண நிஜ வஸீக்ருதாகி1லாண்ட நிர்
மல கு2ணா !யமேயரூப ரஞ்ஜீதார்ய போஷணா VI—69

ம. இதி2னைராமன யாவனாவனி த3வாஹீனாப்3ரசும்பி2 ச்2பு1ரத்
விதி2தாபீ3ல மணீ க்2ருஹாளீ த2ளனோத்2வேலோக்2ர
ஹச்2திவ்ரஜோ
த்2யத2னீகாக்2ர க்ருஷ்ணராய மஹிப்3ருத் சம்ஜ்ஞாச்2மதாமுக்த
மால்
யத2 னாஸ்வாச2 வரேண்ய மாறவதி ஹ்ருத்2யம்பை2ன
பத்2யம்பு2லன் VI—70

ஷஷ்டா2ஸ்வாச2மு ச2மாப்தமு

பிரம்மதேவன் திருடிய கன்றுகளையும் குழந்தைகளையும் போலத்தானே அவ்வவ்வுருவாகி, பசுக்களுக்கு கன்றுகளாய் ஆயர் மடந்தையர்க்குக் குழந்தைகளாய் அமைந்து இன்பம் ஊட்டிய பெருமைமிக்கனே! அசுவத்தாமன் விடுத்த அம்பால் உத்தரையின் கருவான பரீட்சித்து கருகும் நிலையில் இருக்க காத்த கண்ணனே! சூரிய சந்திரர்கள் கண்களாக உடைய பெருமானே! VI—67

எப்போதும் புதிய புதிய காதல் விளையாட்டுக்களால் ஆயர் குல மடந்தையர்களை இன்புறுத்தியவனே! துறவியரின் மன மாகிய பொய்கையில் விளையாடும் அன்னப் பறவையாகிய வனே! மணம் மிக்க உருவுடையவனே. VI—68

நளன் முதலான சக்கரவர்த்திகள் காணிக்கை தந்த விலை மதிப்பற்ற மகுடம் முதலிய அணிகளை யணிந்துள்ள வேங்கடே சனே! ஒளி மிக்க உருவினையுடையவனே! தேவர்களின் பகைவர் களை அழிப்பவனே! சகல பிரம்மாண்டங்களின் தலைவனே! தூயவனே! அளப்பரிய குணநலன்களால் சான்றோரை மகிழ் வித்துக் காத்தருள்பவனே. VI—69

இஃது நைராமன (நைஜாம்) எனும் யவன மன்னனின் (முஸ்லிம் அரசனின்) பெரிய விண்முட்டும் கோட்டைகளைத் தகர்க்கும் பயங்கரமான யானைப் படைக்கு முன் செல்லும் கிருஷ்ணதேவராயர் எனும் பெயருடைய எனது அமுக்த மால்யத எனும் காவியத்தின் இனிய செய்யுள் களுடைய ஆறாவது அத்தியாயம். VI—70



# ஆமுக்த மால்யத

## ச[2]ப்தமாஸ்வாச[2]மு

க. ஸ்ரீ மது[2]மா சு[2]லபா[3]ங்கக
சா[2]மஜ ஹர நக்ர த[2]ளன சக்ர ச[2]தா[2]ளீ
க்ஷேமங்கர சரணாம்பு[2]ஜ
ஹைமோஜ்ஜ்வல வாசா[2]! வேங்கடாசல ரமணா VII—1

## ப்[2]ரஹ்ம ரா க்ஷசு[2]னி வ்ருத்தாந்தமு

வ. அவத[3]ரிம்புமு அப்பொலசுதிண்டி[2] து:கார்துண்டை[2]
இட்லனியெ VII—2

உ. உண்டு[2]து[2] சோளபூ[3]மி ஒகயூர களல் பது[2]நால்கு[2] நேர்சி,
வாக்
சண்டி[2]ம சர்ச கெ[2]ல்து க[3]டஸா சு[2]ல, ஸ்ரௌதுல தப்பு
பட்டுது[2]ன்
கண்ட[1]ல முஷ்டி விம்ப கனி நவ்வுது வெண்டி ப்ரயோக்தலன்
சு[2]தீ[3]
மண்டல[2]லி க்[2]ராந்தி[1]கத்வ மவமானமு சேயுது[2]
ஜல்பவாதி[2]னை VII—3

வ. இந்நட[2]வடி[2]ன் ப்ர[3]பின்ன க[2]ண்ட[2]ம் ப[2]கு[2] வேத[2]ண்ட[2]ம்புனும்
போ[2]லெ மதா[2]ந்து[3]ண்ட[2]னை, அல்ப வித்[2]யா லப்[2]தி[3] விடு[2]வ
முடு[2]வ வேச[2]ரனி வீச[2]ம்பு[2]கல ரெட்டி[2]யும் போ[2]லெ,
அச்சது[2]வெ பரப்[2]ரஹ்மம்மை[2], பெத்த[2]லன் செனகி ஒடி[2]யு
ச[2]ருயைதி ஙனியுனு, ச[2]ரிபோயி ஜயிஞ்சிதி ஙனியு,
அப[2]த்த[3]ம்பு[2] லாடி[2] சில்லர ப்ரபு[3]வுல ப்[3]ரமியிஞ்சு சுண்டி[2],
தீ[2]க்ஷிதுலன் சூசி யியக்ஷ வொட[2]மி த்[2]ரவ்ய பி[3]க்ஷார்தினை
மதுரகுன் போயி யப்புரம்பு[2]ன VII—4

# ஆமுக்த மால்யத

## ஏழாவது அத்தியாயம்

திருவுடைய சிவனுக்கும் (மேருமலையை வில்லாக திருமால் பாணமாகவும்) திருமகளுக்கும் தன் மேனி தந்தவனே! (கம்சனுடைய குவலாயாபீடம் எனும்) யானையைக் கொன்றவனே! முதலையை அரிந்த சக்கிராயுதத்தை உடையவனே! நல்லோரைக் காப்பவனே! தாமரைப் பாதங்களும் தங்க ஆடையும் உடையவனே! வேங்கடாசலத் திறைவனே! VII—1

கேட்பாயாக! அந்த இராக்கதன் வருத்தத்துடன் இவ்விதம் கூறலானான். VII—2

### பிரம்மராட்சசன் வரலாறு

சோழவள நாட்டில் ஒரு ஊரில் பதினான்கு கலைகளும் கற்றவனாக இருந்தேன். தருக்க வாதிகளை வாய்ச்சவடாலில் வென்றேன். வேதாந்திகளைக் குற்றம் சொன்னேன். சுவடிகளை விரிக்கக் கண்டு சிரித்தேன். புரோகிதர்கள் கற்ற அறிஞர்கள், நூலாய்வு செய்குநர் அனைவரையும் அவமானப் படுத்தினேன். VII—3

இப்படியாக இருந்து மதயானைபோலச் செருக்குடன், அரைகுறைப் படிப்பினால் அகங்காரம் கொண்டவனாக, அவிழ்க்கவும் முடியவும் அயராத வீசம் (கொஞ்சம்) காசுகள் உடைய ரெட்டியைப் போல, என் படிப்பே பரம்பிரம்மம் (பேரறிவு) ஆகக்கருதியவாறு பெரியோர்களைக் கிளறி, (வாதத்தில்) தோற்றாலும் வென்றதாகக் கூறிக்கொண்டு, சில்லரைப் பிரபுக்களை மயக்கி தீட்சிதரைக்கண்டு வேள்வி செய்யும் ஆசை ஏற்பட்டு, பொருள் வேண்டி மதுரைக்குச் சென்று அந் நகரில் VII—4

சீ². ப²ஹிவட்ட² த்²விஜுன கல்பபு பாசிதம் பி²டி²,
பசி²டி²கை தா வானி ப²ந்தி குடி²சி,
கலசி² வணிக்பு ரோத³ல தோட² புண்யாஹ
முல பி²ய்யமுனகை மொத்துலாடி₀
ஸஸி ரவி க்²ரஹ ஜப ச்²நானாதி²கமு லெல்ல
தொ²ரல வாகிண்ட்²ல கேதொ²த்த யிச்சி,
பச்சிர்ரி தோல் ப²ர்ரெ சுச்சாலமெட்லந்தி²
கொன தான யூரெல்ல குத்தவட்டி

தே. த²ர்ப³ போடுல தினி, லேனிதறுல மைத்ரி
னண்டி பித்ருஸேஷமு பு³ஜிஞ்சி, ய²தியு னெட²ல
நக்கவாட²ல னரகூள்ளு மெக்கி, மீத²
வீனி ஸேக¹ர மொக துலார்த்விஜ்யமு கொனி VII—5

உ. இட்டொன கூர்சி வைஸ்யுனகுனிச்சி, சனன்மறிபுச்சி, சௌகமுல்
வெட்டுசு, வட்டி² லெக்கலடு வெட்டுசு, தா³ரணவாசி²கை
கொத²ல்
வெட்டுசு, வாடு² ரேகி²மறி 'பெட்டுது² பெட்ட' னனங்க²,
மிட்டகூ
பெட்டுசு, இட்டு போர கனிபெட்டுசு, ஒக்கருடு²ண்டி³
வெண்டி²யுன் VII—6

சீ², வெலிவாட² பனிக்ரொத்த மலகடா²ல் கொனி நூனெ
யிடி² தங்கெ²டா²கு கட்டெடு² தஹதஹ,
கூர்சம்பு² கொரிகி²ஞ்சிகொனி யுஷ்ண தோயம்பு
டங்க²டி² தலக²ட² கா²டு² தட²வு,
வண்ட பூடிண்டி கெப்படி கண்டெனு பாலு
பெருகு² னேகூர லம்பெடு² தெகு²வலு,
ச²ம்பெ²ள வித²லிஞ்சி தாம்பூ²ல த²ளபூக²
நிவஹம்பு² சாலக² நிஞ்சுனுப்பு²,

தே. ப்²ரஹ்மசாரி பு²ஜம்பு³ மாத்ரகு ச²டி²ம்பு
ப்ராலு, ஆலிகி மேலுசீரலு கொனியெடு²
ச²ம்ப்³ரமம்பு²னு பெற பாந்த¹ ஜனுல பயன
மடு²கு² ப்ரஸ்னலு கனி மத்ப்ரயாணமெறிகி¹ VII—7

(சமூகத்திலிருந்து) வெளியேற்றப்பட்ட (பகிஷ்காரம் செய்யப்பட்ட) பிராமணனுக்கு (செலவு) குறைந்த பிராயச் சித்தம் (கழுவாய்) செய்வித்து, பொன்னுக்காக நான் அவன் பந்தியிலமர்ந்து சாப்பிட்டு, வணிகருடைய புரோகிதர்களுடன் கலந்து திதி நாட்களின் (புண்ணியவாசனம்) அரிசிக்காக கண்டை போட்டு, சூரிய சந்திர கிரகண காலங்களில் தவம், நீராடல் முதலியவற்றின் புண்ணியப் பயன் எல்லாம் செல்வந்தர் வீட்டு வாசலிலேயே தாரை வார்த்துவிட்டு, பச்சை மான்தோல், எருமை, ஆடு, பசுக்களின் தோல் செருப்புகள் பெற ஊரெல்லாம் திரிந்து தருப்பைப் பிண்டச் சோறு (சிராத்த தினத்துண்டி) உண்டு கிடைக்காத போது, நட்புற வாடிச் சென்று தென்புலர்த் தார்க்கிடும் உண்டி மிச்சிலையுண்டும், அதுவும் கிடைக்கா விட்டால், சாப்பாட்டுக் கடைக்காரர்களிடம் இரந்து அரைச் சாப்பாடு,சாப்பிட்டு இதற்கெல்லாம் தலையாய துலாபாரதானம் பெற்றும் பொருள் சேர்த்தேன்.

(துலாதானம் - ஈவோர் தம் எடையளவு ஏதேனும் பொருள் களை தானம் செய்தல்) VII - 5

இவ்விதம் சேர்த்து ஒரு வைசியனுக்குத் தந்து, மீண்டும் வாங்கி, நான்கு மடங்காக்கி, வட்டிக் கணக்குகள் வைத்து தானியங்களில் முதலீடு செய்து கணக்கில் சண்டையிட்டு அவன் 'தருவேன், தரமாட்டேன்' என்றேதும் கூறாதவனாக இருப்ப, சபைக்கு முறையிட்டுப் போராடிக் கொண்டிருந்தபோது (திருடன்) ஒருவன் கவனித்து வந்தான். VII—6

புறச்சேரியில் (பறைச்சேரி) புதிதாகத் தைத்த செருப்புகளை வாங்கி, எண்ணெய் தேய்த்து ஆவரம் இலைகட்டும் விரைவும், தாடிமீசை சிரைத்து, வென்னீர் குளியற் கடையில் எண்ணெய் தேய்த்துக் குளிக்கும் நிலையும், சமையல் செய்பவளின் வீட்டுக்கு முன்னைவிட அதிகமாக பால், தயிர், நெய், காய்கறிகள் அனுப்பும் முறையும், அடப்பைப் பெட்டி விரித்து, வெற்றிலை பாக்குகள் நிறைக்கும் மகிழ்வும், (சீடனான) பிரம்மச்சாரி தோளில் சுமக்கும் பையில் உலையரிசி, வாங்குவதும், என் மனைவிக்கு நல்ல சேலை வாங்கும் பரபரப்பும், பிற பயணி களிடம் பயணம் குறித்து கேள்விகள் கேட்டலும் எல்லாம் கண்டு எனது பயணத்தை அறிந்தவனாகி VII—7

க. ஹத்துகொனி யொக்க கொந்த2ற
அத்தெருவுன் கட்ட பனிசி, யந்த0ற க்ரிய, தா
தித்தி யொகடி, கொனி த்ரேணிம
றுத்தர முத்தர மடஞ்சு ஒகிப்ரொத்து2 கட2ன் VII—8

தே. லேசிபோவங்க2 தத்தற மேசி தோடி2
வாரு சன நேனு முடி2மோபு வடுன கெத்தி
போவ வாடி2ந்து2ரண்ட2னி த்ரோவ யட2வி
பெட்டி யொகவா 2கு2டி2க2 நீல வெட்டுடயுனு VII—9

க. அறசேத வ்ராலு கனுனத்
தறிபடெ2 ஒகியம்பகட்டெ, தா2னிகி நிலுவன்
பி2றுபி2ர்ருன றாலுபடெ2ன்
தெறபியு கனலேமி சா2துதி ருகு2டு2 வடி2யென் VII—10

கவிசெ2ன் கல்பாந்தஜந்து க்2ர2சன ப்3ருஸ புு2பு3க்ஷாத்வர
த்ர்யக்ஷ பார்ஸ்வ
ப்லவமனோத்பாத பே2தாலகுல படிம ஹாலாஹல ச்2பர்தி1
ஹேதிச்
ச1வி ரேகா1னேக ராஹுச்சலித ரவுலு ரக்ஷஸ்சமூஜித் புளிந்த2
ப்லவ ப்2ருந்த2ம்பு2ல் வனின் ப2ல்வடி2 பொடு2பொடு2 மன்பல்
குலுன் முல்குலுன் ரான் VII—11

எங்களோடு சேர்ந்து, ஒரு சிலரை வழிமறித்து (கொள்ளையிட) அனுப்பிவைத்து விட்டு, எல்லோரும் போல தானும் ஒரு பையைத் தூக்கிக் கொண்டுவந்து, படுத்தெழுந்ததும் வடக்கே வடக்கே ஒன்று கூறி திசைகாட்டி நடந்தான் VII—8

எழுந்து செல்லவும் விரைந்தெழுந்துகூட வந்தவர்கள் நடக்கவே நானும் மூட்டை முடிச்சுகளை சீடனிடம் தந்து போகவும், அவன் 'இப்படி வருக' என்று காட்டுப் பாதை காட்டிடவே அவ்வழிச் சென்று ஒரு சிற்றாற்றினைக் கடக்க இறங்குதலும் (ஈளை) விசில் அடித்தான். VII—9

உடனே, உள்ளங்கை ரேகை காணப்படும் (விடியல்) வேளையில் ஒரு அம்பு முன் வந்து வீழ்ந்தது. இதற்குப் பயணிகள் நிற்கவே, விர் விர் என்று கற்கள் வந்து விழுந்தன. வழியின்றி சாத்தர்கள் (பயணியராகிய வணிகர்கள் குழு) நிலை குலைந்தனர் VII—10

பிரளய காலத்தில் பெரும் பசியுழன்ற முக்கண்ணனின் பரிவாரங்களாகிய பூதங்களைப் போன்ற வலிமையோடு திருடர்கள் சூழ்ந்தனர். உற்பாதங்களைப் போன்ற அவர்கள் கத்தி வீச்சுகள் ஆலகால விஷத்தோடு போட்டியிட்டன. வாள் வீச்சுக்களை இராகுவெனக் கருதிய சூரியன் பயந்து நிலை குலைந்து போனான். அத்திருடர் கூட்டம் இராக்கதர்களைப் போல விரைந்து 'குத்து குத்து' என்று கூறியவாறு சொல்லும் வில்லும் கடுமையுறச் சுற்றி வளைத்து விட்டனர். VII—11

வ. இட்லு செட்லு வெட[2]லி விண்ட்[2]லு பஞ்சுகொனிமுஞ்சுகொனு நன்னல்லப்ரஜன் சூசி ஹல்ல கல்லோலம்பை[2] விறுக[2]ம்ப[2]டு[2] னெட[2] VII—12

சீ[2]. பச[2]லேது[2] நிலரோயி பாதகுலாரனி
தே[2]வாயுத[3]ம்பு[2]லு றூவுவாரு,
பைடி[2] ப[2]ச[3]மு செட்ல பட[2]வைசி து[2]ட்டு[3]பெ
ட்லகு பாறுசுனெ யொலெல் வைசுவாரு,
ப[2]ருவு டி[2]ஞ்சி கடாரி பருசிஞ்சி நில்சியிங்
தெ[2]ந்து[2] வச்செத[2]ரன யெது[2]ருவாரு,
வச்[2]த்ரம்பு[2] கொண்டு[3] தே[2]வர யோயி யிதி[2]சன்ன
பச்[3]தனி த[2]யபுட்ட பலுகுவாரு,

தே. கலவி மாமுக னிப்பிந்து தொலகு[2] டொ[3]கடி
யாடு[2]தா[2]னி சேனண்ட குட[2]னுசு பெத்த[3]
தனமு அபி[2]மானமுனு தெம்பு கனக[2] பலிகி
நிலிபி தோபிச்சு வாருனை தொலகி[2]ரபுடு[2] VII—13

சீ[1], தொடு[2] விண்டி வாடு[2] ச[2]ன்த்ரோப போவக யெது[2]ர்
படு[2]வாண்ட்[2]ர தொடி[2]பட[2] பத[2]ரி பொடி[2] சி,
பினுகீ[2]க பெனகி[2]ன பெத்த[2]னொம்பக யெர்ர
பாறிஞ்சி சே கலவானி னாசி,
யாயிதம்பை[2] சிஞ்சியரிகெ[2]டு[2] வாடே[2]னகு
மீறி சன்ன வென் தவுலு டுடி[2]கி[4];
பொது[2]வு சே லேகய புடபுடயுனு னைன
வானி ஸோதி[3]ம்ப னவ்வலிகி பனிசி,

தே. பொத[2]ல தூ[3]றின ஈடெ சாபுல வெட[2]ல்சி
கட்டுப[2]ட்டலு கொனி ப்ராத ப[2]ட்ட த[2]யனு
கோ[2]சுலகுனிச்சி, க[2]னபராகுலு நிகி[3]ட்[2]சி,
செப்புடட்டலு ஸோதி[3]ஞ்சி சி[2]க[2]லு விப்பி VII—14

வ. இட்லு பாடச்சருலு பெச்சு பெரிகி[2] விச்சல விடி[2] உச்சாவசம்பு[2] லகு[2] சார்த[1]ம்பு[2] னர்த[1]ம்பு[2] லபஹரிஞ்சு ச[2]ங்குலம்பு[2]ன VII—15

இவ்விதம் காட்டு மரங்களிடையிருந்து வந்து வில்லை வளைத்துக் கொண்டு சூழ்ந்த அக் கருநிற மக்களைக் கண்டு (பயணியர்) அல்லகல்லோலப்பட்டுச் சிதறியோடினர். VII—12

"பசை இல்லை (வலிவில்லை) நில்லுங்கள் பாவிகளே" என்று கூறி இயற்கைக் கருவிகளை (வேள்விக்கருவிகளை) எடுத்தெறிந்து நிற்பவர்களும், தங்கம் முதலிய முடிச்சுகளை மரத்தில் எறிந்து செப்புக்கம்பி அடிக்குப் பயந்து ஓடியவாறு மேல் துண்டை கீழே விட்டோடுபவர்களும், சுமையை இறக்கிவைத்து கட்டாரியை உருவி நின்று "இங்கெங்கே வருகிறீர்கள்" என்று அதட்டி எதிர்த்து நிற்பவர்களும், 'ஆடையைக் கொண்டு செல்க! தெய்வ (விக்கிரக)த்தைத் தொடாதீர்கள்! இது போனால் பட்டினி கிடக்க வேண்டியதுதான்" என்று தயை பிறக்குமாறு வேண்டிக் கொள்பவர்களும்.

"எங்களிடம் உள்ளத்தைத் தந்து விடுகிறோம்; விலங்குகள்! ஆனால் ஒன்று! பெண்களை மட்டும் தொடாதீர்கள் என்று பெருமிதத்துடன், சுயமரியாதையும் துணிவும் தோன்றக் கூறி (திருடர்களை) நிற்கச் செய்து கொள்ளை கொடுப்போரும் ஆக அப்பயணிகள் விலகிச் சென்றனர்.

(தங்கம் முதலிய முடிச்சுகள் மரத்தில் எறிந்து திருடர் கூட்டம் போனபின் தேடி எடுத்துக் கொள்ள சிலர் முனைவர்.) VII—13

வில்லில் அம்பு தொடுத்தவன் சென்ற வழிப் போகாமல் எதிர்ப்பட்டவர்களை பரபரப்புடன் கத்தியாற்குத்தியும் விடாக் கண்டனாகிய கஞ்சன் போராடவே பெரிதும் துன்புறுத்தாமல் குருதி ஒழுகக் காயம் செய்து கிடைத்த மட்டும் பிடுங்கிக் கொண்டும் செவ்வியறிந்து (சமயமறிந்து) உருவிக் கொண்டோடுபவனைப் பின் தொடர்ந்து செல்லாது விட்டுத் தொலைத்தும், சேமிப்பு (பணம், சொத்து) ஏதுமில்லாமல், வாட்டசாட்டமாக இருப்பவனை சோதிக்குமாறு அப்புறம் அனுப்பிவித்தும், புதரில் ஒளிந்திருப்பவர்களை ஈட்டியால் துழாவுவேன் என்று பயமுறுத்தி வெளிப்படச் செய்து கட்டிய துணிகளையும் அவிழ்த்துக்கொண்டு தயையுடன் கோவணத் (கௌபீனம்) திற்காக பழைய துணியை கொடுத்து விடுத்தும், செருப்பு அட்டைகள் கூட சோதித்தும்; தலை முடிகூட ஆய்ந்தும் அத்திருடர்கள் கொள்ளையிட்டனர். VII—14

இவ்விதம் அத்திருடர் கூட்டம் கிளர்ந்தெழுந்து அச்சமின்றி பல்விதமாகப் பயணியர் குழுவினைக் கொள்ளையிட்டபோது ஏற்பட்ட கைகலப்பில், VII—15

சீ[3]. கடினுண்டி[2] சனுமற க[3]டி[2] காக[2] பி[3]கி[2]யிஞ்சி
கட்டின னிடு[3] நீலுகாசெ[2] மெறய,
பில்லி க[3]ட்ட[3]மு மிஞ்ச பெரிகி[2] மீச[2]லு குக்ஷி
கோளம்பு[2] மீத[3] உய்யால லூக[2],
பூ[2]தி[3]ப்[3]ருங்கி[2]ன மொக[2]ம்புன வடி[2]கட்டுமை
னபுமைல ப்ரா ஜாதுனா செலங்க[2],
சிடி வ்ரோலி பூச[2]பை க[3]டியில்லு வெட[2]பட்டு
சிம்முல சு[2]ரிய டா[2]ல் மும்மரமுக[3],

தே. ஊரனுண்டி[2]யு கனுபெட்டு சுன்னவாடு[3]
தப்பிபோ நன்னு ட[2]ப்பா[2]டு தாபொட[2] கனி
யட்டி வேள காகஸ்மஸ்ரு வனெடு[3] ஒகப்ர
சண்ட[2] சண்டா[2]ல சோரப[3]டுண்டு[2] தறிமி VII—16

ச. கவவடு டி[2]ஞ்சி யேகுனுககா[3] சு[2]ரெ கொங்குல தார்சி. கூலுடு[2]ன்
நிவிடி[2]ன பொ[3]ஜ்ஜபை மிகு[2]ல நித்த[3]பு தோவ[2]தி த[3]ட்டி டொ[2]ல்லிரா
திவிசி பெனங்க[2], வல்லுவமு த்ரெஞ்சி, யனந்துனி க[3]ண்ட்ல கூனபுன்
செவுலுக[2] கௌ[2]த[2] கட்டி க[3]செ[3] சேருல டெக்கியு தோ[3]பு னொல்சிபோன் VII—17

க. நோரிச[2]னி னுண்ட[2], கே. 'னோ
ரோரி, யகட! மாச[2]மீப பூரனெ மனியுன்
தூ[2]ரமு பொயிதிவே! சொ[2]ம்
மேரீதினி நீகு த[2]க்குனே கானீரா' VII—18

தே. அனின லாதுக[3] கோல்போக யதடு[2] ரட்டி[2]
ராஜு கனு கொ[3]னி கொத[2]யு தீர்பங்க[2] மகி[2]டி[2]
யந்த பரியுனு பை ப்ரஜ கலிகி பாறி
போவ வரடு[3]னு வெட[2]போட்லு பொடி[2]சி சனியெ VII—19

இடையிலிருந்து மார்பு வரை இழுத்துக் கட்டிய கருநிறக் கச்சு மிளிர, பூனைத்தாடி போல வடர்ந்த மீசை வயிறொட்ட ஊசலாட, நீறுபூசிய முகத்தில் வடி கட்டிய மெழுகு பழஞ்சாந்துப் பொட்டெனத் திகழசுண்டு விரலில் பொருந்திக் கிடந்த சுரிகை (கத்தி)யின் ஒளிவீச்சு மிருந்திருப்ப, நின்ற ஊரிலிருந்துகண் வைத்துக்காத்திருந்த காகமஸ்ரு (காக்காய் மீசையன்) என்னும், ஒரு பயங்கரமான சண்டாளத் திருடன், தப்பி ஓடிய என்னை தற்செயலாக எப்படியோ பார்த்து விட்டான். VII—16

கூடவந்த பிரம்மசாரி (மாணி) சீடனை விட்டு விட்டு நான் ஓட்டம் பிடிக்கவும், சுரிகையை முழங்கால் சதையில் பாய்ச்சவும் கீழே விழுந்ததும், தொந்தி மேல் இருந்த ஆடையை அவிழ்த்து, பொன் முடிச்சினைப் பற்றிக் கொண்டான். நான் தராமல் முரண்டிப் போராட இழுபறியில் அரைஞான் கயிற்றில் பையின் கயிறு கிடக்க பை மட்டும் அறுத்துக் கொண்டு, காதிலிருந்த பாம்படம் அறுத்து, தலையிலணிந்த குல்லாயையும் பிடுங்கிக் கொண்டான், VII—17

என் வாயில் சனியிருத்ததால் (சும்மா இருக்காமல்) "அடே! பாவி! பக்கத் தூரில் இருந்தும் அயலானாகி மிகுந்த துன்பம் செய்தாய்? இந்தப் பணம் எவ்விதத்திலும் உனக்கு கிட்டாது! இரு பார்த்துக் கொள்கிறேன்" என்றேன். VII—18

எனவும் அத்திருடன் "இந்த மனிதன் நிறையப் பணம் கொள்ளை கொடுத்ததால் கிராமத் தலைவனையும் அரசனையும் கண்டு (பிடித்துக் கொடுத்து) விடுவான்" என்று அஞ்சியவனாக குறையுயிரையும் போக்க எண்ணி, மீண்டும் வர, மேல் வரும் மக்களும், திருடர் குழுவும் காண்பரென்று அஞ்சியவாறு ஓடும் வேகத்தில் என்னைத் தாறுமாறாகக் குத்தி விட்டுச் சென்றான். VII—19

உ. அந்தட பொ2ந்த பெங்தெருவுனங் த2ருதெ2ஞ்சு பிறிந்தி2
மந்தி2மத்
காந்த ச2ஹோத2ருண்டு2னு ஒகண் ட2ருதெ2ஞ்சுசு
சா3துவட்ட2 வ்ருத்
தாந்த மெறிங்கி2 நன்னரசி2 தா கனியார்தி னொகண்2கு2
தானதிஸ்
ராந்துனி நன்னு காவட திச2ந்துலு கொட்டுசு மோசு சேகு
சோன் VII—20

சீ2. கொங்க2வால் நறகு லங்கு3ளுல பட்டுசு ஜப்ப2
லண்ட குட்டிட2 வெஜ்ஜ3னரயு வாரு,
தலபட்ட2 கு3தி3ய ப்ரப்புல ப்ராத மசி3யிடி3
யம்ப2லி க3ஞ்ஜிண்ட்3ல அடு3கு2வாரு,
தமசே3கி2 செப்புகோ த3யமீற வினிசீர
சிஞ்சி யிய்யங்க2 தீ2விஞ்சுவாரு,
ஒலப2ட்ட2 நெபமுன கலலேனி சி2ரி செப்பி
சுட்டலபை தா2டி2 வெட்டுவாரு,

தே. னைன பாந்து1ல சேத க்ரந்தை2ன யூள்ள
ஜாட2கா2 னிட தெச்சி யன்நீட3 டி2ஞ்சி
பாறு நீரான போவ னூர்பாறி ம2கிடி2
வச்சுனாலோன நீருபு வச்செ நாகு VII—21

வ. கய்யம்பு2ன பாறபாற கா2யம்பு2 கா2யம்பு சேசி3 வெறவேகி கொலிபினகாகஸ்மஸ்ரு நாமதே3ய சண்டா2லு கராள வேஷம்பு2 கன்னுலன் கட்டினட்லுண்ட2 கட2கனுட னிட்டி கராள வேஷம்பு2 கலிகெ2; கைஸிகீ கா2ன ப1லதா2னம்பு2ன தீ2னி மானுபவே? அனின அதண்டே2னு ப1லம் பெறு2ங்க2, ப1லம்பு2 பரமேஸ முகோ1ல்லாச2ம்ப2, யாஜ்ஞா கைங்கர்யம் பு2லகு அனுமதிகைங்கர் யம்புலகு ப1லபரிமாண க2ணன ப்ரபன்னுல கெக்கடி2யதி2? கான ப2ந்த3கம் ப2கு2ட ப1லம் பி2ந்தந்த யந்து2 கொந்த கொம்மன வெறது. ப3க3வதுண்ட2 ரக்ஷிஞ்சு2, ஊறடி2லு மன்ன நன்னோரி மாட நோரனயுண்ட2 அதண்டு2
VII—22

அப்போது, அருகே பெருவழியில் வந்து கொண்டிருந்த மக்களில் என் மனைவியின் சகோதரன் (மைத்துனன்) கூடவந்து பயணியர் கொள்ளையடிக்கப்பட்ட செய்தியறிந்து, என்னைத் தேடி வந்து என்னைக் கண்டு, தான் ஒருவனே மிகவும் நலிந்து கிடந்த என்னைக் காலடியில் வைத்துச் சுமந்து கொண்டு, என்னை வைது கொண்டே சென்றான். VII—20

கொக்குவால் கத்தியால் வெட்டப்பட்ட காயத்தை விரலால் மேல் சதையை மூடிப் பிடித்து தையல் போட மருத்துவரைத் தேடுபவர்களும், மண்டையில் சிறிய காயத்தில் பழந்துணி எரித்த மையைத் திணித்துக் கொண்டு வீடுகட்குச் சென்று கஞ்சி, கூழ் கேட்டுத் திரிபவர்களும்,

தாம்பட்ட பாட்டினைச் சொல்லவும் இரங்கிய உள்ளமுடையோரால் கிழித்துத் தந்த உடையணிந்து ஈவாரை வாழ்த்து வாரும் கொள்ளை போன சாக்கில் இருந்ததும் இல்லாததுமான செல்வத்தைப் பறிகொடுத்ததாகச் சொல்லி உறவினர் வீடு கட்குப் படை எடுப்போரும், ஆகிய பயணிகள் கூட்டம் நிறைந்த ஊர்களின் வழியே என்னை என் மைத்துனன் கொண்டு வந்து இந்த மர நிழலில் இறக்கி வைத்துவிட்டு இவ்வாற்றில் தண்ணீர் குடிக்கச் செல்லவும் நோவின் மிகுதியால் என் மூச்சும் நின்று விடவே, அவன் திரும்பி வருவதற்குள் நான் இந்த(பிரம்ம ராட்சச) உருவினை அடைந்தேன். VII—21

சண்டையில் ஓடோடி வந்து என் காயத்தை (உடலை) காயப் (புண்) படுத்தி அச்சுறுத்திய அந்த 'காக்கை மீசையன்' எனும் சண்டாளனின் பயங்கரத் தோற்றம் கண்ணில் கட்டி விட்டாற் போல இருந்ததால், நான் இறக்கும் தறுவாயில் அவ் வுருவைக் கண்டதால் எனக்கு இந்த பயங்கரமான அவ்வுருவமே வாய்த்தது. *கைசிக கானம் பாடிய பயன் தந்து இந்த உருவை நீக்குவாயாக'' என்று வேண்டவும், அவன் (தாசரி) நான் பயன் அறியேன்! திருமாலின் திருமுகவிலாசமே பயன் ஆகும். கட்டளைக்கும் தொண்டுக்கும் பயன் குறித்து எண்ணுவது பக்தர் களாகிய (பிரபன்னர்கட்கு) எமக்கு உண்டோ? செய்வினைப் பயன் பிறவிக்கு வித்தாகும். ஆதலில் அதனைத் தர அஞ்சு கிறேன்! பகவானே காப்பாற்றுவான்! ஆறுதல் அடைக'' என்று கூறிய வாய்ச் சொல் வாயிலிருக்கும் போதே அந்த பிரம்ம ராட்சசன் VII—22

---

*''யம்யம் வாபி ஸ்மரண் பாவம் தியஜ்யந்தே களேபரம்
தம்தம் மேவைதி கௌன்தேய, சதா தத்பாவ பாவித''

எனும் கீதை (18-6) கூற்றுப்படி இறக்கும் போது எதை நினைப்பாரோ அவ்வுருவடைவர் என்பது நமது மரபு. சண்டாளனை நினைத்தவாறு இறந்ததால் சோம சர்மன் சண்டாள பிரம்ம ராட்சசனானான் என்பது குறிப்பு)

சீ2. ச்2நிக்3த3 த்ரிபா3க2 முண்டி3த ஸிரஸ்ஸிக1தோட2,
ஹிம த3வளோப வீதமுல தோட2,
புண்ய ஷட் த்2வித யோர்த்3வ புண்ட்2ரவல்லுல தோட2,
துலசி2 காப்3ஜ ச்2ரகா2 வளுல தோட2,
கௌபீன கடிசூ2த்ர காஷாய யுகி2தோட2,
ஜலபூர்ண ஸு3ப3 கமண்ட2லுவு தோட2,
பாணிச்2த1 திவ்ய ப்ரப2ந்த3 ச2ம்புடி தோட2,
உத்தர வாக்பூர்வ கோக்தி தோட2

தே. பசி2டி2 ஜிகி2தோட2 ப்2ரஹ்ம வர்சச2முபொல்சு
பா3க2வத லக்ஷ்மிதோ தூ3மபடலினுண்டி2
வெட2லு ஸிக1வோலெ அம்மேனு வெட2லிசூட2
சூட2 வைஷ்ணவுடை2 நில்செ சோ2 மஸர்ம VII—23

வ. இட்லு பா3க2வத பரிசய ப்ரபா3வம்பு2ன ப்2ராஹ்மண்யம்பெ2
காக பா3க2வத ஸ்ரீயுனுன் கலிகி2 யுப்பு சிந்தி1 யினுமடி2 யகு2
சந்த2ம்புனன் பரம ஹர்ஷ ப3ரிதுண்டை2 ச்2வரூபானு
ரூபம்பு2கா2 அதனிகி பூஜ காவிஞ்சி VII—24

சீ2. ஜயது2ருத்தரண ச2ம்சரணாப்2ஜந2ள நீர,
ஜயஜய கா2யக சா2ர்வ பௌ3ம,
ஜய ஸௌரி கா2தா1 ரச2ஜ்ஞ புண்யரச2ஜ்ஞ,
ஜயஜய தத்வ ச2ஞ்சய பவித்ர,
ஜயஜனா2வாசீன ஜனி ச2ங்க2வஞ்சக
ஜயஜய தே2ஸிக சரண ஸரண
ஜய யுக்த வாக்ப்ரதிஷ்டா1 த்ருணீக்ருத தே2ஹ,
ஜயஜய ப3க2வதா2ஜ்ஞா க்ருதிச்2த7,

தே. ஜய ச2கல ஜந்து ச2ம சித்த ஜயத2யார்த்3ர
ஜய முகுந்தா2ன்ய தே2வதா ஸாச்2த்ர ப2தி3ர
ஜய சதுர்த்வய ப3க்தி லக்ஷண சிதாங்க2
ஜய முராரி ப்ரபன்னாங்க்3ரி ஜலஜ மது3ப VII—25

நுண்ணியதாகத் தலையில் மூன்று பாகம் மழித்து ஒருபாகம் குடுமியுடன் கூடியவனாகவும், பனிபோல் வெளுத்த முப்புரிநூல் (பூணூல்) அணிந்தும், புனிதப் பன்னிரு நாமங்கள் ஆகிய கொடிகளுடன் துளசி, தாமரைக் கொட்டை மாலைகள் அணிந்தும், கௌபீனம், அரைஞாண், காவியுடைகளுடனும் நீர் நிறைந்த சுப கமண்டலத்துடனும் கையில் திவ்வியப் பிரபந்தச் சுவடியுடனும் துவய அனுசந்தானத்துடன் கூடிய பிரம்மதேஜசுடனும், பாகவதத் திருவுடையவனாக புகைமண்டலத்திலிருந்தெழும் தீக்கொழுந்து (சுவாலை) போல அந்த (ராட்சச) மேனியை நீக்கி, பார்த்துக் கொண்டிருக்கும் போதே வைணவனாக அச்சோமசர்மா நின்றான்.

(இராட்சச சரீரம் புகைக்கும், புதியவைணவ சரீரம் தீச்சுடருக்கும் உவமை. நெற்றி கேசவன், வயிறு நாராயணன், நெஞ்சு மாதவன், கழுத்துக்குழி கோவிந்தன். வயிற்றின் வலப்புறம் விஷ்ணு, தோள் நடுவே மதுசூதனன், கழுத்தின் மேல் திரிவிக்கிரமன், வயிற்றின் இடப்புறம் வாமனன், இடத்தோள் ஸ்ரீதரன், கழுத்தின் புறம் ஹ்ருஷிகேசம் பத்மநாபம், தாமோதரம்'' என்ற நாமமுடைய திருமாலினை உருவகித்து பன்னிரு நாமங்கள் (துவாதச புண்ட்ரம்) போடுவது வைணவ மரபு ஆகும்.) VII—23

இவ்விதம் பாகவதரின் பரிசய (அறிமுக)த்தின் பெருமையால் அந்தணனாதல் மட்டுமன்றி பாகவதத் திருவினையும் அடைந்து, உப்பு சிந்தி இருமடங்கு ஆவது போல மிக்க மகிழ்ச்சியுற்று, தன் உருவுக்கேற்ப மரபுப் படி அந்த தாசரிக்கு வணக்கம் செலுத்தினான்.

(உப்பு மண்ணில் சிந்தினால் அம்மண்ணும் உப்பாவது போல என்ற உவமை கூறப்பட்டது.) VII—24

கடத்தற்கரிய பிறவியாகிய தாமரையிலையில் தண்ணீராகத் திகழ்பவனே வெல்க!

இசைச் சக்கரவர்த்தியே வெல்க! திருமால் கதைகளின் சுவையுணர்ந்த நாவினையுடையவனே வெல்க!

தத்துவ ஐயங்களைக் களைந்தெரியும் பண்ணரிவாள் போன்றவனே வெல்க! வெல்க!

தன்பெருமையை வெளிக்காட்டாமல் மறைக்கும் சான்றோய் வெல்க!

ஆசாரியரின் திருவடிகளே சரணாகக் கொண்ட அண்ணலே வெல்க!

சொன்ன சொல் நிலைநிறுத்த உடலைத் துரும்பென மதித்த தூயனே வெல்க!

இறைவன் கட்டளையை மேற்கொண்டொழுகும் இனியனே வெல்க!

எல்லா உயிர்களையும் சமமெனப் பாவித்து அருள் உள்ளம் கொண்ட அறவோனே வெல்க!

பிறதெய்வங்களைப் பெரிதெனக் கருதும் சாத்திரங்களைக் கேளாத சாந்தனே வெல்க!

எட்டுவித பக்தி லட்சணங்களையுணர்ந்து திருமாலடியார் தம் திருவடித் தாமரைகட்கு தும்பியாகிய தொண்டர்க்கடியனே வெல்க! VII—25

வ, அனிப்ரச்2துதிஞ்சி ப்ரத2க்ஷிணம்பு2 காவிஞ்சி புனர்ப3வ
ப3யம்பு2ன ப3வன பா3ர்யா ப்ரமுக1 சு2க1 விமுகு1ண்டை2
ப2த2ரீவனாதி2 புருஷோத்தமாதி3ஷ்டித புண்ய பூ3முல பௌன:
புண்யம்பு2க2ன் தீர்த1யாத்ர சரிஞ்சுசு பரம நிர்வ்ருதின்
பொங்தெ2, இப்புண்ய கத1 வஹன ச2மயம்பு3ன குஹனா
வரா ஹம்பு2வலன மஹீமஹின மதீ2ய பூஜோசிதோப சாரம்பு2ல
விஸேஷப1லத2ம்பு2 கா2னம்ப2 யனவினி வைஷ்ணவியுன் தா
காவுன ததா2கலன குதூஹலம்பு2னன் கூதுரை நீகொத2வி
யஹரஹம்பு2னு விப்ரலம்ப3 த2ம்ப3 ச2மீரிதா கா2த1 கா2தார்த1
ச2மேதகீ2தரச3ம்பு2னன் ப்ரொத்து2புச்சுட கானி வேறொண்டு2
கா2தே2மி தபம்பு2 சேயுசுன்ன2தியோ யண்டிந்த கண்டெ பரம
தபம்பு2ன்னதே2? யன்னியுனு மேலய்யெடு2, ஸ்ரீரங்க2ம்பு2னகு
ரங்கே2ஸு சே2விம்ப தோடு2கொனி போயி ரம்மனுடயு,
ப்ரசா9த2ம்மனி ப்ரணாமம்மு சேசி2 பசி3ண்டி2 பல்லகின
ப்பா2லிகா ரத்னம்பு2 னுனிசி பரிசாரிகா ஸதம்பு2னு பா3க2வத
பரிஷத்துனுன் கொலுவ பரயாண ப்ர்யாயம்பு2ல பரமானுராக2ம்
பு2னன் போயி VII—26

கோ2தா2 தே2வி ஸ்ரீரங்க2முன ரங்க2 நாது1னி சே2விஞ்சுட

ம. சனி காஞ்சென் விரஜாபி3தா3ந்தர வபுச்ச2ஹ்யோத் ப3வா
தீர நங்
த2ன வாடி வலயத்2ருமாவளி த2ளாந்தர்த்2ருஸ்ய பாபாளி ப3ஞ்
ஜன சாம்பேய சு2மாயமான விஷம ச்2வர்ணாவ்ருதி வ்ராத ரஸ்
மி நப3ச்ச்2ப்ருக் ஸிக1ராளி தீபகளிகா ஸ்ருங்க2ம்பு
ஸ்ரீரங்க2முன் VII—27

க. சோளீ ஹல்லக சித கச
பாளீ பாளீ ப3வத்2விபஞ்சீ ச்2வன ப்2ருங்
காளீ கவேரது2 ஹித்ரும
ராளீ த்3வனு லெச2கு2 கா2ட்2பு வ்ரதிவட2 யுடி2பென் VII—28

என்றிவ்விதம் பாராட்டி, வலம் வந்து, மறு பிறவி வாரா திருக்கும் வழிதேடி, மனை, மனைவி, முதலிய சுகங்களில் பற்றின்றி, பதரிகாரன்யம் முதலாய திருமாலின் திவ்விய தேசங் கட்கு அடிக்கடி தீர்த்தயாத்திரை செய்து, பரமபதமான மோட்சத்தை அடைந்தான்.

இப்புண்ணிய சரிதத்தை, வராக அவதாரமெடுத்த காலத்தில் பூமிதேவி (நிலமகள்) "எனக்குச் செய்யும் கைங் கரியங்களில் பாடுவதே சிறந்த பயன் தரும்" என அறிந்து கொண்டவளாய் அவளே பாடுவதில் விருப்புற்று உன் மகளாகப் பிறந்து, தினந்தோறும் பிரிவு எனும் பரிவு காட்டி எனது கதை களைப் பொருளாழம் மிக்க பாசுரங்களால் பாடிப்பரவி பொழுது போக்குகிறாள் அன்றி வேறொன்றுமில்லை!

என்ன தவம் செய்கிறாள் என்று கேட்டாய்! இதைவிடப் பெரிய தவம் வேறு என்ன இருக்கிறது. எல்லாம் நலமாக முடிவுறும்! திருவரங்கத்திற்கு அரங்கனைச் சேவிக்க அவளையும் அழைத்துக் கொண்டு செல்க! என்று (திருமால்) கூறவும் (பெரியாழ்வார்) பிரசாதம் (அருள்) என்று வணங்கி தங்கப் பல்லக்கில் கோதையை இருத்தி பரிசாரிகர்களும் பாகவதர்களும் கூட வர மகிழ்வுடன் பயணம் புறப்பட்டார். VII—26

## கோதை திருவரங்கம் பெருமானை வணங்குதல்

சென்று, விரஜாநதி என்னும் (காவேரி) பெயருடைய சஹ்ய (குடகு) மலையிலிருந்து பிறந்த நதிக்கரையின் நந்தவன மரக் கூட்டங்களின் இலைச் சந்துகளூடாகக் காணப்படும் ஏழு பொற் பிராகாரங்களின் கலசங்களாகிய சுடர் விளக்குகள் சம்பகப் பூக்கள் ஆக, பாவங்களாகிய வண்டுகள் விலகும் திருவரங்கத்தைக் கண்டான்.

(சம்பகப் பூக்கள் கண்டால் வண்டுகள் அகல்வது போல இப்பிராகாரங்களைக் கண்டால் பாவம் அகலும் என்பது குறிப்பு) VII—27

சோழநாட்டு நங்கையரின், செங்கழுநீர்ப்பூச் செருகிய கூந்தலில் மொய்க்கும் யாழிசை முரலும் வண்டுகளின் ஓசையும், கவேரன் மகள் (காவேரி) உடைய அன்னங்களின் மென் குரலும் சுமந்து வரும் இளங்காற்று விரதியாகிய விட்டு சித்தனின் களைப்பினைப் போக்கியது. VII—28

தே. ஆதட[2] க[3]மர்ஷண ச்[2]நானமம்மருத்[2]வ்ரு
தாம்பு[2]வுல னாடி[3], மாத்[3]யா ஹ்னிகாதி[2] தீர்சி,
ச்[2]நாதயு அலங்க்ருதயு னௌதனயனுதோடு[2]
கொனுசு வைணஷ்வ பரிஷத்து கொலுவனரிகி[2]

VII—29

சீ[9]. சரணம்பு ச[2]ரிபணி மொரபம்பு[2] வின்னத[2]ங்
துல கட்ல யெது[3]ரு இந்துலகு தொலகி[3]
யிடி[3]னட்டி மணிமுஷ்டி க்ருஹ[3]ல யாரதி கெம்பு
ராலனே கலய த்[2]வாரால சல்லி,
ப்ரச[2]வா[2]தி தாவிகி ப்ரதி க்[2]ருஹேஸார்தப[3]
க்ஷயபுவல் புனகெ போலெ ஸ்வாச[2] முடி[2]பி,
ந்ருத்த கீ[2]தோத்த[1] ஸௌரி ச்[2]துதி கீரஸா
ரிஜயட்ல யர்தோ[1]ரீ க்ருதி வினி,

தே. வலபி[3] ரத்னாம் ஸ[3]வுல கட்டு தெலுபு சித்ர
மகு[2]ட கோர்வக தி[2]க[2]தி[2]க[2] அரிகி[2] தா[3]ன்ய
மடி[2]கெ[2]டு[2] விரக்த பா[3]க[2]வதாளி வலன
வெல்ல தீ[2]வினி போனி யவ்வீடு[2] சொச்சி

VII—30

உ. கோ[2]புர கந்த[2]ராளி கட[2]குன்ஸஸி புஷ்கரிணீ கணார்த்[2]ர ச[2]ங்
தாபஹரானிலம்பு[2]லு விமான ரணன்மணி கிங்கிணீ கலா
லாபமுலன் சு[2]க[1]ம் ப[2]டு[2]க[2] லாலச[2] சொச்சி யகாண்ட[2]
கா[2]ஹனா
சாபல க்ருன்மருத் க[2]ணமு சண்டு[2]ட[3]த[2]ல்செடு[2] லோனி
வாகிடன் —VII31

அவன் (பெரியாழ்வார்) பாவங்களைப் போக்கும் காவிரிப் புனித நீரில் நீராடி, நண்பகல் நோன்புகள் முடித்து, புனலாடிப், பொலங்கலன் அணிந்த மகளை அழைத்துக் கொண்டு, வைணவர்கள் குழாம் புடைசூழச் சென்று VII—89

பாதச் சலங்கை ஒலி கேட்டதுமே, களிறுகட்கொதுங்குவது போன்றே காரிகையருக்கும் ஒதுங்கி, (பிச்சையாக) தமக்கிட்ட கைப்பிடி மாணிக்கங்களை, இல்லறத்தானின் ஆரத்தியிலுள்ள இரத்தினங்களோடு கலக்குமாறு வாயிலிலே சொரிந்து விட்டு,

(அரிசியன்றி மணிகளை ஏற்றுக் கொள்ளார் என்பது கருத்து)

மலர் முதலியவற்றின் மணத்தையும், ஒவ்வொரு மனையிலும் கோயிற் படையலுக்கான உண்டிகளின் மணம் போலவே முகராதவாறு மூச்சடைத்துக் கொண்டும்

(கோயில் பிரசாதமான படையல் திருமால் நுகராத முன்பு தாம் நுகர்தல் கூடாதெனமூச்சடிக்கிச் செல்வர் என்பது கருத்து.)

நடனம், பாட்டு முதலிய திருமால் துதிகளை, கிளி, பூவைகள் கூறுவதைக் கேட்பது போல அரை மனதோடு கேட்டும்,

(நடனம், கீதம் விரும்பாரேனும் திருமால் துதிகள் ஆதலின் கிளியின் பேச்சுப் போல அரைமனத்துடன் கேட்டனர்)

மாளிகைமேற் கூரையிலுள்ள மணிகளின் வண்ணங்கள் தம் வெண்துகிலில் பிரதிபலித்து பன்னிறம் காட்ட அதனை வெறுத்து விரைந்து அரிசி கேட்கும் இல்லங்களை அடையும் பற்றற்ற பாகவதர்கள் திரிவதால் வெள்ளைத் தீவினை ஒத்த அந்த திருவரங்கத்தை அடைந்தார்.

(பெண்கட்கொதுங்கும் பற்றற்ற பாகவதர்கள் வெண் டுகிலால் வெண்மையுற்ற திருவரங்கம் வெள்ளைத் தீவெனப் பொலியும் என்பது கருத்து) VII—30

கோபுரக் குகைகள் வரையுலவும், சந்திரபுட்கரணி (தெப்பம்) நீர்த்துளிகளை அளைந்து, பனித்த, வெம்மை நீக்கும் இளங் காற்று, மேல் கட்டிலுள்ள மணிச் சலங்கைகளையசைவித்து மெல்லோசையாகிய, உரையாடலில் நலம் விசாரிக்கவும் ஆறு பிரகாரங்களைக் கடந்து சென்று, (ஏழாம் பிரகாரத்தில்) அப்போது விரைவுற்ற தேவர்களை சண்டன் எனும் துவார பாலகன் (வாயிற் காப்போன்) செவ்வியன்றென அதட்டும் உள் வாசலில் VII—31

உ. வேத்ரமு கேல பூனி மணிவேதி3 குத1ம்பு2 பயின் சிதாம்பு2ருண்
ணேத்ருனி முத்2ர வ்ரேல் மெறய நிஸ்சலுலை யிருமை
மனாங்னமத்
கா2த்ருல த2ந்தி வக்த்ருல ஸதம்பு2 விநீதி ப3ஜிம்ப ஒப்புதத்
சூ2த்ரவதிஸு வந்த2னமுதோ கனியாதடு2 ப3க்திசேயகன்
VII—32

தே. அவிதி2த புரந்த2 ராயுத3ம் பை2ன கனக
ஸிக1ரியுனு போலெ நெறகல ஜிகு2லு தெ2ச2ல
நிங்கி2 நீரெண்ட2 காயு வேதா3ங்கு2 வினத
சு2துனி கதி காஞ்சி மகு2ட2 தன்னதியு காஞ்சி VII—33

பிரம்பைக் கையில் பிடித்து, மணியரங்கில், சித்திரக் கம்பள விரிப்பின் மேல், வெண்டாமரைக் கண்ணன் உருவம் பொறித்த மோதிரமணிந்த விரல் மிளிர, இரு புறமும் சிறிதே வணங்கிய வாறசையாதுள்ள யானை முகத்தினர் நூற்றவர் பணிந்து நிற்ப, அமர்ந்துள்ள விஷ்வச்சேனர் (சேனை முதலியார்) தமைக் கண்டு (பெரியாழ்வார்) வணங்கவும், அவரும் பக்தியுடன் அன்பு செய்தார். VII—32

இந்திரனின் இடியேற்றினையறியாத பொன்மலை (மேரு) போன்ற இறகுகளின் ஒளிவீச்சு வானமும் நாற்றிசையும் பரவித் திகழ்ந்து இளவெயில் காயும்படி நின்ற வேதசொருபனாகிய கருடனை வணங்கிக் காணவும் (கருடனும்) மீண்டும் (தன்னை) வணங்கக் கண்டான். VII—33

வ, அதனிசே விஜ்ஞாபனம்பு2 சேயிஞ்சி யனுமதின் காஞ்சி
சதுர்பு3ஜுனு ஜலத3ர ஸ்யாமுனு ஸதபத்ர லோசனுனு சபலா
பிஸங்க2 வச2னுனு வனமாலிகா ப2த்த3 பா2ஹு மத்3யுலுனைன
மது3மத1ன ப்ரதிபி2ம்ப2ம்பு2லன் போனி பாரி பார்ஸ்விகுல
பராங்குஸ ப்ரப்3ருதி முக்துல சே2விஞ்சுசு தத2பி3னந்திதுலை
சனி மஹாவகாஸம்பு2னு மணிமய ச்2தம்ப3 ச2ம்ப்3ருதம்பு2னு
ஸாதகும் ப3கும்ப3 ஸோ2பித ஸேக1ரம்பு2னுனை சித்ர நேத்ர
விதான லம்ப2மான நாநா ப்ரசூ2ன தா2ம முக்தா கு2ளுச்சா1ச்ச1
சாமரம்பு2னு உத்2வேல காலா க2ரு தூ3ப தூ3பிதம்பு2 னகு2
மஹா விமான மத்3ய விது3காந்த விதர்தி2கா தலம்பு2ன
சரணமுக1 தத்தத் ப்ரீதிகா தி3ஷ்டித த3ர்மாதி1சூ2ரி
பரிஷதா2த்மகம்பு2னு தேஜோ மயம்புனுனகு2 விபுல விமல
பீட1ம்பு2ன பரிமளா லோல ரோலம்ப2 ஜாலம்ப2கு2
அம்பு2ருஹம்பு2 ஜாம்பூ2நத2 த்விடு2த்தமர்ண விச்2தீர்ண
கர்ணிகோபரி வீ1தி சூ2த3ன்ய பாதோ1 நிதா3னம் பு2னகு
ப்ரத1ம ஹேது பூ3தம் ப2கு2 பூ3ததன் மாத்ரயுன் போலெ பாரத2
ச்2ப1டிக படீர பாண்டு2 ருசி புண்ட2ரீகம்பு2ல பச2கு மச2மச2க
லெச2கொல்யு மிசி3மிகல போ2கி போ3க2 பா3க2ம்புனகுன்
பரபா3க2ம்பு மிகுல ததா2த்மகம் ப2யகு2 உபப2ர்ஹம்பு2ன
மஹார்ஹ மணிகர்பு2ரம்ப2கு2 கூர்பரம் பூ2னி மனன பரமுனி
மனோராக2 ரச2மார் ஜனன் சேசி2 மிகு2ல னருணிம
வஹிஞ்செனோயன சாலு கெங்கே2லு கபோலம்பு2னன்
கதி2யன் த்ரித2ஸ,தருகுசு2ம கஞ்சுகித கஞ்சுகி கஞ்சுகாத்மகம்
ப2கு2 து2கூல நிசோளம்பு2ன ஒத்திகி2லி யுன்னவானின் கரின்
கறகறின் பெட்டி பி2ட்டு தன சேதி சக்ரம்பு2னன் தெகி2ன
நக்ரம்பு2 பூஜ்யம் ப2கு2 சா2யுஜ்யம்பு2 னொங்தெ2னோ யன
உபரி பரித்2ருஸ்யமான க2ண்ட2 ச்2த1லச்2த1 மணிமகர
குண்ட2ல ப்ரதிபி2ம்ப2 ருசி ட2ம்ப2ரம்பு2னன் பரம
சௌ2ந்த2ர்ய மகரந்த2 நிஷ்யந்தி2 யகு2 முகா1ரவிந்த2ம்பு2ன
அந்த2ம்ப2கு2 வானி, நிர்நிமேஷ த்ருஷ்டி நெட்டிகொனி
சூசுதறி நீலாவதா2தயு றெப்பவட்டு தறி பி2ட்டெது2ர்கொனி
கலதௌ3த கௌ2ர கௌ2ர மஹாமஹ:பூரம்பு2ன முனிங்கி2
து2ர்நிரீக்ஷயு னகு2 நிஜருசிர மூர்திவலன தனது2 சாகார
நிராகாரதலு வாரிகி சூபுருபுன தீ2பிஞ்சுவானி, களத்ரம்பு2லகு2
ஸ்யாமா ச்சா1யல சேத ப்ரேமுடி2ன் பொது2வம் ப2டி2ன யட்லு
கப்புலு தொ2ங்க2லுலுனகு2 பக்ஷ்ம காலிகலனொப்பு சோ2ம
சூ2ர்யாத்மகம்பு2 லகு2 வெட2ந்த2 நிடு2வாலு டெர்ர செ2கல
கன்னுலன் கெந்த2டமி றேகுல வெத2சல்லு வானி, மங்கென
விரி பி2ங்கம்பு2 னிங்கிஞ்சு அத3ரஸோணிம நெபம்பு2ன
வெலுங்கு2 முக1ஜனித ஹுதாஸனுதோ தத்ச2கு1ண் ட2கு2
க2ந்த3வஹுன் கூர்ப இக்கெனன ஒக்கிந்த நிக்கி சொக்கபு
பொடமல சூபட்டி தில குசு2ம விலச2னாப ஹாசி2யகு2னாச2
பா3ச2மானுண்ட2கு2 வானி, உத2ர ஜாத ஸ்வேத தா3ம தாம
ரச2ம்பு2 கனுங்கொ2னி மஹதாஸ்ரயம்பு2 கனின பூர்ணிமா

பின்னர் அக்கருடனிடம் விண்ணப்பம் செய்து அனுமதி பெற்று, நான்கு தோளுடையவர்களும், முகில் வண்ணத்தினரும், தாமரைக் கண்ணரும், மின்பசுந்துகிலுடுத்தியவரும், துளசி மாலையணிந்த மார்பினரும், திருமாலின் பிரதி பிம்பமாகக் காணப் படுபவருமான அருகணைந்துள்ள நம்மாழ்வார் முதலிய முக்தர்களைச் சேவித்து, அவர்களால் ஆதரிக்கப் பெற்றவராய்ச் சென்று; மிகப் பரந்த மணிமிடைந்த தூண்களும், பொற்கலசங் களும், அணி செய்யப் பெற்று, சித்திர விதானத்தில் தொங்கும் பல்வகைப் பூச்சரங்களும் முத்துக் கோவைகளும்; வெண் சாமரைகளும், அகிற் புகையும் மண்டிய கருவறை நடுவே, சந்திர காந்தமேடையில் கால் முதலாகஅவ்வவ்வவயவங்கள் பொருந்திய தருமன் முதலான நித்திய சூரிகள் அமர்ந்த மன்றம் அமைந்ததும் அமர்ந்த மன்றம் அமைந்ததும், ஒளிமயமான, விரிந்த, தூய, ஆசனத்தில், மணம் நாடிய வண்டுகளின் கூட்டம் மொய்க்கும் தாமரையின் பொன்னிறத்துக்கு கடன் வழங்கும் தன்மைத்தாய், அகன்ற பொகுட்டென அமைந்த மேடையின் கண், பாற் கடலுக்கு மூல காரணமான பூத தன்மாத்திரை போல, பாத ரசமும், பளிங்கும், சந்தனமும், நிலவும், வெண்டாமரையும், மாசுறும்படியான தன் மேன்மையான ஒளிமிக்க ஆதிசேடனின் உடலில் தலையணைமீது, கேயூர (தோள்வளை)யின் மணி ஒளி படிந்த முழங்கையை ஊன்றி, முனிவர்களின் மனத்துட் பொங் கும் பக்திரசம் கழுவியதால் மிகுந்த செம்மையுற்றதோ எனுமாற மைந்த செங்கை, கன்னதில் ஊன்றியவாறு, கற்பகமரத்தின் பூக்களால் மூடப்பட்ட ஆதிசேடனின் சட்டையே படுக்கை விரிப் பாகக் கொண்டு, ஒரு சாய்த்துப் படுத்துக் கிடக்கின்றவனும், களிற்றினைத் துன்புறுத்திக் கடினமான தன் கைச் சக்கிரத்தால் கண்டிக்கப்பட்ட மகரம் (முதலை) வணங்கத் தகுந்த சாயுச்சியம் (தன்னோடிணைதல்) பெற்றதோ எனப்படுமாறு, கன்னத்தின் மேற் காணப்படும் மணிகுயின்ற மகர குண்டலங்களின் பிரதி பலிக்கும் ஒளிவீச்சின் எழில் மிக்க மகரந்தம் ஒழுகும் முகத் தாமரையுடனும், எழில் பெற்றவனும்,

இமையாத பார்வையால் முயன்று நோக்கும்போது மிக்கெதிர்ப்படும் வெள்ளியெனப் பொலியும் வெண்ணிற ஒளி வெள்ளத்தில் மூழ்கிக் கண் கூசச் செய்யும் பேரொளிப் பிழம் பாகிய தனது மங்கள உருவினை, தனது உருவு, அருவும் ஆகிய மூர்த்தியாகக் காட்டுமாப்போலே ஒளிர்பவனும், தனதிரு கண் களாகிய சூரிய சந்திரர்கள் தத்தம் மனைவியராகிய இருளும் நிழலும் தம்முடன் கலந்திருத்தல் போலக் காட்டும் கருவிழியும் வெணவிழியும் செவ்வரிபடர்ந்த கண்ணிணைமகளும் கூடி செந்தா மரை இதழ்கள் பரப்பினாற் போலக் காணப்படுகின்ற நோக் கெழில் உடையவனும்) பந்தூக மலரை வென்ற இதழ்களின் செம்மை எனும் சாக்கிட்டுப் பிறந்த அக்கினியும், அவன் துணைவனான வாயுவை இணைவித்தாகத் தோன்றும் எள்பூப் போன்ற எழில் நாசி, திகழ்பவனும், வயிற்றில் பிறந்த வெண்மை யான ஒளிமிக்க தாமரையைக் கண்டு, சந்திரன் என ஐயுற்று,

ஸஸாங்குட2னு ஸங்க ஆதனிகி நாகு வைரம்பு3 மான்புமனி
தத் ச2ஹோத2ரி காவுன ரத்ன காஞ்சனம்பு2லு லஞ்சம்பு2லுகா2
நிவேதி2ஞ்சி அடு3கு2லொத்து இந்திரகு வரமுன் படி2யுன்ன
ராஹ2வனன் கேயூர கடகமணி முத்2ரி காங்கிதம்ப3கு2 தீ2ர்க3
பா2ஹு பரிக3ம்பு3 கடிதடோத்ச2ங்க2ம் பு2னமெறயு வானி,
உரஃச்2த1ல ந்யச்2த நிச்2துலாச்2தோக கௌ ச்2துப3 க2ப3ச்2தி
மண்ட2லம்பு2ன நிண்டோ2லக2ம்பு3ண்டு3 புண்ட2ரீக நிகேதன
தனுச்சா1ய யன அச்சா1ச்ச1ம் ப2கு2 ஶ்ரீவத்ச2ம்பு2ன
லோசனோத்ச2வம்பு2 காவிஞ்சு வானி, விஜித ம்ருக2நா3பி
நா3பி சௌ2ரப்3யம்பு2னகு எக2யு உத்துங்க2 ப்3ருங்க2 மாலிக
யன மெறயு அசி3த பேஸலதுலசீ2 பலாஸ தா2மம்பு2ன
அபி3ராம கோமலாலங் க்ருதி யகு2வானி, கபட கரடி
விரோ2தியை அசு2ரயுசு2று ஈ கொனி மகு3ட2 மனுஜாங்க2ம்பு2
அங்2கீகரிஞ்சு னெட2 தலம்பன் பட2மி அட்லன யுண்டெ2னன
ப2டு2க2கு2 நடு2முபச2 குகடு2னொடி2க மகு2வானி, க3னஜக3ன
சரமேதர த3ராத2ராதி3த்ய காதலம்பு2னன் காஞ்சன காஞ்சிகா
மணிமகுட க2க2ன மணிகாயு நீரெண்ட மெண்ட2னன் பரகு2
மெறுங்கு3 பீதாம ப2ரம்பு2னன் பொது2பன் படி2 தா2னி ச2ன்ன
த2னம்பு2ன தனநுன்னத2னம்பு வெலுபலன் தோப கனக புஷ்ய
ராக2ம்பு தெரவாரு வைடூ2ர்யமணி ச்2தம்ப3 யுக2ம்பு2னுன்
போலெ கிஞ்சி தா2மீலித நீலிமம்ப2கு2 ஊருயுக2ளம்பு2வானி,
த்ரைவிக்ரமம்ப2கு3 விக்2ரஹம்பு2தோ ஆக்ரஹம்பு2ன மீதி1கின்
சாசு தறி சங்க்ரமண ரயம்பு2னன் தகி லிவச்சின மணிமய
ச்2வர்பு3வன ஜாப்பூ நத3 ப்ராகார வலயம்பு2னன் தீண்ட்2ரிஞ்சு
உத்த2ண்ட2 க2ண்ட2 பெண்டெ2ரம்பு2னன் பொட2மு
அ[illegible]கண்ட2 ப்ரபா3மண்ட2லம் பு2னன் பரிஹிண் டி2தம்புலை
மர்ரி பண்டு2ல வடு2வுகல மட2மல பெ2ட2ங்கு2படி2 பா3வி நிஜ
கமடா[illegible]வதார கூ3சகம்பு3லுன் போலெ கொத2ம தாபே2ள்ள
மேள்ளனகு2 மீகா2ள்ளதோ கோகநத2 ம்ருதூ2த2ரம்பு2 லமர
மெறுகு2 சுக்கல ஜிகி3 மொக்க பறுசு நக1 சக்ரவாள சந்த்ரிகல
ப3க்த ஜன மனச்2தமோ வித2ளனம்பு காவிஞ்சுசு ஹலகுலிஸ
கலஸ கமல மகராங்குஸங்கிதம்பு2லை லக்ஷ்மீகுசகுங்குமாகலன
அருணாருணம்பு3 லகு2 சரணம்பு3லன் தாபத்ரயாப ஹரணம்பு2
சேயுவானி நாரயணுன் புராண புருஸு கேஸு ஈஸநுது
விபீ3ஷண வரது3 அனங்க3 ஜனகு ரங்க2 ரமணுன் காஞ்சி
ச2ஹ ச2மாக3த பா3க2வத பரிஷத்ச2மேதம் பு2கா2 தானுன
தானன் தனஜாதயுன் ப்ரமத3 ப3யப3க்தி ரச2மக்3னுலை ஜயஜய
ஸப்2தம்பு2லதோ சர்வாங்கா2 லிங்கி2த க்ஷோணீதலம்பு2லகு2
நமச்2காரம்பு2லு காவிஞ்சி நிடலதட க3டிதாஞ்ஜலியை
இட்லனி நுதியிஞ்செ

பெரிய இடத்திசைச் சார்ந்துள்ளதால் அவன் (சந்திரன்) உடன் பிறந்தவளான திருமகளிடம் இராகு தன் பகையை நீக்குமாறு பொன் வலயமாகிய லஞ்சம் கொடுத்து இறைஞ்சுவது போல திருமாலின் பாதங்களை ஒற்றும் கேயூரமும் (தோள்வளை) வளையலும் அணிந்த திருமகளின் தோள்கள் தன் தொடைகளில் மிளிரும்படியாக அமைந்தவனும், மார்பிடத்தில் வைத்த இணையற்ற கௌஸ்துப மணியின் ஒளிச்சுடர் பட்டு தாமரையாள் மேனி எழிலோ எனத் தகுந்த தூயதாய திருமறுவும், (ஸ்ரீவத்சம்). கொண்டு கண் விருந்தளிப்பவனும் கஸ்தூரி மானின் உந்தி மணம் நாடி வந்த வண்டுகள் கூட்டமோ எனுமாறு திகழும் கரும்பசுந்துழாய் மாலை (வனமாலிகை) அணிந்து எழில் பெற்றவனும்,

மாயச்சிங்கமாகி, கனகனைக் கனன்றுயிர் கவர்ந்த பின்னர் மீண்டும் மானுட உருத் தாங்கும்போது, மறந்துபோய் இடை மட்டும் அப்படியே இருக்கும்படி விட்டுவிட்டது போல நுண்ணிடை கொண்டெழில் மிக்கவனும் கடிதடத்தில் உதய கிரியில் உதித்தெழும் இளஞாயிற்றின் பொன்வெயில் பொலிவு தோன்றும் அரையின் மென்மையால் வெளிததோன்றும் தொடைகளின் நுண்மை வெளியே காணப்பட்ட தங்கம், புட்பராகம், வைடூரியம் குயின்ற தூண் இணைகள் போலச்சிறிது கருவண்ணங் காட்டிய தொடையிணைகளையுடையவனும், திரிவிக்கிரமனாகிய உருவங்கொண்டபோது, சினந்து வானுற வளர்ந்தபோது உடன் பரப்பினது விரைவால் சுற்றிவந்த மணிமயமான சுவர்க்க லோகத்தின் பொற்பிராகார வளையமோ என மிளிரும் கழல் சூடியதால் பிறந்த ஒளி மிக்குடையதாகியும், ஆலம்பழத்தின் எழிற்கோலங்கொண்ட கணைக்காலும், எதிர்காலத்தில்தான் எடுக்கும் கூர்மாவதாரத்திற்கு (ஆமைப்பிறப்பு) முன்னோடியாக அமைந்ததோ எனத் தகைய இளம் ஆமையின் வளமார்ந்த எழிலை நகும் முழங்காலுடனும் செங்கழுநீர்போன்ற மென்மையுடன் உள்ளங்கால் அமைய, மின்னும் விண்மீன்களின் ஒளியை வென்ற நகங்களின் நிலவினால், அன்பர்களின் இதயத் திருட்டினை நீக்கியவாறும் ஏர் வச்சிராயுதம் முதலிய ரேகைகளையுடையதும், திருமகளின் முலைக் குவட்டிலெழுதிய குங்குமத் தொய்யில் படிந்து சிவந்ததுமான திருவடிகளால், மூவகை (அத்யாத்மிகம், ஆதி தைவிகம், ஆதி பௌதிகம்)த் துயர்களைக் கெடுத்து அருள் செய்பவனாயும் உள்ள, ஸ்ரீமந் நாராயணன், புராண புருஷன், புருடோத்தமன், பிரணதார்த்திகரன் (சரணடைந்தார் துன்பம் நீக்குவோன்) வாசுதேவன், இருடீகேசன், ஈசனால் வணங்கப்படுவோன், வீடணனுக்கு நாடளித்துக் காத்தவன், மன்மதனின் தந்தை, திருவரங்கத்துறைபவன் என்னும் இத்தகைய பெயர்களைப் பூண்ட திருமாலைக் கண்டு, தன்னுடன் வந்த பாகவதர்களுடனும் தானும், தன் மகள் (சூடிக்கொடுத்த சுடர்க்கொடி) தானும், பயபக்தியுடன் பணிந்திறைஞ்சி, ஜய ஜய கோஷமிட்டு, சாட்டாங்கமாக வீழ்ந்து வணங்கி, நின்று தலை மேற்கைகூப்பியவாறு இவ்விதம் துதித்தார்:

தே. விதி3 க்3ருஹா க்ஷய விதத சே2வத3கி ஸரணு
சிர க்ருதே க்ஷ்வாகு புண்யரஸிகினி ப்ரணுதி
த3னபதி ப்3ராத்ரு குலதே2வதகு ஜொஹாரு
நத ம்ருடா2தி2க ஸு2மனச்ஸு2னகு நமச்ஸு3 VII—35

தே. கொலுது ச2ர்வேஸு ஜ2ர்வாத்மகுனி அனந்து
அப்ரகாஸு அபே3த்2யு ச2மச்2தலோக
ச2முத2யாதா3ரு அணுச2மூஹமுலகுனுன
ணீயு நின்னு னனாதா3ரு நித்யு ச3த்யு VII—36

க. நாராயணு பூ3 ப்ரப்3ருதிக
கௌ2 ரவவத்3வச்3து விததி கண்டெ மிகி2லி பெம்
பாரு கரிஷ்ட1த கலபர
பூருஷு ஸரணம்பு2 வேடி2 பொக2டெ2த2 நின்னுன் VII—37

தே. அஜஸிவாதி3க மகு2 நீனீ ச2மச்3த ஜக2மு
எந்து2 ப்ரப3விஞ்சு வர்திஞ்சு டி2ந்து2னட்டி
மஹிம கிம்மைன நித்யு ச2மச்2தபூ3த
மயுபருல கண்டெ பரு மஹா மஹுனி கொலுது VII—38

பிரம்மதேவனின் அழிவற்ற செல்வப் புதையலானவனே சரணம்! இட்சுவாகு குலப் புண்ணிய ராசியானவனே! சரணம். குபேரனின் உடன் பிறந்தவனுடைய (விபீஷணன்) குலதேவதையே! போற்றி. வணங்கப் பெற்ற சிவன் முதலாய தேவர்களையுடையவனே! வணக்கம். VII—35

சர்வேசனும், எல்லாம் தானேயான எம்பெருமானும் எல்லையற்றவனும், காணற்கியலாதவனும் எல்லா உலகிற்கும் ஆதாரமானவனும், அணுவுக்கும் அணுவாயமைந்தவனும், ஆதாரமற்றவனுமாகிய நித்திய சத்தியப் பொருளாகிய உன்னை வணங்குகிறேன். VII—35

நாராயணன், பூமி முதலான பெரும் பொருள்களைவிட விஞ்சிய பெருமையுடையவனை பரமபுருடன், ஆகிய உன்னைப் புகழ்ந்து விழைந்து சரணுறுகின்றேன். VII—37

பிரம்மன், சிவன் முதலாக சகல உலகும் படைத்துப் பாதுகாத்து அழிக்கும் முத்தொழிற் பெருமைக்குறைவிடமான நித்தியனும், எல்லாப் பூதங்களிலும் இருப்பவனும் அப்பாலுக்கப்பாலமைந்த பெரியவனாகிய நின்னை வணங்குகின்றேன். VII—38

சீ. பரபுருஷுனிகண்டெ பருட2னா சனுவானி,
பரமாத்மு, முக்திகை பரம யோகி2
பரிஷத்துசே ச2தா2 பா3விம்ப ப2டு2வானி,
எவ்வனி யந்து2 ப்ராக்ருதமுலைன
ச2த்த்வாதி2 குணமுலு ச2ந்த3டி2 லேத2ட்டி,
விமலுனி ச2ர்வ பூ3தமுல கண்டெ
ஆத்3யுடு2 ஸுத்துண்டு2 அகுவானி விபு3ளா
காஷ்டா1 நிமேஷா3தி கால சூ2த்ர

தே. மயின யெவ்வானி ஸக்தி யிந்த்2ரிய விததிகி
கோ3சரமு காதொ2 நிர்லேபுடை2 செலகு2ட
அதிவிஸுத்து3டு2 தானய்யு ஔபசார
வ்ருத்தி பரமேஸுட2கு2 நின்னு விஷ்ணு தலந்து VII—39

வ. அனிபர ச்2வரூப சு2ரசே2வ்ய ப3வ்ய தி2ல்யாவதார லீலலன் ப்ரச்2துதிஞ்சின கௌச்2துபா3 ப3ரணுண்டு2 கருணா தரங்கிதம்பு2 லகு2 அபாங்க2ம்பு2ல அம்முனின் கனுங்கொ2னி குஸலப்ரஸ்னம்பு2 காவிஞ்சி கங்கணாலங்கார க்ரேங்காரம்பு2 லங்குரிம்ப பத2பங்கஜம்பு2லகு, குக2மாஞ்ஜலுலு ச2மர்பிஞ்சு ச2கல சீ2மந்தினீ சீ2மத்த முக்தாமணியகு2 ஆமுக்த மால்யத2 ருபு எல ப்ராயப்பு2 சா2பி3ப்ராயம்பு2கா2 சூசி தனலோன VII—40

சீ2. தீ2னி சூபெது2ரெக்க கானெகா சி2ரிபட்டி
கினி போ2ர பி2ருது2 டெக்கெம்பு2 கலிகெ2,
தீ2னி கௌனல்லாட2 கானெகா க2ர்விஞ்சி
யுர்வி சைத்ருனகு காலூத2 கலிகெ2,
தீனி பாலிண்ட்2லுப்பு2]கானெ கா ரதிசேதி
கின்னெரம்ரோதகு வன்னெ கலிகெ,2
தீ2னி மோ மொப்பார கானெகா வாணி ரா
யஞ்ச லேமகு குலாயம்பு2 கலிகெ2,

தே. தீ2னி பென்னெறு லேபார கானெகா ப்ர
போஷித மயூரிகி விராலி பொந்து2 கலிகெ2,
தீ2னியடு2கு2லு ரஞ்ஜில்ல கானெகா பி
பாச2 படு2 தேடிலகு மெட்டபண்ட கலிகெ2 VII—41

(தேஹேந்திரியங்களுக்கப்பாற்பட்ட) பரபுருஷன் (ஜீவன்) தனக்கும் மேலான தத்துவம் (ஈஸ்வரன்) ஆனவனும், பரமான்மா வானவனும், வீடு பேற்றுக்காக எப்போதும் யோகியர்களால் போற்றப்படுபவனும், எவனிடம், (சத்துவம், ராஜசம், தமஸ்) முக்குணங்களாகிய பிரகிருதி தத்துவங்களின் தொழிற்பாடுகள் அடங்கிக் கிடக்குமோ அந்த நிர்மலனை எல்லா பூதங்கட்கும் முற்பட்டவனை, தூயவனான மாயவனை, எங்கும் பரந்துள்ள இறைவனை, கலை, நிமிடம் முதலிய காலக் கணிதங்களை இயக்குபவனை, மறைந்துறையும் இறைமைத் தத்துவத்தை, எல்லாம் கடந்த கடவுளாயினும் பெயருக்குப் பரமேசுவரன் எனப் பெயரிட்டழைக்கப்படும் விஷ்ணுவாகிய உன்னை நினைந்து போற்றுகிறேன். VII—39

என்றிவ்வாறு, பரம்பொருளாகிய சொரூபத்தினையும் தேவர்கள் வணங்கும் திவ்விய அவதார லீலைகளைப் புகழ்ந்தும் போற்றியிசைப்ப, கௌஸ்துப மணி அணிந்த திருமால், கருணை யொழுகுங் கடைக் கண்களால் அப்பெரியாழ்வாரைக் கண்டு, நலம்நாடி உசாவியபின், வளையணிகள் மெல்ல ஒலிப்ப திருவடித் தாமரைகட்கு மலர் சொரிந்து இறைஞ்சி நிற்கும் பெண்டிர்கட் கெல்லாம் பெரும் பேரணியாகப் பெரும் பேறுற்ற பேதையாம் கோதையாகியசூடிக்கொடுத்த சுடர்க்கொடியின் எழிலும் இளமை நலனும் உட்குறிபோடுணர்ந்து கண்டு தன் மனத்துள் VII—40

இவளது பார்வை, எதிர்ப்பட்டதாலன்றோ திருமகள் மைந்தன் (மன்மதன்) தனக்குப்போரின்வெற்றிக்கொடிபெற்றிலங் கினான்.

(இவள் மீன் விழியாள் என்றும் மன்மதன் மீனக் கொடி யோன் என்றும் கருத்து)

இவளது இடை, (கொடிபோல) அசைந்தாடுவதாலன்றோ வசந்தன் காலூன்ற முடிந்தது.

(இவள் இடை கொடி போன்றது. கொடிகளால் வசந்த காலம் நிலை பெறுகிறது என்பது கருத்து)

இவளது மென் முலைகள் வளர்ந்ததாலன்றோ இரதி தேவி யின், கின்னரி (சிறுவீணை)யின் நாதத்திற்கு எழில்மிக்கது.

(இவள் முலை கின்னரி (சுரைக்காய்) போன்றது என்பது கருத்து.)

இவளது முகம் ஒளிர்வதாலன்றோ கலை மகளின் (வாகனமாகிய) அன்னப் பேடுவிற்கு கூடு (இல்லம்) கிடைத்தது.

(அன்னம் உறையும் இல்லம் தாமரை. இவள் முகம் தாமரை என்பது கருத்து)

இவள் கருங்கூந்தல் வளர்தலின் அன்றோ வளர்ப்பு மயிலுக்கு மயக்கம் கிட்டியது.

(கருங்கூந்தல் முகில் போல்வதாதலின் மயில் மகிழ்ந்து மயக்கமுற்றது என்பது கருத்து)

இவள் பாதங்கள் எழில் மிக்கதாலன்றோ தேனீக்கட்கு தாகம் தீர்ந்திட மேட்டு நில விளைச்சல் கிடைத்தது.

(பாதங்கள் தாமரைகள். ஆதலின் தேனீக்கள் தூரம் சென்று அலையாமல் அருகிலேயே விளைச்சல் பெற்றன என்பது கருத்து) VII—41

தே. அனுசு உவ்விளுலூரு முராரி தமக
மாபலேகாத்ம தி2வ்ய ஸு³த்தா3ந்த சீ2ம
கன்னெலத தார்சி யொக்க மாயா வதூ3டி
அட்ல காவிஞ்சி வாருன்ன த2னிய யுண்ட2 VII—42

வ. பூஜகுலசே பாத2தீர்த1 ப்ரசா2த2 பரிவேஷ்டனம்பு2 லிப்பிஞ்சி
விடி2தி2 கனிபின கு2டி2 வெட2லி ஸாம்ப2ரீ தனு ச2ம்ப3வம்
பா2லகின் பெட்டி க்2ருஹம்பு2னகுன்சனி பஞ்ஜரம்பு2
ச2ட2லிஞ்சி யச்சஞ்சலாக்ஷின் கானக VII—43

ஸா. அப்2ரஹ்மண்யமு2 லோன வைசிகொனெ அங்யாயம்பு2னன் மத்சுத்தன்
தாப்2ரஹ்மாது2ல மேரநில்பியு ப்ரபு3த்வம் பூ2தி2யுந் தோ2துரே
யீ ப்ரக்கன் த்2விஜு3 சூட2ரய்ய ச2ப3வாரீரங்க2 ப3ர்தஞ்சு து2:
கா1 ப்2ராஸின் படி2 பா2ஷ்ப கண்டு1டு2 சமுத்2யத்தோ2:
பலாலுண்டுனை VII—44

ஸா. அந்தே வேடு2கயைன பெண்ட்2லகு2டகீ நே தே2ஹமுன் ப்ராணமுன்
ச2ந்தானம்பு2 நிஸாந்தமுன் த2னமு ச2ச்2யம்பு2ல் பஸுஸ் ரேணுலே
காந்த ச்2வச்2வ ஜனார்சனம்பு2னக காதா2 கூர்சுடே, மீ, கயோ
விந்தே, யீபு2டு2தெந்த, நன்குறுசகாவிம்பன் தனுன் மெத்துரே? VII—45

என்ற ஆர்வத்துடன் திருமால் காமம் கைமிகத்தான் அந்தப் புரத்தில் அந்நங்கையைச் சேர்த்து, ஒரு பொய்யான (மாயநங்கை) நங்கையை (கோதையைப் போன்றே)ச் செய்து, அவர்கள் இருப்பதாகவே கருதச் செய்திருப்ப, VII—42

அர்ச்சகர்களால் ஸ்ரீபாத தீர்த்தப் பிரசாத பரிவட்டங்களைத் தரச் செய்து தம் விடுதிக்கு அனுப்பி வைக்கவும், கோயிலிலிருந்து புறப்பட்டு மாயநங்கையைப் பல்லக்கில் வைத்து இல்லம் போந்து பல்லக்குத் திரை விலக்கிப் பார்க்க அங்கந் நங்கையைக் காணாது VII—43

"ஓ! கொடுமை! திருவரங்கத்தான் அனியாயமாக என் மகளைக் கைப்படுத்திக் கொண்டான்! அவையோர் இந்த மெலிந்த அந்தணனைப் பாரீரே!" என்று துயர்க்கடலில் வீழ்ந்து கண்ணீர் மிகத் தழுதழுத்த குரலில் முறையிட்டு தோளுயர்த்திய வாறு கூறினான். VII—44

மிகுந்த காதல் உடையவனானால், திருமணம் செய்து கொடுக்க மாட்டேனா? உடல் பொருள் ஆவி, வீடு, சுற்றம், செல்வம், பயிர் எல்லாம் நான் சம்பாதித்ததா? எல்லாம் அவனது பக்தர்கட்கு சமர்ப்பணம் செய்வதற்குத்தானே! அந்தோ? விந்தை என்னே! இச்சிறுமி பெரிதா? (கேட்டால் தர மாட்டேனா) என்னைச் சிறுமைப் படுத்தினால் தன்னை மெச்சுவார்களோ?" VII—45

ச. ஸிவுடு2 விரிஞ்சி வாச2வு டு2செப்ப னஸக்துலு, கொல்சுனட்டி வா
ரவுட, நிரங்குஸுண்ட2 னனியக்கட பாடி2 தொறங்க2 செல்லுனே?
பு3வனமுலெல்ல நீவயின பொந்தத2யா நிதி3 யம்மலேதெ? பா3
க2வதுலு லேரெ? நாகொறகுகா3 வஹிஞ்சு கொனங்க2 கேஸவா VII—46

உ. நெட்டன யல்ல லச்சி யலநீளயு பூ3ச2தியுண்ட2, நீகு நீ
நெட்டிக சீ2லபை மனசு2 நில்புட கேமன வச்சு? வொர்ரியெள
னட்டுக2 பேத2 நன்னு பரிஹாச2மு சேதகு தக்க, விந்தசூ
பெட்டிதி? தி2த்து2 னெவ்வ டி2ல ஏறுலவங்கலு வாரி டொ2ங்கலுன் VII—47

வ. அனியிட்லு த3ரணீ சுருண் ட2த2வெட்ட பா3க2த2
கோஷா3பம்பு2ணகு பு3வனப3ர்தயு ப3யம்படி2 தச்சா1ந்தச2னகு
கே2லி சேயு சுன்ன வாட2னு பா3வம் ப2தனிகி தோப மகர
குண்ட2ல மண்டி2தம்பு2லகு2 க2ண்ட2 த2ர்பணம் பு2லன் சிறு
நவ்வெலர்ப இட்லனியெ VII—48

சிவன், பிரம்மன், இந்திரன் முதலானோர் உன்னைச் சேவிப்பவர்கள் ஆதலினால், உன்னை ஒன்றும் கேட்க மாட்டார்கள்! (கண்டிக்கும் திறமையற்றவர்கள்) என்பதால் தடையற்ற (சுதந்திரமுடைய) வனாய் உள்ளாய் என்பதால் நீதியை மீறலாமா? உலகங்கள் எல்லாம் உன்னுடையதானாலு உன்னருகே அருள்மிக்க அம்மை (திருமகள்) இல்லையா? பாகவதர்கள் இல்லையா? என் பக்கம் அவர்களாவது கூற மாட்டார்களா?" VII—46

ஏற்கனவே அத்திருமகளும், நிலமகளும், நப்பின்னை (நீளாதேவி)யும் இருக்க, உனக்கு இந்த விரத நிட்டைகளை யுடைய மெல்லியல்பால் மனம் மேவுதற்கு என்ன சொல்வது? ஏழையான என்னைப் பித்தனாக்குவதற்காகச் செய்த பரிகாசமேயன்றி, (இவளிடம் திருமகளிடம் இல்லாத) புதியதென்ன கண்டாய்? உலகில் ஆற்றின் வளைவுகளையும் நீர்ப்போக்குகளையும் எவரால் திருத்த முடியும்?

(நதியின் வளைவுகளைத் திருத்த முடியாதது போலவே, பெரியவர்களின் நடத்தைகளையும் மாற்ற முடியாது என்பது கருத்து.) VII—47

என்றிவ்வாறு அந்தணாளன் (பெரியாழ்வார்) முறையிடவும், பாகவதரின் துயர் கண்டு அஞ்சிய பரந்தாமனும், அவரது அறியா மையைக் கண்டு எள்ளுவான் (கேலி செய்வான்) போலத் தோன் றும்படி மகர குண்டலமணிந்த எழிற்கன்னங்களில் இளநகையரும் இவ்விதம் கூறினான். VII—48

ச. முதி2மதி3 தப்பி தோயி முனி முக்1ய2 ப3வத்தனயன் க்2ருஹம் பு2னன்
ப2திலமு சேசி2வச்சி மறிப2ட்டப2யல் வெட3தூ2ரு நூ2ரெ, தா
ச2த2ன மிகொக்க மாடர2சி சஞ்சல லோசன கானகுன்ன தூ2
ரெது2 மறிகானி, பு3த்தி3 விபரீதத பொந்த2க போயி சூடு2மா.
VII—49

தே. அனினனோதண்ட்2ரியாயெனே யாயெ ஏமெ
றுங்க2மே யார்தி குகடு2பு சல்லங்க2 பலிகி
கருண சேசி2தி விஜயிவி கம்மடஞ்சு
பா2ஷ்ப ஜலமாகி2 யிண்டிகி பருவு வாறி VII—50

ஆ. ம்ரொக்கினட்டி தனய மூர்த3ம்பு2 மூர்கொனி
ப்ரமத2 பா2ஷ்ப முருல ப்2ராஹ்மனுண்டு2
சேதவென்லு நிமிரி நாதல்லி நினு கண்டி
காயடஞ்சு இண்டி கட2 வசி2ம்ப VII—51

"(வயதுக் கோளாறினால்) பெரிய ஆழ்வாரே? முதுமதி தப்பி னாய் போலும்! உமது மகளை வீட்டில் பாதுகாப்பாக வைத்து விட்டு வந்து (நாலுபேர் அறிய) பகிரங்கமாக வெறும் வசை புராணம் பாடுகிறாய்! வீட்டில் இன்னொரு தடவை ஆராய்ந்து பார்த்து அந்நங்கையில்லாவிட்டால் வைவாயாக! அறிவு மயக்கம் உறாமல் போய்ப் பார்ப்பாயாக!" VII—49

எனலும் "என்னப்பனே! ஆய்விட்டதா? (உன் காரியம் ஆகி விட்டது போலும்) என்று கூறி "எம் துயர் தீர்த்தனை! ஏதறி வோம்! அருள் கூர்ந்தனை! வெல்க!" என்று பரவி, கண்ணீர் அடக்கிக் கொண்டு வீட்டிற்கு விரைந்து ஏகினார்" VII—50

(சென்று) வணங்கிய மகளின் உச்சி மோந்து ஆனந்தகண்ணீர் சொரிய, கைகளால் முதுகை நீவி "என் தாயே! உன்னைக் கண் டேனல்லவா?" என்று மகிழ்ந்து இல்லத்துறைந்தனன் VII—51

தே. ரங்க[2]பதி ப்[2]ரஹ்ம ருத்[2]ருல ப்ராஹ்மி கௌ[2]ரி
தனகு அக்கன்ய ஊடி[2]கி[4]ம்ப பனுபுடயுனு
வாரு சே[2]னேஸ ச[2]ஹிதுலை வச்சுடயு
விஷ்ணு சித்துடு[2] ச[2]ம்ப்ரமான் வீதுட[2]கு[2]சு VII—52

வ. விஷவக்சே[2]ன பூர்வகம்பு[2]கா[2] வினயம்பு[2]ன ஆதித்[1]யம்பு லொச[2]கி[2] உசிதாச[2]னரபு[2]ல ஆசீ[2]னுலை யுன்னவாரி ஆக[2]மன ப்ரயோஜனம் ப[2]டி[2]கி[2] தெலிசி[2] ப்ரமத்[2] ரச[2] ப[3]ரிதாந்த ரங்குண்டை[2] யிட்லனியெ VII—53

கோ[2]தா[2]தே[2]வி ஸ்ரீரங்க[2]நாது[1]ல விவாஹமு

க. த[3]ன்யுட[2]னைதி தன கீ
கன்யகனீ காஞ்சி ப்[3]ருகு[2]வு கௌ[2]ரவமு பயோ
தி[3]ந்யாயமு ஒத[2]வெனிடே
அ்ந்யாயம்பே[2]? சமுப ஹரவிது[3]லாரா VII—54

திருவரங்கத்தான். பிரம்மா, சிவன், சரஸ்வதி, பார்வதி ஆகியோரை தனக்குப் பெண் கேட்குமாறு பணிக்கவும், அவர்களும், சேனை முதலியை உடன் கொண்டு வரவும், பெரியாழ்வார் பரபரப்புடன் வரவேற்று VII—52

சேனை முதலி முதியோரை மரியாதையுடன் விருந்தோம்பி, தகுந்த ஆசனங்களை அளித்து அமர்ந்த அவர்களிடம் வந்த காரணம் அறிந்து மகிழ்ச்சி மிக்க உள்ளத்தினனாக இவ்விதம் கூறினான். VII—53

சேனை முதலி சிவன்! பிரம்மன் முதலானவர்களே! நற்பேறுற்றவனானேன்! அவனுக்கு (திருமாலுக்கு) இக் கன்னியைத் தந்து பிருகு முனிவனும் கடலும் பெற்ற பெருமையையுற்றேன். (எனினும்) இவ்விதம் கேட்டுப் பெறுவது முறைதானா?

(லட்சுமி பிருகு முனிவர்க்கும் கடலுக்கும் மகளாகப் பிறந்தாள்) VII—54

க. வினுடீ[2] தகு[2] ச[2]ம்ப[2]ந்த[3]பு
டெனயிக கனிமோசி தெச்சி யிச்செனனரெ சுல்
கனி நருலு; கான மா புர
முனகுன் விஜயம்பு[2] சேய புத்ரிக னித்துன் VII—55

தே. ப்ரபு[3]த பரமேஸ்வருண்டை[2]ன பத்ப்ரபன்ன
ஜனமுன கொச[2]ங்கு[2] மீகு னீ சனவு ஸெளரி
தானெ கட்டின பூ[3]மிக தால்சு மாகு
க[3]னதி யி[2]தி மம்மு சேயுட தனது[2] க[3]னத VII—56

தே. அனின சனிவின்னவிம்ப த[2]யாரசா[2]ர்த்[2]ர
சித்துடை[2] விஸ்வப[3]ர்த பக்ஷி ப்ரதா[3]ன
கௌப வாஹ்யம்பு[3] னெக்கி ப்[2]ரஹ்மாதி[2] சு[2]ரலு
பு[2]லசி[2] தமதத்தடு[2]ல னெக்கி கொலிசி ராக[2] VII—57

கேட்பீராக! கொடுக்கத் தகுந்ததே! எளிய மனிதர்கள் இந்தச் சம்பந்தப் பொருத்தத்தைப் பார்த்து (தானாக) சுமந்து வந்து கொடுத்தான் என்று சொல்லமாட்டார்களா? ஆதலின் எங்கள் ஊருக்கு வந்தால் மகளைத் தருவேன். VII—55

திருமால் ஆளுமையில் பரமேசுவரனே எனினும், தன்னடி யிறைஞ்சுவார்பால் தயவுடையவன் ஆதலினால், உங்கள் விருப் பம் நிறைவேற்றுவான். தானே கட்டுவித்த மாமனார் வேடத்தை பூண்ட எமக்குப் பெருமை சேர்ப்பது அவனுக்கே பெருமையாகும். VII—56

எனலும், சென்று (திருமாலிடம் சேனை முதலி முதலா னோர்) விண்ணப்பிக்கவும், அருளொழுகு உள்ளத்தானாகிய அகிலாண்டேசுவரனாகிய திருமால் கருட வாகனத்திலேறி, பிரம்மா, முதலிய தேவர்கள் தத்தம் வாகனங்களில் ஏறிச் சூழ்ந்து வரவும். VII—57

க நாசீ²ரு ட²கு²சு ஸ²த்ரவ
தீச²கு¹ டு²டு²வீதி¹ பௌஜ்² தீர்சின ப்ரஜ பூ³
ஷா சி²ஸதகோடி ஸதகோ
டீ ச²வித்ரு ப்ரப³லு தி²ஸல டெ²ப்பர மலமன் VII—58

வ. ஸ்ரீவில்லி புத்தூரிகின் சனி விஸ்வகர்ம மணிமயம்பு²கா²
கட்டின விடி³தி³ பட்டுன விடி²சி² யய்யாதி³ம வருண்டு²
தி²வ்யாப் ச²ரச²லு ஹரித்ராதி²க ச்²நானீய மங்க²ள த்²ரவ்ய
மண்ட²னம் பொ²னர்ப பெண்டி²யி கொடு²கை தி²வ்ய
வாதி³த்ரம்பு²லு நாரதா²தி² தி³வ்யமுனி கா²னம்பு²லு
வெலயன் கலதௌ³த த³வள தா³ராத³ரம்பு²லு குரிய
சு²தா³தா³ரல அபி³ஷிக்துண்டை² முக்தாவளீ கௌச்²து
பா³முக்த கம்பு² கந்த³ ருண்டு²னு கேயூர கங்கணாலங்க்ரு
துண்டு²னு மகரகுண்ட²ல மகுபாதி² பூ³ஷா விபூ³ஷிதுண்டு²னு
தி²வ்யாங்க² ராக² ருஷிதுண்டு²னு பீதாம்ப²ர ச²ம்வீதுண்டு²னு
துலசீ²கல்பதரு ப்ரச²வச்²ர கா²ச்²ரிதோ ரச்²குண்டு²னை
யுண்டு²னந்த, அக்கட² அடகு முனுப க்³ருஹ ப்ரவேஸம்பு³
சேசி² ச²ம்ப்³ரமாயத்துண்ட²கு² விஷ்ணு சித்து ப்ரயத்னம்புன²
VII—59

௩. ஸர்வாணீ வாணீ முக¹
கீ²ர்வாணீ கோடி ஜானகீ ரகு³குலராட்
பூர்வாசரித விவாஹா
கு¹ர்வ சு²கீ²தமுலு பாட²கா² விப³வமுனன் VII—60

சேனை முதலி முன்னேவர, வான வீதியில் வரிசை வரிசை யாக வரும் 'மக்களின் அணிகளும், வாளும், வஜ்ராயுதமும், கோடானுகோடிச் சூரியர்களின் ஒளியை திசை முழுதும் பரப்ப VII—58

ஸ்ரீவில்லிப்புத்தூருக்குச் சென்று, விசுவகருமா மணிமயமாகக் கட்டிய விடுதியில், அந்த முதன் முதல் மணமகன் இருந்தான். தேவமகளிர் மஞ்சள் முதலான குளியலுக்கான மங்கலப் பொருள் களைக் கொணர்ந்தணி செய்ய மணமகன் ஆக, தேவதுந்துபிகள் நாரதர்முதலிய வேதமுனிவர்கள் இசை முழங்க,வெள்ளியொத்த வெண் முகில்கள் பொழியும் அமுததாரையில் அபிஷேகம் செய்ய ப்பட்டவனாய், முத்துமாலையுடன் கௌஸ்துப மணியும், அணிந்த சங்கொத்த கழுத்தினனாயும், மகர குண்டலம், மகுடம் முதலான அணிகள் அணிந்தவனாய், சந்தனம் பூசப்பெற்ற வனாய், பொன்னாடையணிந்தவனாய், துளசி, கற்பகமலர் மாலைகள் பூண்ட மார்புடையவனாய், இருக்கவும், அங்கு (ஆண்டாள் இருந்த இடத்தில்) அதற்கு முன்பே இல்லம் புகுந்து, பரபரப்புடன் (திருமண ஏற்பாடுகளில்) முனைந்தவனாகப் பெரி யாழ்வார் இருந்தார் VII—59

மலைமகள், கலைமகள் முதலிய தேவ மகளிர்கள் சீதாராமர் களின் திருமண விழாப்பாட்டுக்களைப் பாடினர். VII—60

தே. நெம்மி னேகாவயு ச்²ரக்²வினியுலீனு சாம
ரம்பு² லிருகெ²ட² னிட² ஹரித்²ரா த்²ரவமுன
பெட்டிரி நலுங்கு³ லக்கன்ய பெண்ட்²லி கூது
சேய ருஷிபத்னு லர்தி¹ ஆஸீர்யுதமுக² VII—61

தே. அட்லு வைவாஹிக தீ²க்ஷயமர கம்ம
நூனெ தலயண்டி நெறுலு கந்தா²ன புலும
ச்²வர்ண²மணிகும்ப³ ஹிமவாரி ஜலகமாடி²
னட்டி ஜக³தீ²ஸ்வரிகி வேல்பு டப³ல யோர்து VII—62

க. தடி²யொத்தி ச³ன்ன வலிபம்
பி²டி² மணி பீட¹ ச்²த¹யைன யிந்தி மெறுகு³பென்
நிடு²த² குருலார்சி தூ³பம்
பி²டி² துறு ம க³டிஞ்செ ஒகம்ருகே² க்ஷண நெம்மின் VII—63

சீ². யாவக த்²ரவமுன அருணாங்³ரி நக¹பங்க்து
லப்³யக்தமுலு சேசெ² அதிவ யோர்து,
நய கல வ்ரேள்ள மட்டியலு பில்லாண்ட்²லிடி²
பாயவட்ட மு பெட்டெ பை னொகர்து,
நெறக வட்டி பசி²ண்டி² நீடிவ்ராத செறங்கு³
வெலிபட்டு ரஹிகட்டெ வெலதி² யோர்து
கடிசீ²ம கனக மேக¹ல சேர்சி தாரஹா
ரமுலு கீலுஞ்செ கண்ட¹முன ஒர்து

தே. கடகமுலு ஹச்²த ச²ரமு லங்க²த³முலங்கு³
லீயகமுலுனு பா²ஹ வல்லிகல வ்ரேள்ள
நிலுபி தாடங்க நாசா² மணுல னமர்சி
சொனிபெ சீ²மந்த வீதி¹ சேர்சுக்க யோர்து VII—64

வைபவத்துடனும், அன்புடனும் ஏகாவளி, சிரக்விணி எனும் தோழியர் இருபுறமும் இருந்து சாமரை வீச, மஞ்சள் நீரால் விருப்புடன் அந்நங்கையை மணமகள் ஆக்கும் தவமுதுமகளிர்கள் வாழ்த்துரைபுடன் நலுங்கு வைத்தனர். VII—61

இவ்விதம் திருமணச் சடங்குகள் நடத்தி மணமலி எண்ணெய் தலையில்பூசி கூந்தலை சந்தன தைலத்தால் தேய்த்து பொற்குடத்தில் குளிர்ந்த பன்னீர் கொணர்ந்து நீராடச் செய்த பின்னர், அந்த உலகநாயகி (ஆண்டாள்)க்கு தேவமாது ஒருத்தி VII—62

ஈரம் புலர்த்தி, மென்துகில் புனைந்து, மணிபீடத்தில் அமர்த்தினாள். அந்நங்கையின் ஒளிர்மென் நீள் கூந்தலை புலர்த்தி நறும் புகையிட்டாள் மற்றொருத்தி. மற்றொரு மான்விழியாள் அன்புடன் கொண்டை போட்டாள். VII—63

செம்பஞ்சுக் குழம்பு (தொய்யில்) ஏற்கனவே சிவந்த பாத நகங்கட்குப் பூசினாள் ஒருத்தி. மற்றொருத்தி மெல்லடி விரலில் மெட்டி புனைந்தாள். சிலம்பு அணிவித்தாள் ஒருத்தி. குஞ்சம் வைத்து பொற்சரிகைக் கரையையுடைய வெண்துகில் எழிலுற அணிவித்தாள். மற்றொருத்தி, இடையில் பொன்மணி மேகலையும் கழுத்தில் முத்து மாலையும் அணிவித்தாள். இன்னொருத்தி, வளையல்கள், தோள்வளை, கைச்சரம், மோதிரம் முதலியன அணிவித்து கம்மல் மூக்குத்தி சுட்டி முதலியனவும் கொண்டு கோலம் புனைந்தாள். VII—64

க. கலிகி தெலி கன்னுக2வ கஜ்
ஜல ரேக1லு தீர்சி மேன சா2ரங்க2மத2ம்
ப2லதி2 லலாமக மிடி2 செங்
க2லுவலு2 க்ரொவ்வெத2கு வேறொகர்து க3டிஞ்சென் VII—65

வ. இட்லலங் க்ருதயை யுண்ட2 லக்2னம் பா2ச2ன்னம் ப2ய்யெ
னனி வின்ன விஞ்சுடயு பன்னக2ஸயனுண்டு2 மார்தாண்ட2
மண்ட2லம்பு2லு பண்ட2 ரெண்டு2னு தி2வியலை வெலுங்க2
தாரகல கு2ம்பு ஜக2ஜம்புகா2 ஸதபத்ரஸத்ருண்டா2த பத்ரத
யங்கீ2கரிம்ப, சி2ந்து3பதி சௌ2க2ந்தி3க த2ளோபஹார
ச2ஹிதம்பு2கா2 விபணி கலயம்பி சிலிகிம்ப ப்ரக்ருதி காந்த
சு2ரகாந்தலன் கூடு2கொனி ச2ந்தரிம்ப, ஹு2தவஹு2ண்ட2க2ரு
தூ3பம்பு ரேபபர் ஜன்யுண் டு2ல்லெட2யிட2 ப்ராசீன பாட2ம்பு2லு
படே1கௌக3ம்பு2லயி பி2ருத2 ப்ரப2ந்த3ம்பு2லு படி1யிம்ப,
விதி3 நந்த2ன சநந்த2 னாது2லு ச2ங்கீ2த மாங்க2ல்யம்பு2ன
அந்தரங்கம்பு2ன கிம்பொச ங்கி2, விஹங்க2 புங்க2வுடு
மத்தமாதங்க2ம்பை2 க1சிதமணி கல்யாணம்ப2கு2 பல்யாணம்
ப2ங்கீ2கரிம்ப, அப்ராக்ருத வைப3வம்பு2னன் சனி, பரம
ச2ம்ப்3ரமம்பு2ன பா3க2வத வதம்ச2ம்பு2 ப3க்திகலித ப2ஹு2
ப்ரணாம பூர்வகம்பு2கா2 எது2ர்கொன எக்கிரிந்த டி2க்கி2
விஷ்வக்சே2ணு கரம் ப2வலம்பி2ஞ்சி கக்ஷயாந்தரம்பு2லன்
சஞ்சலாக்ஷு2லு கடு2கு2 அடு2கு2ல ஜலம்பு2லகுன் பயிபயின்
படி2 கீ2ர்வாண சி2த்த3 ச2ங்க3ம்பு2 லஹம்பூர்விகனுர்வி
நிர்வாரிகா2 னூர்சி கொனி ப்ராஸிம்ப ப்ரவேஸிஞ்சி த2தீய
நிர்தி2ஷ்டம்ப2கு2 ஜாம்பூ2நத2 பீட1ம்புன உபவிஷ்டுண்டை2
யதண்டு2 வெண்டி2யு ப2ங்கா2ரு ப்3ருங்கா2ருகம்பு2ல கனக
பா3ஜன நிக்ஷிப்தம்பு2லகு2 குஸேஸய பேஸல பத2கி
ச2லயம்பு2லு கடி2கி2 ஷோட2 ஸோபசார ச2ஹிதம்பு2னு
ச2பரிஷ்க்ரியம்பு2 னகு2 மது3பர்கம்பு2 ஒச2ங்கங் கொனி
யய்யாள்வாரு தே2வேரியுன் தானுனு தா3ரவோயனா கன்யகா
ரத்னம்பு2 பரிக்2ரஹிஞ்செ அனந்தரம்ப2 VII—66

ம. கலதௌ3த த்2ரவ சித்ரமுல்மெறய முக்தா ச்2யூதமௌ மேசகாஞ்
சலபுன் பெங்தெ2ற வாரி லக்2னமு ச2மாச2ன்னம்பு2கா2 வேல்புபெ2த்
த2லு பம்பன் கு2ட2ஜீரகம்பு2லு ச2முத்2யத்ப்ரேமனன் யோன்யமஞ்
ஜு2ல ஹச்2தம்பு2 லனுஞ்சிரர்தி1 கனுமிஞ்சுல் சிர்முர்ரரட2க2ன்
VII—76

அந்நங்கையின் ஒளிமிக்க கண்கட்கு மை தீட்டி, மெய்யில் கஸ்தூரி பூசி, உச்சிப் பொட்டு வைத்து, கூந்தலுக்கு செங்கழுநீர்ப் பூக்கள் சொருகி வேறு ஒருத்தி அணி செய்வித்தாள். VII—65

இவ்விதம் ஒப்பனை செய்திருப்ப இலக்கினம் (முகூர்த்தம் நெருங்கியதென்று, விண்ணப்பிக்கவும், பாம்பணைப் பள்ளி கொண்ட பெருமாள், பன்னிரு சுடர்களும் (துவாதச ஆதித்தி யர்கள்) தீவட்டிகளாக ஒளிர, விண்மீன் கூட்டம், முத்துக் கோவையாக, திங்களஞ் செல்வன் குடை (ஆலவட்டம்)யாக அமைய, கடலரசன் (வருணன்) செங்கழுநீர்ப் பூவிதழ்களுடன் அங்காடியில் சாண நீர் தெளிப்ப, இயற்கை (மாயை)த்தாய், வானர மகளிருடன் கூடி பரிசம் ஏற்பாடு செய்ய, அக்கினிதேவன், அகிற்புகை கிளறச் செய்ய, மழைக் கடவுள் (முகிற் குலம்) மேற் கட்டு (விதானம்) இடவும் தொன்முது மறைகள், ஓதுவார்களாய் விருதுகள் வாசிக்க, நாரத சனந்தனர் முதலானோர் மங்கல இசையால் மனங்குளிர மகிழ்வித்திட கருடன் மத யானைபோல மணி குயின்ற பொற்பீடத்தைச் சுமக்க, தெய்வீக வைபவத்துடன் சென்று, பர மானந்தத்துடன், பாகவத சிரேட்டனாகிய பெரியாழ்வார் பக்தியுடன் வணங்கி, வரவேற்க வாகனத்திலிருந் திறங்கிய திருமால், சேனை முதலியார் கைலாகுதரவும் வாயிற போந்ததும் ஆங்கு நங்கையர் கழுவிய ஸ்ரீபாத தீர்த்தத்திற்கு மேன்மேல் விழ்ந்து தேவர், சித்தர், குழுக்கள் நான்முந்தி நான் முந்தி என வந்து நிலத்தில் சலமில்லாதவாறு பிடித்துப் பருகவும், புகுந்து, ஆங்குள பொற்பீடத்தில் அமர்ந்து, அவன் மீண்டும் பொற் செம்புகளால் தங்கத் தாம்பாளத்தில் வைத்த தாமரை போன்ற மெல்லடித் தளிர்களைக் கழுவி சோட சோபசாரங் களுடன், மதுபர்க்கம் (வெல்லம் கலந்ததயிர்) தரவும் பெற்று அப்பெரியாழ்வார் இல்லக் கிழத்தியுடன் தாரை வார்த்துத் தர அக்கன்னியை (ஆண்டாளை)க் கைப்பிடித்தான். VII—66

பின்னர், பொன்முலாம் பூசிய சித்திர வேலைப்பாடுடைய முத்துக்கள் கோர்த்த கருவண்ணக் கரையுடைய பெருந்திரையை, இறக்கி, முகூர்த்தம் வரவும் தேவலோகப் பெரியோர்கள், மணமக்களின் மென்மையான கைகளில் வெல்லமும் சீரகமும் தரவே, மிக்க ஆர்வமுடன் கண் ஒளி பாய்ந்துராய (ஒருவரை ஒருவர்) கண்டனர். VII—67

ச. மறிவனமாலி சூட²முன மானினிமுத்தெபு ப்ராலு வோயுசோ
மெறய தத²ங்கு²ளீ கிச²ல மேளன சக்ரி செமர்ப ராலெமை
னறிமறி க³ர்ம பி²ந்து²வுலுனம் மணுலுன் மொ²கிலந்து²
னுண்டி²டா²ம்
கி²றிகொன ஜாறு தா³ரல ப²லென் வட²க²ண்ட²ல ப²லென்
கனுங்கொ²னன் VII–68

தே. இந்தி தோ²யிட சே²ச ப்ராலெத்து சோட
கு²ப்ப² பாலிண்ட²ல க்ரேவ க்²ரக்குன முராரி
கன்னு வேயுட கனி லஜ்ஜ கது²ர பா²ஹு
லெத்தக கராக்²ரமுலன பைகெகு²ர சல்லெ VII–69

க. க²ளமுன கட்டெனு ஹரிமங்
க²ள சூ²த்ரமு புலக லதிவ கா²த்ரமு பொது²வன்
நெலதயு பதியுனு கரமுல
அல வறிசிரி கங்கணம்பு² லன்யோன் யம்பு²ன் VII–70

சீ². வலனசே நிஷ்ட¹தோ லாஜலு வேல்பிஞ்சி,
ஸார்ங்கி² மெட்டிஞ்செனு ச²ப்த பது²லு,
தெறவ கூடி² யருந்த³தீ த²ர்ஸனமு சேசெ²
ப்²ரஹ்ம ருத்²ராதி² கீர்வாணி கோடி
யர்பிஞ்சு உடு²க²ர லனுகம்ப கைகொனி
யனிசெ ப்ரசா²த² பா³ஜனுல சேசி²,
ஆத்ம பட்டணமுன கதிவ தோட்²கொனி விஜ
யம்பு² சேசெ²னு மஹாஹர்ஷ மொப்ப

தே. ச²ஹ்ய கன்யாதடோத்²யான சந்த²ன த்²ரு
குஞ்ஜமுல நீல குந்தல குச்²தரிஞ்சி
கந்து சா²ம்ராஜ்ய மேலிஞ்சி கருண சிந்த
மொலய ஜக²முல பாலிஞ்சு சுன்ன வாடு² VII–71

பின், கோதை, திருவரங்கநாதனின் திருமுடியில் முதலில் முத்துக்களை மங்கள அக்ஷதை (தலப்ராலு) சொரியவே, அவள் விரல் தளிர்கள் பட்டுப் புளகமுற்று வியர்ப்புற்ற திருமாலின் உடலில் செறிந்துதிர்ந்த வியர்வைத் துளிகள் மழைத் துளிகளாக வும், முத்துக்கள் ஆலங்கட்டிகளாகவும் முகிலிலிருந்து பெய்து ஒளியுடன் மிளிர்வது போலத் தோன்றியது.

(திருமால் கருவண்ணயாதலின் கார்முகிலாகவும் வியர்வைத் துளிகள் மழைத் துளிகளாகவும், முத்துக்கள் ஆலங்கட்டிகளாகவும் உவமிக்கப்பட்டன. தெலுங்கு நாட்டுத் திருமணச் சடங்கில் வெல்லமும், சீரகமும், ஒருவர் கையில் ஒருவர் வைத்தக் கொண்டு தலைகளைத் தொடுவதும், பின் தலப்ராலு எனும் அரிசியை ஒருவர் தலையில் ஒருவர் சொரிதலும் இங்கு வருணிக்கப் பட்டுள்ளன. தலப்ராலு என்பது தலையிற் பெய்யும் அரிசி என்பது பொருள்) VII—68

நங்கை யிரு செங்கைகளாலும் தலையரிசி வாரி எடுத்த போது, ஏந்திள வனமுலைகள்பால் ஏந்தல் திருமால் விரைந்து கண் போடவே, அதைப் பார்த்து நாணங் கொண்டு தோள்களை மேலே தூக்காமலேயே கை முனையால் மேலே விழுமாறு எறிந்த வாறு சொரிந்தாள். VII—69

திருமால் அச்செல்வியின் கழுத்தில் மங்கல நாண் (மங்கல சூத்திரம்) கட்டினான். அவளது உடல் புளகமுற்றது. நங்கையும் நாயகனும் ஒருவரை ஒருவர் கரங்களில் கங்கணம் கட்டினர். VII—70

நங்கையால் விரதமுடன் பொரி வேள்வி (லாஜஹோமம்) செய்வித்து சப்தபதி (ஏழடிகள்) நடத்தச் செய்தான்.

நங்கையுடன் வடமீன் (அருந்ததி நட்சத்திரம்) கண்டனன். பிரம்ம ருத்திரர் முதலிய தேவர்கள் படைத்த காணிக்கைகளை அருளோடேற்றுக் கொண்டு, அன்போடு அனுப்பி வைத்தான். தனது திருவரங்க நகருக்கு மிகுந்த சிறப்புடன் நங்கையை அழைத்துச் சென்று, காவேரிக் கரையில் சந்தனமரச் சோலை களில் கருங்கூந்தலாளைக் கொஞ்சிக் குலாவி மன்மதப் பேரரசின் ஆட்சியளித்து அருளுடன் அகில உலகமும் பரிபாலித்து வருகிறான். VII—71

## ஆஸ்வாசா2ந்தமு

உ. ச்2கந்த3 ச2ரச்3தடீரமண கந்த2ர சந்த2ன குந்த3வாடிகா
மந்த3 ச3மீர லோல வனமாலிக, நிர்மல தி3வ்ய விக்3ரஹா
ச்2பந்தி3 விபா3த3ரீ க்ருத நப:ச்ச்2பு1ட காளிக,
வல்லவாங்க2னா
ப்ருந்த3 மனோ3பிமான த்3ருதிபே3த2ன, பேஸல
வம்ஸவாத2னா VII—72

க. அரிதா3ராக1ண்டி2த மரு
த்3ரி ச2ங்க3, விஹங்க3வஹனா; யுத3ரமஹாம்
பு3ருஹ புடப3ரித மது3ஸம்
ப3ரப3ரஜலமானுஷாய மாண த்3ருஹிணா VII—73

வாலி நிர்பே3த2னா வாரி ஜாதேக்ஷணா
சைல கன்யாஸ் துதா! சார்ங்க சஞ்சத்பு3ஜா
பா1ல த்3மக் பத்3ருபூ3பாக பே3தி3 ஸ்பு1ரன்
மௌளி மாணிக்ய ருங்மண்டி தாங்க்3 ரித்3வயா VII—74

இதி3 நீலாசல நீலசேலக சுப3 த்3ரேந்தீ வராபா க்ஷிகோ
ணத்3ருக3ஞ்சத்3 பு3ஜவீர்ய து3ர்யஜப ஸன்னாஹார்ப3 ட
வாத்2யபீ3த்
யுதி3 தேபே3ஸ்வரக்ருஷ்ணராய மஹிஜான் யுத்பாதிதா
முக்தமால்
யத னாஸ்வாச்1மு ச1ப்தமம் பலரு ஹ்ருத் யம்பை2ன
பத்3யம்புலன் VII—75



கோனேரியின் கரையில் மனங்கவரும் முழைகளிலிருந்து வந்த சந்தனம், முல்லை மலர்களை தழுவிய மந்தமாருதம் அசைவித்த வனமாலை (துளசி மாலையை) உடையவனே! தூய கருவண்ணத் துடல் எழிலால் வானத்தை வென்றவனே! ஆய்ச்சியர் தம் மனத்தை தளிர்விக்கும் வேய்ங் குழல் இசைவாணனே! VII—72

சக்கிராயுதத்தால் தேவ விரோதிகளைக் கண்டித்தவனே! (கருடற்) பறவை வாகனனே! உந்தியில் எழுந்த பெருந்தாமரை மாலரகிய தொன்னையில் நிறைந்த தேன் எனும் வெள்ளத்தில் பிரம்ம தேவனை நீர் மனிதன் போலத் திகழச் செய்தவனே! VII—73

வாலியைக் கொன்றவனே! தாமரைக் கண்ணனே! மலை மகளால் புகழப் படுபவனே! தோளில் வில் அமைந்தவனே! நெற்றிக் கண்ணன் நான்முகன் இந்திரன் முதலானோர் தம் மகுடங்களின் மணியொளியாற் கோலங்கொண்ட அடியிணை களையுடையவனே! VII—74

இஃது நீல மலையில் நீல வண்ணத்துகில் புனைந்தவனான பலராமனும், சுபத்திரையுடன் கூடியுள்ள குவளை மலர் வென்ற கண்களையுடைய கண்ணனின் கருணைக் கடைக் கண்களின் அருளால் தோள் வலிமையுடன் தோற்கடிக்கப்பட்ட கடகாதிபதி யாகிய கஜபதி மன்னர்களை அஞ்சச் செய்த கிருஷ்ணதேவராய மன்னரால் உருவாக்கப்பட்ட 'ஆமுக்த மால்யத' எனும் காவியத்தில் ஏழாவது அத்தியாயம் இனிய செய்யுட்களுடன் நிறைவுறும்.

(நீலமலை என்பது பூரி ஜகந்நாத க்ஷேத்திரமாகும். இங்கு கண்ணன், பலராமன், சுபத்திரை மூவரும் இணைந்திருக்கும் சன்னதியைக் காணலாம். தனது தங்கையுடன் தங்கியிருக்கும் சிறப்பு இந்தத் தலத்திற்குண்டு. அது கடகம் (ஒரிசா) பகுதி யாதலின் அதனைவென்ற கிருஷ்ணதேவராயர் அப்பகுதி திருமாலையை வழிபட்டு இச்செய்யுள் யாத்த சிறப்பும் உண்டு). VII—75

'ஆமுக்த மால்யத' முற்றும்